# கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்




தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்

# கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்

# (Social Documents of the Kongu Region)


பதிப்பாசிரியர்
புலவர் செ. இராசு, எம்.ஏ.,
இணைப்பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005





தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
1991

ISBN:81-7090-185-5

இந்நூல் புதுதில்லி, தேசிய ஆவணக் காப்பகத்தின் நிதி உதவியால் வெளியிடப்படுகிறது.

This work is published with financial assistance from National Archives, New Delhi.

**Social Documents of the Kongu Region**

Editor
Pulavar S. Raju, M.A.,
Associate Professor of Epigraphy
Department of Epigraphy
Tamil University
Thanjavur 613 005.

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 145
Tamil University Publication : 145

திருவள்ளுவர் ஆண்டு 2022 மார்கழி - திசம்பர் 1991
Tiruvalluvar year 2022 Markazhi - December 1991

நூல் : கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்
Title : **Social Documents of the Kongu Region**

பதிப்பு : முதற் பதிப்பு 1991
Edition : First 1991

விலை : உரூ. 125/-
Price : Rs.125/-

அச்சு : தமிழ்ப் பல்கலைக்கழக அச்சகம்
தஞ்சாவூர்.

# பொருளடக்கம்
# (Contents)

முனைவர் சி. பாலசுப்பிரமணியன்
துணைவேந்தர்

தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

# அணிந்துரை

ஓலைகளிலும், செப்பேடுகளிலும் எழுதப்பெற்ற எண்பது சமுதாய ஆவணங்கள் பெயர்த்தெழுதப்பட்டு உரிய விளக்கங்களுடன் 'கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்' என்னும் தலைப்பில் நூல்வடிவம் பெற்றுள்ளது.

தமிழிலும் வரலாற்றிலும தேர்ச்சி பெற்றுக் கல்வெட்டாய்வில் ஈடுபட்டுள்ள தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல்துறை இணைப்பேராசிரியர் புலவர் செ. இராசு இப்பணியைச் செம்மையாகச் செய்துள்ளார்.

கல்வெட்டுகளுக்கும் செப்பேடுகளுக்கும் அடிப்படை மூலம் ஓலை ஆவணங்களே. இதுவரை கிடைத்துள்ள மொத்த ஓலைச்சுவடிகளில் வரலாற்று ஆவணங்கள் 5 விழுக்காடு எனச் சுவடியியல் அறிஞர்கள் மதிப்பிட்டுள்ளனர். மருத்துவம், சோதிடம், இலக்கியம், இலக்கணம் ஆகிய பொருள்பற்றிய ஓலைச்சுவடிகள் பல நூல்வடிவம் பெற்றுள்ளன. அவைபோல் ஓலையில் காணப்படும் வரலாற்று ஆவணங்கள் இதுவரை பெரும்பாலும் அச்சாகவில்லை.

தமிழகத்தில் அரசர்களின் வரலாறுகள் இதுவரை எழுதப்பட்டுள்ளனவேயன்றி மக்கள் வரலாறு-சமுதாய வரலாறு விரிவாக எழுதப்பெறவில்லை. அண்மைக் காலத்தில்தான் சமுதாய வரலாறு எழுதும் முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. இந்நூல் பெரும்பாலும் ஓலைச்சுவடிகளில் எழுதப்பட்ட சமுதாய ஆவணங்கள் என்பதால் மேற்கண்ட இரண்டு குறைகளையும் போக்கும் முயற்சியை ஓரளவு மேற்கொண்டுள்ளது எனலாம்.

வேளாளர், வேட்டுவர், செங்குந்தர், வேட்கோவர், வணிகரின் பல்வேறு பிரிவினர், ஆசாரிகள், நாயக்கர் போன்ற சமுதாய மக்கள் பலரின் குடியேற்றம், குடிப்பெயர்ச்சி, தொழில், வாணிகம், சமயம், வழிபாடு, உரிமைகள், பிற சமுதாயத் தொடர்பு ஆகியவை இங்கு விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவர்களைச் சேர்ந்த பல்வேறு தொழிலாளர்கள், கலைவல்லார், புலவர்கள், குருக்கள் போன்றவர்களுடைய பங்கும் சுட்டிக் கூறப்பட்டுள்ளன.

கம்பரும், அவருடைய கையேட்டுக்காரர்களாக வாழ்ந்து புலமை பெற்றுத் தமிழ்க்கம்பநாடர்களாகத் திகழ்ந்த கொங்குப் புலவர்கள்பற்றிப் பல ஆவணங்கள்

உள்ளன. நாட்டுக்கும், ஊர்களுக்கும் காணி உரிமையுடைய ஆதீனப் புலவர்கள் நியமிக்கப்பட்டனர். அவர்கள் உரிமைக்குப் பட்டயம் தந்து ஊர்களும் கொடையாக அளித்தனர். அவை இன்றும் 'புலவர் பாளையம்' என்ற பெயரோடு விளங்குகின்றன. திருமணம் போன்ற விசேடக் காலங்களில் புலவர்களை அழைத்துத் தாம் உண்ணும் கலங்களில் பால்பழம் உண்ணச்செய்து காணிக்கையும், ஆடை ஆபரணமும் கொங்கு மக்கள் அளிப்பர். புலவர்கட்கு அடிமைச் சாசனம் எழுதித்தந்து, பல்லக்குத் தூக்கி, எச்சில் காளாஞ்சி ஏந்தி, செருப்புக்களைச் சுமந்து மரியாதை அளித்துள்ளனர். கொங்குப் புலவர்களும் கொங்கு மக்களிடம் வலக்கையேந்திப் பரிசு பெற்றுப் பிறர் மன்னர் ஆயினும் இடக்கையேந்திப் பரிசு பெற்றுத் தம் நன்றியைக் காட்டினர். அன்றைய சமுதாயத்தில் புலவர்கள் பெற்றிருந்த மதிப்பு இதன்மூலம் வெளிப்படுகிறது.

ஓர் ஊரில் வாழும் எல்லாச் சமுதாயத்தினரும் வேறுபாடு இன்றி ஒன்றாக இணைந்து பொது நிகழ்ச்சிகளில் ஈடுபட்டுள்ளனர். இந்துக்களும், முசுலிம்களும் ஒன்றாக இணைந்து அறக்கொடைகள் அளித்துள்ளனர். ஐதர்அலியும், திப்பு சுல்தானும் வலங்கை-இடங்கை வேறுபாட்டை நீக்கிச் சமுதாய ஒற்றுமைக்காகப் பாடுபட்டுள்ளதைக் காணுகிறோம். இவ்வகையில் சமய ஒருமைப்பாட்டின் சின்னங்களாக இந்த ஆவணங்கள் திகழுகின்றன.

இவை கொங்குநாட்டு ஆவணங்களாக இருப்பினும் தொண்டைநாடு, சோழநாடு ஆகிய பகுதிகளிலிருந்து மக்களின் குடியேற்ற வரலாறு இங்குக் கூறப்படுகிறது. சேர மன்னர்களின் கொங்குநாட்டுத் தொடர்புகளும் உள்ளன. விசயநகர மன்னர்கள், மதுரை நாயக்க மன்னர்கள், மைசூர் உடையார்கள் கால ஆவணங்கள் பல உள்ளன. அவர்கள் கொங்கு நாட்டை ஆட்சிபுரிந்த வரலாறு இந்த ஆவணங்களில் காணப்படுகிறது. எனவே தென்னிந்திய வரலாற்றுக்குப் பல புதிய செய்திகளை இந்த ஆவணங்கள் தருகின்றன என்பதில் ஐயமில்லை.

அரிய வரலாற்று ஆவணங்கள் அடங்கிய இந்நூல் பதிப்புப்பணியை மேற்கொண்ட புலவர் செ. இராசுவின் பணி போற்றுதலுக்குரியது. கல்வெட்டிலும், தொல்பொருள் ஆய்விலும், வரலாற்றுத்துறையிலும் சிறப்புமிக்க ஆய்வுகள் செய்து நல்லறிஞராகத் திகழும் முனைவர் எ. சுப்பராயலு அவர்களின் சீரிய தலைமையில், வழிகாட்டலில் மிகச் சிறப்பாகச் செயல்படும் கல்வெட்டியல்துறையில் இணைப்பேராசிரியராகப் புலவர் செ. இராசு பணிபுரிந்து வருகிறார். அவர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முதல் வெளியீடாகிய 'தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்' என்னும் நூலை வெளியிட்டுத் தமிழக அரசின் விருதினையும் பெற்றவர். பல ஆண்டுகளாக அவரை நான் நன்கு அறிவேன். கல்வெட்டுத்துறையில் இளமையிலேயே ஈடுபட்டுத் தம் உழைப்பால் படிப்படியாக உயர்ந்து இன்று கல்வெட்டுத்துறையில் தனக்கென்று ஒரு தனியிடத்தைப் பெற்றுள்ளவர் புலவர் செ. இராசு. அவர் பணியை மனமார வாழ்த்துகிறேன்.

இந்நூலை அச்சிடப் புதுதில்லி தேசிய ஆவணக் காப்பகம் தாராளமாக நல்கையை வழங்கியுள்ளது. பேராசிரியர் முனைவர் எ. சுப்பராயலு அவர்கள்

ஆங்கிலச் சுருக்கம் எழுதியுள்ளார். பதிப்புத்துறையினர் இந்நூலைச் செம்மையாகப் பதிப்பித்துள்ளனர். எல்லோருக்கும் என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

வரலாற்றுச் சிறப்புமிக்க இவ் ஆவணங்களைப் பாதுகாத்து வைத்திருந்து அவற்றைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் நூல் பதிப்புக்குக் கொடுத்துதவிய பெருமக்கள் பலர். அவர்கள் எல்லோருக்கும் என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தஞ்சாவூர்,
11_ 12_ 91.

சி. பாலசுப்பிரமணியன்

# நன்றியுரை

கல்வெட்டியல்துறைப் பணிகளில் ஆர்வம் கொண்டு பல்லாற்றானும் உதவிகள் புரிந்து எங்கள் ஆய்வுப்பணிகட்கு ஊக்கமூட்டிவரும் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மாண்புமிகு முனைவர் சி. பாலசுப்பிரமணியம் அவர்கள் இந்நூலுக்கு அழகிய அணிந்துரை ஒன்றை அளித்துள்ளார்கள்.

பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினர்கள் இத்திட்டம் சிறப்புற முடிவதற்கு எல்லாவகையான உதவிகளையும் செய்தனர்.

சுவடிப் புலத் தலைவரும் எங்கள் கல்வெட்டியல்துறைத் தலைவருமாகிய முனைவர் எ. சுப்பராயலு இவ் ஆய்வு தொடங்கிய நாளிலிருந்து ஒவ்வொரு கட்டத்திலும் தக்க பல அறிவுரைகள் வழங்கி நூல் செம்மையாக வரப் பெரிதும் காரணமாக இருந்தார். இவ் ஆவணங்கள் பற்றிய ஆங்கிலக் குறிப்பும் ஆவணங்களுக்கு ஆங்கிலச் சுருக்கமும் அவரே எழுதியுள்ளார்.

மூலப்படிகளிலிருந்து படி எடுத்தவைகளை ஒப்பு நோக்க, கல்வெட்டியல் துறை விரிவுரையாளர்கள் முனைவர். கா. இராசன், முனைவர் அ. கிருட்டினன், ஆய்வாளர்கள் திரு. இரா. கோவிந்தராசு, திரு பா. ஜெயக்குமார் ஆகியோர் உதவி செய்தார்கள்.

அச்சுப்படிகளைத் திருத்தம் செய்யும்போது அரிய கையெழுத்துச் சுவடித்துறை விரிவுரையாளர் முனைவர் ம. சா. அறிவுடைநம்பி உதவிகள் செய்தார்.

பலமுறை பிழைகள் பல ஏற்பட்ட போதெல்லாம் காலக் கழிவைப் பொருட்படுத்தாது பதிப்புத்துறையினர் அப் பிழைகளைத் திருத்துவதில் மிகவும் நல்ல முறையில் ஒத்துழைப்புத் தந்தனர்.

ஓலைச் சுவடிகளையும், செப்பேட்டுப் படிகளையும் ஒளிப்படங்கள் எடுக்கத் துணைபுரிந்தவர்கள் தமிழ்ப் பல்கலைக்கழக நூலக இயக்குநர் திரு. த. பத்மநாபன் அவர்களும் நூலக நுண்பட உதவியாளர் திரு. பாலகிருஷ்ணன் அவர்களும் ஆவர்.

ஆவணங்களை ஒளிப்படம் எடுக்கத் தஞ்சை சரசுவதிமகால் நூலக நிருவாக அலுவலர், நுண்படப் பிரிவு அலுவலர் குடவாயில் பாலசுப்பிரமணியன் ஆகியோர் உதவினர்.

இவர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியினையும் வணக்கத்தையும் மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

# ஆவணத் தொகுப்பிற்கு உதவியவர்கள்

## திருவாவடுதுறை ஆதீனம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் இருபத்துமூன்றாவது குருமகா சந்நிதானம் தவத்திரு. சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் தம் ஆதீனத்தில் உள்ள செப்பேடுகளைப் படி எடுக்க அனுமதியளித்தார்கள்.

## இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை கல்வெட்டுப் பிரிவு, மைசூர்

இத்தொகுப்பில் 29, 48, 50, 65, 69, 71, 72, 73, 75, 78, 80 எண்ணுள்ள ஆவணங்கள் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை, முதன்மைக் கல்வெட்டாய்வாளர் அலுவலகத்தில் (Office of the Chief Epigraphist, Archaeological Survey of India, Mysore-5) பெற்ற படிகளைக் கொண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவற்றின் பதிப்புரிமை அவர்களையே சாரும்.

இவைகளைப் பெறக் காரணமாக இருந்தவர்கள் அத்துறை இயக்குநர் முனைவர் கே. வி. ரமேஷ், முதன்மைக் கல்வெட்டாய்வாளர் திரு மாதவ் என் கட்டி ஆகியோர்.

## தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை

13, 33, 52, 69 ஆம் எண்ணுள்ள ஆவணங்கள் தமிழக அரசு தொல்பொருள் துறையிலும் அவர்கள் வெளியீடுகளிலும் இராமநாதபுரம் அருங்காட்சியகத்திலும் கரூர் அருங்காட்சியகத்திலும் உள்ளவை. அவைகளை எடுத்தாள அனுமதி அளித்தவர்கள் அத்துறை இயக்குநர் திரு. நடன காசிநாதன் அவர்கள். அத்துறையைச் சார்ந்த திருவாளர்கள் இரா. பூங்குன்றன், இரா. ப. கருணானந்தம், வெ. வேதாசலம், சு. இராசகோபால், சொ. சாந்தலிங்கம் ஆகியோர் சில ஆவணங்கள் பெற உதவினர்.

## இதழ்கள், நூல்கள்

தேனோலை (11, 12, 21, 27, 30, 32, 38, 40, 44, 45, 46, 47, 54, 62, 66), கொங்கு (37),

கொங்கு மலர்(6), இராம கிருஷ்ண விஜயம் (31), Journal of Tamil Studies (40) ஆகிய இதழ்களிலும், நாகம்பள்ளி நான்கு முதன்மைக்காரர் வரலாறு (60), கொடுமணல் தங்கம்மன் கோயில் வரலாறு (57), அனுமன்பள்ளி பண்ணை குல வரலாறு(26), ஆகிய நூல்களிலும், செங்குந்தர் மாநில மாநாட்டுமலர் (ஈரோடு 1976) (50) இராமேசுவரம் கும்பாபிஷேக விழாமலர் (69) ஆகியவற்றிலும் வெளிவந்துள்ள ஆவணங்களைப் பதிப்பிக்க அவ்வெளியீட்டாளர்கள் ஒப்புதல் அளித்தனர்.

## ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்

தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையில் 15, 16, 17, 18, 19, 21, 22. 43, 77 எண்கள் உள்ள ஆவணங்கள் ஓலைச்சுவடி வடிவில் உள்ளன. அவற்றின் விவரங்கள் அவர்கள் வெளியிட்டுள்ள 'தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை' நூல்களில் வெளியாகியுள்ளன. அவற்றின் மூலப்படிகளைப் பார்வையிடவும் படி எடுத்துக் கொள்ளவும் அத்துறைத்தலைவர் முனைவர் தா. கோ. பரமசிவம் அவர்கள் அனுமதி அளித்தார்கள்.

மேற்கண்ட அனைவருக்கும் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

# ஆவணங்கள் அளித்து உதவிய பெருமக்கள்

## பெரியார் மாவட்டம்

புலவர். வே.ரா.தெய்வசிகாமணிக்கவுண்டர், வேலம்பாளையம்
செல்வி. எம். முத்தையா, ஈரோடு
நாச்சிமுத்துப்புலவர், தம்மரெட்டிபாளையம்
அருணாசல முதலியார், கொளப்பலூர்
வி. இராமசாமிக் கவுண்டர், கொடுமணல்
இராமசாமிப் பூசாரி, செல்லப்பம்பாளையம்
சர்வலிங்க முதலியார், அனுமன்பள்ளி
சி. என். வெள்ளியங்கிரி, சின்லியம்பாளையம்
கந்தசாமிக்கவுண்டர், கூரபாளையம்
எஸ்.கே. இராமசாமிக்கவுண்டர், சின்னியம்பாளையம் (ஈரோடு)
க.கு.கோதண்டராம கவுண்டர், கள்ளிப்பட்டி
பழனிசாமிக் கவுண்டர், கள்ளிப்பட்டி
பழனிசாமிக் கவுண்டர், சிந்தாமணிபண்ணை, சிவகிரி
எஸ். கே.சின்னசாமிக் கவுண்டர், கன்னிவாடி
எம்.ஏ. பகவதிக் கவுண்டர், தென்னிலை
ப. ஆறுமுகக் கவுண்டர், ஊசிபாளையம்
என். எம். தங்கவேலு, நல்லூர்

## சேலம் மாவட்டம்

ஆண்ட சிவசுப்பிரமணியக் குருக்கள், கருமாபுரம்
அ. பழனிசாமிக்கவுண்டர், வேட்டம்பாடி
வெ. இரா. துரைசாமி, நாமகிரிப்பேட்டை
டி. பி. ஜே. பாரதி, வேலூர்
புலவர். கு. கந்தசாமி, சேலம்
கவிஞர் கந்தசாமி, இராசிபுரம்
சண்முகம், திருச்செங்கோடு
இராமசாமிக் கவுண்டர், மல்லிகுந்தம்

## திருச்சி மாவட்டம்

சாம்பசிவக் குருக்கள், திருவானைக்கா
பி. எம். கருப்பண்ணன், கரூர்

## தருமபுரி மாவட்டம்

புலவர் புது. போ. வேங்கடராமன், கடத்தூர்.

## கோவை மாவட்டம்

ப. சு. மணியம், அனுப்பபட்டி
செந்தில்நாதக் குருக்கள், பேரூர்

இவர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

பலரிடம் ஓலைச் சுவடிகள், செப்பேடுகள் பெறுவதற்கு,

அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம், பொள்ளாச்சி

நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார், பழைய கோட்டை,

சி. பொன்னையன், பி. காம்; பி. எல். சென்னை
கொடுமுடி ச. சண்முகன், விழுப்புரம்
புலவர் இரா. வடிவேலு, ஈரோடு
ஓ. எஸ். துரைசாமிக் கவுண்டர், அறச்சலூர்

ஆகியோர் உதவினர். இவர்களுக்கும் எங்கள் நன்றி உரியதாகுக.

# பதிப்புமுறை

இப் பதிப்பில் உள்ள ஆவணங்களைக் காலமுறையில் வெளியிடுவதைக் காட்டிலும், சமூகவாரியாகப பதிப்பித்தால் படிப்பவர்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் வசதியாக இருக்கும் என்று கருதி அவ்வாறே பதிப்பிக்கப்பட்டுள்ளன. பல சமூகத்தவர் கூட்டாக வெளியிட்ட பட்டயங்கள் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன.

செப்பேடுகளிலும் ஓலைப் பட்டயங்களிலும் உள்ளவை போல இங்கு வரிவரியாகப் பதிப்பிக்கப் பெறவில்லை. பல ஓலை ஆவணங்கள் மிகச் சிறிய அளவில் உள்ளன. அவைகளை வரிவரியாகப் பதிப்பித்தால் வெற்றிடம் மிகுவதோடு பக்கங்களும் மிகமிக அதிகமாகும். ஒரே சீர்மை கருதிச் செப்பேடுகளையும் பிற ஆவணங்களையும் வரிக்கணக்கு இன்றித் தொடர்ந்து தொடர்கள் வருமாறு பதிப்பித்துள்ளோம்.

பதிப்பில் மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளிகள் இடப்பட்டுள்ளன. ஏகார, ஓகார நெடில்கள் ஆவணங்களில் குறில்வடிவில்தான் எழுதப்பட்டிருக்கும். பொருள் உணர்ச்சிக்குத் தக்கவாறு அவைகள் நெடிலாக மாற்றி எழுதப்பட்டுள்ளன. பொருள் உணர்ச்சி பெற வேண்டியும், படிப்போருக்கு மயக்கத்தைத் தவிர்க்கவும் சில இடங்களில் பத்திப் பிரிவுகள் செய்யப்பட்டுள்ளன. சில இடங்களில் ஏற்ற குறியீடுகள் அளிக்கப்பட்டுள்ளன.

கிரந்த எழுத்துக்கள் இவ் ஆவணங்களில் பெரும்பான்மையாகப் பயின்றுவரவில்லை. ஜ, ஷ, ஸ, ஹ, ஸ்ரீ போன்ற கிரந்த எழுத்துக்கள் பயின்றுவரும் இடங்களில் அவைகளையே பயன்படுத்தியுள்ளோம். ஆண்டு, தேதி, பிற எண்கள் தமிழ் வடிவில் உள்ளவை அரபிய எண்முறையில் அளிக்கப்பட்டுள்ளன. ஆண்டு, மாதம், தேதிகளுக்கு இடப்பெற்ற குறியீடுகளும் பிற குறியீடுகளும் விரிவாக ஏற்ற எழுத்துமுறையில் அளிக்கப்பட்டுள்ளன.

ரகர றகர, லகர ளகர ழகர, னகர ணகர நகர வேறுபாடுகள் இன்றி எழுதப்பட்டுள்ள ஆவணங்கள் அவ்வாறே பதிப்பிக்கப் பட்டுள்ளன. மரூஉ வடிவங்களும் பேச்சுத் தமிழும் கொச்சையான சொற்களும் பிழையான சொற்களும் எவ்வித மாற்றமும் இன்றி உள்ளது உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுள்ளன.

சில ஆவணங்களில் அழிந்த பகுதிகள் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளன. அவ்விடங்களில் எழுத்து எண்ணிக்கை கணக்கிடப் பெறவில்லை.

# பதிப்பாசிரியர் உரை

## கொங்குநாட்டு ஆவணங்கள்

கொங்குநாட்டில் வாழும் பல்வேறு சமூகத்தார்களைப் பற்றிய 80 ஆவணங்கள் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. இவற்றில் பாதி செப்பேடுகளில் பொறிக்கப் பட்டவை. பாதி ஓலையில் எழுதப்பட்ட ஆவணங்கள். சில ஆவணங்களின் மூலப்படிகள் கிடைக்கப்பெறாமையால் கிடைத்த காகிதப்படிகளை மட்டும் பாடமாகக் கொண்டு இங்கே பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இவற்றுள் ஓர் ஆவணத்தின் முதலும் இறுதியும் கிடைக்கவில்லை(17). மூன்று ஆவணங்களின் முடிவுப் பகுதிகள் இல்லை (18, 22, 61). சில ஆவணங்களின் இடையில் சில பகுதிகள் இல்லாமல் உள்ளன (3,11,34). பிற ஆவணங்கள் முழுமையாக உள்ளன.

இவை பெரியார் மாவட்டம் (36), சேலம் மாவட்டம் (19), கோவை மாவட்டம் (8), திருச்சி மாவட்டம் (8), மதுரை மாவட்டம்(3), தர்மபுரி மாவட்டம்(2), சென்னை(2), தஞ்சை(1), இராமநாதபுரம்(1) ஆகிய பகுதிகளில் கிடைத்தவையாகும்.

இவ் ஆவணங்கள் பரம்பரைப் புலவர்கள் இல்லங்களிலும் சமுதாயத் தலைவர்கள் இல்லங்களிலும் திருமடங்களிலும் திருக்கோயில் அர்ச்சகர்களிடமும் சுவடிகள் சேகரிப்போரிடத்தும் தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறையிலும் மைய அரசு தொல்லியல் அளவீட்டுத்துறையின் கல்வெட்டுப் பிரிவிலும் அருங்காட்சியகங்களிலும் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தவை.

இவற்றுள் ஒருசில தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் ஓலைச்சுவடித்துறையிலும் கல்வெட்டியல் துறையிலும் இருப்பவை. இங்கு பதிப்பிக்கப்பட்டுள்ள ஓலை ஆவணங்கள், பிற்காலச் செப்பேடுகள், கல்வெட்டுகள் ஆகியவற்றின் அமைப்பிலேயே அவற்றின் சொற்களையும் தொடர்களையும் கொண்டு காணப்படுகின்றன.

இவ் ஆவணங்களில் 2, 3, 4, 5, 7, 8, 9, 10, 11, 12, 21, 22, 23, 24, 26, 29, 33, 34, 39, 40, 44, 46, 47, 48, 59, 61, 62, 63, 67, 69, 70 எண்கள் உள்ளவை விசயநகர, நாயக்கர் காலம் சார்ந்தவை.

6, 20, 27, 32, 41, 49, 53, 64, 65, 68, 71, 72, 73, 74, 75, 78, 79, 80 எண்கள்

உள்ளவை மைசூர் அரசர் காலத்தைச் சேர்ந்தவை. 19, 60, 76 எண்கள் உள்ளவை ஆங்கிலேயர் கால ஆவணங்கள். பிற (1, 13, 14, 15, 16, 17, 18, 25, 28, 30, 31, 42, 43, 45, 50, 51, 52, 54, 55, 56, 57, 58, 66, 77) சரியாகக் காலம் கணிக்க முடியாதவை. மைசூர், ஆங்கிலேயர் கால ஆவணங்கள் சிலவற்றில் ஐதர், திப்பு ஆகியோரும் குறிக்கப்படுகின்றனர். ஓர் ஆவணத்தில் 'ஹர்டிசு' என்னும் கிழக்கிந்தியக் கம்பெனித் தலைவர் பெயர் காணப்படுகிறது.

சில ஆவணங்களில் அரசர்களைப் பற்றியும், சில ஆவணங்களில் பாளையக்காரர்களைப் பற்றியும் குறிப்புக்கள் இருந்தாலும் பெரும்பான்மையான ஆவணங்கள் பொதுமக்கள் தொடர்பானவையே. மக்கள் வரலாறு எழுதப்படல்வேண்டும் என்று வரலாற்றறிஞர்கள் கூறும் இந்நாளில், இவ் ஆவணங்கள் அத்தகைய வரலாறு எழுதப்பெறுவதில் மிகவும் முக்கியமான இடம்பெற்று விளங்கும் என்பதில் ஐயமில்லை.

பல ஆவணங்கள் அவை எழுதப்பெற்ற காலத்திற்கு வெகுகாலம் முன்பு நிகழ்ந்த செய்திகளைக் கூறுகின்றன. பரம்பரை பரம்பரையாகச் செவிவழிச் செய்தியாக வழங்கி வந்த அவை பிற்காலத்தில் எழுத்து வடிவம் பெற்றுள்ளன. அதனால் பல ஆவணங்களில் காலக்குறிப்புகள் பொருத்தமாக இல்லை. சிலர் தம் உரிமைகளை நெடுங்காலத்திற்கு முற்பட்டதாகக் காட்டவேண்டிக் காலக்குறிப்பைப் பலகாலம் முன்பு நடைபெற்றதாக ஊகித்தும் எழுதியிருக்கலாம்.

# கொங்கு நாடு

தமிழ்நாடு சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடுகளைப் போலவே தொண்டைநாடு, கொங்குநாடு என்ற இரு தனிப்பிரிவுகளையும் பழங்காலத்தில் தன்னகத்தே கொண்டிருந்தது. இவ்விரு நாடுகளையும் சேர்த்துத் தமிழ்நாடு ஐந்து என்று கூறும் வழக்கம் முன்பு இருந்தது.

தண்டியலங்காரத்தின் பழைய மேற்கோள் பாடலில் 'வியன் தமிழ்நாடு ஐந்து' என்ற குறிப்பும்,[1] சைவ சமயத்தின் தொன்மையான நூலாகிய திருமந்திரத்தில் 'தமிழ் மண்டிலம் ஐந்து' என்ற குறிப்பும்[2] வருவதைக் காண்கிறோம்.

சங்க இலக்கியங்களிலும் கொங்கு நாட்டு மக்கள் பல்வேறிடங்களில் சுட்டிக் கூறப்படுகின்றனர்.[3] கொங்குநாடும்[4] குறிக்கப்படுகிறது. பிற்கால இலக்கியங்களிலும் செப்பேடுகளிலும் கல்வெட்டுக்களிலும் பல்வேறு வரலாற்று ஆவணங்களிலும் கொங்குநாடு சிறப்புடன் கூறப்பட்டுள்ளது.

## எல்லையும் நாட்டுப்பிரிவுகளும்

பல ஆவணங்களில் கொங்குநாட்டு எல்லைகளாக கிழக்கில் கோட்டைக்கரை, மதுக்கரை (மதிள்கரை) குளித்தலை ஆகியனவும் தெற்கில் பழநிமலை, பன்றிமலை (வராககிரி) ஆகியனவும் மேற்கில் வெள்ளியங்கிரி, வெள்ளைமலை, வாளையாறு, பாலக்காடு, மலையாளம் ஆகியனவும் வடக்கில் பாலைமலை, பெரும்பாலை, மறம்சோகரமலை ஆகியனவும் கூறப்பட்டுள்ளன.

கொங்குநாடு மேல்கொங்கு, தென்கொங்கு, வடகொங்கு, கீழ்கொங்கு என நான்கு பெரும்பகுதியாகக் குறிக்கப்பட்டுள்ளது. கீழ்கொங்கு 'மழகொங்கம்' என்றும் அழைக்கப்பட்டது. சில காலங்களில் 'கொங்கிரண்டு' எனவும் இந்நாடு அழைக்கப்பட்டுள்ளது.

கொங்குநாடு முதலில் 24 உள்நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை: 1. பூந்துறைநாடு 2. தென்கரை நாடு 3. காங்கயநாடு 4. பொன்கலூர் நாடு 5. ஆறைநாடு 6. வாரக்கநாடு 7. திருவாவிநன்குடிநாடு 8. மணநாடு 9.தலையநாடு 10. தட்டய நாடு 11. பூவாணியநாடு 12. அரையநாடு 13. ஓடுவங்கநாடு 14. வடகரைநாடு 15. கிழங்குநாடு 16. நல்லுருக்கா நாடு 17. வாழவந்தி நாடு 18. அண்டநாடு 19. வெங்கால நாடு 20. காவடிக்கா நாடு 21. ஆனைமலை நாடு 22. இராசிபுர நாடு 23 காஞ்சிக்கோயில் நாடு 24. குறுப்புநாடு என்பன. திருவாவிநன்குடி நாட்டை வையாபுரிநாடு என்றும் அழைப்பர்.

இதனை,

'சொல்லஅரி தானபூந் துறைசைதென் கரைநாடு
தோன்றுகாங் கேயநாடு
தோலாத பொன்கலூர் நாடுதிகழ் ஆறையணி
தோய்ந்தவா ரக்கநாடு
வல்லமை செறிந்ததிரு வாவிநன் குடிநாடு
மணநாடு தலையநாடு
வரதட்டை பூவாணி அரையநாடு ஓடுவங்கம்
வடகரை கிழங்குநாடு
நல்லுருக் காநாடு வாழவந் தியும்அண்ட
நாடுவெங் காலநாடு
நாவலர்கள் சொல்கா வடிக்காநாடு ஆனைமலை
ராசிபுர நாடுநிதமும்
இல்லறம் வளர்ந்துதவி மல்குகாஞ் சிக்கோயில்
இயல்செறி குறுப்புநாடு
இனியபுகழ் சேர்கொங்கு மண்டலம் தனில்ஆன
இருபத்து நான்குநாடே'

என்னும் பாடல் விளக்குகிறது.

பிற்காலத்தில் காவிரியை மையமாக வைத்துப் பூந்துறை நாடும், அரையநாடும் கீழ்க்கரை, மேற்கரை என இரண்டாகப் பிரிக்கப்பட்டு வழங்கியது. பொங்கலூர் நாட்டிலிருந்து தென்பொங்கலூர் நாடு பிரிந்து தனியாக வழங்கியது.

கீழ்க்கரைப் பூந்துறை நாட்டுக்குப் பருத்திப்பள்ளிநாடு, ஏழூர் நாடு என்பனவும், இராசிபுரநாட்டுக்குச் சேலநாடும், வாழவந்தி நாட்டுக்குத் தாசூர்நாடும், விமலைநாடும், வெங்காலநாட்டுக்கு இடைப்பிச்சநாடும் இணைநாடுகளாகத் தோன்றின.

ஒருநாட்டின் சிறுபகுதிகட்குத் தனிப்பெயர்களும் வழங்கியுள்ளன. பூந்துறை நாட்டின் வடமேற்குப் பகுதி காஞ்சித்துண்டம் என்றும், குறுப்புநாட்டின் தெற்குப்பகுதி (தென்குறுப்பு) வீரசோழபுரநாடு என்றும் அழைக்கப்பட்டன.

மேட்டூர்ப் பகுதி வஞ்சிநாடு என்றும், ஆறைநாட்டின் பெரும்பகுதி வடபரிசார நாடு என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டன.

கோட்டைசூழ்நாடு ஆறு,[7] எழுகரை நாடு[8] என்ற பெரும் பிரிவுகளும் வழங்கிவந்தன. இராமபத்திரன் பட்டயத்தில் 42 நாடுகள் குறிக்கப்படுகின்றன. பூந்துறைக் கட்டளை எனும் ஏட்டில் தாராபுரம் சூழ்ந்த நாடு 24, டணாயக்கன் கோட்டை சூழ் நாடு6, குன்றத்தூர் துர்க்கம் வடகொங்கு 12 நாடு ஆக 42 நாடுகள் எனக் கூறப்பட்டுள்ளன. கொங்கு 24 நாடுகளும், வேறு சில நாடுகளும் இவ் ஆவணங்களில் பயின்று வருகின்றன.

அண்மையில் கிடைத்த மயிலாடுதுறை வி.சா.குருசாமி தேசிகர் வீட்டுச் செப்பேட்டில் 'கொங்கு 72 நாடு' என்று குறிக்கப்பட்டுள்ளது.

இந்த உள்நாடுகட்கெல்லாம் எல்லைகள் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு நாட்டுக்கும் எத்துணை ஊர்கள் என்று வரையறை செய்து ஊர்த்தொகைப் பாடல் களும் எழுதப்பட்டுள்ளன. சிலநாடுகட்கிடையே எல்லைப் பூசலும் போர்களும் நடைபெற்றுள்ளமை பழங்காலத்தில் எல்லைகள் வரையறை செய்யப்பெற்றதை உணர்த்தும்.

'உன்னிய தெற்கில் காஞ்சி
  உயர்நதி வடக்கு வானி
பொன்னிமா நதியே கீழ்ப்பால்
  புகன்றிடும் மேற்குத் திக்கில்
சென்னிமா மலையே ஆகும்
  சிறக்கும் முப்பத்தி ரண்டூர்
மின்னுமேல் கரையாய்க் கொண்டு
  விளங்குபூந் துறைநன் னாடு'

என்பது பூந்துறைப் புராணப்பாடல். குறுப்பு நாட்டுப் பட்டயத்தில் குறுப்பு

நாட்டின் எல்லைகள் கூறப்பட்டுள்ளன. மணல் நாட்டு எல்லை கூறும் தனிப்பட்டயம் ஒன்றும் உண்டு.

நாடுகட்கு உள்ளடங்கிய ஊர்களுக்கும் எல்லைகள் கூறப்பட்டுள்ளன. கொடுமணல் எல்லை கூறப்பட்ட ஆவணம் ஒன்றுண்டு. அதில் கூறப்பட்ட எல்லைகள் பெரும்பாலும் இன்றும் உள்ளன. எல்லைக் கற்களும் நடப்பட்டன[9] 'எல்லைப் பிள்ளையார்' போன்ற கோயில்களையும் எல்லையில் **கட்டுவது** வழக்கம்.

## வேளாளர்

பெரும்பான்மையான ஆவணங்களில் கொங்கு வேளாளர்கள் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.[10] வேளாளர்கள் தொண்டை நாட்டிலிருந்து சோழநாடு வழியாகக் கொங்கில் குடியேறியவர்கள் என்றே பெரும்பாலான ஆவணங்களில் குறிக்கப்பெறுகிறது.[11] சில ஆவணங்களில் தொண்டை மண்டலம் 79 நாட்டு வேளாளர்கள் சுட்டிக் கூறப்பட்டுள்ளனர்.

கொங்கு வேளாளர்கள் தென்திசை வேளாளர், பெருங்குடியினர் எனப்படுகின்றனர். கொங்கு 24 நாடுகளிலும் காணி கொண்டதும் பின் பல காரணங்களினால் ஓரூர்ப் பகுதியிலிருந்து மற்ற ஊர்களுக்குக் குடிபெயர்ந்தமையும் பல ஆவணங்களில் பேசப்படுகின்றன.

வேட்டுவர், கொங்கச் செட்டிகள், சிவப்பிராமணர், பாலவேளாளர் போன்ற பிறமக்களின் நிலங்களையும், ஊர்களையும், கோயில்களையும் விலைக்கும், வேளாளர்களிடமிருந்து திருமண உறவு மூலமாகவும் நிலங்களைப் பெறுவதால் புதுப்புதுக் குடியேற்றங்கள் பல ஏற்பட்டுள்ளன. சிலர் வெள்ளைப்பெண், முடப்பெண் ஆகியவர்களைத் திருமணம் செய்துகொண்டு அவர்கள் ஊர்களின் உரிமைகளில் பங்கு பெற்றுள்ளனர். அரசருக்குரிய இறைப்பணம் சிலரால் கட்டமுடியாதபோது சில வேளாளர் குலத்தார் அவர்களுக்குப் பணஉதவி செய்தும் ஊர்களைக் காணியாகப் பெற்றுள்ளனர்.

குடியேறிய வேளாளர்கள் தம் வேளாண்மைக்கு உதவியாகப் பிற குடிமக்களையும் கொங்கு நாட்டில் அழைத்துக் குடியேற்றினர். அவ்வப்போது அரசுபுரிந்த அரசர்கட்கு உதவியாக இருந்துள்ளனர். புலவர்களையும், குருக்களையும் நியமனம் செய்து கொண்டு மொழி, சமயம் ஆகியவற்றிற்கும் பெருந்தொண்டு புரிந்துள்ளனர். பிற சமூகத்தாருக்குச் சமுதாயத்தில் தக்க இடமளித்து ஒற்றுமையாக வாழ்ந்துள்ளனர்.

பல ஆவணங்களில் கொங்கு வேளாளர்தம் உட்பிரிவான குலங்கள் குறிக்கப் பட்டுள்ளன.[12] குலம், கூட்டம், கோத்திரம் ஆகியவை ஒரு பொருட் சொற்கள்.

# வேட்டுவர்

கொங்கு நாட்டில் வேளாளர்களைப் போல மிகுதியாக வாழும் சமூக மக்கள் வேட்டுவர்கள் ஆவர். இவர்கள் வேடர், வேட்டுவர், பூவிலுவர், காவிலுவர், மாவிலுவர் என ஐந்து பெரும்பிரிவினை உடையவர்கள். அதனால் ஐந்து சாதியார் எனவும் அழைக்கப்பட்டனர். குருகுல வம்சத்தார், கண்ணப்பர் குலத்தார், வாழரச மணவாளர் எனவும் இவர்கள் அழைக்கப்பெறுவர். அவர்களைப் பற்றிய செய்திகள் பல ஆவணங்களில் உள்ளன.

ஒரு ஆவணத்தில் வேளாளர்கட்கு உதவியாக வேட்டுவர்கள் காளத்தி மலைப்பகுதியிலிருந்து வரவழைக்கப்பட்டனர் என்று கூறப்பட்டுள்ளது. வேளாளர்கள் வேட்டுவர்களைப் 'பாதிப் பங்காளிகள்' என அழைத்தனர். வேளாளர்கள் செய்துகொண்ட பல ஒப்பந்தங்களில் வேட்டுவர்கள் சாட்சிக் கையொப்பம் இட்டுள்ளனர். வேளாளர்களின் எல்லைப்போர்களில் கலந்துகொண்டு வீரமரணம் எய்தியுள்ளனர். நாடு காப்பதில் வேளாளர்களுடன் இணைந்து ஒன்றுபட்டுச் செயலாற்றியுள்ளனர். புதிய அணைகட்டும் முயற்சியில் ஒன்றாக இருந்துள்ளனர்.

வேட்டுவர்களிடமிருந்து வேளாளர்கள் ஊர்களையும், நிலங்களையும், கோயில்களையும் விலைக்கு வாங்கியுள்ளனர். வேளாளர்கள் ஏற்படுத்திய முடவர் காப்பு நிலையத்துக்கும் கொடையளித்துள்ளனர். கொங்கு நாட்டில் ஏற்பட்ட வலங்கை-இடங்கைப் பூசலை விசாரித்து நீக்கியுள்ளனர்.

புரவிபாளையம் முத்துவேல்மணி சந்திர கோப்பண கவுண்டர், பரமத்திச் சீமை அல்லாள இளையா நாயக்கர், நாரணபுரம் ஆதிநாராயணக் கவுண்டர், வெள்ளோடு வெள்ளை வேட்டுவப் பாளையக்காரர், தென்னிலை வேட்டுவப் பட்டக்காரர் ஆகிய வேட்டுவர் குலத்தலைவர்கள் கொங்கு நாட்டுச் சமுதாய வாழ்வில் பெரும்பங்கு வகித்துள்ளனர்.

வேட்டுவர் சமுதாயத்தின் பல பிரிவுகள் இவ் ஆவணங்களில் குறிக்கப்படுகின்றன. அவை,

உரிமைப்படை வேட்டுவர், கடும்பிளி வேட்டுவர், கரடி வேட்டுவர், கரய வேட்டுவர், கீரை வேட்டுவர், குடுமி வேட்டுவர் (குடிமை வேட்டுவர்) குறாண்டி வேட்டுவர், குன்னாடி வேட்டுவர், கொல்லி வேட்டுவர், சிறுத்தலை வேட்டுவர், நரிய வேட்டுவர், பதரி வேட்டுவர், பனைய வேட்டுவர், பாண்டி வேட்டுவர், புல்லை வேட்டுவர், பூவாணி வேட்டுவர், மணிய வேட்டுவர், மாகாளி வேட்டுவர், மாச்சாடி வேட்டுவர், மாந்தப்படை வேட்டுவர், மின்ன வேட்டுவர், முளை வேட்டுவர், மோக்காளி வேட்டுவர், வடுக வேட்டுவர், வராக வேட்டுவர், வில்வேட்டுவர், விளக்கு வேட்டுவர், வெங்கச்சி வேட்டுவர், வெம்ப வேட்டுவர், வெலைய வேட்டுவர், வெள்ளை வேட்டுவர் என்பனவாம்.

## செங்குந்தர்

செங்குந்தர் செங்குந்தை, முதலியார், கைக்கோளர் என்றும் ஆவணங்களில் குறிக்கப் பெறுகின்றனர். இவர்கள் நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். செங்குந்தர்கள் கொங்கின் பல பகுதிகளில் புலவர்களாகவும் இருந்துள்ளனர். பெரும்பாலும் இடங்கைப் பிரிவின் தலைவர்களாக இவர்கள் இருந்துள்ளனர்.[14] இவர்களைப் பற்றிய பல செய்திகள் இவ் ஆவணங்களில் வெளிப்படுகின்றன.

சிலர் கணக்கு, சுங்கம் போன்ற அரசு அலுவல்களில் இருந்துள்ளனர். அரண்மனை மனுஷர் திம்மப்பமுதலியார் என்பவர் நாயக்கர் கால உயர் அலுவல ராக இருந்துள்ளார். செங்குந்தர் கொங்கு வேளாளர்கள் குடியேற்றத்தின்போது உடன் வந்ததாகவும் கொங்குக் கைக்கோளர் என்ற தனிப்பிரிவினர் இருந்தனர் என்றும் ஒரு ஆவணம் கூறுகிறது.

அலைவாய்மலை, சேவூர் போன்ற இடங்களில் இவர்களுக்கென்று தனிமடங்கள் இருந்திருக்கின்றன. சில ஆவணங்களில் செங்குந்தர்களுக்குரிய புகழ்வாய்ந்த அழகிய மெய்க்கீர்த்திகள் கூறப்பட்டுள்ளன. கண்ணகுலப் பட்டயத்தில் 60 காங்கேயர்கள் செங்குந்தர்குல நல்லய்யனை 61 ஆம் காங்கேயர் என்று பாராட்டியுள்ளனர். மோரூர் வேளாளர் தலைவர் கண்ணகுலக் காங்கேயருக்குக் குழந்தை இல்லை என்று செங்குந்தர் குல நல்லய்யன் தன் தலையை அரிந்து கொண்டான்.

செங்குந்தர் சமூகத்தில், நாட்டாண்மைக்காரர், பட்டக்காரர், சமயமுதலிப் பட்டக்காரர், சமய முதலிகள், பெரியதனக்காரர், புள்ளிக்காரர், காரியக்காரர் என்று பல தலைவர்கள் இருந்துள்ளனர். அவர்கள் தங்கள் குலத்திற்கென்று தனித் தேவரடியாரைத் தாராபுரம் கோயிலில் நியமித்துக் கொண்டனர். செங்குந்த மாணிக்கி என்று பெயரிட்டுப் பல கொடைகள் அளித்தனர்.

இவர்களுக்குள் போக்கங் கூட்டம், இராசி கூட்டம், ஆறாங் கூட்டம், பூந்துறையான் கூட்டம், சூரிய கூட்டம் என்று பல பிரிவுகள் உள்ளன. இவர்கள் கொங்கு 24 நாடுகளிலும் பரவி வாழ்ந்துள்ளனர்.

## வேட்கோவர்

உடையார், மண்ணுடையார், கொங்குத் திருநீலகண்டர், சாலிவாகன வம்சத்தார், வேட்கோவர் என்றெல்லாம் குறிக்கப்பெறும் இவர்கள் கொங்குவேளாளர்களால் பாண்டிய நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்டு 24 நாடுகளிலும் குடியமர்த்தப்பட்டவர்கள்.

இவர்களுக்குப் பழனி, தீர்த்தகிரி போன்ற இடங்களில் தனியாக மடங்கள் இருந்தன. பல சந்தர்ப்பங்களில் பவானி போன்ற புண்ணியத் தலங்களில் 24 நாட்டாரும் மாநாடாகக் கூடிச் சமய காரியங்கள், சமூக காரியங்கள் சில ஆற்றியுள்ளனர்.

இவர்களில் மோடிவித்தைக்காரர்களும் புலவர்களும் இருந்துள்ளனர். சென்மப் புலவர் என்பவர் கைகளில் முறங்களைக் கட்டிக் கொண்டு பறக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.

இவர்களுக்கு வேளாளர்கள் பல்வேறு கொடைகளைக் கொடுத்துள்ளனர். உரிமைகளும் பல அளித்துள்ளனர். அறுவடையின்போதும் விழாக்களின்போதும் வீட்டுச் சடங்குகளின்போதும் பல பொருள்களை அன்பளிப்பாக வழங்குவதாக எழுதித் தந்துள்ளனர். கோயில்களும் ஏற்படுத்தித் தந்துள்ளனர்.

ஊத்தலூர், இராதாபுரம், ஈரோடு போன்ற இடங்களில் இச்சமூகத்திற்குரிய பட்டக்காரர்கள் இருந்துள்ளனர். வேளாளர்கள் செய்த அறக்கொடைகள் பலவற்றுக்கு வேட்கோவர்கள் சாட்சிக் கையொப்பம் இட்டுள்ளனர்.

மதுக்கரைப் பட்டயம் என்பது வேளாளர்கள் கொங்கு வேட்கோவர்களுக்கு அளித்த காணியாட்சி உரிமைப்பட்டயம் ஆகும். பல சமூகத்தாருக்கும் வேட்கோவர்களுக்கும் ஏற்பட்ட பல ஒப்பந்தங்கள் அதில் உள்ளன.[15]

## நாடார்

கொங்கு நாட்டு நாடார்கள் வலங்கைப் பிரிவைச் சார்ந்தவர்கள். அவர்கள் ஆதிசேடன் நஞ்சில் உதித்த 7 கன்னிகட்கும் பரமசிவனுக்கும் பிள்ளைகளாகத் தோன்றியவர்கள் என்று கூறப்படுகிறது.

நாடாதி நாடார், நாட்டுவர், மதுரையார், போர்முடையார், கோனாடர், சங்கனி, கொங்கன் என்று ஏழுபிரிவினை உடையவர்கள். ஏழு பிரிவினர் பெயர்கள் நாரித்திலகன், நமனாரி குஞ்சரன், கனகரேகன், மதன சௌந்தரன், கமல கேதனன், கனக கேயூரன், கமல லோசனன் என்றும் கூறப்படுகின்றன.[16] இவர்களைப்பற்றிப் பல ஆவணங்கள் உள்ளன.

இவர்களும் கொங்கு வேளாளர்கட்குப் பல வகையில் உதவிகள் புரிந்துள்ளனர். இவர்கள் ஆவணங்களில் இவர்களுக்குரிய மெய்க்கீர்த்திகள் பல கூறப்படுகின்றன. ஈழநாடும் இலங்காபுரியும் வென்றவர்கள் என்றும்,[17] சங்கராச்சாரியார்க்கு உபதேசம் செய்தவர்கள் என்றும் கூறப்படுகின்றனர். பெரியதனம் என்ற தலைவர்களைக் கொண்டிருந்தவர்கள், நாயக்கர் பட்டம் உடையவர்கள் என்றெல்லாம் கூறப்பட்டுள்ளன.

நாடார் என்பது நாடாளுவார், நாடாழ்வார் அல்லது வளநாடர் என்பதன் சுருக்கம் என்றும், சாணார் என்பது சான்றோர் என்பதன் மரூஉ என்றும், முகப்பர் என்ற சொல்லே பிற்காலத்தில் மூப்பர் என மாறியதென்றும் ஆவணங்களில் கூறப்படுகின்றன.

சோழமன்னன் ஆற்று உடைப்பை அடைக்க இவர்களை அழைத்தபோது 'ஏர்வரி சுங்கம் கொடோம்; கொத்தெடுத்து மண்வெட்டோம்; கொற்றவரைக் கைமுகையோம்; கூடை தொடோம்; வெட்டி செய்யோம்' என்று கூறியதாக ஒரு ஆவணம் கூறுகிறது.

## வணிகர்

கொங்குநாட்டில் உழவுத்தொழில் போலவே வாணிகமும் சிறப்பாக நடைபெற்றுள்ளது[18]. பல ஆவணங்களில் வணிகர்கள், வாணிகம் பற்றிய செய்திகள் உள்ளன.

வணிகர்கள் வியாபாரிகளாக மட்டும் இல்லாமல் நிலங்களுக்கும், ஊர்களுக்கும், கோயில்களுக்கும் காணி உரிமை உடையவர்களாக இருந்தனர். கொங்கச் செட்டிகள் பலரிடமிருந்து ஊர்ப்பகுதிகளையும், கோயில்களையும், நிலங்களையும் கொங்கு வேளாளர்கள் விலைக்கு வாங்கியுள்ளனர். அக்கொங்குச் செட்டிகள் சிலர் 'கவுண்டர்' பட்டமும் பெற்று விளங்கினர்.

கொங்கு ஆவணங்களில் கல்அரக்கு, கால்நடை, கோதும்பை, சந்தனம், சவளி, சீரகம், சேவு, நவதானியம், நவரத்தினம், நீலம், நூல், பலசரக்கு, பாக்கு, புகையிலை, மஞ்சள் லவணம்(உப்பு), வெல்லம், வெற்றிலை போன்ற பல்வேறு பொருட்கள் பேட்டை எனப்படும் வணிக மையங்களில் விற்கப்பட்டுள்ளன. ஏற்றுமதி, இறக்குமதிப் பொருட்கள் ஏறுசாத்து, இறங்குசாத்து எனப்பட்டன. பொருட்கள் பொதிகளில் பேட்டைக்கு எடுத்துவரப்பட்டன. அவை நிசப்பொதி, மூலைப்பொதி என அழைக்கப்பட்டன. சுங்கம், பேரம், தரகு முதலிய வாணிபம் தொடர்பான சொற்கள் ஆவணங்களில் பயின்று வந்துள்ளன.

பல்வேறு வணிகர்கள் ஒன்றாகக் கூடி அறச்செயல்களுக்கும், ஆலயங்களுக்கும் மகமை என்னும் சமூக வரி கொடுத்தனர். ஆள் எண்ணிக்கைக் கணக்கிலும் (தலைக்கட்டு), வணிகப் பொருள் கணக்கிலும், ஊரார் சேர்ந்தும் (பெரிய கெடி, சின்னக் கெடி) அவ்வகைக் கொடை அளித்தனர். பிற சமூக மக்களுடனும் இணைந்து கொடை கொடுத்துள்ளனர்.

இசுலாமியரும் வாணிகம் செய்யும் வணிகர்களாக இருந்துள்ளனர் (முசலிமான் 3, வேடசெந்தூர் இராவுத்தமார் 74). அவர்களும் சாட்சிக் கையொப்பங்கள்

இட்டதுடன் பிற வணிகருடன் சேர்ந்து சிவன் கோயிலுக்குக் கொடையளித்துள்ளனர்.

ஆவணங்களில் கீழ்க்கண்ட வணிகர் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன:

இருபத்துநான்குமனைத் தெலுங்கச்செட்டி, எட்டுவகைப் பலர், கவறைச்செட்டி, கன்னடச்செட்டி, கொங்கச்செட்டி, கோமுட்டி, சாலியசெட்டி, செட்டிக்காரர், செட்டியள், சேடசெட்டி, தேசத்தார், தேவாங்குசெட்டி, நகரத்தார், நான்குதிசை ஐம்பத்தாறு தேசத்துப் பலர், பட்டக்காரர், பட்டுநூல்செட்டி, பலபட்டறை, பன்னிரண்டாம்செட்டி, மூத்தாருசெட்டி, ராவுத்தமார், வர்த்தகர், வெள்ளாஞ்செட்டி, வைசியாள் (வைசியர்).

## குலகுருக்கள்

கொங்குநாட்டு மக்கள் தங்கள் குல குருக்களாகவும், கோயில் அர்ச்சகர்களாகவும் ஆதிசைவப் பெருமக்கள் என்னும் சிவப்பிராமணர்களை நியமித்துக் கொண்டு கோயில், சமய காரியங்களைச் செய்து வந்தனர். பல ஆவணங்களில் குலகுருக்கள், சிவப்பிராமணர்கள் குறிப்பிடுகின்றனர்.

வேட்டுவர்கள், கொங்குச்செட்டிகளுடன் சேர்ந்து சிவப்பிராமணர்கள்[20] நிலங்களுக்கும், ஊர்களுக்கும் உரிமையுடையவர்களாக இருந்துள்ளனர். அவர்களிடமிருந்து நிலங்களையும், ஊரின் உரிமைகளையும் வேளாளர்கள் பெற்றுள்ளனர்.

கொங்கு நாட்டில் வேளாளர்கள் குடியேறியபோது குலகுருக்களுடன் வந்தனர் என்று கூறப்பட்டுள்ளது. 24 நாடுகட்கும் 24 குருக்கள் நியமிக்கப்பட்டனர். காங்கேயநாடு போன்ற நாடுகளில் ஊர்கள்தோறும் குருக்கள் இருந்தனர். சில குலத்தார் தங்களுக்கென்று தனியாகக் குருக்களை நியமித்துக் கொண்டனர்.

ஆதிசைவக் குலகுருக்களின் பூர்வீகம் தொண்டைமண்டலத்துக் காஞ்சிபுரம் என்றும், சோழ மண்டலத்துத் திருக்கடையூர் என்றும் கூறப்படுகிறது.

குலகுருக்களுக்கு உடல் பொருள் ஆவி மூன்றையும் அளிப்போம் என்று அடிமைச் சாசனம் எழுதித் தந்துள்ளனர். வேறு எங்கு குடிபெயர்ந்து வாழ்ந்தாலும் குலகுருவுக்கு ஆண்டுதோறும் செலுத்தும் தலைக்கட்டு வரியும், பாதகாணிக்கையும், அவர் சஞ்சாரம் வரும்போது சஞ்சாரக் காணிக்கையும் அளிப்போம் என்று எழுதித் தந்துள்ளனர். அச் சிவபிராமணர் காசி யாத்திரை செய்தவர்கள்[21] தம்பெயருடன் 'காசிக்குப் போய்வந்த' என்ற தொடரைச் சேர்த்துக் கொண்டனர்.

## புலவர்கள்

புலவர்களைப் பற்றிய அரிய பல செய்திகள் இவ் ஆவணங்களில் கூறப்பட்டுள்ளன.[22]

கொங்கு வேளாளர்கள் நாடு பிரித்தபோது 24 நாடுகட்கும் யார் யார் புலவர், எந்தெந்தக் குலத்தாருக்கு யார் புலவர் என நிர்ணயம் செய்தனர். கருமாபுரத்தில் பொருளந்தை குலத்தார் கூடித் தங்களுக்கென்று தனிப் புலவரை நியமித்துக் கொண்டதை ஒரு ஆவணம் விளக்குகிறது. அவர்கள் குலப்புலவர் பொன்னாலிப் புலவருக்குப் பொருளந்தைகுல மெச்சன் என்று பட்டப்பெயர் சூட்டினர். குறுப்புநாட்டார் படைத்தலை வேளாளருக்கும் கொங்கு வேளாளருக்கும் பொதுவாக இருந்த புலவரை நீக்கித் தனித்தனியாகப் புலவரை நியமித்துக் கொண்டனர்.

ஊராரும் நாட்டாரும் பிற சமூகத்தவரும் செய்துகொள்ளும் ஒப்பந்தங்களில் புலவர்களும் சாட்சிக் கையொப்பம் இட்டுள்ளனர். அதனால் சமுதாயத்தில் புலவர்கட்கு இருந்த செல்வாக்குப் புலப்படுகிறது.

புலவர்களுக்கு ஏருக்கு அல்லது கட்டின ஏருக்கு பண்ணையத்துக்கு, பெருங்குடி சிறுகுடிக்கு இவ்வளவு கொடுக்க வேண்டும் என்று நிர்ணயம் செய்து கொடுக்க ஒப்புக்கொண்டு சாசனமும் எழுதித் தந்தனர். தானியம் அடிக்கும் ராசிக் களத்திலேயே புலவர்கட்கு முறத்தில் தானியம் அளந்து அளித்தனர். பேரரசர்கள் கொடுக்கும் கொடையும் அதற்கு நிகர் அல்ல என்று அப்பரிசில் பெற்ற புலவர்கள் பாடினர்.[23]

திருமணவீட்டில் 'கலியாணப்படி' புலவர்கட்குக் கொடையாக அளித்தனர் வீடுகட்குப் புலவர்கள் வரும்போது வயிறார உணவளித்துத் தாம் உண்ணும் கலத்தில் பால்பழம் அளிப்பர். 'பால் சாப்பிடும் புலவர்' என்றே அவர்கட்குப் பெயர். யாராவது புலவருக்குரிய கம்பையும், காசையும் அளிக்காவிட்டால் 'மண்கலம் தவிர்த்து வெண்கலம் பறித்து' அளித்தனர். புலவர்கள் வேளாளர்களிடம் வலக்கையையேந்திப் பரிசு பெற்றனர். பிறர் பேரரசர் ஆயினும் இடக்கையையே நீட்டுவர்.[24]

## கம்பர்

கவிச்சக்கரவர்த்தி கம்பரைப்பற்றிச் சில செய்திகள் கூறப்படுகின்றன (ஆவணம் 1, 10, 12, 18).

கொங்குநாட்டில் வேளாளர்கள் குடியேறும்போது நாடுபிரித்துக் குலம்

கோத்திரம் பிரித்து 5000 காணிப்பாடல்கள் பாடிப் பரிசிலும் பெற்றவர் கம்பர். கம்பரின் கையேட்டுக்காரர்கள் பன்னிருவர். அவர்கள் பெருகிக் கொங்குநாடெங்கும் புலவர்களாக நியமனம் பெற்றனர்.

வேளாளரைப் புகழ்ந்து பாடிய கம்பர் சோழமன்னனைப் பாட மறுக்கிறார். சோழனின் பொன்னூதிமலை வேளாளரின் போர்ப்பட்டறைக்கல்[25] என்றும், சோழனின் செங்கோல் முத்திரை வேளாளரின் உளைக்கோல் முத்திரை என்றும், சோழனின் பொன்னிநதி வேளாளரின் எச்சில்கலத் தண்ணீர் என்றும் கூறிய கம்பர் சோழன் பரிசளிக்கும்போது இடக்கையை நீட்டிப் பரிசு வாங்குகிறார். சோழன் வினவ 'வலக்கை வேளாளரிடம் பரிசு பெறவே' என்று கூறுகிறார்.

காவிரி வேளாளரின் எச்சில்கலத் தண்ணீர் என்று கம்பர் சொன்னதற்குப் பரிசோதனை செய்து காட்டுமாறு சோழன் கேட்க மதுக்கரைக்குச் சோழனை அழைத்துவந்து கம்பர் அவ்வாறே காட்டுகிறார். காவிரித்தாய் கோபித்து வெள்ளப் பெருக்கெடுத்துச் சோழநாட்டையும், சோழன் அரண்மனையையும் மூழ்கச் செய்கிறது. சோழன் வேண்டுகோளுக்கு இணங்கக் கம்பர் காவிரிவெள்ளம் அடங்கப்பாடினார். கம்பரின் வேண்டுகோளுக்கு இணங்க வேளாளர் அரசருக்குச் செலுத்தவேண்டிய திருமண வரியைக் கம்பருக்கு அளிக்கச் சோழன் சாசனம் எழுதித் தந்தான். ஆவணங்கள்[26] கூறும் இச்செய்திகளைப் பற்றிச் சில தனிப்பாடல்களும் உள்ளன.

கம்பருக்குப் பின் அவரது வாரிசுகளான புலவர்கள் 'கம்பர்வாழிப் புலவர்' என்று பெயர் பெற்று அத்திருமண வரியைப் பெற்று வருகின்றனர். வதுவை வரி பெற்ற நன்றிக் கடனுக்காகக் கம்பர் வேளாளர்கட்கு மங்கல வாழ்த்து, ஏரெழுபது, கம்பர் வாழி ஆகியவைகளைப் பாடினார் (திருக்கை வழக்கம் என்ற நூலும் கம்பர் பாடியதாக வழங்குகிறது).

வேளாளர் திருமண நிகழ்ச்சிகளில் மங்கலன் (நாவிதன்) பாடும் மங்கல வாழ்த்துக்குப் பின்னர் கம்பரின் மேற்கண்ட நூல்களைக் கொங்குப் புலவர்கள் படித்தனர்.

கம்பர் மீது மிகுந்த பற்றுக் கொண்ட வேளாளர்கள் கம்பரின்[27] வாரிசான புலவர்களையும் 'தமிழ்க் கம்ப நாடர்' என்றே அழைத்தனர். கம்பருக்கு என்றென்றும் தாங்கள் அடிமை என்று சாசனம் எழுதித் தந்தனர்.[28] ஆவணம் கூறும் இச்செய்தி தனிப்பாடல்கள், இலக்கியத்தால் உறுதிப்படுகிறது. கம்பர் பிறந்த உவச்சர் குலத்தைக் 'கம்பர் குலம்' என்றே அழைத்தனர்.

சோழன் கொடுத்த 7000 பொன் மதிக்கத்தக்க ஆடையில்,[29] வேளாளர் அளித்த கம்பைக் கம்பர் முடிந்து வந்ததைச் சோழன் கண்டான். வேளாளர் குலச் சிறுவன் ஒருவனை நிறுத்துச் சோழனைவிட நிறையில் மிகுந்தவன் என்று கம்பர் காட்டினார். இதனால் கம்பருக்கும் சோழனுக்கும் பகை ஏற்பட்டது.

சோழனைச் சினந்து கம்பர் சில பாடல்கள் பாடியதாகக் காணப்படுகிறது.[30] இறுதியில் சோழன் கம்பர்மீது பகைகொண்டு கையம்பினால் கம்பரைக் கொன்றார் என்று இரண்டு[31] ஆவணங்கள் கூறுகின்றன. இதுபற்றி தனிப்பாடல்கள் சிலவும் உள்ளன.

செவிவழிச் செய்தியாகக் கூறப்பட்டு வந்த கட்டுக் கதைகளை நம்பி இவை எழுதப்பட்டிருக்க வேண்டும்.

## பிற சமூகத்தார்

தேவர், ஆசாரிகள், நாயக்கர், பண்டாரம், நாவிதர், வள்ளுவகுலத்தார் ஆகியோருக்குத் தனித்தனி ஆவணங்கள் உள்ளன.

தனித்த ஆவணங்கள் இன்றி ஆவணங்களில் பிற சமூகங்களின் பெயர்களும் பல இடம்பெறுகின்றன. அவை,

அகம்படியர், இடையர், உப்பிலியர், உவச்சர், ஒட்டர், கம்பளத்தார், கருணீகர், கன்னடியர், குறும்பர், கோசங்கிகள், சக்கிலியர் (மாதாரிகள்), சவளக்காரர், சனுப்பர், சிவியார், சோழியர், திருவம்படிக்காறர், தொட்டியர், தொம்பர், தொழுவர், தோட்டி, நாவிதர் (மங்கலர்), பச்சை மலையாளர், பள்ளர், பாஞ்சாலர், பாலிடையர், மல்லர், மலையாளர், யாதவர், வண்ணார், வன்னியர், வாணியர், வாரியர், வீரமுடியாளர், வீரமுஷ்டிகள் என்பவர்களும் இப்பிரிவின் சில உட்பிரிவுகளும் கூறப்பட்டுள்ளன.

பொதுவாக இப்பல்வேறு சமூகத்தினர் 'பலபட்டறை' 'பலபட்டறையார்'என அழைக்கப்பட்டனர்[32]

## முடவர் காப்பகம்

கைகால்கள் ஊனமுடைய முடவர்களுக்குப் பூந்துறை நாட்டில் சத்தியமங்கலம் என்னும் ஊரில் ஏற்படுத்தப்பட்ட முடவர் காப்பு நிலையம் பற்றிய அரிய செய்திகளை 'மொடவாண்டி பட்டயம்' கூறுகின்றது (62) பல ஊர்கள் அந் நிலையத்திற்குக் கொடையாக அளிக்கப்பட்டதுடன், எந்தெந்தச் சமூகத்தார் முடவர் காப்பு நிலையத்துக்கு எவ்வளவு வரி கொடுக்கவேண்டும் என்றும் விரிவாக எழுதப்பட்டுள்ளது.[33]

## வலங்கை - இடங்கை[34]

செங்குந்தர் வெற்றிப்பட்டயம் (51), ஆசாரிகள் வெற்றிப் பட்டயம் (58),

மல்லிகுந்தம் பட்டயம் (66) ஆகியவை வலங்கை இடங்கைப் பூசல் பற்றிய முழுப் பட்டயங்கள். காலிங்கராயன் அணைப்பட்டயம் (21), சேலூர்ப் பட்டயம் (53), மோரூர்க் காங்கேயர் ஏடு (54), கன்னிவாடிப் பட்டயம் (59) , வேலூர்ச் செப்பேடு (61) . ஆகிய ஆவணங்களிலும் இப்பிரிவுகள் பற்றிய சில செய்திகள் இடம்பெற்றுள்ளன. 98 சாதியார் என்று இவர்கள் குறிக்கப்படுகின்றனர்.

ஆசாரிகள் (தட்டார், கொல்லர், தச்சர், கன்னார், கல்வேலைக்காரர்), கம்பளத்தார், செங்குந்தர், தேவேந்திரப் பள்ளர், நகரத்தார், மாதாரிகள், வன்னியர் ஆகியோர் இடங்கைச் சாதியாகவும், கவறைச் செட்டிகள், சாணார், சேணியர் ஆகியோர் வலங்கைச் சாதியாகவும் ஆவணங்களில் சுட்டிக் கூறப்படுகின்றனர்.

இவர்களுக்குள் ஏற்பட்ட உரிமைபற்றிய வழக்குகள் 'பூர்வம் தீர்ந்த பட்டயங்கள்' கொண்டும், காஞ்சிபுரம் காமாட்சி அம்மன் சன்னதியில் கிடைத்த செப்பேட்டு நகல்களைக் கொண்டும் தீர்த்துவைக்கப்பட்டன. இவர்கள் வழக்குகளை வேளாளர்களும், வேட்டுவர்களும், அரசு அதிகாரிகளும் விசாரித்துத் தீர்த்துள்ளனர். தோற்றவர்கள் அபராதமும், வென்றவர்கள் வெற்றிக் காணிக்கையும் அளித்தனர்.

## சமுதாய ஒற்றுமை

நான்கு வருணம் பற்றிய குறிப்பும், பல்வேறு சாதிகள் பற்றிய குறிப்புக்களும் பல ஆவணங்களில் வந்திருந்தாலும் அவற்றுள் பகையோ, வேற்றுமை உணர்ச்சியோ, பூசல்களோ பெரும்பாலும் இருக்கவில்லை. பல்வேறு சமூகத்தார்கள் இணைந்து ஒருவர்க்கொருவர் உதவிபுரிந்து ஒற்றுமையாக வாழ்ந்துள்ளனர். சமய, சமூகக் காரியங்கள் பலவற்றை ஆற்றியுள்ளனர்.

சமூகத்தின் மேல்நிலையில் உள்ள மக்கள் எழுதிய ஆவணங்களில் அவ்வூரில் உள்ள எல்லா மக்களும் சாதி வேறுபாடு இன்றிச் சாட்சிக் கையொப்பம் இட்டிருப்பது சிறப்புக்குரியதாகும். திருவிழாக்கள் நடத்தித் திருப்பணிகள் செய்வதிலும் எல்லாச் சமூகத்தவர்களும் இணைந்து பணிபுரிந்துள்ளனர். (ஆவணங்கள் 1, 3, 13, 24, 33, 34, 36, 42, 52, 54, 60, 78, 79).

திருமுருகன்பூண்டி ஆவணத்தில் வேளாளர் நிலம் வாங்கி ஊர் உரிமை பெற்ற போது அவ்வூரில் வாழ்ந்த முசலிமான்கள் சேக்கு அப்துல்கான், இபுராமு மீராகான், மம்முதுகான் ஆகியோரும் கையெழுத்திட்டுள்ளனர்.

அதுபோல் பிற சமூகத்தார் செய்துகொண்ட ஒப்பந்தங்களை எழுதியும், சாட்சிக் கையொப்பமிட்டும், முன்னிலை வகித்தும் வேளாளர்களும்

பணிபுரிந்துள்ளனர்.

கொங்குச் சமுதாயத்தின் இருவேறு அணிகளாகக் கருதப்பட்ட வேட்டுவர்களும், வேளாளர்களும் இணைந்து பணிபுரிந்துள்ளனர்.

கண்ணர் குலத்தினருள் 60 தண்டிகைக் காங்கேயர் ஒரு சிறப்புமிக்க குடியினர். அவர்கள் தமக்கு உதவிய செங்குந்தர்குல நல்லய்யனுக்கும், நல்லராண்டிக்கும் 61ஆம் காங்கேயன் என்று பட்டமளித்துத் தம்முள் ஒருவராகக் கூறியுள்ளனர்.

## கலைநிலை

கொங்கு நாட்டில் கலை வளர்ச்சியும் ஓரளவு இருந்துள்ளது. உடுக்கை, கின்னாரம், கூத்தாடி, சங்கீதம், சுத்தசங்கீதம், தக்கை, தக்கைகொட்டி, தவில், நட்டுவன், நாகசுரம், நாகபாசத்தார், பட்டன், பண்பாடி, மத்தளம், ருத்ரவீணை, வீணை போன்ற சொற்களை ஆவணங்களில் காணுகின்றோம்.

சில சமூகத்தார் தங்களுக்கென்று தனியாக ஆடல் மகளிரைக் கோயில்கட்கு விட்டிருக்கின்றனர். 'செங்குந்த மாணிக்கி' (49),[35] 'செல்லகுல மாணிக்கி' (23) ஆகியோரைப் பற்றிய செய்திகளைக் காணுகிறோம்.

தங்கள் சமூகத்தைச் சேர்ந்த பெண்கள் இல்லாவிடில் பெண்களை விலைக்குவாங்கிப் 'பொட்டுக் கட்டுதல்' என்னும் சடங்கு செய்து அப்பெண்ணுக்கு 'மாணிக்கி' பட்டம் அளிப்பர் (30). அப்பெண்கள் தேவரடியார் எனப்பட்டனர். காலப்போக்கில் அப்பெயர் தேவடியாள் (54), தேவிடியாள் (24), தாசி (50) என மாறிவிட்டது. அவர்களின் சமூகப் பணிகட்கு மக்கள் ஆதரவு அளித்துள்ளனர்(44). அவர்களுக்கும் அவர்கள் குடும்பத்தாருக்கும் கொடைகள் அளிக்கப்பட்டன(49). இப்பெண்கள் தம்மை ஆதரித்த தலைவர்கள் இறந்தபோது உடன்கட்டை ஏறியுள்ளனர். மாணிக்கிப் பெண்களுக்கு வரியில்லை என ஓர் ஆவணம் கூறுகிறு.

இப்பெண்டிர்கள் திருக்கோயிலில் சேவகம் புரிந்துள்ளனர். 'தேவரடியாள் உமையாயிக்கு திருச்செங்கோட்டில் கோயில் சேவகமாகி சுவாமிக்கு நாட்டியம் புரிந்துகொண்டு குடியிருக்கும்போது' என்பது அரையநாட்டுப் பட்டயச் செய்தியாகும்(44).

## பாடல்கள்

பல ஆவணங்களில் பல அரிய பாடல்கள் எழுதப்பட்டுள்ளன.[36]

'வையம் நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே'

என்ற பெரியபுராண ஏடுகள் பலவற்றில் காணப்படும் இறுதிப்பாடல் பல ஆவணங்களின் தொடக்கத்தில் காணப்படுகிறது. (40, 44, 48, 49, 69, 71, 75). பெரியபுராணப் பயிற்சி கொங்கு நாட்டில் மிக்கிருந்தது இதனால் புலப்படுகிறது.[37]

அனுப்பப்பட்டிச் செப்பேட்டில் காணும்,

'கொங்கு மலைநாடும் குளிர்ந்தநதி பன்னிரண்டும்
சங்கரனார் தெய்வத் தலம்ஏழும் - பொங்கொளிர்சேர்
வஞ்சிநகர் நாலும் வளமையால் ஆண்டருளும்
கஞ்சமலர்க் கையுடையோன் காண்'

என்ற வெண்பா வரலாற்றுச் சிறப்புமிக்கதாகும்; ஆய்வுக்குரியதுமாகும்.

கோ.யில் கொடைகளை அழிக்காமல் காக்கவேண்டும். அழித்தால் என்ன தீங்குவரும் என்பது,

'நட்டகல் இட்ட சூலம் நீடுகல் வெட்டு எல்லை
வட்டமா லயங்கள் தோறும் மகதேவர் தான தர்மம்
யிட்டிடை பண்ணி மெத்த யிடஞ்சலே செய்பு வார்க்கு
குட்டநோய் நரகந் தன்னில் குளிப்பது திண்ணம் தானே'

என்ற விருத்தப் பாடலால் புலப்படுகிறது (40).

வெண்பா, ஆசிரியப்பா, கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம், ஆசிரியவிருத்தம் (5 சீர், 6 சீர், 8 சீர், 12 சீர்) ஆகிய பலவகையான பாடல்கள் கொங்கு ஆவணங்களில் பயின்று வருகின்றன. பழனிச்செப்பேடுகளில் (69,71) முருகனைப் பற்றிய அழகிய தோத்திரப் பாடல்கள் பல உள்ளன.

இவற்றின்மூலம் கொங்குநாட்டுக் கல்விநிலை, புலவர்களின் பாடல்கள் எழுதும் ஆற்றல் ஆகியவைகளை அறிகிறோம்.

## காஞ்சிபுரம்

கொங்கு வேளாளர்களின் பூர்வீகம் தொண்டைநாடு என்று கூறப்படுவதால்,[38] பல ஆவணங்களில் காஞ்சிபுரம் சிறப்பாகக் குறிக்கப்பெறுகிறது.[39]

கொங்கு நாட்டினர் காஞ்சிபுரத்தில் மடம் கட்டி, கோயில் திருப்பணி செய்து, கொடைகள் அளித்துத் தேரோட்டம் நடத்தியுள்ளனர். பல சமூகத்தவர் தங்களுக்குள் ஏற்படும் சண்டை சச்சரவுகளைத் தீர்க்கக் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் காமாட்சியம்மன் சன்னதியில் ஓலைச் சுவடியும் செப்பேடும் கண்டு படித்துத் தீர்த்துக்கொண்டுள்ளனர்.

கொங்கு நாட்டில் நாடு, மாநாடு கூட்டி நியாயம் கிடைக்கவில்லை என்றால் காஞ்சிபுரம் சென்று நியாயம் பேசுகின்றனர். சில ஆவணங்களில் ஏகாம்பரநாதர், காமாட்சிக்கு வணக்கம் கூறப்பட்டுள்ளது.

வேளாளருக்குரிய 'ஏரெழுபது' நூலைக் கம்பர் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் சன்னதியில்தான் அரங்கேற்றினார் என்றும் கூறப்படுகிறது.

கொங்கு நாட்டில் காஞ்சிபுரம் தொடர்பு ஏனைய சில பெயர்களாலும் உறுதிப்படுகிறது.[40]

## அலுவலர்கள்

ஆட்சி தொடர்பான அலுவல் பெயர்களும், அலுவலர் பெயர்களும் சில ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ளன.[41]

அவை அட்டவணை, அதிகாரி, அமுலுதார், அரண்மனை மனுஷர், இராணுவத்துக்குக் கர்த்தர், எழுத்துக்காரன், கந்தாசாரம், காரியத்துக்குக் கர்த்தர், காரியப்பேர், கணக்குப்பிள்ளை, சம்பிரதி, சுபேதார், சிரஸ்ததார், சேனபோகம், சேர்வைக்காரர், சொத்துக் கணக்குப்பிள்ளை, தலத்துக் கணக்குப்பிள்ளை, தலையாரி, தண்டு, தளவாய், திவான், நோட்டம், நாட்டாண்மை, பட்டக்காரன், பரிசாரகம், பாளையக்காரன், பாருபத்தியம் (ஓபளி பாருபத்தியம்), பொக்கிஷக் கொல்லர், பாளையப்பட்டு, மணியம், மந்திரி, மெய்போகம், ராயசம், வில்லைச் சேவகம் என்பனவாகும்.

## நாட்டுப் பிரிவுகள்

இவ் ஆவணங்களில் அமரம், ஊர் (சிற்றூர், பேரூர்),கட்டமனை, கிராமம், கெடி (சின்னக்கெடி, பெரியகெடி)/ சாவடி, சீமை, நாடு, பாடி, பேட்டை, பூண்டி, மண்டலம், மாகாணம் என்ற நாட்டுப் பிரிவுகள் காணப்படுகின்றன.

சில நாடுகள் ஆறுகளை மையமாக வைத்து மேல்கரை, கீழ்கரை, வட, தென்

நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன.

நாட்டுப் பிரிவுகள் இன்றிச் சமூகக் கூட்டங்களும் ஊர், நாடு, மகாநாடு (மாநாடு) என அழைக்கப்பட்டுள்ளன.

இராமபத்திரன் பட்டயத்தில் கொங்கு நாடு பற்றிய சில புவியியல் விபரங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

## ஆவணம் எழுதுதலும் படி எடுத்தலும்

பல ஆவணங்களில் அவற்றை எழுதியோர் பெயர்கள் மிகத் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளன.

தலத்துக் கணக்கர்கள் அய்யர், பிள்ளை (6, 28, 31, 33), உபாத்தியாயர்(24), கவுண்டர் (49, 60) ஆகியோர் ஓலை ஆவணங்களை எழுதியுள்ளனர். செப்பேடுகளை ஆசாரிகள் (4, 7, 8, 9, 10, 12, 13, 20, 25, 32, 70, 74, 76, 79) சிற்பாசாரியன் (34), தட்டான்(36, 37, 61) பத்தன் (54) ஆகியோர் செய்துள்ளனர்.

செப்பேடு பற்றிச் சில அரிய செய்திகள் கீழ்வருமாறு எழுதப்பட்டுள்ளன.

கரூர் அருணாசல ஆசாரி மகன் னாகாசாரி
கை எழுதி அடிச்சது (76).

'ஈரோட்டு நாக ஆசாரி மகன் அளாகாத்திரி ஆசாரி
கை எழுதி அடிச்சது' (25)

'எடப்பாடி ராமசாமிப் பத்தன் செய்தது' (54)

'இந்தத் தற்ம சாசனம் திராவிட அட்சரத்தில் தாம்பற சாசனத்தில் எழுதினவன் தானப்ப முதலியார் குமாரன் நீலகண்டம். யிந்த அட்சரம் கொத்தியவன் கோயம்புத்தூரிலிருக்கும் விசுவகர்ம வங்கிஷத்தில் வீரப்ப ஆசாரி மகன் ஆனத்தாசாரி'

பல ஆவணங்கள் மீண்டும் நகல் படிகள் எழுதப்பட்டுள்ளன. அவை பிரிநகல், புதுப்பட்டயம், சபாது (சவா.து) எனக் கூறப்பட்டுள்ளன.

'பட்டயம் அனாதியாய் ஏடு பழையதாய்ப் போனபடியினாலே . . . . நான்

குன்னத்தூரில் யிருக்கும் பிராமணரில் வடமலைப் பிள்ளை மகன் ரங்கனாத புத்திர நல்லய்யன் எழுதினேன். பெரியோர்கள் பொறுத்தருளவும்'

'இது நம்ம நாட்டு நியாய ஓலை. ரொம்பக்காலம் பழகிப்போனபடியால் நாங்கள் அந்த ஓலைக்குப் பதில் புது ஓலை போட்டு யுவ வருஷம் ஐப்பசி மாசம் 15-ம் தேதி எழுதியிருக்கிறோம். ஏட்டுக் குற்றம், எழுத்துக்குற்றம், வாசகத்தப்பு, வரிமாறாட்டம் இருந்தபோதிலும் நீங்கள் அனைவோரும் பொறுத்துக்கொள்ள வேண்டியது' என அவைகளில் எழுதப்பட்டுள்ளன.

## வரி இல்லாதவர்கள்

நாட்டிற்குப் பெரு வருவாயைக் கொடுக்கக் கூடியது பல்வேறு வரிகள்தான். ஆனால் சிலருக்கு வரிகள் இல்லை என ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ளது (21,47,67).

குறவர், கூத்தாடி, சக்கிலியர் (தொட்டியச் சக்கிலியர், மதுரைச் சக்கிலியர், அனுப்பச் சக்கிலியர், கானக்காட்டுச் சக்கிலியர்). தொட்டியர், தொம்பர், பட்டர், பறையர். புலவர், மறவர், மாணிக்கி, வலையர், வேட்கோவர், ஆண்டிகளில் குறுப்பாண்டிகட்கும் வரி எதுவும் இல்லை என்று கூறப்பட்டுள்ளது. கைகால் ஊன முடைய முடவர்கட்கும் வரி எதுவும் இல்லை.

வரியில்லாத இவர்களில் சிலருக்கு வரி விதித்து வரிவாங்க முற்பட்டபோது அவர்கள் போராட்டம் நடத்தியும், அரசனிடம் பெருமக்கள் ஆதரவுடன் சென்று முறையிட்டும் வரி நீக்கம் பெற்றுள்ளனர்.

வரி இல்லாத மக்கள் சிலர் மேல்மக்களுக்கு 'ஏவின ஊழியம்' செய்து வந்துள்ளனர்.

## பசி நீக்கும் பணி

மக்கள் ஏற்படுத்திய சத்திரங்களிலும், மடங்களிலும் சமயம் தொடர்பான நிகழ்ச்சிகள் நடைபெற்றதுடன் வழிப்போக்கர் பசியைப் போக்க (பரதேசிகள் வந்தபேர்) அங்கு உப்பு, ஊறுகாய், நீராகாரம் அளிக்கப்பட்டுள்ளது (68,69).[42]

தண்ணீர்ப் பந்தல்களிலும் நீர்மோர், உப்பு, ஊறுகாய் அளிக்கப்பட்டதுடன் பிள்ளைக்குப் பாலும், தலைக்கு எண்ணெயும் இலவசமாக அளிக்கப்பட்டது திருவிழாக்காலங்களில் பலருக்கு அன்னதானம் (மகேசுவர பூசை) செய்யப்பட்டது(71).

## பண்டைய வரலாற்றுக் குறிப்புக்கள்

சோழப் பேரரசர்கள் கலிங்கம், கடாரம், கலியாணி, கங்கைக்கரை, ஈழம் ஆகியவைகளை வென்றார்கள். அப்போர் நிகழ்ச்சிகளில் பல நாடாழ்வார்களும், கைக்கோளப் படையினரும் பங்குபெற்றிருக்கவேண்டும்.

அவர்களின் வழியினராகக் கூறிக்கொள்ளும் நாடார், செங்குந்தர் செப்பேடுகளில் அவ்வெற்றிகள் பற்றிய சில குறிப்புக்கள் காணப்படுகின்றன(49, 50, 56, 68).

'கலிங்க மண்டலம் கட்டறுத்துக்
கடகமும் கலியாணமும் கொண்டோர்'

'கங்கை மண்டலம் குறும்பறுத்துக்
கலிங்க மண்டலம் கட்டறுத்தோர்'

'காஞ்சிபுரமும் கலியாணபுரியும் பெற்றவர்'

'கருணாகரர்க் கிளைஞராதிபன்
கலிங்கமும் கொண்டு
பாணியும் ஏற்று'

'ஈழமும் இலங்காபுரியும் உள்ளவர்'

## திப்பு சுல்தான்

நான்கு ஆவணங்களில் திப்பு சுல்தான் பற்றிய குறிப்புகள் உள்ளன (6, 51, 75, 78). 18-4-1792, 5-2-1797-ஆம் நாட்களில் எழுதப்பட்ட ஆவணங்களில் மைசூர் சமஸ்தானம் சீரங்கப் பட்டணத்தில் ஆட்சிபுரியும் சாமராச உடையாரின் காரியத்துக்குக் கர்த்தராகிய திப்பு சுல்தான் என்று கூறப்பட்டுள்ளார். தனி ஆட்சியை இக்காலத்தில் நடத்திய திப்பு சுல்தான் ஆவணங்களில் சாமராச உடையார் குறிக்கப்பட்டிருப்பது கொங்கு நாட்டில் திப்பு சுல்தான் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளச் செய்த ஏற்பாடாக இருக்கலாம்.

திப்பு சுல்தான் இறந்தபின்னரும்கூட 26.7.1800இல் எழுதப்பட்ட ஆவணத்தில் திப்பு சுல்தான் அருளாநின்ற காலத்தில் என்று எழுதப்பட்டுள்ளது.

திப்பு சுல்தான் கொங்கு ஊர்களில் அமுலுதார், சேனபோகம், சிரஸ்ததார் ஆகிய அதிகாரிகளை நியமித்திருந்தார். எல்லா ஊர்களிலும் அமுலுதார்மட்டும் இசுலாமியராக இருந்தனர். ஏனையோர் அந்தணர்களாவர்.

## சிறப்புச் செய்தல்

பல்வேறு காலங்களில் பலருக்குச் சிறப்புக்கள் செய்யப்பட்டுள்ளன. அவை, விருது சமயபட்டயம் கொடுத்தல், சமயம் கொடுத்தல், சாதிப்பட்டயம் கொடுத்தல், சாதிப்பிள்ளை ஆக்குதல், பொட்டுக்கட்டுதல், பட்டங்கட்டுதல், காணியாட்சி அளித்தல், பரதேசி முத்திரை[43] **அளித்தல்,** பரிவட்டம் கட்டல் ஆகிய தொடர்களால் வழங்கப்பட்டுள்ளன.

## நீர்ப்பாசன முயற்சிகள்

கொங்கு நாட்டில் பல பகுதிகளிலும் மக்கள் புதிதாகக் குடியேறி வேளாண்மை[44] முயற்சிகளை மேற்கொண்டனர். அதைப் பற்றியும் சில ஆவணங்கள் குறிக்கின்றன. இங்குள்ள 11 ஆறுகளில் 90 அணைகளும், 6 மானவரைகளும், 17 குளங்களும் இருந்தன என்று ஆவணங்கள் கூறுகின்றன.

நொய்யலில் கப்பினி நஞ்சையன் அணை கட்டிய செய்தியும், பவானியாற்றில் காலிங்கராயன் அணை கட்டிய செய்தியும், ஆன்பொருநையில் வேணாவுடையாரும், தொண்டைமாக் கவுண்டரும் அணை கட்டிய செய்தியும், கொடுமணலில் தேவமார்களில் கணக்கன் கூட்டத்தார் அணை உடைப்பை அடைத்த செய்தியும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

## நில அளவு

நிலங்கள் குழி, வள்ளம், மிடா போன்ற அளவைகளிலும், விதைக்கும் தானியத்தின் அளவைக் கொண்டும் நிர்ணயம் செய்யப்பட்டது. நிலங்கள் காடு, தோட்டம், தாறு, துண்டு, நன்செய், புன்செய் என்று குறிக்கப்பட்டன.

## நாணயம்

பல நாணயங்கள் வழக்கில் இருந்தன. நாகரம்(பூநாகரம், பொன்னாகரம், திருவையாற்று நாகரம்) பொன், பணம், (ராஜகோபாலி பணம், நாகரம் பணம், கெண்டிராயன் பணம், வீரராயன் பணம், மாடைப் பணம்) கழஞ்சு, வராகன் என்ற பல பெயர்கள் இவ் ஆவணங்களில் குறிக்கப்படுகின்றன.

## அரிய செய்திகள் சில

அக்காலச் சமுதாயத்தில் நிலவிய அரிய செய்திகள் சிலவற்றைச் சில ஆவணங்கள் சுட்டிக் கூறுகின்றன.

அடிமைமுறை இருந்துள்ளது(56).

பெண்களும், ஆண்களும் விலைக்கு விற்கப்பட்டுள்ளனர். தேவரடியாராகப் பொட்டுக்கட்டிவிட ஒரு பெண்ணும், நாவிதன் ஒருவனும விலைக்கு வாங்கப் பட்டுள்ளனர் (30, 63).

கோயிலில் விழாக்களின்போது இடையூறு ஏற்பட்டால் நரபலியிடும் வழக்கம் இருந்தது. ஆடவர், பெண்டிர் இருபாலாரும் பலியிடப்பட்டுள்ளனர் (24, 31, 66).[45]

தம் கழுத்தைத் தாமே அரிந்துகொண்டு பலிகொடுப்பது நிகழ்ந்துள்ளது. பரண். ஏறிக் 'கழுத்தலகு பாய்ச்சி' அவ்வாறு தம்மைப் பலியிட்டுள்ளனர் (53, 61).[46]

தலைவர்களுக்காகத் தம் தலையைக் குடிமக்கள் அரிந்துகொண்டனர் (54).

கணவன் இறந்தால் மகளிர் உடன்கட்டை ஏறினர். மனைவியர் மட்டும் இன்றி நெருங்கிய உறவினரும், குடிமக்களும், தேவரடியாரும் உடன்கட்டையேறியுள்ளனர் (24, 34). அவர்கள் வீரமாசத்திகள் (வீரமாத்தி) எனப்பட்டனர்.[47] அவர்களுக்காக எடுக்கப்பட்ட 'வீரமாத்தி கோயில்கள்' பல ஊர்களில் உள்ளன.

தோல்வியடைந்தோர், பழிவாங்கப்பட்டோர், அவமானப்பட்டோர் அல்லது பேரிழப்புக்கு உள்ளானவர்கள் நாக்கைப் பிடிங்கிக் கொண்டு உயிர்விட்டனர் (63).

செ. இராசு

தஞ்சாவூர்
4-12-91

---

**குறிப்புகள்**

1. தண்டியலங்காரம், நூற்பா 75, உரைமேற்கோள்.

2. திருமந்திரம் 1646.

3. 'கொற்றச்சோழர் கொங்கர்ப் பணீஇயர் (நற்றிணை 10), 'ஒளிறுவாள் கொங்கர்' (குறுந்தொகை 383), 'கொங்கர் ஆ பரந்தன்ன' (பதிற்றுப்பத்து77), 'கொங்கர் படுமணி ஆயம்' (அகநானூறு 79), வாடாப் பூவின் கொங்கர் (அகநானூறு 253) 'கொங்கர் . . . உள்ளி விழவு' (அகநானூறு 368).

4. 'ஆகெழு கொங்கர் நாடு' (பதிற்றுப்பத்து 22) 'கொங்கு புறம் பெற்ற கொற்ற

ஸ்ரீடீபு சுலுத்தான் சாயிவுரவர்கள் நாளையில் கொங்கு தாராபுரம் வடக்கு வாசலுக்குச் சேந்த காங்கய நாட்டுப் பட்டக்காரர் காங்கய மன்றாடியாரவர்கள், சக்கரை மன்றாடியாரவர்கள், பல்லவராயக் கவுண்டவரவர்கள், நாட்டுக் கவுண்டர்கள், வள்ளியிறைச்சல் நல்லண கவுண்டர், பட்டாலிச் சிவன்மலைக் கவுண்டர், மோளைக் கவுண்டர் கீரனூரு சின்னதம்பிக் கவுண்டர், பார்ப்பதி ரகுநாதக் கவுண்டர், பரஞ்சேர்வழி ராக்கியாக் கவுண்டர், மருதுறை வெள்ளைக் கவுண்டர், முத்தூருப் பெருமாக் கவுண்டர், கன்னபுரம் பெரியதம்பிக் கவுண்டர், வெள்ளைக்கல் பழனிமலைக் கவுண்டர், ஆலாம்பாடி குப்பக் கவுண்டர், ஆறுதுளு குழந்தைவேலப்ப கவுண்டர் இவர்கள் முன்னிலையில் தீர்த்தகிரிச் சர்க்கஸ்ரக் கவுண்டரவர்கட்கு பட்டாலிக் கிராமம் காவலவரில் அனுமந்தக் கவுண்டன் பட்டயம் எழுதிக் கொடுத்தபடி. பட்டயமாவது பட்டாலிக் கிராமத்தில் என்பங்குக்குச் சேர்ந்த காணியாட்சி முச்சூடும் தங்களுக்குச் சுத்தக் கிரயமாய்த் தீத்துத் தங்கள் கையில் ரூபாயி 200 வாங்கிக் கொண்டபடியினாலே இந்த ஆதீனத்தில் என் பங்கு கிணறு குட்டை குளம் நஞ்சை புஞ்சை மாவிடை மரவிடை எப்பேருப்பட்டதும் புத்திர பவுத்திர பாரம்பரியமாய் ஆசந்திராதித்த காலம்வரைக்கும் அனுபவிச்சுக் கொள்ளுவாராகவும்.

இந்தப் படிக்குப் பட்டக்காரர்கள் நாட்டார் முன்னிலைக்குள்ளாகச் சம்மதித்து எழுதிக்கொடுத்த பட்டையம். இதுக்குச் சாச்சி பூந்துறை நாட்டுக் காசிலிங்கக் கவுண்டர், வெள்ளோட்டு முத்தித் திருமலைக் கவுண்டர், நசையனூருச் செங்கோட்டுவேலப்ப கவுண்டர், எழுமாத்தூருக் குமாரசின்னய கவுண்டர், காளமங்கலம் பழனிக் கவுண்டர், தென்கரை நாடு மூலனூர்த் தொண்டைமாக் கவுண்டர், தூரம்பாடி சின்னய கவுண்டர், வஞ்சியப்ப கவுண்டர், புங்குலிக்காநாடு ஞானசிவாச்சலக் கவுண்டர், பரமத்தி ராமயன், இளையா நாயக்கன். இந்தப் பட்டையம் எழுதினவன் தலத்துக் கணக்கு வெங்கிட்டய்யன் மகன் தாத்தைய்யன் கையெழுத்து. அனுமந்தக் கவுண்டன் கைஒப்பிதம். முத்தூருக் காங்கய கவுண்டன் கைஒப்பிதம்.

# 7. நல்லூர்க் கிரையப் பட்டயம்

இச்செப்பேட்டு நகல் பெரியார் மாவட்டம் காங்கயம் வட்டம் தம்பிராட்டி பாளையம் நாச்சிமுத்துப் புலவரிடம் ஓலைச்சுவடியாக இருந்தது; மூலம் கிடைக்கவில்லை. அதன் நகல் கொடுமணல் வி. இராமசாமிக் கவுண்டர் மூலம் கிடைத்து இங்குப் பதிப்பிடப் பெறுகிறது.

கி.பி. 1575ஆம் ஆண்டு (1586?) மார்ச்சு மாதம் 10 ஆம் தேதி ஆத்தூரில் இருக்கும் கொங்கு வேளாளரில் பனங்காடை குலத்துச் சோழியப்ப கவுண்டர் தன் கால்நடைகட்கு மேய்ச்சல் நிலம் தேடிப் பொன்குலுக்கி நாட்டைச் சேர்ந்த நல்லூருக்கு வந்தார்.

ஏற்கனவே கொங்கச்செட்டி பவளத்தான் என்பவர் அப்பகுதியை மதுரை நாயக்கருக்காக நிர்வாகம் செய்து வந்தார். அவர் அரசுக்குச் செலுத்த வேண்டிய பணத்தைச் செலுத்த முடியவில்லை.

ஆயிரம் பொன்னாகரமும் பத்துப்பொதி நெய்யும் கொடுத்தால் நல்லூர்க் காணியாட்சியில் பாதி அளிப்பதாக மேய்ச்சலுக்கு வந்த ஆத்தூர் சோழியப்ப கவுண்டரிடம் கொங்கச்செட்டி பவளத்தாக் கவுண்டர் கூறுகிறார். அவ்வாறே ஆயிரம் பொன்னாகரமும் 10 பொதி நெய்யும் கொடுத்துக் கொங்குச் செட்டியிடமிருந்து நல்லூரின் உரிமையைப் பெறுகிறார் சோழியப்ப கவுண்டர். கொங்கச் செட்டியாருடன் நல்லூருக்குரிய காணியாளர் சிவப்பிராமணர் சுப்பய்யக் குருக்களும் ஓலையில் கையெழுத்திட்டுள்ளார்.

சோழியப்ப கவுண்டர் பெற்ற 2786 வள்ளக் காட்டுக்கு (11144 ஏக்கர்) விரிவான எல்லை கூறப்படுகிறது. உள்ளூர்க் கோயில்களிலும் ஆத்தூர்ச் சோழியப்ப கவுண்டருக்கு உரிமை கொடுக்கப்படுகிறது. உரிமை அளித்தமைக்குச் செப்பேடும் அளிக்கப்படுகிறது.

இந்த ஆவணத்தில் காடையூர், பழையகோட்டை, காங்கேயம், கொற்றனூர்ப் பட்டக்காரர்களும், பூந்துறைநாடு, பொன்குலுக்கி நாடு, குறுப்புநாடு ஆகிய நாட்டுப் பிரதிநிதிகளாகச் சில கவுண்டர்களும் கையெழுத்திட்டுள்ளனர். ஊர்த்தோட்டியும் 'இருவர் கையெழுத்திட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

## மூலம்

கலியுக சகாத்தம் 4687 இதின் மேல் செல்லாநின்ற பவ வருசம் பங்குனி

மாதம் 13ந் தேதி சுக்கிர வாரம் உத்திர நக்ஷத்திரமும் பாலவார்கர்ணமும் பெற்ற சுபதினத்தில் மதுரை வீரப்பனாயக்கர் செங்கோல் செலுத்திய நாளில் ஆத்தூரிலேயிருக்கும் பனங்காடை கோத்திரம் முத்து நஞ்சப்ப கவுண்டன் மகன் சோளியப்ப கவுண்டன் மேச்சல்பட்டிக்கு மாடோட்டிக் கொண்டு பொன் குலுக்கு நாட்டுக்குச் சேர்ந்த நல்லூருக் கிராமத்திற்கு வந்தபடியினாலே நல்லூரிலே யிருக்கும் கொங்கச் செட்டி பகளத்தா னாகப்பட்டவன் நமக்கு அரமனை முடிப்புக்குப் பணம் செல்லாமலிருக்கிறபடியினாலே நீ ஆயிரம் பொன்னாகரமும் பத்துப் பொதி நெய்யும் கொடுத்தால் இந்தக் காணியாக்ஷியிலே உனக்குப் பாதி கொடுக்கிறேன் என்று சொன்னபடியினாலே நான் சம்மதித்து ஆயிரம் பொன்னாகரமும் பத்துப் பொதி நெய்யும் கொடுத்து காலக்கிரயத்திற்குக் கொண்டேன்.

நான் முப்பாடு நீ பிற்பாடும் அண்ணனும் தம்பியும் ஆக கூடி சுகத்திலிருப்போமாகவும். இதற்கு முன்னே சிவப்பிராமண ஜாதி சுப்பய்யக் குருக்களும் கொங்கச் செட்டி பகழத்தானும் நாங்கள் இரண்டு பேரும் ஆத்தூரு பனங்காடை கோத்திரம் சோளியப்ப கவுண்டனுக்கு எழுதிக் கொடுத்தோம். மேல்படிகாட்டுக்கு செக்குப்பந்தி எல்லைவிவரம். 2786 வள்ளக்காடு ஈசான்யம் வடகிழக்கில் மூலை குரத்திக் கல்லு வெள்ளைப்பாரை, தென்கிழக்கு மூலை ஆனைக்கல் கரடு, தென்மேற்கு மூலை காங்கயம் சமுத்திரத்துக் குளம் வடக்குக்கடை, வடமேற்கு மூலை மண்திட்டுப் பாரைக்காடு. இதற்குள்ளாக சிவாலயம் செல்வி நாயகம் சோளீஸ்வரர் கோட்டையில் பேச்சியம்மனும் ஆத்தூருச் சோளியம்மனும் முக்கரைப் பிள்ளையாரும் இத்தாதி தேவதாயம் பிரம்மதாயமும் நடத்தி வைத்துக் கொண்டு சுகத்திலேயிருக்கவும். இதற்குச் சாக்ஷி சோளீஸ்வரன் கோவில் ஸ்தானீகம் சுப்பய்யக் குருக்கள், பேச்சியம்மன் கோவில் பூசாரி செல்லாண்டிப் \பண்டாரம், காங்கய மன்றாடியார், கொற்றைவேல் சர்க்கரை மன்றாடியார், பல்லவராயக் கவுண்டர், தென்கரைநாடு வேணாவுடையாக் கவுண்டர், பூந்தரசு நாடு வாரணவாசிக் கவுண்டர், பொன்குலுக்கி நாடு வேளராசி குளாயன் கூட்டம் முத்துச்சின்னய கவுண்டர், ஒகாயனூர் சாத்தந்தை கூட்டம் சிலம்பர கவுண்டன், குண்டடம் ஓதாளங் கூட்டம் வடுகநாத \கவுண்டன், பெருந்தொழுவு ஓதாளன் கூட்டம் சிலம்பர கவுண்டன், குருப்பநாடு அரசப்ப கவுண்டன், தோட்டி வகையிலே நெட்டப்பழனி, கருப்பத்தோட்டி இந்த நாட்டாரும் கூடி எழுதிக் கொடுத்த தாம்பர சாசனப் பட்டயம். இதற்கு விகாதம் பண்ணாமல் நடத்தி வைத்த பேர்கள் புத்திர பௌத்திரமாய் பரிபாலனமாய் அனேக கோடி அசுவமேதயாகம் செய்த பலனைப் பெருவார்கள். இதற்கு விகாதம் பண்ணின பேர்கள் அஸ்வஹத்தி கோஹத்தி பிரம்மஹத்தி சிசுஹத்தி நரஹத்தி அஞ்சு பஞ்சமா பாதகத்தில் போகக் கடவார்கள். இந்தப் பட்டயம் எழுதினது குண்டடம் வடுகநாத சுவாமி சன்னதியில் எழுதினது. இந்தப் பட்டயம் எழுதினவன் குருவாசாரி. வடுகனாதஸ்வாமி துணை செய்யவும். சோளியம்மன் ரக்ஷிக்கவும். கொங்கச் செட்டி பகழத்தான் கையொப்பம். பனங்காடை குலக் காணியாக்ஷி. இதற்கு முன்னாலே புல்லூர் புன்னம் ஆத்தூர் எழுமாத்தூர் கொடுமணல் நல்லூரே கொங்கச் செட்டியண்டே ஆயிரம் பொன்னாகரமும் பத்துப் பொதி நெய்யும் கொடுத்ததினால் \காலக் கிரயம் கொண்டேன்.

# 8. பிடாரியூர்ப் பட்டயம்

பெரியார் மாவட்டம் பெருந்துறை வட்டம் சென்னிமலை தெற்கு வீதியில் உள்ள தனியார் நிதி நிறுவனத்தில் இப்பட்டயம் உள்ளது.

மதுரைச் சொக்கநாயக்கர் கொங்கு நாட்டை ஆண்டுவரும் காலத்தில் மேல்கரைப் பூந்துறை நாட்டில் பிடாரியூரில் பொருள்தந்த குலத்தினர் சிலர் வாழ்ந்து வந்தனர். அவர்களில் செங்கோட கவுண்டர் என்பவர் பெண் வெள்ளை வேலம்மாளை வள்ளியறைச்சல் ஆந்தை குலம் குமார வேலப்ப கவுண்டருக்குத் திருமணம் செய்வித்துப் பிடாரியூரில் கால்காணி கொடுத்தனர்.

முன் குடுமிவேட்டுவர், சிவபிராமணர், கொங்கச்செட்டி இவர்கள் அதிகாரம் செலுத்திய காலத்தில் ஈஞ்சங்கூட்டம் கூத்தக் கவுண்டர் மகள் வெள்ளைப் பழனியம்மாளைக் கருமாபுரம் பொருள்தந்த கூட்டம் பள்ளிக்கூடத்தான் குழந்தை வேலப்ப கவுண்டருக்கு மணமுடித்துப் பிடாரியூரைக் காணியாகக் கொடுத்திருந்தனர்.

அப்போது பிடாரியூர்க் காணியில் 4900 வள்ளக்காடு கொடுக்கப்பட்டது. அதேபோல இப்போதும் 4900 வள்ளக்காடு ஆந்தை கூட்டம் குமாரவேலப்பக் கவுண்டருக்குக் கொடுக்கப்பட்டது. தேவதாயம், பிரமதாயத்துக்கு 900 வள்ளக்காடு கொடுத்தது போக மீதியை அனுபவித்துக்கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது.

செப்பேட்டில் சில கொங்குவேளாளத் தலைவர்களும், கோயில் தொடர் பானவர்களும், உள்ளூர்க் குடிபடைகளும் கையெழுத்திட்டுள்ளனர்.

## மூலம்

### திருச்சிற்றம்பலம்

கலியுக சகாத்தியம் 4870 வருஷம் செல்லாநின்ற செய வருஷம் சித்திரை மாதம் 17 தேதி மங்கள வாரமும் பரணி நட்சத்திரமும் பெற்ற சுபதினத்தில் மதுரை சொக்க நாயக்கர் செங்கோல் செலுத்திய நாளில் பிடாரியூரிலே இருக்கும் பிரளந்த கூட்டம் பள்ளிக்கூடத்தான் குளந்த வேலப்ப கவுண்டன் மகன் வெள்ளைவேலப்ப

கவுண்டன், செவ்வேலப்ப கவுண்டன், முத்து நஞ்சப்ப கவுண்டன், முத்து மலைச்சிய கவுண்டன், பொன்னிய கவுண்டன், சூரியாலிச்சாக் கவுண்டன், செங்கோட கவுண்டன் பெண்ணு வெள்ளைவேலம்மாளை வள்ளியறச்சல் ஆந்தை கூட்டம் சென்னிமலைக் கவுண்டன் மகன் குமரவேலப்ப கவுண்டனுக்கு குடுத்து இந்தக் காணி பிடாரியூரிலே கால் காணி குடுத்தோம்.

அதுக்கு முன்னமே குடுமி வேட்டுவன், சிவ பிராமணன், கொங்கச் செட்டி, ஈஞ்சங் கூட்டம் ரகுநாதசிங்கிக் கவுண்டன், கூத்த கவுண்டன் மகள் வெள்ளைப் பழனியம்மாளை கருமாபுரம் பிரளந்த கூட்டம் பள்ளிக் கூடத்தான் குழந்தை வேலப்பகவுண்டனுக்கு வெள்ளைப் பழனியம்மாளையும் குடுத்து பிடாரியூரும் குடுத்து விட்டான்.

தாங்கள் அந்தப் பிரகாரம் குடுத்துவிட்டோம். காட்டு விபரம்.

4900 வள்ளம் காடு. இதுக்கு எல்லை தென் மேற்கு மூலை ஏழூரு குமாரர் கோவில் எல்லை, தென் கிழக்கு மூலை எல்லைப் பிள்ளையார் கோவில், வட மேற்கு மூலை கல்லுத்துப் பாறை இதுக்குள்ளாக சிவாலயம் திருமுகமலர்ந்தநாதர் திருந்தார் குழலியம்மன் திருக்க நாராயணப் பெருமாள் திருக்கை விநாயகர் பிராட்டியம்மன் சென்னிமலை ஆண்டவன் தேவதாயம் விரும தாயத்துக்கு 900 வள்ளக் காடு நடப்புவிச்சுக் கொண்டு நீங்கள் யேழு பேரும் அண்ணன் தம்பியும் வெள்ளை வேலம்மாளும் ஆக எட்டுப்பேரும் அநுபவிச்சுக் கொண்டு சுகத்திலேயிருக்கவும். இதுக்குச் சாட்சி வெள்ளோடு பயிரங்கூட்டம் பழனிக் கவுண்டன், சாத்தந்தை கூட்டம் கருப்ப கவுண்டன், ஈங்கூரு ஈஞ்சங் கூட்டம் தம்பிராட்டிக் கவுண்டன், சிவன் கோயில் தானிகன் வேலய்யன், பெருமாள் கோவில் தானிகன் ராமசுவாமி, பிராட்டியம்மன் கோவில் தானியன் பழனியாண்டி, கருப்ப தோட்டி, செம்பரையன்.

இதுக்கு யாதாமொருபேர் விகாதம் பண்ணின பேர் கெங்கைக் கரையிலே காராம்பசுகைக் கொன்ற தோஷத்தில் போகக் கடவது. இது எழுதின்து குருவாசாரி.

# 9. பிடாரியூர்ச் செப்பேடு

இச்செப்பேடு சென்னிமலையை அடுத்த கூரபாளையம் பூசாரியார் கந்தசாமிக் கவுண்டர்வசம் உள்ளது.

கர வருடம் வைகாசி மாதம் 5 ஆம் தேதி மதுரை திருமலை நாயக்கர் ஆட்சிக் காலத்தில் மேல்கரை அரைய நாட்டுத் தலைநகராகிய தலையநல்லூரில் இருக்கும் கொங்கு வேளாளரில் கூறை குலம் சென்னிமலைக் கவுண்டர் மகன் பொன்காளியப்பக் கவுண்டருக்கு எழுதிக் கொடுத்த செப்புப் பட்டயம்.

பொன்காளியப்பக் கவுண்டர் தலையநல்லூரிலிருந்து தன் மாடுகளை ஓட்டிக்கொண்டு மேய்ச்சல்நிலம் தேடிப் பூந்துறைநாட்டுப் பிடாரியூர் வந்தார். பிடாரியூர் பொருள்தந்த குலம் சூரியாலிச்சாக் கவுண்டர் மகள் வெள்ளைப்பிள்ளை வள்ளியம்மாளைத் திருமணம் செய்து கொண்டு பிடாரியூரில் கால்பங்கு காணியைப் பெற்றார். பிடாரியூரின் பழைய காணியாளர்கள் கூறை குலத்துடன் ஆந்தை குலமும், பிறளந்த குலமும் (பொருள் தந்த) சிவப்பிராமணரும், கொங்கச் செட்டியும், குடிமி வேட்டுவரும் காணி உரிமை உடையவர்கள் என்பதும் இச் செப்பேடு மூலம் தெரிகிறது.

செப்பேட்டில் காணிபெற்ற எல்லையுடன் ஊரில் காணிபெற்ற உரிமைத் தெய்வங்களும் கூறப்படுகின்றன. கையெழுத்திட்டு எழுதிக் கொடுத்ததில் கவுண்டர்களுடன் ஆண்டி, தோட்டி ஆகியோரும் குறிப்பிடப்பெறுகின்றமையால் அவர்கள் பெற்றிருந்த உரிமையும் புலப்படுகிறது.

## மூலம்

திருச்சிதம்பலம். கலியுக சகாற்தம் 4047க்கு மேல் செல்லா நின்ற கற வருஷம் வய்யாசி மாதம் 5 தேதி மங்கள வாறமும் பறணி நஷ்செத்திறம் பெற்ற சுபதினத்தில் மதுரை திருமல னாயக்கற் செங்கோல் செலுத்து நாளில் அறய நாட்டுக்குச் சேந்த தலயநல்லூரு கூற கூட்டம் சென்னிமலைக் கவுண்டன் மகன் பொங்காளியப்ப கவுண்டன் மேல்கரை பூந்துறை நாடு புடாறியூருக்கு மேச்சல் பட்டிக்கு மாடோட்டிக் கொண்டு வந்த யிடத்தில் பிறளந்த கூட்டம் சூறியாலிச்சாக் கவுண்டன் மகள் வெள்ளப் பிள்ளை வள்ளியம்மாளை குடுத்து கால்பங்கும் குடுத்தோம். யிதுக்கு முன்னமே சிவப்பிறாமணன் கொங்கச் செட்டி குடிமை வேட்டுவன் பிறளந்த

கூட்டம் ஆந்தகூட்டம் கூறகூட்டம் யிதுக்குக் காட்டுக்கு விபறம் 4999 வள்ளக்காடு. யிதுக்கு எல்லெ ஏழூறு கொமாறர் : கோவில், வடக்கே கறுங்கறடு, குட்டிமுழிபாறை, எல்லப் பிள்ளையார்ற் யிதுக்கு உள்ளாக சிவாலயம் திறுமுகமலற்ந்தனாதற் திறண்டா குளலியம்மன் திறக்க னாறாயண பெறுமாள் திறுப்பிறாட்டியம்மன் திறுக்க வினாயகன் யிந்த தேவாலயம் பிறம்மதாயம் னடப்பிச்சுக் கொண்டு சுகத்திலே யிறுக்க. யிதுக்கு சாஷ்சி காங்கயம் மண்ணாடியாற், சக்கறை கவுண்டன், பல்லவறாகவுண்டன், பூந்துறை நாடு வாரணவாசிக் கவுண்டன், வெள்ளோடு சென்னிமலைகவுண்டன், யீங்கூறு தம்பிராட்டிகவுண்டன், சென்னிஆண்டி, செம்ப தோட்டி இத்தாதிய பேரும் கூடி எழுதிக்குடுத்த சாதனப்பட்டயம்.

இதுக்கு விகாதம் பண்ணாமல் னடப்பிச்சு பேற்கள் அசுமேதயாகம் பெறுவாற். யிதுக்கு விகாதம் பண்ணினவற் காசியில் காறாம் பசுவை கொண்ண தோச்சத்தில் போகக் கடவது. யிது எழுதினது சென்னிமலை கயிலாசனாத சன்னதி. எழுதினது குறுவாச்சாறி. சென்னி ஆண்டவர் துணை உ

# 10. கத்தாங்கண்ணிப் பட்டயம்

இப்பட்டயம் முன்பு கத்தாங்கண்ணி இராசாக் கவுண்டரிடம் இருந்தது. அவர் மறைவிற்குப்பின் கள்ளிப்பட்டி பழனிச்சாமிக் கவுண்டர் வசம் இப்போது உள்ளது.

சோழநாடு விட்டுக் குடிபெயர்ந்த வேளாளர்கள் கொங்கு நாட்டுக்கு வந்து நாடு_காணியூர்கள் பிரித்துக் கொண்டனர். கொங்கு வேளாளரில் கண்ண குலத்தினர் கன்னிவாடி, கத்தாங்கண்ணி உட்பட 16 ஊர்களில் குடியேறி வாழ்ந்தனர். அவர்கள் தலைவர் கண்ணப்ப மன்றாடியார்.

அவர்களில் அத்தப்பகவுண்டர் என்பாரின் வழிவந்த கண்ணகுலச் செங்கோட்டு வேலப்பகவுண்டர் கத்தாங்கண்ணியில் காணி கொண்டு வாழ்ந்தபோது இக்கரைக் கத்தாங்கண்ணியில் இருந்த சிவந்தி குலத்துத் தீத்தாக்கவுண்டர் மகள் வெள்ளைப் பிள்ளையைத் திருமணம் செய்து கொண்டு இக்கரைக் கத்தாங்கண்ணியிலும் காணிமிராசு, கோயில் உரிமை, முப்பாடு, விபூதி, பச்சடம் முதலிய உரிமைகளைப் பெறுகிறார்.

திருப்பூரில் பல ஊர்க் கவுண்டர்கள், உரிமையுடைய அந்தணர், கொங்கச் செட்டியார், வேட்டுவர், ஆண்டி, தட்டார், நாயக்கர் ஆகியோரின் முன்னிலையில் இப்பட்டயம் எழுதப்பட்டுள்ளது.

## மூலம்

உ ஹரி ஓம்.

ஸ்ரீமது சுபநமஸ்து. திரிச்சுற்றம்பலம். கலியுக சகார்த்தம் 521 வருசத்தில் சோழ தேசத்தில் யிருந்து சோழ தேசம் விட்டு கொங்கு தேசத்துக்கு யெங்கள் முன் பெரியோர்களும் யின்னஞ்சகலமானபேர்களும் விசையநகர்ப் பட்டணம் வந்து சேர்ந்து மூவறாசாக்களும் தேவப்ப றாயரும் கம்பரும் கையேட்டுக்காரரும் இன்னும் சகல பேர்களுமிருந்து நாடு நகர் குரித்து குலங்கோத்திரங் குரித்து காணி பூமியும் பிரித்து யெங்கள் முன் பெரியோர்களுக்குக் காணியுண்டானது. முதல்க்காணி கொண்டது கன்னிபாடி காகம் குழாநல்லி காழமங்கை கிறாம்பாடி நசையநாரு காஞ்சிக்கோவில் மோரூர் முழுசையும் யேக சம்பையும் கற்றாங்காணியும் ஆலத்தூர்ப் பட்டணம் மணியனூரு ஓடை தகடையூரு ஆனங்கூரு யிப்படி யெங்கள் முன் பெரியோர்கள் பதினாறு காணியுங் கொண்டு பட்டமும் பெற்று கண்ணப்ப

மன்றாடியாரென்று பேர் விழங்கிய யெங்கள் முன் பெரியோர்கள் பேர் அத்தப்ப கவுண்டன், நல்லண கவுண்டன், அமறாபதிக் கவுண்டன் யிம்மூவர்களும் விழங்கிவரும்போது, யிம்மூவர்களுக்கு மக்கள் அத்தப்ப கவுண்டனுக்கு தண்டிய வேலப்ப கவுண்டன், உலகுடைய றாசாக் கவுண்டன், திருச்செங்கோட கவுண்டன், நல்லன கவுண்டனுக்கு மக்கள் சின்னப்பழனிக் கவுண்டன், பொன்னய கவுண்டன், நஞ்சறாயக் கவுண்டன், அண்ணாமலைக் கவுண்டன், அமறாபதிக் கவுண்டனுக்கு மக்கள் சின்னப்பக் கவுண்டன், குருநாத கவுண்டன், சென்னிமலைக் கவுண்டன், குப்பண கவுண்டன், நல்லதம்பிக் கவுண்டன் யிந்த மூவர் வகையில் நல்லண கவுண்டரு மக்களும் முதல்க் காணியிலேயிருக்குறார்கள். அமறாபதிக்கவுண்டரு மக்களும் கூடலூரு மோரூரு முழசியூரு யிந்தக் காணிகளில் யிருக்குறார்கள். அத்தப்பகவுண்டரு மக்களும் வகைறாக்களும் கற்றாங்காணியில் காணி பூமியும் மேன்மைத்துடனேயும் ஆலையந் திருப்பணியும் நன்மணிஷ்பரன் மேலூரம்மன் சொக்கபெருமாள் அழக நாச்சியம்மன் யிந்தத் தேவாதிகளையெல்லாம் அபிசேக நிமார்த்தினை செய்து விபூதி பச்சடம் பெற்றுக்கொண்டு நாங்கழனவோர்களும் சுக சேமமாய் நடந்து வாழ்ந்து வருகுரோம்.

யிப்படி வாள்ந்து வருகுர நாளையில் சிலகாலஞ் சென்றதின் பின்பு யிக்கரைக் கற்றாங்காணியில் முதல்க் காணியாமராகிய சிவந்திகுலத்தில் தீத்தாக் கவுண்டன், சிவந்திக்கவுண்டன், பழனிக் கவுண்டன் யிவர்கள் மூணுபேரும் அண்ணன் தம்பியாகப் பிரந்தவர்கள். யிவர்களில் மூத்த அண்ணன் தீத்தாக் கவுண்டனுக்கு ஒரு வெள்ளைப் பிள்ளையாகப் பிரந்தது. அந்தப் பெண்ணைச் சில நாழாய் வழர்த்திக் கலியாணஞ்செய்யுந் தருணத்தில் யாரொருத்தரும் வெள்ளைப் பிள்ளையா யிருக்குதென்று யாவரும் கலியாணஞ் செய்ய வில்லை. யிப்படிச் சில நாழாயிருந்த பிரகு தீத்தாக் கவுண்டன் மன வியாகுலப்பட்டு மனதிலே யோசினை செய்து யிந்தப் பெண்ணை இனி கலியாணஞ் செய்யாமல் வைய்த்திருக்கப் படாதென்று மனதிலே தெரிந்து தானே போயி வெண்டுவ குலத்தில் முத்தய கவுண்டனை நீங்கள் நம்ம பெண்ணை கலியாணஞ் செய்துகொள்ளுங்கோளென்று சொல்லவும், அந்தப் பெண் யெனக்கு வேண்டாமென்று சொல்லவும், யேன் வேண்டாமென்று சொல்கிரீர்கள் பொண்ணுங் குடுத்துப் பூமியும் குடுக்கிரேனென்று சொல்லவும், உன் பூமியு வேண்டாம் பொண்ணும் வேண்டாமென்று சொல்லிப் போட்டார்கள்.

அப்போது யிந்தத் தீத்தாக் கவுண்டனு ரம்பவும் மனஷ்தாபப் பட்டு கன்ன குலத்துச் செங்கோட்டு வேலப்பனைப் போய் நீங்கள் நம்ம பெண்ணைக் கலியாணஞ் செய்து கொள்ளுங்கழென்று சொல்லவும் அப்போது நல்லது கலியாணஞ் செய்து கொள்கிரேன் நீங்கழென்ன தருவீர்கழென்று கேழ்க்கவும், நான் பொண்ணுங் குடுத்துப் பூமியுங் குடுக்கிரேநென்று சொல்லவும், அப்போது செங்கோட்டு வேலப்ப கவுண்டன் சொன்னது, யெனக்குப் பூமியும் வேண்டாம் பொருளும் வேண்டாம். உங்கள் காணி மெறாசு சுதந்திரத்தை யெனக்குச் சுத்தக் கிரயம் செய்து குடுத்தால் கலியாணஞ் செய்து கொள்கிரேநென்று சொல்லவும், அப்படியே நல்லதென்று சம்மதிச்சுச் சொல்லவும் யிந்தப் படிக்கி யிருவரும் சத்திய சாச்சியாக நம்பிக்கை சொல்லிக் கொண்டார்கள்.

யிது பிரகாரமாக நம்ம கோட்டை திருப்பூருக்கு வந்து நாட்டார்களும் பட்டக்காரர்களும் றாயரவர்களும் யிவர்கள் முன்பதாக பட்டய சாசீனம் யெளுதிக் குடுக்க வேண்டியது. யிந்தப்படிக்கிச் சம்மதித்து யெளுதுகிரது யென்னவென்றால் றாசாவாகிய மகாறாயஷ்த்திரி திருமலை நாயக்கர் நாளில்

திருப்பூர், சுந்திர பாண்டிய நல்லூர், ஊத்தலூர், பெரியபாளையம், அமுக்கயம் கத்தாங்காணி யிந்தக் கிராமத்துக் கவுண்டர்களில் திருப்பூர் பனங்காடை குலத்து முத்துறாசாக் கவுண்டன், கொங்கச் செட்டிகளில் பவழத்தாக் கவுண்டன், சுந்தரபாண்டிய நல்லூர் காடை குலத்தில் முத்தய கவுண்டன், ஊத்தலூர் கன்னகுலத்தில் வட்டமலைக் கவுண்டன், பெரியபாளையம் இம்முடி வடமலைக் கவுண்டன், அமுக்கயம் சாத்தந்தை குலத்தில் கிஷ்ட்டணறாயக் கவுண்டன், பிறாமணர் மச்சமலை றாமய்யர், கத்தாங்காணியில் வெண்டுவ குலத்தில் பச்சாக் கவுண்டன், முத்தய கவுண்டன், அகம்படிய கோத்திரம் காசிலிங்கயன், அக்கிராரம் பிறாமணர் ரெங்கய்யர், திருப்பூர் ஓதாள குலத்தில் நவறாத்துப் புடாரப்ப கவுண்டன், பொருழந்தை குலத்தில் மணியம் நல்லிக் கவுண்டன், யிந்தக் கிறாமத்துக் கணக்கு திருமாட கோத்திரம் கைலாச பிள்ளை, வேதாந்த பண்டிதர், தேவறாண்டி மகன் பூதறாண்டி, கொங்கச் செட்டிகளில் றாமஞ் செட்டிக் கவுண்டன் யின்ன மற்றுமுண்டானவர்களும் பொருள்தந்த குலத்தில் பட்டம் பெற்றிருக்கும் பெத்தாங் காங்கய மன்றாடியாரவர்கள் முன்பதாகவும் யித்தாதி கவுண்டர்கள் முன்பதாகவும் யின்ன மற்றுமுண்டாகிய சகலரனைவோர்கள் முன்பதாக திருப்பூர்க் கோட்டையில் திருபுரவல்லியம்மன் சன்னதியில் யெளுதுகிர விப்ரம் யென்னவென்றால்

யிப்போது சாலியவாகன சகார்த்தம் 1295க்கு கலியுக சகார்த்தம் 4387க்கு மேல் செல்லாநின்ற யேர்விழம்பி வருசம் வையாசி மாதம் 13ந் தேதி சுக்குர வாரமும் உத்தர நச்சேத்திரமும் சத்தமி திதியும் அமுர்தகேளிகையும் தயிதவாகரணமும் கூடின சுபதினத்தில் கன்ன குலத்து செங்கோட்டு வேலப்ப கவுண்டனுக்கு சிவந்தி குலத்து தீத்தாக் கவுண்டன் தன் மகள் வெள்ளைப் பெண்ணைக் கலியாணஞ் செய்து கொள்கிரதுக்காக யிந்த யிக்கரைக் கற்றாங்காணியில் யென் காணி மெறாசு நன்மணீஷ்பரன் மேலூரம்மன் சொக்கபெருமாள் அழக நாச்சியம்மன் யிந்தக் தேவாதிகளுக்கு முப்பாடு விபூதி பச்சடம் யெனக்குச் செல்லும்படி மெறாசு சருவசுதந்தரத்தயும் நீங்களே பெற்றுக் கொண்டு கலியாணஞ் செய்துகொண்டு சுகசேமமாயிருக்க வேண்டியது. யிந்தப் படிக்கி னானாகச் சம்மதிச்சு யிந்த தலத்தில் யிந்தச் சபையோர்கள் முன்பாக யெளுதிக் குடுத்த தாம்பூர சாசீனப் பட்டயம்.

தீத்தாக் கவுண்டன் ருசவு உ. பெத்தான் காங்கய மன்றாடியார், மதுரைத் திருமலைநாயக்கர், முத்து றாக்கியாக் கவுண்டன், பவழத்தாக் கவுண்டன், முத்தய கவுண்டன், வட்டமலைக் கவுண்டன், யிம்முடி வடமலைக் கவுண்டன், கிஷ்ட்டணறாயக் கவுண்டன், பிறாமணர் மச்சமலை றாமய்யர், பச்சாக் கவுண்டன், முத்தய கவுண்டன், காசிலிங்கயன், பிறாமணர் ரெங்கய்யர், நவாறாத்துப் புடாரப்ப கவுண்டன், மணியம் நல்லிக் கவுண்டன், கயிலாச பிள்ளை, வேதாந்த பண்டிதர், தேவறாண்டி மகன் பூதறாண்டி, றாமஞ்செட்டிக் கவுண்டன், வேலாயுதக் கவுண்டன் நெட்டறாசாக் கவுண்டன், சிவந்திக் கவுண்டன், பழனிக் கவுண்டன்

வேட்டுவகுலத்தில் பச்சை லிங்க கவுண்டன், புல்லன்குலத்தில் நெட்டைறாசாக் கவுண்டன், சொத்துக் கணக்கப் பிள்ளை, வெள்ளைக் குமரத்தட்டான், உப்பிலியக் கரிச்சி வேட்டை நாயக்கன் யித்தாதி பேர்கள் முன்பதாக நீங்களே புத்திர பௌத்திரறாய் பாரம்பரியந்தமாய் தானாதி விக்கிரயங்களுக்கு யோக்கியமாயி யிந்தப் பெண்ணைக் கலியாணஞ் செய்து ஆண்டு அனுபவித்துக் கொள்ள வேண்டியது உ.

நன்மணீஷ்பரன் வச்சிக்கவும். மேலூரம்மன் லச்சிக்கவும். சொக்க பெருமாள் லச்சிக்கவும். அழகு நாச்சியம்மன், மாரியம்மன், கதித்தாசல மூர்த்தி இத்தாதி தேவர்கள் லச்சிக்கவும். யிந்த சாஷ்பதம் யெளுதினது திருபுரவல்லியம்மன் சந்நிதியில் சரவணையாசாரி கையொப்பம். மூக்கண ஆசாரி உ குருவே துணை. கடவுள் லட்சிப்பார் உ.

# 11. பூந்துறைநாட்டுப் பட்டயம்

இது பழைய தாளில் எழுதப்பட்டு பெரியார் மாவட்டம் ஈரோடு வட்டம் சிவகிரி சிந்தாமணிப்பண்ணை பழனிச்சாமிக் கவுண்டர் அவர்கள் வீட்டில் கிடைத்தது. தமிழக அரசு தொல்பொருள் துறையில் 1976 இல் சேர்க்கப்பட்டுள்ளது. பல இடங்களில் காகிதம் மிகவும் சிதைந்து உள்ளது.

மதுரை திருமலை நாயக்கர் ஆட்சிக் காலத்தில் மேல்கரைப் பூந்துறை நாட்டுப் புதுப்பாளையம், புங்கம்பாடி, கொம்மக்கோயில், ஞானிபாளையம், மயிலாடி, கனகபுரம் ஆகிய ஊர்களை வெள்ளை வேட்டுவனும், வெள்ளை பெரிச்சி மூப்பனும் நிர்வாகம் செய்து வந்தனர்.

அப்போது கொங்கு வேளாளரில் சாத்தந்தை குலத்துப் பெரியண கவுண்டரும் அவர் மகன் முத்துக் கவுண்டரும் அவர்கள் சீமையில் 12 ஆண்டுகள் பஞ்சம் ஏற்பட்டதால் மேற்படி பகுதிகட்கு தங்கள் மாடுகளை ஓட்டிக்கொண்டு வந்தனர். மாடுகள் பல இறந்துவிடவே தந்தையைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு முத்துக்கவுண்டர் சொந்த ஊர் சென்றார். அப்போது வேட்டுவரும் மூப்பரும் பெரியண கவுண்டரை வெட்டிக் கால்நடைகளையும் கொள்ளையடித்தனர்.

முத்துக்கவுண்டர் திரும்பிவந்து நரசிம்மராஜா, சிவக்கு ராஜா ஆகிய நாயக்க அதிகாரிகளிடம் புகார் செய்தார். அவர்கள் கவனிக்காமல் விடவே மதுரைத் திருமலை நாயக்கரிடம் முறையிட்டார். திருமலை நாயக்கரிடம் படை பெற்றுவந்து போரிட்டு வெள்ளை வேட்டுவனையும் வெள்ளை பெரிச்சி மூப்பனையும் தலைவெட்ட வரும்போது அவர்கள் தங்களை விட்டுவிட்டால் தங்கள் கிராமங்களில் காணியாட்சி உரிமையை முத்துக் கவுண்டருக்குக் கொடுத்துவிடுவதாகக் கூறினர். அவ்வாறே பெற்று முத்துக் கவுண்டர் ஊர் நிருவாகம் செய்து மதுரைக்கு வரி செலுத்தி வந்தார்.

சிலகாலம் கழித்து வரிப்பணம் செலுத்த முடியாமல் பாக்கி நின்றபோது முத்துக்கவுண்டர் மனைவி திங்களூர் மூப்பரிடம் பொருள்பெற்று மதுரைக்கு வரிப்பாக்கியைக் கட்டுகின்றார். அதனால் முத்துக்கவுண்டரின் ஆட்சிப்பகுதியில் வெள்ளோடு கிராமத்தில் திங்களூர் மூப்பர் பாதி காணியாட்சி உரிமை பெற்றனர். இன்றும் அவர்கட்கு அங்குச் சில உரிமைகள் இருந்து வருகின்றன.

## மூலம்

ஶ்ரீராமஜெயம் துணை.

வாய்முளி தீர்ப்பு,

ஶ்ரீராய ராசாமான்னிய ராசஶ்ரீ மகாமண்டலேஸ்வரராகிய மதுரை தேசம் அரசாட்சி செய்யப்பட்ட மகாறாசாத்திர ஆளாகி திருமலை நாயக்கரவர்கள் நாளையில் நடந்துவந்த வயனம். புதுப்பாளையம் கிறாமம் புங்கம்பாடி கிறாமம், கொம்மக்கோவில் கிறாமம், ஞானிபாழையம் கிறாமம், மயிலாடிக் கிறாமம், கனகபுரம் கிறாமம் இந்த ஆறு கிறாமம் அதிகாரிகளாகிய வெள்ளை வேட்டுவன் வெள்ளை பெரிச்சி மூப்பன் இவர்கள் நாளையில் தென்தேசத்திலிருந்து வல்லிபுறத்துச் சாத்தந்தை கூட்டம் பெரியண கவுண்டன் மகன் முத்துக் கவுண்டன் இவர் இருக்கப்பட்ட சீர்மையில் 12 வருஷம் மேற்படியார்கள் இருவரும் நாலு -கொண்டு மேல்கண்ட பூந்துறை நாடு கிராமங்களில் 12 வருஷக் காலம் பில்லு- ருந்தபோது மேற்படி மாட்டினாலே நூறு நூற்றைம்பது காலமாகி இப்படி யிருக்கும் தருணத்தில்,

மேலே கண்ட முத்துக்கவுண்டன் யென்பவன் தந் தகப்பனை மாட்டுகளிடம் இருக்கும்படி விட்டுப்போய்த் தங்களூருக்குப் போயி ——— மேல்கண்ட கிறாம அதிகாரிகள் வெள்ளை வேட்டுவரும் வெள்ளை பெரிச்சி மூப்பனும் மேற்படி கால்நடைகளை பெரியண கவுண்டனை வெட்டிப் போட்டு மேற்படி கால்நடைகளைக் கொள்ளை செயிது கொண்டு போய்விட்டார்கள். அவ்வேளையில் முத்துக் கவுண்டன் வந்து தகப்பனை விசாரித்ததில் நடந்த சமாசாரத்தை சில ஜனங்களால் கேள்விப்பட்டு மேல் அதிகாரிகளாகிய நரசிமராஜா தம்பி சிவக்குராஜா இவர்களைக் கண்டு பிராது செயிததில் மேற்படி ராசா கேள்வி செய்யாது விட்டபடியால் மேற்படி முத்துக் கவுண்டன் மதுரைக்குப் போயி திருமலை நாயக்கர் அவரிடத்தில் கேட்டுக்கொண்டபடி அவராய்வு செய்து சில தண்டு இவருக்கு ஒதவியாக அனுப்பினபடியால் தண்டு கூட மேற்படி முத்துக் கவுண்டன் மேற்படி புதுப்பாளையம் வகையறா கிறாமமும் கொள்ளையிட்டு மேற்படி வெள்ளை வேட்டுவனையும் வெள்ளை பெரிச்சி மூப்பனையும் தலை வெட்டுகிறதுக்கு ஆரம்பித்தபடியால்,

மேற்படி இருவரும் மேற்படி முத்துக் கவுண்டனை ரொம்பவும் வண — யால் எங்களை விட்டு விடு ஜனம் பூ —உள்பட்ட மேற்படி ஆறு கிராமங்களையும் —குடுத்து விடுகிறோமென்று சொன் —மேல் விட்டு விட்டால் இந்த உடன் —உடனே பாளையப்பட்டு அதிகாரிகள் —திருமலைராஜா இவர்களுக்கு சேதிகளை மதுரை திருமலை நாயக்கர் அவர்களுக்குத் தெரியும்படி அவர் முன்ம்பதாக மேல்கண்ட ஆறுகிறாமங்களில் வடமுகம் புதுப்பாளையம், புங்கம்பாடி, கொம்மக்கோவில் இந்த மூனு கிறாம அதிகாரி வெள்ளை வேட்டுவன் தென்முகம் ஞானிபாழையம், மயிலாடி, கனகபுரம் கிறாமம் மூன்று இதற்கு ————முதல் கறையில் தேவதையிடம் வல்லிபுறம்—அண்ணமார் தேவகாரியமென்று தென்முகம்

கறையில் தேவதைகள் றாசாக்கள் பொங்காளியம்மனுக்கும் மாறியம்மனுக்கும் நஞ்சுண்டசுவாமி இந்தத் தேவதைகளுக்கெல்லாம் அபிஷேகம் பொங்கல் பலி பூசை நிவேத்தியம் பிறவணை முதலானதுகள் செயிது ஆண்டி பரதேசி சோசி சொங்கு மாகத்துக்குக் கவ்பாடி பிறாமணாள் முதலான பேருக்கு சம்பிரட்சணையும் தான தருமங்களும் குடுத்து மேல்கண்ட றாசாக்களையும் பூசித்து பெரியகோவில் இருந்து கொண்டு செப்பேடு பட்டையும் செயிது கொடுத்த விபறம்.

ஆத்து மணலும் ஆவிரம்பூவுமுள்ள மட்டுமும் மேற்படி முத்துக் கவுண்டனுக்கும் காணியாச்சி குடுத்தபடி. ஆறு கிறாமமும் அதிலிருக்கப்பட்ட தேவஸ்தானங்களுக்கு முந்தின பூசை விபூதி சந்தனம் பாக்கு வெத்திலை பூவு முப்பாடு பிற்ப்பாடு குதிரை பிடிக்கிறது முதலானதும் மேற்படி முத்துக்கவுண்டனாகிய் வல்லிபுறம் சாத்தந்தைக்கு காணியாச்சி கொடுத்துவிட்ட பின்புநாளையில் முத்துக் கவுண்டன் வம்சத்தில் ஆ —— விருத்திநால் மேட்டறப்பளய—— லிங்கயகவுண்டன் வெள்—— வேட்டுவன் முத்துக்கவுண்டன்—— அரசாக்ஷி செயிது மதுரைக்கு—— பணம் செலுத்தாமல் பாக்கி நின்ன—— வரையும் ஆக்கினை செய்ய மதுரை—— மேற்படியார் பெண்ஜாதிகள் திங்களூர் பூமன் காப்—— காளிமூப்பன் மகன் பொன்னயமூப்பனைக் கண்டு யென்புருஷமார் தலை தப்பித்துவைத்துக் கொண்டு வந்தால் யெங்கள் காணியாச்சியில் பாதி கொடுத்து விடுகிறோம் யென்று சொன்னதில் 6 ஒட்டைகைப் பணம் கொண்டு உண்டு பண்ணிக் கொடுத்ததாய்க் கேள்வி. பூந்துறை நாடு கொங்கு 24 பொன்னயமூப்பன் குழம் கலியுக வருஷம் நாலாயிரத்து அறுநூத்தி 89 சாலிவாகன சகாத்தத்தில் 1510 வைய்யாசி...

# 12. கொங்குப்புலவர் பட்டயம்

கொங்கு நாட்டு முதுபெரும்புலவர் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் தொகுத்த ஏடுகளில் இப்பட்டயமும் ஒன்று.* இப்போது இவ்வோலைப் பட்டயம் பேரூர் சாந்தலிங்கர் திருமடத்தில் உள்ளது.

கொங்கு வேளாளர்கள் நாற்பத்தெண்ணாயிரம் கோத்திரத்தாரும் மன்னர் தேவப்பராயரிடம் சென்று தங்களுக்குப் புலமை நிலைநாட்டுதல் செய்ய வேண்டுமென்று கேட்கின்றனர்.

தேவப்பராயர் பழைய தாஸ்தாவேஜுகளை எடுத்து வாசித்துப் பார்த்துக் குலோத்துங்க சோழர் காலத்திலேயே உங்களுக்குக் கம்பர் வாழிப்புலவர் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார் என்று கூறுகிறார்.

கொங்கு நாட்டுப் புலவர்கள் வேளாளர்களிடம் வலக்கையால் பரிசு பெற்று மன்னரிடம் தம் இடக்கையை ஏந்தினர். காவிரியில் எச்சில் காட்டியதற்கும் காவிரியை அடங்கச் செய்தமைக்கும் குலோத்துங்க சோழர் தமக்கு வேளாளர் கொடுக்கும் வதுவைவரியைக் கம்பருக்குக் கொடுத்துச் சாசனமும் எழுதித் தந்தார்.

கம்பர் வேளாளர்கட்கு மங்கல வாழ்த்தும், கம்பர் வாழி 16ம், ஏரெழுபதும் பாடினார். அவை திருமணவீடுகளில் பாடப் பெற்றன. புலவர்கள் பரிசில்கள் பெற்றனர்.

கொங்கு 24 நாட்டுக்கும் வேறுவேறு புலவர்கள் நியமிக்கப்பட்டனர். அவர்கட்குக் கொடுக்கும் வெகுமதிகளும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

இறுதியில் கொங்கு 24 நாட்டுக் கவுண்டர்களும் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர்.

---

தேனோலை, இதழ் 5, ஜூலை 75, பக். 5_17; இப்பட்டயத்தின் வேறு ஓலைப் படிகள் கலைமகள் அருங்காட்சியகம், தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறை , கல்வெட்டியல் துறை ஆகிய இடங்களிலும் உள்ளன.

## மூலம்

திருச்சிற்றம்பலம். கலியுக சகார்த்தம் 809 மேல் செல்லாநின்ற பிரமாதி வருடம் பங்குனி மாதம் 10-ந் தேதி சுக்கிரவாரமும் உத்திர நட்செத்திரமும் பெற்ற சுபதினத்தில் நாலு சமுஸ்தானத்துக் கற்த்தறுமேய் விசைநகர்ப் பட்டணத்தில்த் தேவப்பறாயர் செங்கோல் செலுத்துநாளில் வேழாளர்ப் பிரவாகிய காறாள வம்முஷத்தார் நாற்பத்தெண்ணாயிரங் கோத்திரமும் ஒன்றுகூடி தேவப்பறாயரண்டையிலே போயி யெங்களுக்குப் புலமை நிலைநாட்டுப் பண்ணிக் குடுக்க வேணுமென்று கேட்கத் தேவப்பறாயர் வேழாளப் பிரவாகிய காறாள வம்முஷதாரைப் பார்த்து உங்களுடைய வம்முஷத்துக்குக் கம்பர் வாளிப் புலவரென்று நம்மளிடத்துக்கு முன் காலத்திலே யெங்களுக்கு மூவறாசாக்கள் நாளில் குலோத்துங்க சோள ராசாவானாவர் வதுவை வரியை கம்பற்கு ராசபடி பால் வறுத்தினை யென்று மாடை அரக்களிஞ்சிப் பனங்கொடுத்தாரென்று பளமொளி தஷ்தாவதி வாசித்துக் கொடுத்தாரது கேட்டுச் சோளறாசாக் கொடுத்த றாசபடி பால் வருத்தினைப் பணமும் முன்னடந்த பிரகாரத்துக்கு வாங்கும் படியாயிக் கட்டளை செய்து நஞ்சறாயப் புலவர் திருக்கவேல்ப் புலவரென்று பேருமிட்டளைத்துத் தியாகம் வெகுமதி கொடுக்கும்போது யிடது கையிலேந்தினார்கள். நீங்கள் யிடது கையில்த் தியாகம் வாங்குற வளக்குமேதென்று கேள்க்க வேளாளர் சமூகத்தில்த் தியாகம் வாங்கிரது வலதுகையும், ராசாக்கள் சமுகத்தில் தியாகம் யேந்திரது இடதுகைய்யென்று சொல்லிக்கொண்டார்கள். உங்களுடைய புலவன் யிடது கையில் வாங்கிர வளக்கமேதென்று கேள்க்கவும் வேழாழப் பிரபாகிய காறாள வம்முஷத்தார் தேவப்பறாயரிடத்தில்ப் பளமொளி தஷ்த்தாவரியிலுள்ள வசனஞ் சொன்னது. யெங்களுக்குப் புலமை முன் உகச்சர் வம்முஷத்தில் கம்பருக்குக் கைய்யேட்டுக்கார பன்னிரெண்டு பேருள்ளவர்கள் மூவ றாசாக்கள் நாளில் குலோத்துங்கச் சோள ராசாவானவர் கம்பரைப் பார்த்து நம்முடைய பேரில்த் தமிள் பாடவேணுமென்று கேட்டார். அதுக்குக் கம்பர் தமிளுக்கு நாட்டுதல் நாட்டிப் பாடுகிரது யென்னவென்று கேட்டார்.

அதுக்கு பொன்னி னதியை நாட்டிப் பாடவேணுமென்று சொன்னார். பொன்னி னதியாகப்பட்டது நம்முடைய வேளாளர்ருடைய எச்சல்க்கலத்துத் தண்ணீரென்று சொன்னார். அதுக்குச் சோளராசாவானவர் கம்பரைக் கூட்டிக்கொண்டு போயி நடுவில் எச்சல்க் காண்பிக்கச் சொல்லவும் அதுக்குக் கம்பர் கெங்கா பரமேசுபரியை வேண்டித் தமிழ்ப்பாடினார். அப்போ கெங்கா பரமேசுபரியானவள் எச்சல்ப் பரிசோதினை கொண்டு வந்து கொடுக்கவும் சோளராசாவானவர் மனது நொந்து வெகுகோபமாய் வாரபோது அப்போக் கெங்கா பரமேசுபரியானவள் ரம்பவும் கோபங் கொண்டு பொங்கி வளுஞ்சு வருகிரதைச் சோளராசா கண்டு கம்பரைப் பார்த்து ரம்பவும் வணங்கி மகாதாயினிட மனங்குளுந்து தன்னிலைக்கு நிற்கும்படியாய்த் தமிள் பாடவேணுமென்று கேட்டார். அப்படியே தமிள்ப் பாடவும் கெங்கா பரமேசுபரியான உமையவள் மனங்குளுந்து தன்னிலையில் நிற்கவும் சோளராசாவானவர் கம்பரைப் பார்த்து சந்தோஷத்துடனே உமக்கு வேணுமென்கிர காரியத்தை கேட்டுக் கொள்ளுமென்று சொன்னாரப்போ கம்பர் கேட்டுக்

கொண்டது நம்முடைய வேழாமுர் வம்முஷத்தில் வாங்கிவர வதுவை வரியை ராசபடி பால்

வருத்தினையென்று நமக்கு என்றென்றைக்கு நாட்டுதல் பண்ணிக் கொடுக்க வேணுமென்று கேட்டார். அப்படியே நல்லதென்று சொல்லி கலியுக சகார்த்தம் 801 வருஷத்தில் வதுவை வரியைத் தாம்புரச் சாதனத்தில் அரக் களிஞ்சி மாடைப் பணமும் ராசபடி வருத்தினை யின்று முதல் னாள் யென்றென்றைக்கும் சந்திராதித்தருள்ளவரை பூமியாகாசம் உள்ள வரையில் பொன்னினதி யுள்ளவரைக்குமென்று குலோத்துங்க சோள ராசாக் கையெழுத்தும் நாட்டிக் கம்பருக்குத் தந்தோமென்று கொடுத்தார். அந்தத் தாம்பூரச் சாதனத்தைக் கம்பர் வாங்கிக் கொண்டு வந்து பண்ணை நாடு வெண்ணை நல்லூறு ஆயி நயினாருடைய குமாரன் சடைய நயினார் கைய்யில் கொடுத்தார். அப்போ எங்கள் பெரியோர் காஞ்சினாடு ஏனாதி நயினாரவர்களும், மீனனாடு ஆண்டாராகிய பாண்டி மன்றாடியாரவர்களும், அளகனாடு உடையநயினாரவர்களும், கண்டினாடு காளத்திநயினார் அவர்களும், பொன்னினாடு கரியாண்ட நயினாறவர்களும், வாணனாடு பிள்ளைநயினாரவர்களும், கன்னினாடு அட்சதநயினாரவர்களும், வீடூரு னாடு சிந்தாமணி நயினாரவர்களும், திருவாத்திவனாடு யிளைய நயினாரவர்களும், செஞ்சினாடு கறுவாண்ட நயினாரவர்களும் யிப்படித் தொண்டைமண்டலஞ் சோளமண்டலத்திலுள்ள79 வளநாட்டாரும் ஒன்றாகக் கூடி யெங்கள் காறாள வம் முஷத்தை விளக்கம் பண்ணி விளங்கி வாள்கவும் யெங்களுக்கு யீசுபரன் குடுத்த ஏருக்குள்ள விறுது சீறுடனே கம்பர் வாக்குனாலே ஏரெளுவது கவிதையும் பாடி வயித்துக் கொண்டு எங்கள் வம்முஷத்தாறுக்கும் கலியாணத்துக்குள்ள சீர் சிறப்பு உள்ளதெல்லாம் வாளிக்கவிதை பதினாறும் மங்களவாள்த்து நாட்டுதல் நாட்டியப் பாடிவயித்துக்கொண்டு கம்பரையுங் கூட்டிக்கொண்டு மூவராசாக்களை கங்கைகுல வம்முஷம் கொத்துக்கும் 48000 கோத்திரமென்றும் வகுத்துப் பொன்னி நதியிலே ராசாக்களுக்குக் கம்பர் எச்சல் பரிசோதனை காண்பிவிச்சதுக்காக பசுபதி லிங்க முன்னிலைக்கு கலத்து ரம்ப பால்பளஞ் சக்கரை பஞ்சாமுர்தத்ததுடனே வைய்த்து குலோத்துங்க சோளராசாக் கொடுத்த வதுவைவரி மாடை அரக்களிஞ்சுப் பணமும் வைத்து கம்பர் வாக்குநால் மங்கள வாள்த்தும் பதினாறு வாளியும் படித்து நிரவேற்றி கொண்டு எங்கள் வம்முஷங் குளுந்து பசுபதிலிங்க முன்னிலைக்கு சத்திய சாட்சியாக சந்திராதித்தருள்ளாகவும் பூமி ஆகாசமுள்ளளவும் யென்று சொல்லி எங்கள் பெரியோர்கள் கம்பற்க்கு ராசபடிபால் வருத்தினை யின்று முதல் என்றெ என்றைக்கும் என்று சொல்லிக் கலத்தையெடுத்துத் தந்து கொண்டோம்.

காஞ்சிபுரத்தில் யேகாம்பரர் அரிய ஏரெளுவதுந் தமிள் அரங்கேற்றி வயித்து மாத்துளி குரித்தெளித்தவுடனே காமாட்சியம்மன் முன்னிலைக்கி சத்திய சாட்சியாக கம்பர் தமிழ் உள்ளழவு மகாறாச வம்முஷம் உள்ளளவும் காளிமலை உள்ளவரைக்கும் கெங்கா பரமேசுவரிமார் அரிய கம்பருக்கு அடுமைச் சாதனப் பட்டையம் யெளுதிக் குடுத்துப் புலமை நாட்டி வயித்துக் கொண்டோம். அப்படியே கம்பருக்கு ராசபடி பால்வர்த்தனையும் யெங்கள் வம்முஷக் கலியாணத்து வாளிச்சீறும் மங்கள வாழ்த்தும் யேரெளுவதும் படித்துவார காலத்திலே சோளராசாவானவர் கம்பரைப் பார்த்து யினிமேலாகிலும் நம்முடைய பேரில்

தமிள்ப் பாடவேணுமென்று கேட்டார். அதுக்குக் கம்பர் வேழாழரைப் பாடுகிற நாவிலே உம்மைப் பாடுகிரதில்லை யென்று சொல்லிப் போட்டார். அதுக்கு வறுமங் கொண்டிருந்து சூதானத்துனாலே அம்பு கொண்டெயிதுபோட்டார். சோளராசாக் கையம்புனாலே கம்பர் யிறந்து போனார். யிந்த ராசபடி பால் வரித்தினைப் பனம் கம்பர் கையேட்டுக்கார செங்குந்த கோத்திரம் போக்கங்கூட்டம் நஞ்சறாயப்புலவன் ராசிக்கூட்டத்தில் திருக்கைவேல்புலவன் யிவர்களுடைய முன் பெரியோர்களுக்கு நடந்துவாரகாலத்திலே யெங்கள் முன் பெரியோர்களைச் சோளராசாவானவர் கலியுக சகார்த்தம் 1511 ன்னு வருஷத்தில் சோள மண்டலம் விட்டுக் கொங்கு மண்டலத்துக்கு அளைத்துவரும்போது யெங்களுடைய புலமையும் யெங்கள் பெரியோர்களும் வந்தார்கள்.

அப்போச் சோளராசாவானவர்ச் சுபாதீனமாய்க் கொங்கு மண்டலம் யிறுபத்தி நாலு நாட்டிலேயுங் காணி பூமி கொடுத்து மேன்மைத்துடனே வய்த்துக் கொண்டார். அன்று முதல் யின்றளவும் வாளிச்சீறும் மங்கள வாள்த்தும் யேரெளுவதும் நடந்து வார நன்மையான காரியத்தை அதைத் தவிள்த்தினால் யெங்கள் காறாளவம்முஷம் வறத்தியாதென்று சொல்லி ராசாக்கள் செய்த தருமத்தை றாசாக்கள் தானே அளித்துப்போட்டால் நீதிநிலை தறுமம் சிந்தையால் வறுமென்று சொல்லிக் கேள்க்கவும் யிதுவெல்லாம் தேவப்பறாயர் கேட்டுச் சந்தோஷத்துடனே நஞ்சறாயப் புலவரையுந் திருக்கவேல்ப் புலவரையும் விலங்கைத் தரித்து அளத்துவரச் சொல்லி ஆனைமேல் மெறவனைபண்ணி வய்த்துத் தியாகம் வெகுமதி கொடுக்கவும் யிடதுகையில் வாங்கிக் கொண்டு தேவப்பறாயர் பேரில் பாடிப் படித்துப் புகள்ந்து கொண்டு நம்முடைய வேழாழப் பிரவாகிய காறாள வம்முஷத்தார் றாசிக்களத்திலே கூடையிலே மோந்து குடுப்பத்துக்கு நிகரல்லவென்று புகள்ந்து கொள்ளவும் காறாள வம்முஷத்தாரைப் பார்த்து தேவப்பறாயர் சொன்னது. உங்களுடைய வம்முஷத்துக்குப் புலமை நஞ்சறாயர்ப் புலவர் திருக்கவேல்ப் புலவருக்கு முன்னடைந்த படியே ராசபடி பால் வர்த்தினை மாடை அரிக்களிஞ்சிப் பணமுங் கொடுத்துக் கொண்டும் கம்பர் வாளியு, மங்களவாழ்த்தும்,

யேரெளுவதும் படித்துக் கேட்டுக்கொண்டு விளக்கமாய்ச் சந்திரா தித்தருள்ளவரையில் சுகமாயிருங்களென்று சொல்லவும் நல்ல தென்று கேட்டுக் கொண்டு தேவப்பறாயர் கையிநாலே நஞ்சறாயப் புலவருக்கும் திருக்கவேல்ப் புலவருக்கும் கொங்கு மண்டல யிறுவத்திநாலு நாட்டிலேயும் ராசபடி பால்வருத்தினைப் பணமும் வாங்குரதுக்கு தடுவு வறாமல்படிக்கி உத்திரவு பிரமாணிக்கம் வாங்கிக் கொடுத்து மதுக்கரைக்கு வந்து செல்லாண்டியம்மன் கோவிலிலே கொங்கு யிறுவத்திநாலு நாட்டுக்கும் புலமையென்று வரிசையுங் குடுத்து மகுடமுஞ் சூட்டிக் கொங்கு யிறுவத்திநாலு நாட்டிலேயும் ஏரெளுவதும் கம்பர் வாளி பதினாறும் படித்துக்கொண்டு நாளிக்கம்பு ஒரு வள்ளம், ஏருக் கொருவள்ளக் கம்பு, களத்தில்ப் பெறுவைச் சாட்டில் ஒரு சாடு கம்பு, கொங்கு முரத்தில் ஒரு முரக்கம்பு, கலியாணத்துக்கு அரிக்களிஞ்சி மாடைப் பணமும், நடுப்பணமும், நடுக்கலியாணத்துக்குக் கால் களிஞ்சி மாடைப் பணமும் பூந்துறை நாடு காங்கயநாடு குறுப்புநாடு யிந்த மூன்று நாட்டுக்குச் செங்குந்த கோத்திரம் போக்கங்கூட்டம் நஞ்சறாயப் புலவன் கம்பருக்குக் கையேட்டுக்கார

உகச்சன் பாலிடையன் தொளுவன் வேதியன் சேரகுல வேளாளன் மங்கலன் வணிகன் சோளியன் திருவம்படிக்காரன் பச்சை மலையாளன் யித்தாதிப் பேறுக்கும் 24 நாடு யிந்த 24 நாட்டிலேயும் பால் குடிக்கும்படிப் புலவருக்கு வறுத்திணைக்குள்ள பணங்குடுக்கவும்.

தென்கரைநாடு, அண்டனாடு, தென்பொங்கலூறுநாடு யிந்த மூன்று நாட்டுக்கும் வணிகன் கொத்துக்கு வதள்க்கொத்து செங்குந்த கோத்திரம் ராசிகூட்டம் திருக்கவேல்ப் புலவன், திருவாவினங்கொடிப் புலவன், செல்லக்குமாரப் புலவன், மங்கலநாதப் பட்டன் ஆக்க் கொத்து நாலு 4. பொங்கலூர்நாடு, வாரக்கனாடு, ஆனைமலைநாடு யிந்த மூன்று நாட்டுக்குஞ் சேரகுல வேளாளரில் பசுபதி கூட்டத்தில் அனந்த பட்டன், அகத்தி கூட்டத்தில் சந்திரப் பட்டன், செங்குந்தகுலத்தில் செஞ்சிக்கூட்டத்தில் பிரமபட்டன், பூங்கோதிப் பட்டன் ஆகக் கொத்து 4. ஆறுநாடு, நல்லூற்க்கநாடு யிந்த ரண்டு நாட்டுக்குச் சவளன் கொத்துக்கு வதள்க் கொத்து செங்குந்த கோத்திரம் ஆறாங் கூட்டத்தில் செவளநாத |பட்டன், ராசி கூட்டத்தில் ஆண்டிப் புலவன் ஆகக் கொத்து 2. அரைய நாடு, காஞ்சிக் கோவில் நாடு, ஒடுவெங்கநாடு யிந்த மூன்று நாட்டுக்கும் வேதியன் கொத்துக்குப் பச்சமலையாளன் கொத்துக்கு யிந்த ரண்டு கொத்துக்கு வதள் கொத்து செங்குந்த கோத்திரம் பூந்துரையான் கூட்டத்தில் கொள்ளலிங்கப்ப பட்டன், தீத்தாப் புலவன், சேஷப்பட்டன் ஆகக் கொத்து 3.

பூவானிநாடு, வெங்கலநாடு, மணல்நாடு யிந்த மூன்று நாட்டுக்கும் சோளியகுல வெள்ளாளரில் பசுபதி கூட்டத்தில் செல்லப்பட்டன், விளிம்பி கூட்டத்தில் முத்துபட்டப்புலவன், வீமொட்டன் கொத்தோடே ஆகக் கொத்து 3. கிளங்குநாடு, அரையநாடு, னரையநாடு, எளுகரைநாடு யிந்த நாலு நாட்டுக்கும் திருவம்படிக்காரரில் அம்பலநாதபட்டன், குப்பப்பட்டப்புலவன், வன்னிப்பட்டன், செங்குந்த கோத்திரத்திரஞ் சூரி கூட்டத்தில்ச் சாமினாதபட்டன் ஆகக் கொத்து 4. திருவாவினங்கொடிநாடு மங்கலநாதன் கொத்துக்கு வதள்க்கொத்து சேரகுல வேளாளரில் வானிகூட்டத்தில் அவனாசிபட்டன், மங்கலநாத பட்டன், சிவகிரிபட்டன் ஆகக் கொத்து. தட்டய நாட்டுக்குத் தொளுவன் கொத்துக்கு வதள்க் கொத்து சோழிய குல வெள்ளாளரில் செம்முரிய கோத்திரத்தில் நாகரசபட்டன், விதிம்பி கூட்டத்தில வாளரசபட்டன் ஆக கொத்து 2. வடகரை நாட்டுக்குப் பாலிடையன் கொத்துக்கு வதள்க்கொத்து திருவம்படிக்காரரில் கின்னாரவேல்ப் பட்டன், தயிலாப்பட்டன், தாசப்புலவன், செங்குந்தகோத்திரம் சூரியகூட்டத்தில் சம்பைச் சாமனா்தன் கொத்தோடே ஆகக் கொத்து 4. ராசிபுரநாட்டுக்கு உகச்சன் கொத்தில் அம்பலநாத பட்டன், காசிநாதப்புலவன், செங்குந்த கோத்திரத்தில் ராசி கூட்டம் அமரிபட்டன், செங்குப்புலவன் ஆக கொத்து 4. யிந்தப்படி கொங்கு யிறுவத்திநாலு நாட்டுக்கும் அவரவறுக்குள்ள கொத்து முரமைப் பிரகாரத்துக்கு வாளிச் சீறுடனே படிபால் வருத்திணைப்பணம் வாங்கிக் கொண்டு நடந்து வரவும். கொங்கு யிறுபத்தி நாலு நாட்டுக்கு நாட்டுக் கல்லென்று நாட்டி வய்த்துக் கங்கணங்கட்டி கலியாணத்துக்குக் குப்பாரி கொட்டிசீறுக்கும் பெண்ணெடுக்குஞ் சீறுக்கும் தக்கைகொட்டி பண்பாடி கூத்தாடி மூன்று படிக்காரறும் ராசபடி வருத்திணையில் மாடைப் பணத்தில் தக்கைகொட்டிக் கொரு பணம், பண்பாடிக்கு

ஒரு பணமும், மகிட்சிக் கலியாணத்துக்கு யிதுபிரகாரம் வருத்தினைப் பணமும், கூத்தாடிக்குக் கலியாணந்தோறும் அரப்பண வருத்தினையும், தக்கை கொட்டி பண்பாடி கூத்தாடி ஆகப்படி 3. ராசபடிக்காரரில் பட்டமும் புலமைக்கும் ரட்டைப்படியும் ஆகப்படி 5. தக்கைக்கொட்டிக்காரர் நவதானிய கோத்திரத்தில் செல்லன் வேலன் முத்தன் பொன்னன் வெள்ளை குருவன் பச்சான் அவினாசி குளந்தான் தக்கைகொட்டிக் கொத்து 9. பண்பாடியில் சின்னான் கின்னார வேலன் தயிலான் வீரன் அளகன் பழனி செஞ்சி ஆகப் பண்பாடி கொத்து 7. கூத்தாடியில் பெரியான் மருதன் பெருமான் செல்லன் பழனி வெழ்மை முத்தன் காளி தேவன் வேலன் ஆகக் கூத்தாடிக் கொத்துப் பத்து.

தக்கை கொட்டிக்கு விருது உடுக்கை, பண்பாடிக்கு விருது வீணை, தாசியும் கூத்தாடிக்கு விருது கைக்கள மத்தள மாணிக்கையுடனே யிப்படி யிந்த மூன்று படிக்காரரும் கலியாணத்துக்கு விருது வாத்தியத்துடனே நாட்டார் கல்லுக்குக் காப்புக் கட்டி குப்பாரி கொட்டும்ஞ் சீறுக்கும் பெண்ணெடுக்குஞ் சீறுக்கும் அவரவர் விருது வாத்தியத்துடனே நடந்து வரவும். கங்கை குல வம்முஷம் தென்திசைக் கொங்கு வேழாளறும், வசிய குலத்தில்க் கொங்கச் செட்டிகளும், செங்குந்தகோத்திரம் கொங்கைக் கைக்கோள்வறும் படி பாலுக்குள்ள புலவர்கள். யிவர்கள் வம்முஷத் தார்கள் கலியாணம் பண்ணுமிடத்தில் நாட்டார் கல்லுக்குக் கங்கணங் கட்டிக் குப்பாரி கொட்டும் சீறுக்கும் பெண்ணெடுக்குஞ் சீறும் வாளிச் சீறும் மங்கள வாழ்த்துடனே யிப்படிச் சீறு முதலானதும் செயிதுவரவும். யிந்தச் சீறு தவிரக் கலியாணஞ் செயிதால் சாதி குரச்சலாகுமென்று யிப்படிச் சீறு வளுவாமல் கலியாணஞ் செயிதுகொண்டு வரவும். யிப்படி யிறுபத்திநாலு நாட்டுக்குப் புலமைக்கிப் பட்டையங் கொடுத்து முரமைப் பிரகாரம் கலியாண சீறுக்கு நாட்டார் கல்லென்று நாட்டிவயித்துக் கங்கணங் கட்டிக் குப்பாரிகொட்டுஞ் சீறுக்கும் பெண்ணெடுக்குஞ் சீறு தக்கோர்படியென்று மூன்றுபடி உண்டுபண்ணி வயித்து வெண்ணைநல்லூரு சடையன் நாற்பத்தெண்ணாயிரங் கோத்திரமும் விளக்கம் பண்ணி தருமம் நடப்பிவச்சுக் கொண்டோம். பூமி யாகாசஞ் சந்திராதித்த ருள்ளவரையில் நடப்பிவச்சுக் கொண்டுவரவும். காங்கயநாடு புரளந்தை குலத்தில் மன்றாடியார், பயர குலத்தில் சக்கரைக் கவுண்டர், செங்கண்ணகுலத்தில்ப் பல்லவறாயக் கவுண்டர், பூந்துறைநாடு காடை குலத்தில் வாரணவாசிக்கவுண்டர், பயரகுலத்தில் விசுவறாயக் கவுண்டர், சாத்தந்தை குலத்தில் கறுத்தறாசிக் கவுண்டர், கன்னகுலத்தில் நல்லதம்பிக் கவுண்டர், பனைக்காடை குலத்தில் சோளியாண்டாக் கவுண்டர், புரளந்தை குலத்தில் சூரியாண்டக் கவுண்டர், கீள்கரையில் கன்னகுலத்தில் தண்டியவேலப்ப கவுண்டர், புரளந்தை குலத்தில் சூரியநாராயணக் கவுண்டர், தென்கரை நாடு பெரிய குலத்தில் வேணாவுடையாக் கவுண்டர், பூச குலத்தில் தொண்டைமாக் கவுண்டர், ஆந்தை குலத்தில் ஆயிநல்லாக் கவுண்டர், பொங்கலூரு நாடு பொன்ன குலத்தில் முத்து நல்லாக் கவுண்டர், செகங் கூட்டத்தில் சுப்பறாயக் கவுண்டர், ஓதாளகுலத்தில் நாறாயணக் கவுண்டர், கரிய மாணிக்கக் கவுண்டர், வய்யாபுரிநாடு யீஞ்சங் கூட்டம் மலையாண்டிக் கவுண்டர், பழனிமலைக் கவுண்டர், அண்டநாடு பூச குலத்தில் அச்சுதறாயக் கவுண்டர், ஆறு நாடு சிவந்தி குலத்தில் தேவணக் கவுண்டர், அரையநாடு கூரை குலத்தில் செல்லைய கவுண்டர், முத்துக் காளியப்ப கவுண்டர், ராசிபுரநாடு விளிய குலத்தில்

லட்சுமறாயக் கவுண்டர். யிப்படிக் கொங்கு யிறுவத்தி நாலு நாட்டாருங் கூடி யெளிதிக் குடுத்த தாம்பூரச் சாதனப் பட்டயம்.

யிதுக்கு விகாதம் பண்ணாமல் நடப்பிவயித்த பேர்கள் புத்திர பவுத்திரராய் பாரம்பரமாய்ச் சந்திராதித்தருள்ளவரைக்கும் சாலோக சாமீப சாறுபச் சாயுச்சியம் பதம் உண்டாய் காஞ்சிப்புரத்தில் காமாட்சியம்மனும் யேகாம்புரநாதருடைய கடாட்சத்துநாலேயும் நச்சேந்திரக்கிளை போலவும் விளங்கி வாள்வார். யிதுக்கு விகாதம் பண்ணின பேர்கள் கெங்கைக் கரையிலே காறாம் பசுவைக் கொன்ற தோஷத்திலே போகவும். மாதா பிதாவைக் கொன்ற தோஷத்திலே போகவும். குருவைக் கொன்ற தோஷத்திலே போகவும். இந்தத் தருமத்தைப் பரிபாலினம் பண்ணி நடப்பிவித்த பேர்கள் புத்திர பவுத்திரர் அசுவமேதியாகம் பெறுவாள். யிந்தப் பட்டையம் யெளிதினது மதுக்கரைச் செல்லாண்டியம்மன் கோயிலிலே. யெளுதினவர் சிலுப்பை யாசாரி. அத்தனாரி யீசுவரன் லட்சிக்கவும். செல்லாண்டியம்மன் லட்சிக்கவும். கரிய பெறுமாள் லட்சிக்கவும். குருபாதமே துணை. சுப்பிரமணியர் துணை. விக்கினீசுபரன் லட்சிக்கவும். சுவாமியாரவர்கள் லட்சிக்கவும். நாட்டுறாயன் துணை. உ

# 13. குறுப்புநாட்டுப் பட்டயம்

இப்பட்டயம் ஈரோடு கலைமகள் அருங்காட்சியகத்தில் ஓலைப்பட்டயமாகவும், செப்பேடாகவும் இரண்டு நகல்கள் உள்ளன.* செப்பேடு கள்ளிப்பட்டிட க.கு.கோதண்டராமக் கவுண்டர் அவர்களிடமிருந்து பெறப்பட்டது.

இப்பட்டயம் கீலக ஆண்டு ஆனி மாதம் 21ஆம் தேதி எழுதப்பட்டது. குறுப்பு நாட்டுக்குரிய கொங்கு வேளாளக் கவுண்டரில் முதல் காணியாளர்கள் எழுமாத்தூர்ப் பனங்காடை குலத்தினர். இரண்டாவது காணியாளர்கள் பொருளந்தை, பெரியன், வெண்டுவன், கண்ணந்தை, செல்லன், சாத்தந்தை, ஓதாளன் குலத்தினர். மூன்றாவது காணியாளர்கள் படைத்தலைக் கவுண்டர்கள். விசயமங்கலம் விசயபுரி அம்மன் கோயிலிலும், ஊத்துக்குளி கதித்தாசலர் கோயிலிலும் இதே வரிசையில் உரிமைகள் அளிக்கப்படும். இது குறுப்பு நாட்டவர் 32 ஊரவரும் கூடிச்செய்த முடிவாகும்.

குறுப்பு நாட்டுக்குரிய புலவர்களாகச் செங்குந்த கோத்திரம் போக்கங்கூட்டம் நஞ்சராயப் புலவர் என்பவரை நியமித்தனர். இப்பட்டயத்தில் குறுப்பு நாட்டுக் குரிய மலைகள், ஆறுகள், குறுப்பு நாட்டு எல்லைகள் ஆகியன கூறப்பெறுகின்றன. குறுப்புநாட்டு 32 ஊர்களும் குறிக்கப்பட்டுள்ளன. கொங்கு வேளாளத் தலைவர்கள் பலர் இறுதியில் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர்.

## மூலம்

திருச்சுற்றம்பலம். கலியுக சகார்த்தம் 810ந் மேல் செல்லாநின்ற கீலக வருசம் ஆனி மாதம் 21ந் தேதியும் சுக்கிரவாரமும் தசமியும் அமிர்த கேளிகையும் கூடின சுபதினத்தில் தெச்சனா தேசத்து றாசாக்களாகிய மகாறாச மானிய ஸ்ரீறாசாராயேஸ்த்திரி ஆளிதமகாராயர் சேரறாசர் சோழறாசர் பாண்டியறாசர் மூவர்றாசாக்களும் செங்கோல் செலுத்துகிற நாளையினுட தேசத்திலிருந்து குருகுலத்து வேட்டுவ றாசாக்களை யெங்களுக் குதவியாகத் தருவிச்சு யுருக்குரபடியினாலே யிவர்களில் நரசிங்கராயரும், சங்கரராயரும், கெசபதிராயரும், பூவுலுவராயரும் யிவர்கள் நாளையில் தென்குருப்பை வீரசோழபுர நாடு சேத்தி

* புலவர் செ.இராசு, கொடுமணல் இலக்கியங்கள், தமிழ்நாடு அரசுதொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை 1981, பக்.123_130

குருப்பு நாடு முப்பத்திரண்டு கிறாமத்துக்கு முதல்வறாகிய பூந்துறை நாடு யெழுமாத்தூரில் பனைகாடை குலத்தில் ஆண்டராசாக் கவுண்டருடைய குமாரன் சோழியாண்டாக் கவுண்டர், ரண்டாவது பொருளந்தை குலத்தில் படைத்தலை வேளாளரில் சூரியநாராயணக் கவுண்டர், பெரியகுலத்தில் ரற்றண வேணாவுடையாக் கவுண்டன், வெண்டுவன் குலத்தில் நல்லண கவுண்டன், அமராபதிக் கவுண்டன், கண்ணந்தை குலத்தில் அவிநாசிக் கவுண்டன், செல்ல குலத்தில் செலம்ப கவுண்டன், சாத்தந்தை குலத்தில் ராசாக் கவுண்டன், ஓதாள குல்த்தில் வடுகநாத கவுண்டன், தோடைகுலத்தில் பச்சாக் கவுண்டன், மூணாவது படைத்தலைக் கவுண்டர் யின்னம் யிருக்கப்பட்ட மற்றுமுண்டான கவுண்டர் களுக்கு,

யிந்த நாட்டில் சதிர்மத்தியமான விசையகிரி ஒன்று, அருளும்லை ஒன்று, திட்டமலை ஒன்று, வெள்ளிமலை ஒன்று, பவழமலை ஒன்று, கதித்தமலை ஒன்று யிந்த ஆறு மலை, உள்ள நதியில் நொயல் நதி ஒன்று, வானி நதி ஒன்று, சவுந்தரமா நதி ஒன்று ஆக நதி மூன்று. யிந்தச் சதிர் மத்தியத்தில் வடக்குக் காஞ்சிக் கூகை நாட்டுக்குச் சேர்ந்த பாரியூரு யெல்லைக்குந் தெர்க்கு, முடச்சியூரு யெல்லை பவழமலைக்குந் தெற்கு, பூந்துறை நாட்டுக்குச் சேர்ந்த பெருந்துறை யெல்லை கருங்கரட்டுக்கு மேற்கு, நொய்யலாற்றுக்குந் தெர்க்கு, வெங்கிட்டாபுரத்துக்குந் தென் பாரிஷத்தில் மேல் பாரைக்குங் கீள்ப்பாரிஷத்தில் காங்கய னாட்டு யெல்லை சிலாசாசனக் கல்லுக்கு வடக்கு, அதுக்கு மேர்க்கு திலுப்பையூருக்குந் தென் பாரிஷத்தில் பொங்கலூர் நாட்டு யெல்லை சிலாசாசனக் கல்லுக்கு வடக்கு, ஆறு நாட்டு யெல்லை நம்பியூரு யெல்லைக்கும் கிழக்குச் சதிர்மத்தியும் நால்பாங்கிலேயும் அங்கம் அச்சு அடையாழம் சிலாசாசனங்கள் செப்பேடு பட்டையம் யெளுதிக் குடுத்து யிந்த முணு பேருக்கும் முப்பத்திரண்டு கிராமத்துக்குச் சகல அதிகாரமும் பண்ணிக்கொண்டு துஷ்ட்ட நிர்க்கிரக சிஷ்ட்ட பரிபாலினம் பண்ணிக்கொண்டு தரும நீதியாய் புத்திர பவுத்திர பாரம்பரியமாகச் சுகமே யிருக்கும்படியா யின்னார்களென்றும் நிலைநாட்டுகளும் பண்ணி விச்சியிருக்கிறோம். யிதுக்கு மதுரை மீனாச்சியுஞ், சொக்கனாத சுவாமியும், ஆகாச வாணி பூமாதேவி சந்திர சூரியரும் சத்திய சாட்சியாகத் தாங்கள் மூவறாசாக்களும் றாயரும் யெளுதிக் குடுத்த பட்டயம். யிந்தக் குருப்பை நாட்டுக்கு முப்பத்திரண்டு கிராமத்துக்கும் முதல் விசயமங்கலம். அதுக்கு முதல்வனாகிய தென்திசை வேளாளக் கவுண்டரவர்கள் பனங்காடை குலத்தில் சோளியாண்டாக் கவுண்டர், ரண்டாவது பொருளந்தை குலத்தில் சூரிய நாராயணக் கவுண்டர். மூணாவது படைத்தலைக் கவுண்டவரவர்கள் விசையாபுரியம்மனுக்கு முப்பாடு உள்ளவர்கள். கதித்தமலை ஆண்டவருக்குத் தேரும் திருநாளுக்கு முந்தின விபூதி பிரசாதம் சோளியாண்டாக் கவுண்டருக்கு. ரண்டாவது சூரியநாராயணக் கவுண்டருக்கு. மூணாவது படைத்தலைக் கவுண்டருக்கு. யிந்தப்படிக்கு நாங்கள் மூவறாசாக்களும் றாயரவர்களும் முப்பத்திரண்டு கிராமத்தாருங் கூடி உண்டு பண்ணி வய்த்துயிருக்கிறது. யிதுக்கு யாதாமொருத்தர் நிந்தனை செய்யக் கூடாது.

விசயமங்கலம் முகந்தை நல்லூரு திலுப்பையூரு செங்கப்பள்ளி கோசணம் குருமந்தூரு தெக்கலூரு செவியூர் முடச்சியூர் கலிங்கயம் அல்லாளபுரம் மண்ணறை

குண்ணத்தூரு சத்தாங்காணி அமிக்கயம் கொடுமணல் பாலதொளுவு ஆதியூர் தெக்கலூர் செவியூர் (அலிங்கியம் கலிங்கயம்) அயலூரு தாளுணி வாய்ப்பாடி ஊத்துக்குளி துடுப்பதி சீனாபுரம் பாலக்கரைப் புத்தூரு யிப்படிக் குருப்பைநாடு முப்பத்திரண்டு கிராமமும் ஒழுவிடைக்கிராமம் ஒண்ணு, யிந்த முப்பத்திரண்டு கிராமத்தாருங் கூடி செங்குந்த கோத்திரம் போக்கங் கூட்டம் நஞ்சாராயப்புலவனுக்கு யெளுதிக்குடுத்த யெல்லைச் சதிர் மத்தியத்துக்குச் சாசினப் பட்டையம். இத்தாதி பேர்கள் சம்மதியில் யிது யெளிதினவன் சொக்கனாசாரி. விசயாபுரி அம்மன் லச்சிக்கவும். கதித்த மலையாண்டவர் கதித்தாசல மூர்த்தி லச்சிக்கவும். சுப்பிரமண்ணியர் லச்சிக்கவும். பூந்துறை நாடு காடை குலத்தில் அவினாசி முத்தண கவுண்டர், தென்கரை நாடு பெரிய குலத்தில் முத்துரற்றின வேணாவுடையாரவர்கள், காங்கய நாடு புரளந்தை குலத்தில் சரவணகாங்கய கவுண்டர்கள், மன்றாடியாரவர்கள், பயிரகுலத்தில் நல்லதம்பிச் சக்கரை மன்றாடியாரவர்கள், செங்கண்ண குலத்தில் சிதம்பரப் பல்லவராயரவர்கள், பொங்கலூர்க்கா நாட்டு ஓதாளகுலத்தில் ரகுநாதக் கவுண்டர், ஆறுநாடு சேவூரில் பாலை வெள்ளாமரில் மசக்காளி வேலப்ப கவுண்டர், குறுப்புநாடு ஈஞ்ச குலத்தில் தம்பிராட்டியாக் கவுண்டர், சிவந்தி குலத்தில் செந்தேவண கவுண்டர், விசயாபுரியம்மன் லச்சிக்கவும். கதித்தாசல மூர்த்தி லச்சிக்கவும். சுப்பிரமணியர் லச்சிக்கவும்.

# 14. காங்கயநாட்டுப் பட்டையம்

இப்பட்டயம் ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் உள்ளது.

கொங்கு வேளாளர்கள் பலரும் தங்களுக்கென்று பரம்பரைப் புலவர்களை வைத்துக்கொண்டு ஆதரித்தனர். இதனைக் கொங்குப் புலவர் பட்டயமும், பிற பட்டயங்களும் மிக விரிவாக விளக்குகின்றன.

காடையூர் காங்கேய மன்றாடியார், பழையகோட்டைச் சர்க்கரை மன்றாடியார் இவர்கள் முன்னிலையில் காங்கய நாட்டுக் கீரனூர்க் காணியாளர்களான கொங்கு வேளாளரில் ஆதி , அந்துவன், காடை, கீரை, விலையன், தேவேந்திரன் குலத்தினர் கூடித் தங்களுக்குச் சென்னிமலைப் புலவன் என்பவனைப் பால் சாப்பிடும் உரிமையுடைய புலவனாகவும், அவனைக் கீரனூர்க்குக் காணியாளனாகவும் நியமித்ததை இப்பட்டயம் விளக்குகிறது.

## மூலம்

ஸ்ரீ ராமசெயம். சுபநமத்து ஸ்ரீமண்ணமண்டலீசுபரன் பாஷைக்கித் தப்புவறாத கண்டன் ஆரியதள விபாடன் ஆரியர் மோகந் தவிள்த்தான் துலுக்கர்தள விபாடன் தொட்டியர் மோகந் தவிள்த்தான் ஒட்டியதள விபாடன் ஒட்டிய மோகந் தவிள்த்தான் பலனாவுக்கு குரைவுவறாத மன்னன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதகண்டன் விண்விசைக் கண்விசை ஈளமும் ஆளமும் ஏர்ப்பாணப் பட்டணமும் நரபதி கெசபதி அசுவபதி தளபதி நால்வகைப் படையோடுங் கூடிய கெசவேட்டைக் கெழுந்தருளிய ராசாதிராசன் ராசமாத்தாண்டன் ராசகுலதிலதன் ராசகெம்பீரன் னாடாளும் னாயகன் ராசகுலதுங்கன் பூலோக தேவேந்திரன் ஆரணமுரையர் ஆறிலொரு கடமை கொண்டு ஆடுங்கடமணி னாவசையாமல் அரசாளும் ராசன் காங்கய நாடு காடையூரு இம்முடிக் குமார காங்கய மண்டாடியாரவர்களும், பளயகோட்டைச் சக்கரை மண்டாடியாரவர்களும், குருவாகிய கொடுமுடி பண்டிதரவர்களும், கீறனூருக் .கிராமத்துக்கு ஆதி குலத்தில் சின்னத்தம்பிக் கவுண்டரு, குப்பணகவுண்டரு, காடை குலத்தில் வெள்ளைக் கவுண்டரு, முத்துப் பெரியண கவுண்டரு, அந்துவ குலத்தில் ராசாக் கவுண்டரு, செல்லப்ப கவுண்டரு, கீரை குலத்தில் கருமண கவுண்டரு, விலைய குலத்தில் செல்லயகவுண்டரு, தேவேந்திர குலத்தில் சிவன்மலைக் கவுண்டரு, யித்தலத் தனைவோருகளும் சேர்ந்து யெளுதினது

சாசனம் யென்னவென்றால் குருப்பை நாட்டில் பால்சாப்பிடும் பளனிமலைப் புலவன் மகன் சென்னிமலைப் புலவனை நாங்களனைவரும் சேர்ந்து காங்கயனாடு கீறனூரு கிறாமத்துக்கு ஆதிகனாகவும், றாசபடி பால் வருத்தினையும் வாங்கும்படி புலமை நிலைநாட்டுச் செய்து இருக்கிறோம்.

யிதுக்கு யாதாமொருத்தர் நிந்தினை சொல்லக்கூடாது. அப்படி நிந்தினை சொன்னவர்கள் கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்துக்குச் சேர்வார்கள். ஆண்டவர் துணை. யிது யெளுதினது செல்வினாயகி முன்னிலைக்கி எளுதின பட்டயம். காடையூரு இம்முடிக் குமார காங்கய மன்றாடியார் ருசு. பளயகோட்டைச் சக்கரை மன்றாடியார் ருசு. கொடுமுடிப்பண்டிதர், சின்னத்தம்பிக் கவுண்டர் ருசுவு. குப்பணகவுண்டர் ருசு. அந்துவ குலம் றாசாக்கவுண்டர் றுசுவு.

# 15. பொன்னிவாடிப் பட்டயம்

இது தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையில் உள்ளது.* பெரியார் மாவட்டம் தாராபுரம் வட்டம் புதுப்பைப் புலவரிடமிருந்து பெற்ற சுவடிகளில் இதுவும் ஒன்று.

தென்கரை நாடு நீலம்பூர் செகங்கூட்டம் அமராவதி, வேலப்பன், தயிலியணன் ஆகியோர் பொங்கலூர் நாடு மணக்கடவு, பொன்னிவாடி, கொங்கூர் ஆதீனம் பெற்ற விபரத்தை இப்பட்டயம் விளக்குகிறது.

அச்சுதராயர் அவர்கள் ஆட்சிக் காலத்தில் தென்கரைநாடு, பொங்கலூர்நாடு ஆகியவற்றைச் சேர்ந்த பொன்னிவாடி, மணக்கடவூர் ஆகிய ஊர்கள் பற்றிய உரிமைத் தகராறு எழுந்தது. செகங்கூட்டத்தைச் சேர்ந்த தயிலியணன் தன் குலதெய்வ அம்மனை வணங்கி மழுவெடுத்து வெற்றி பெற்றான்.

தாராபுரம் கோட்டையில் செகங்கூட்டத்தார் கூடித் தங்களுக்குப் புலவர்களை நியமனம் செய்கின்றனர். செங்குந்த கோத்திரம் ராசி கூட்டம் திருக்கைவேல்ப் புலவரைக் காணி உரிமையுடைய புலவராக நியமனம் செய்கின்றனர். அவருக்குப் பட்டயமும் செய்தளித்துக் கொடுக்க வேண்டிய வரிகளும் நிர்ணயம் செய்யப்பட்டது.

## மூலம்

தென்கரைநாடு நீலம்பூறு செகங்கூட்டம் அமராபதி, வேலப்பன், தயிலியணன் தென்பொங்கலூறுநாடு மணக்கடவு, பொன்னிவாடி, கொங்கூறு ஆதீனம் வந்த விபரம். நிமணீசுபர சுவாமி லட்சிக்கவும். நீறுணிய குலத்தில் கறுப்பண கவுண்டன். உ. சொஸ்த்திரிமன் மகாமண்டலேசுபரன் அரியதள விபாடன் பாசைக்குத் தப்புவறாத கண்டன் மூவறாய கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான் எம்மண்டலமும் யீளமுந் திரைகொண்டருளிய பூறுப தெச்சணாபதி

---

* முனைவர். த. கோ. பரமசிவம், தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை, தொகுதி 4, எண் 1607, ப. 129.

உத்திரதேசத்தில் சமுத்திறாதிபதி யீளமுந் திரைகொண்டறுளிய றாசாதிறாசன் றாசபரமேசுபரன் றாசமார்த்தாண்டன் றாசகெம்பீரன் யிரைவலர் தயாழன் தறாதரமான றாசகோளரி பூலோகபுரந்தரன் துலுக்கர்மோகந் தவிள்த்தான் துலுக்கற்தள விபாடணன் ஒட்டியர்மோகந் தவிள்த்தான் ஒட்டியர்தள விபாடனன் றாசகண்டீரவன் மகாறாயர் மல்லிகாஅற்ச்சுனறாயர், கிஷ்ணறாயர், பிரவிடைதேவராயர், அச்சுதறாயர், நரசிங்கராயர், சீரங்கராயர், செயங்கொண்டராயர், வீரசவுந்திரறாயர், வானவறாயர், கோபாலறாய வீரப்பறாயர், பல்லவறாயர் றாயவேலூறு ருத்திரமுள்ள கப்பஞ் செலுத்துகுர நாளில் கொங்கு தாறாபுரஞ் சீர்மை காணவேணுமென்று மகாறாயத்திரி ஆளிதமகாறாயர் சாழி வானவறாயர் அச்சுதறாயவரவர்கள் அய்யனவர்கள் நாளில் யிறுபத்துநாலு நாடு யெதிர்கொண்டு சென்றளவில் தென்கரைநாடு தென்பொங்கலூறுநாடு பொன்னிவாடி மணக்கடவூர் செகுலன் அமறாபதி, வேலப்பன், கந்தன்தயிலி, அருள்தயிலி யிவர்கள் நாளில் செம்பகுலன், செட்டி, சேறவ்வேழாளன் மூவறும் றாயர் சிங்காசனத்தில் மணக்கடவூர் என்னுது உன்னுது யென்று காணும் வேளையில் காட்டம்மை சின்னம்மை திசைநோக்கி மளுவெடுத்தான் தயிலி மன்னன். கலியுக சகார்த்தம் 4020ந் மேல்ச் செல்லாநின்ற விக்கிரம வறுஷம் பங்குனி மாதம் பத்தாந் தேதியில் நாயற்றுக்கிளமை ரோகிணி நாளில் கூடின சுபதினத்தில் அச்சுதறாயர் முன்னிலையாயி ஆதீனம் வந்த விபரம். சாலிவாகன சகார்த்தம் 4660 ந் மேல்ச் செல்லாநின்ற பார்த்திப வறுஷம் ஆவணிமாசம் 7ந் தேதியில் கொங்கு தாறாபுரங் கெடியில்ச் சேந்த தென்கரைநாடு செங்குந்த கோத்திரம் றாசி கூட்டம் துர்க்க வியாளன் திருக்கவேல்ப் புலவனுக்கு மணக்கடவூர் செகுலன் முப்பேறு பெற்ற கந்தன்தயிலி காட்டம்மை முன்பாகக் கலியாணத்துக்குப் படிபால் அவுசேக வர்த்தினை அரக்களிஞ்சி மாடை பணம் வெண்ணை நல்லூருச் சடையன் உண்டு பண்ணி வச்சுது.

தென்பொங்கலூருநாடு சித்தாறு மணக்கடவூறுச் செகுலன் தயிலியணன் கொங்கூறு வெண்டுவன் நல்லமோறு, பொன்னிவாடிச் செவ்வாய்குலன் வீரணன், நல்லியணன், மாரணன், குள்ளறாசன் யிவர்களெல்லோறுங் கூடிச் சம்மதித்து திறுக்கவேல்ப் புலவனுக்கு யெளிதிக் குடுத்த சாதீனப் பட்டைய விபரம்.

கலியாணப்படி அரக்களிஞ்சி மாடைப்பணம் வர்த்தினையும் ஏறு வர்த்தினை கட்டினயேறுக்கு நாலுவள்ளத் தவசமும் குடுத்துக் கொண்டு வரவும். சந்திராதித்த ருள்ளவரைக்குஞ் சாலோக சாமீப சாறுப சாயூச்சிய பதம் உண்டாள்வீர் யென்று யெளிதிக்குடுத்து பசுபதி லிங்கர் முன்னிலையாய் நடப்பி வச்சுக் கொண்டு வரவும்.

தேறூறும் பெறுமாள், பீசுமலைப் பச்சை நாச்சியம்மன், பொன்னிவாடிப் பெரியம்மன் சின்னம்மன் முன்பாக யெளிதிக் குடுத்த சாசீனப் பட்டையம். யிந்தப் பட்டையத்தை யாதாமொருத்தர் நிந்தனை பண்ணிநால் கெங்கைக் கரையிலே காறாம் பசுவைக் கொன்ற தோசத்தில்ப் போவார். மாதா பிதாவைக் கொன்ற தோசத்திலே போவார். குறுவைக் கொன்ற தோசத்திலே போவார். யிந்தத் தறுமத்தைப் பரிபாலினம் பண்ணி நடப்பி வயித்த பேர்கள் புத்திர பவுத்திதரராய் அசுவமேதியாகம் பெறுவார்கள். குறுவே துணை. சரசுபதி துணை. சுப்பிரமன்னியர்

சுவாமி லட்சிப்பார். பெரியநாயகியம்மன் லட்சிப்பார். அரகரா நமசிவாயம் உ. சோமீசுபரசுவாமி, வஞ்சிநாயகியம்மன், காளி நாயகியம்மன், உத்தண்ட வேலாயுத சுவாமி, நாட்டு றாயர் லட்சிப்பார். உ நிமணீசுபர சுவாமி துணை.

# 16. சென்னிமலைப்புலவர் பட்டயம்

இப்பட்டயம் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையில் உள்ளது. தாராபுரம் வட்டம் புதுப்பைப் புலவர் வீட்டுச் சுவடிகளில் இதுவும் ஒன்று.

குறுப்புநாடு தென்முகம் நல்லூர், திருப்பூர், அமுக்கயம், முதலிபாளையம், கங்கைநாயகன்பாளையம் கிராமத்துக் கவுண்டர்கள் அனைவரும் ஒன்றாகக் கூடிச் சென்னிமலைப் புலவர் என்பவரைத் தங்கள் பரம்பரைப் புலவராக நியமனம் செய்து கொண்டதை இப்பட்டயம் கூறுகிறது. பட்டயத் தொடக்கத்தில் கொங்கு வேளாளர் பரம்பரைப் புகழ் தொகுத்துக் கூறப்படுகிறது.

இதன் தொடக்கத்தில் புதுப்பட்டயம் என்று எழுதப்பட்டுள்ளது. இது பழைய பட்டயத்தின் நகலாக இருக்கலாம். பட்டயத்தின் இடையில் சில பகுதிகள் இல்லை.

## மூலம்

### புதுப்பட்டயம்

ஸ்ரீமது சகலகுன சம்பன்னறான, சகல தன்மப் பிறிதிபாலகறான, யந்துசன சிந்தாமணிகறான, பத பாக்கியப் பிறமானிக்கறான, அன்னதான வினோதறான அகிண்டித லச்சிமி ஆசுபறிய சம்பன்னறான, மித்திருசன மனோ ரஞ்சிதறான வெகுசன போசனறான, பந்தக் காலுக்குப் பகழக்கால்க் கொடுத்த பெறியோர்கழான, சூலிமுதுகில் சுடுசோரு சமைத்திட்ட பெரியோர்கழான, அரவு தன்வாயில் கையிட்டு மானிக்கம் தந்த பெரியோர்களான, ஆடைகீறிச் சிலந்தி காட்டி அவுமானங் கார்த்த பெறியோர்களான, காஞ்சிபுரத்தில் காமாச்சியம்மன் முன்னிலைக்கி ஏரெளுபது கவிதையுங் கேட்டுக் கம்பருக்கு அடுமைச் சாதினப்பட்டையம் மெளிதிக் கொடுத்த பெறியோர்களான, முன்ங்கையில்ச் சந்தனமுரைத்து முளைவாரி அமுதிட்ட பெறியோர்களான, கொளுமுனை கொண்டு குவலையங் காத்த பெறியோர்களான, வில்லுக்கு விசையறான, சொல்லுக்கு அரிச்சந்திரரான, போருக்கு வீமறான, பொருமைக்கித் தன்மறான, சாஷ்த்திரத்துக்குச் சகாதேவறான, பறிக்கு நகுலறான, பாடைக்கித் தப்புவறாயர் கண்டன் கண்டநாடு

---

* தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை, தொகுதி 5, எண்2257, ப. 353.

கொண்டு கொண்டநாடு கொடாத பெறியோர்களான, இந்தப்படிக்குத் தொன்னூத்தாரு கீர்த்தியுந் துலங்கப்பெற்ற பெறியோர்களான மகாமேருவுக்கு சறிசமான தீறறான குரிப்புனாடு தென்முகம் நல்லூர் திருப்பூரு கெட்டிமுத்துக் கவுண்டறவர்கள், லிங்கய கவுண்டறவர்கள், வெங்கிட்டறாயக் கவுண்டறவர்கள் சோளியாண்டக் கவுண்டறவர்கள், பெறியசாமிக் கவுண்டறவர்கள், அமுக்கையங் கிறாமம் முதலிபாளையம் நல்லண கவுண்டறவர்கள், கங்கைநாயக்கன் பாளையம் செல்லப்ப கவுண்டறவர்கள், முத்துவேலப்ப கவுண்ட . குறோம் ஆண்டவர் வச்சிக்கவும். யிந்தத் தஷ்த்தாவதியில் யெளிதியிருக்கிற பிரகாரம் சென்னிமலைப் புலவனுக்கு படிபால் வருத்தினை பனமும் நாளிக்கம்பும் யிதுவெல்லாம் நடப்பிவய்த்துக் குடுக்க வேண்டியது. இதுக்கு விகாதம் பண்ணிக் குடாதபேருகள் கங்கைக் கரையில் காறாம் பசுவைக் கொன்ற தோசத்திலே போவறர்கள். மாதா பிதா கொன்ற தோசத்திலே போவார்கள். யிதுக்கு விகாதம் பண்ணாமல் நடப்பி வய்த்த பேர்கள் புத்திரா பவுத்திரறாய் பாரம்பறியமாய் சந்திறாதித்தருள்ளளவும் பாறம்பறியமாய் சாலோக சாமீபா சாருபா சாயூச்சிய பதவியுண்டாகி வாள்வார்கள். மேலும் யிந்த தருமத்தை பறிபாலினம் பண்ணி நடத்தின பேருகள் சுகமாக அசுவமேதியாகம் பெருவாள். இந்த பட்டையம் எளிதினது கதித்தமலை யாண்டவர் சன்னதியில். கதித்தமலை யாண்டவர் லச்சிக்கவும். உ சென்னிமலை யாண்டவர் லச்சிக்கவும். விசையாபுரியம்மன் லச்சிக்கவும். உ

# 17. கொடுமணல் பட்டயம்

இது தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையில் உள்ளது.* பெரியார் மாவட்டம் தாராபுரம் வட்டம் புதுப்பைப் புலவரிடமிருந்து பெற்ற சுவடிகளில் இதுவும் ஒன்றாகும். பட்டயத்தின் தொடக்கமும் இறுதியும் கிடைக்கவில்லை.

குறுப்பு நாட்டில் 32 உறுப்புக் கிராமங்கள், அதனைச் சார்ந்த எல்லா உட்கிராமங்கள் ஆகியவற்றிலுள்ள தென்திசை வேளாளராகிய கொங்கு வேளாளர்கள் அனைவரும் ஊத்துக்குளி கதித்தமலையில் முருகன் சன்னிதியில் கூடித் தங்களுக்குப் புலவர் நிர்ணயம் செய்ததை இப்பட்டயம் விளக்குகிறது.

குறுப்பு நாட்டுத் தென்திசை வேளாளராகிய கொங்கு வேளாளர்கட்கும், குறுப்பு நாட்டுப் படைத்தலை வேளாளர்கட்கும் அதுவரை ஒரே புலவர் இருந்து வந்தார் இருவருக்கும் பால் சாப்பிடும் புலவர் தனித்தனியாக இருக்க வேண்டும் என்று கொங்கு வேளாளர்கள் எண்ணினர்.

இருவருக்கும் ஒரே புலவரான சுள்ளிப்பாளையம் சேனாபதிப் புலவர் இருவருக்கும் தனித்தனியாக இருக்கவேண்டும் என்று கொங்கு வேளாளர் கூறியதைத் தான் ஏற்றுக்கொள்ள மறுத்ததைத் தன் தம்பி மகன் குமரசாமிப் புலவர், வையாபுரிப் புலவர் ஆகியோர் மூலம் சொல்லி அனுப்புகிறார்.

இறுதி முடிவு செய்யத் திங்கட்கிழமை கூடும் கூட்டத்திற்குச் சேனாபதிப் புலவரை வருமாறு கொங்கு வேளாளர்கள் அழைக்கின்றனர். புலவர் வரவில்லை. குறுப்புநாட்டுக் கொங்கு வேளாளக் கவுண்டர்கள் சேனாபதிப் புலவரை நீக்கல் செய்து தங்களுக்குப் புலவராகக் கொடுமணல் பழனிப்புலவர் மகன் சென்னிமலைப் புலவரை நியமனம் செய்துகொண்டு அவருக்குக் கொடுக்கவேண்டிய வரிகளையும் நிர்ணயம் செய்தனர். இதனையே இப்பட்டயம் விரிவாக விளக்குகிறது.

---

* தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை, தொகுதி 4, எண் 1576, ப. 91.

## மூலம்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . கவுண்டறவர்கள், பள்ளபாளையம் றாசாக் கவுண்டறவர்கள், அம்மாபாளையம் வாரணவாசிக் கவுண்டறவர்கள், வட்டலப்ப கவுண்டறவர்கள், விருமாண்டம்பாளையம் பெறியாக் கவுண்டறவர்கள், காளியப்ப கவுண்டறவர்கள், தில்லக்காட்டுப் பாளையம் தாண்டாக் கவுண்டறவர்கள், பெறியக்காபாளையம் குமர கவுண்டறவர்கள், மொசக் கவுண்டறவர்கள், செஞ்சேறியாம் பாளையம் மாரப்ப கவுண்டறவர்கள், ஆயிக் கவுண்டறவர்கள், சின்னப்பளனிக் கவுண்டம்பாளையம் றாமய கவுண்டறவர்கள், பெறியபளனிக் கவுண்டம்பாளையம் நல்லிக் கவுண்டறவர்கள், நல்லாக் கவுண்டன்பாளையம் குளந்தய கவுண்டறவர்கள், றாமய கவுண்டறவர்கள், பளனிக் கவுண்டறவர்கள், பூசாறிபாளையம் குமர கவுண்டறவர்கள், சின்னிய கவுண்டறவர்கள், கஷ்த்தூரிபாளையம் செல்லப்ப கவுண்டறவர்கள், சின்னப்ப கவுண்டறவர்கள், சாமராசாபாளையம் அம்மாசைக் கவுண்டறவர்கள், செட்டியாக் கவுண்டன் புதூரு குப்பண கவுண்டறவர்கள், டவழாயியூரு வெள்ளைக் கவுண்டறவர்கள், காளியப்ப கவுண்டறவர்கள், பொலவன்பாளையம் பளனிக் கவுண்டறவர்கள், வள்ளியப்பகவுண்டறவர்கள், பொய்யேறி மோளக் கவுண்டறவர்கள், வள்ளியப்ப கவுண்டறவர்கள், ஓடக்கல்பாளையம் ஆயிக் கவுண்டறவர்கள், கொங்கம்பாளையம் மாரப்ப கவுண்டறவர்கள், பெறியண கவுண்டறவர்கள், சடையப்ப கவுண்டறவர்கள், புதூரு சின்னிய கவுண்டறவர்கள், புதூரு காளியப்ப கவுண்டறவர்கள், மொசக் கவுண்டறவர்கள், இளையம்பாளையம் றங்கப்ப கவுண்டறவர்கள், முருகம்பாளையம் முத்துவேலப்ப கவுண்டறவர்கள், புதூருச் சின்னைய கவுண்டறவர்கள், கள்ளிமேடு வேலப்ப கவுண்டறவர்கள், சொட்டக்கவுண்டம்பாளையம் முத்துவேலப்ப கவுண்டறவர்கள், கருமாண்ட கவுண்டறவர்கள், புளியங் காட்டுப்பாளையம் சிலம்ப கவுண்டறவர்கள், தச்சன் பாளையம் திருமலைக் கவுண்டறவர்கள்,

கிஷ்ட்டணாபுரம் பகவதிக் கவுண்டறவர்கள், சேரகாரன்பாளையம் சிரங்கக் கவுண்டறவர்கள், குப்பிய கவுண்டறவர்கள், சின்னியம் பாளையம் திருமலைக் கவுண்டறவர்கள், பெறியதம்பிக் கவுண்டறவர்கள், காசிப்புலவன்பாளையம் சென்னிலைக் கவுண்டறவர்கள், கருமாண்டக் கவுண்டறவர்கள், காசிய கவுண்டறவர்கள், புதூருக் குட்டியாக் கவுண்டறவர்கள், திருமலைமாரப்ப கவுண்டறவர்கள், பனைப்பாளையம் கூளைக் கவுண்டறவர்கள், பளனிக் கவுண்டறவர்கள், சாளைப்பாளையம் குளந்தய கவுண்டறவர்கள், வேலாயுதக் கவுண்டறவர்கள், சேசிப்பாளையம் பளனிக் கவுண்டறவர்கள், காட்டையகவுண்டன்பாளையம் கந்தப்ப கவுண்டறவர்கள், மோளக்கவுண்டன் பாளையம் உத்தண்டிக் கவுண்டறவர்கள், பொங்காக் கவுண்டறவர்கள், பெறிய செல்லிபாளையம் பிடாரப்ப கவுண்டறவர்கள், குமரபாளையம் சக்கரமன்னிய கவுண்டறவர்கள், தொட்டியபாளையம் மலையாண்டிக் கவுண்டறவர்கள், தாண்டாக்

---

பட்டயத்தின் முதல் ஓலை கிடைக்கவில்லை; இறுதி ஓலையும் இல்லை.

கவுண்டறவர்கள், சின்னயகவுண்டன்பாளையம் கறிச்சிய கவுண்டறவர்கள், அத்தியப்ப கவுண்டறவர்கள், காரைப்பாளையம் பெறிச்சிய கவுண்டறவர்கள், அய்யம்பாளையம் பெறிச்சிய கவுண்டறவர்கள், சிலம்ப கவுண்டறவர்கள், நட்டியபாளையம் முருகப்ப கவுண்டறவர்கள், முத்துக் கவுண்டறவர்கள், பளனிக் கவுண்டறவர்கள், தேனீஷ்வரம்பாளையம் சின்னைய கவுண்டறவர்கள், வடுகபாளையம் வெள்ளையக் கவுண்டறவர்கள், சங்கர கவுண்டறவர்கள், புதூரு வெள்ளைக் கவுண்டறவர்கள், காளியப்ப கவுண்டறவர்கள், தோப்புப்பாளையம் லக்சுமண கவுண்டறவர்கள், கொடியம்பாளையம் மாரப்ப கவுண்டறவர்கள், கருமாண்டக்கவுண்டனூரு குளந்தய கவுண்டறவர்கள், கண்ணிய கவுண்டறவர்கள்,

கவுண்டன்பாளையம் கந்தப்ப கவுண்டறவர்கள், முரட்டுப்பாளையம் தாசக் கவுண்டறவர்கள், பெறிய கவுண்டறவர்கள், செட்டிபாளையம் செம்முத்திக் கவுண்டறவர்கள், பெறியபாளையம் சின் ்ரிய கவுண்டறவர்கள், முத்துவேலப்ப கவுண்டறவர்கள், செம்பாபள்ளம் பொன்னைய கவுண்டறவர்கள், பளனிக் கவுண்டறவர்கள், வேலம்பாளையம் காளியப்ப கவுண்டறவர்கள், நடுவளவு சங்கர கவுண்டறவர்கள், பளனிக்கவுண்டம்பாளையம் குப்பிச்சிய கவுண்டறவர்கள், குளந்தய கவுண்டறவர்கள், அம்மாசைக் கவுண்டறவர்கள், அனப்பாளையம் முத்துக் கவுண்டறவர்கள், நல்லாக் கவுண்டறவர்கள், சுப்பனூரு தேவன கவுண்டறவர்கள், மொசுக் கவுண்டறவர்கள், திருவாண்டம்புதூர் பளனிக் கவுண்டறவர்கள், காடைப்பாளையம் முத்துக் கவுண்டறவர்கள், பளனிக் கவுண்டறவர்கள், பாச்சாங்காட்டுப்பாளையம் லிங்கப்ப கவுண்டறவர்கள், புங்கங்காட்டுப்பாளையம் பெறியண கவுண்டறவர்கள், செட்டிப்பாளையம் வெள்ளைக் கவுண்டறவர்கள் பெறியண கவுண்டறவர்கள், கற்றாங்காணி நட்டியபாளையம் முத்துக் கவுண்டறவர்கள், வெள்ளைக் கவுண்டறவர்கள், சிலம்ப கவுண்டறவர்கள், சின்னண கவுண்டறவர்கள், குட்டியண கவுண்டறவர்கள், கயிலாசக் கவுண்டறவர்கள், குட்டியன கவுண்டறவர்கள், பாப்பம்பாளையம் சின்னண கவுண்டறவர்கள், முத்தய கவுண்டறவர்கள், அழப்பிச்சாக் கவுண்டறவர்கள், வெங்கிலப்பாளையம் வேலாயுதக் கவுண்டறவர்கள், செல்லப்ப கவுண்டறவர்கள், வய்யண கவுண்டறவர்கள், பளனிக் கவுண்டறவர்கள், தொட்டியப்பாளையம் பொன்னைய கவுண்டறவர்கள், கொடுமணல் நாக்காக் கவுண்டறவர்கள், சிவியாபாளையம் பளனிமுத்துக் கவுண்டறவர்கள், முத்தப்ப கவுண்டறவர்கள், பொன்னைய கவுண்டறவர்கள், ஓரத்துப்பாளையம் மோழக் கவுண்டறவர்கள், சின்னனக் கவுண்டறவர்கள், கெட்டிமுத்து கவுண்டறவர்கள், மாரப்ப கவுண்டறவர்கள், நாமக்காரன்பாளையம் முத்துப்பொன்னைய கவுண்டறவர்கள், பளனிக் கவுண்டறவர்கள், ரங்கப்பம்பாளையம் ரங்கசாமிக் கவுண்டறவர்கள், புதூர் விசயரங்கப்ப கவுண்டறவர்கள், செல்லப்ப கவுண்டறவர்கள், கவுண்டன்பாளையம் பாரப்பாக்கவுண்டறவர்கள் ஓலப்பாளையம் பூசாறிக் கவுண்டறவர்கள், வெங்கமேடு சிலம்ப கவுண்டறவர்கள், குப்பிய கவுண்டறவர்கள், கரட்[illegible]பாளையம் வெள்ளைக் கவுண்டறவர்கள், புதுப்பாளையம் கருப்ப கவுண்டறவர்கள், திப்பம்பாளையம் குமர கவுண்டறவர்கள், குளந்தய கவுண்டறவர்கள், கூத்தம்பாளையம் பூசாறி கருப்ப கவுண்டறவர்கள், காட்டுப்பாளையம் சாமிக் கவுண்டறவர்கள், சென்னிமலைக் கவுண்டறவர்கள், கொளத்துப்பாளையம் கொளந்தய கவுண்டறவர்கள்,

பளனிவேலப்ப கவுண்டறவர்கள்,

அக்கரையம்பாளையம் றங்கப்ப கவுண்டறவர்கள், ஆலாம்பாளையம் குப்பிச்சிய கவுண்டறவர்கள், சின்னக்காட்டுப்பாளையம் பளனிக் கவுண்டறவர்கள், காளிபாளையம் கவுண்டறவர்கள், நாகப்பகவுண்டன் பாளையம் குப்பிய கவுண்டறவர்கள், ஆகாசப்பாளையம் செல்லப்ப கவுண்டறவர்கள், பொன்முடி பளனிக் கவுண்டறவர்கள், எளியன்பாளையம் செங்கோட கவுண்டறவர்கள், வெள்ளியம்பாளையம் செல்லப்ப கவுண்டறவர்கள், நல்லாக் கவுண்டறவர்கள், சின்னண கவுண்டறவர்கள் கணக்கம்பாளையம் கருமாண்டக் கவுண்டறவர்கள், குள்ளக் கவுண்டறவர்கள், சென்னிமலைக் கவுண்டறவர்கள், ஓலப்பாளையம் மாரப்ப கவுண்டறவர்கள், றாசாக் கவுண்டறவர்கள், சிலம்ப கவுண்டறவர்கள், மணியம்பாளையம் செல்லப்ப கவுண்டறவர்கள், சின்னிய கவுண்டறவர்கள், துலுக்கன்பாளையம் கோப்பியாக் கவுண்டறவர்கள், மாரப்ப கவுண்டறவர்கள், றாக்காபாளையம் செல்லப்ப கவுண்டறவர்கள், தேவண கவுண்டறவர்கள், சின்னவேலம்பாளையம் அத்தநாறிக் கவுண்டறவர்கள், றாக்க கவுண்டறவர்கள், கறியகாட்டுவலசு முத்துச்சாமிக் கவுண்டறவர்கள், செல்லப்ப கவுண்டறவர்கள், நெட்டசெல்லாபாளையம் யிளச்சிய கவுண்டறவர்கள், முத்துக் கவுண்டறவர்கள், புதுவளவு பெரியதம்பிக் கவுண்டறவர்கள், கறாண்டிபாளையம் பொங்காக் கவுண்டறவர்கள், கருமாண்டக் கவுண்டறவர்கள், வள்ளியம்பாளையம் சின்னய கவுண்டறவர்கள், றாக்க கவுண்டறவர்கள், உத்தண்டிக்கவுண்டன்பாளையம் நல்லிக் கவுண்டறவர்கள், பெருமாபாளையம் லக்சுமண கவுண்டறவர்கள், மலைகோவில் பொங்காக் கவுண்டறவர்கள், திங்களூர்க்கிறாமம் காசுக்காரன்பாளையம் கருமாண்டக் கவுண்டறவர்கள், மோளக் கவுண்டறவர்கள், செல்லப்ப கவுண்டறவர்கள், நல்லாம்பட்டி நடுவலசு கவுண்டியப்ப கவுண்டறவர்கள், சின்னப்ப கவுண்டறவர்கள்,

பூசாறிக்கவுண்டறவர்கள், பளனிக் கவுண்டறவர்கள், றாசாக் கவுண்டறவர்கள், ஓடக்கல்பாளையம் சின்னப்ப கவுண்டறவற்கள், முத்துக் கவுண்டறவற்கள், தோரணவாவி குப்பண கவுண்டறவற்கள், கூதாம்பி வீரப்ப கவுண்டறவற்கள், வெள்ளாங் கோவில்ப் பெறியண கவுண்டறவற்கள், காளியப்ப கவுண்டறவற்கள், குஞ்சறமடை வீரப்ப கவுண்டறவற்கள், பூசாறிக் கவுண்டறவற்கள், குன்னத்தூருக்குச் சேற்ந்த நல்லிக்கவுண்டன்பாளையம் ஆருமுத்தாக் கவுண்டறவற்கள், புதுப்பாளையங் கணபதிபாளையம் பச்சாக் கவுண்டறவற்கள், நஞ்சப்ப கவுண்டறவற்கள், குருச்சி பளனிக் கவுண்டறவற்கள், குள்ளிபாளையம் குளந்தையப்ப கவுண்டறவற்கள், செவியூறு ஆருமுத்தாக் கவுண்டறவற்கள், முருக கவுண்டறவற்கள், சொக்கிமாரன்பாளையம் பெறிய கவுண்டறவர்கள், செவியூரு செம்பங்கறிச்சிய கவுண்டறவர்கள், காளிபாளையம் குப்பிய கவுண்டறவர்கள், ஆருமுத்தா கவுண்டறவர்கள், முருக கவுண்டறவர்கள், கனக வேலப்ப கவுண்டறவர்கள், பூசாறிபாளையம் பெறிச்சிய கவுண்டறவர்கள், கருமாண்டக் கவுண்டறவர்கள், நீலாம்பாளையம் சிலம்ப கவுண்டறவர்கள், குளத்துப்பாளையம் றாக்க கவுண்டறவர்கள், ஆலாம்பாளையம் குமரசாமிக் கவுண்டறவற்கள், சென்னிமலைக் கவுண்டறவர்கள், குருமந்தூரு மேட்டுப்பாளையம் சுப்பண கவுண்டறவர்கள்,

கொளப்பலூரு பொன்னைய கவுண்டறவர்கள், அவர் மகன் பச்சாக் கவுண்டரவர்கள், தாளுணி நஞ்சப்ப கவுண்டறவர்கள், குருமந்தூரு வெள்ளைக் கவுண்டறவர்கள், ஆயிபாளையம் வீரப்ப கவுண்டறவர்கள், காளிபாளையம் வேலாயுதக் கவுண்டறவர்கள், திட்டம்பாளையம் குமர கவுண்டறவர்கள், மலையாக் கவுண்டறவர்கள், குறிச்சி குன்னத்தூரு கோசனம் குருமந்தூரு செவியூரு தாளுனி சிருவலூரு இன்னமும் இந்தக் கிறாமத்திலிருக்கப்பட்ட நம்முரவுமுறை தென்திசைக் கவுண்டறனவோருக்கும் செம்பாபள்ள மரம்பிடுங்கிப் பெறிச்சிய கவுண்டகளும், மற்றுமுண்டாகிய நம்ம உரவுமுறையார் சகலமான பேருகளுங்கூடி,

ஊத்துக்குளி கதித்தமலையாண்டவர்க்கு பிலப வருஷம் பங்குனி மாசம் 4ந்தேதியில் அவுசேக மிரவனை சமாதாரனை செய்து சுவாமி கோயில் சன்னிய்தானத்தில் நம்ம உரவுமுறையானவரும் கூடி நம்ம தென்ந்திசை வேழாழருக்கும், படைத்தலை வேழாழரும் யிருவருக்கும் ஒன்றாகக் கலந்து புலமை கலங்கலந்து பால்குடித்து வருகிறது சரிவறாதென்று நம்ம புலமை நம்மளுக்கே யிருக்கவேணும்மென்ங்கிரதாய் முன்னாடியாய் யோசினை செய்து சுள்ளிப் பாளையம் நம்ம சேனாதிபதிப் புலவனைத் தருவிச்சு தென்திசையார் வீட்டிலேயும் படைத்தலையார் வீட்டிலேயும் கலியாணத்துக்கு கலங்கலந்துப் பால்குடித்து வருகிரது சறியல்லவென்று நம்மளுக்குள்ள புலமை நம்மளுக்குள்ளேயிருக்கும்படியாய் புலவனைத் தருவிச்சுக் கேள்ப்போமெண்கிரதாய் யோசினை பண்ணியிருக்க முன்னாடியாய் சுள்ளிப்பாளையம் சேநாதிபதிப்புலவனுடைய தம்பி மகன் குமரசாமிப் புலவனும், வய்யாபுரிப் புலவனும் யிவர்கள் ரண்டு பேரும் வந்து காட்டுப்பாளையம் சென்னிமலைக் கவுண்டறிடத்திலேயும், சின்னைய கவுண்டன்பாளையம் கறிச்சியகவுண்டனிடத்திலேயும், கொங்கம்பாளையம் சடையப்பகவுண்டனிடத்திலேயும் இந்த மூன்று பேறிடத்திலேயும் போயி நம்மளுக்கும் படைத்தலைக் கவுண்டர்களுக்கும் புலமையை வேறே விங்கினிக்கக் காரியமாய் பேசிக்கொண்டு யிருக்கிறதென்று நீங்கள் அவகள்ழிடத்திலேயே தென்ந்திசையார்க்கும் படைத்தலையாற்க்கும் யிருவருக்கும் ஒரு புலமையாய் இருக்கவேணுமேயல்லாமல் யிருவருக்கு புலமை பிறிக்க வேண்டுவதில்லையென்று யெங்கள் பெறியப்பன் சேனாபதிப் புலவன் உங்களிடத்திலே சொல்லிக் கேட்டுக் கொண்டுவரச் சொன்னானென்று சொன்னான்.

அதுக்கு நாங்கள் நாளை திங்கள்க்கிழமையன்றைக்கு ஊற்றுக்குளிக் கதித்தமலையாண்டவற்க்கு அவுசேக மிரவனை சமாராதானை செய்யுகிரத்துக்கா நம்ம உரவுமுரை தென்திசையார் சகலமான பேரும் வருவாங்கள். நாங்களும் அங்கே வாறோம். அங்கே நீங்களும் உங்கள் பெறியப்பன் சேனாபதிப்புலவனும் வந்து கேட்டுக்கொள்ளுங்கள். அதுக்கு சகல சகலமான உரவுமுரைக் கவுண்டற்களும் யெப்படியாகச் சொல்லுகிறார்கழோ அப்படியாகுதென்று சொன்னோம். அப்படியே நாங்களும் யெங்கள் பெறியப்பன் சேனாபதிப்புலவனும் வாறோம்மென்று சொல்லிக்கொண்டுபோனவன் ஊற்றுக்குளிக்கி உரவுமுரையாரிடத்துக்கு ஒருத்தனும் வரவில்லையென்று உரவுமுரையார் சகலமானபேரும் யோசினை செயிது அந்தப் புலவன் ஒருத்தரும் உரவுமுரையாரிடத்துக்கு வறாதே யிருந்ததினாலே அவன் நம்ம தென்திசையாருக்கு நம்ம வேழாழருக்குப் புலவனல்லவென்று சொல்லி

சுள்ளிப்பாளையம் சேனாபதிப் புலவனை நீக்கல் செயிதுவய்த்து குருப்பநாடு தென்முகம் பாதிப்பங்குக்குள்ள கொடுமணலிலிருக்கும் பளனிப் புலவன் மகன் சென்னிமலைப் புலவனை தென்திசை வேழாழருக்கு மாமூலுக்குப் படிபால் வருத்தினைக்குள்ளதெல்லாம் நம்ம சென்னிமலைப் புலவனென்று யிந்த குருப்பு நாடு முப்பத்திரண்டு கிறாமத்துக்கும் தெந்திசை வேழாழரணவருக்கும் யிவனே புலவனென்று நேமித்திருக்கிறோம்.

படிபால் வருத்தினைப் பணமும் நாளிக் கம்பு முதலானதும் யிந்த சென்னிமலைப் புலவனுக்கு நடந்துவர வேண்டியதென்று ஊற்றுக்குழி கதித்தமலை யாண்டவர் சன்னிதானத்து முன்பாக சத்திய சாச்சியாக குருப்பு நாடு தென்திசை வேழாழரனவோருங்கூடி புலமை நாட்டி வயித்துக் கொண்டோம். இந்தப்படிக்கி குருப்புநாட்டு நம்ம உரவுமுரையார்கள் ஊற்றுக்குழி கதித்தமலை யாண்டவர் சன்னிதானத்துக்கு வந்திருந்த பேருகளும் வராமல் யிருந்த பேருக்கும் யின்னம் சகலமாந பேருகளுக்கும் தெரியப்படியிருக்க—

# 18. இருபத்துநாலுநாட்டுப் பட்டயம் — 1

தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையில் இப்பட்டயம் உள்ளது.* தாராபுரம் வட்டம் புதுப்பைப் புலவர் ஏடுகளில் பெறப்பட்ட பட்டயங்களில் இதுவும் ஒன்று. கொங்கு வேளாளர்களை மிகவும் சிறப்பிக்கின்ற பட்டயம். கொங்குப் புலவர் பட்டயத்தோடு சில இடங்களில் ஒத்துக் காணப்படுகிறது.

சோழமன்னன் கம்பரிடம் தம் பெயரில் தமிழ் பாடவேண்டுமென்று கேட்டார். பொன்னூதிமலை, செங்கோல் முத்திரை, காவிரி நதி இவைகளைவைத்துக் கவிதை பாட வேண்டுமென்று சோழமன்னன் கேட்கவே அவை கொங்கு நாட்டாருக்கே உரியவை. இவைகளைவைத்துக் கவிதை பாட இயலாது என்று கம்பர் கூறிவிட்டார்.

காவிரியாறு கொங்கு நாட்டார் எச்சில் என்பதை நிரூபிக்க எச்சில் பரிசோதனை காட்டவரும்போது காவிரி வெள்ளப்பெருக்கெடுத்தது. கம்பர் வாக்கால் அடங்கிற்று. சோழன் கம்பருக்குப் பெரும் பரிசில்கள் நல்கினான். கம்பர் அதனை இடக்கையால் வாங்கினார். வலக்கை கொங்கு வேளாளரிடம் பரிசில் வாங்கவே என்றார் கம்பர். வேளாளர் கொடுத்த கம்பைச் சோழமன்னன் கொடுத்த உயர்ந்த துகிலில் முடிந்து வந்தார் கம்பர்.

வேளாளர்களே பெரியவர்கள் என்று கம்பர் சொல்ல, நிறுத்து நிரூபிக்க வேண்டும் என்று சோழமன்னன் கேட்டுக் கொள்கிறான். வேளாளர் குடும்பத்துச் சிறுவன் சோழனைவிட எடை அதிகம் என்று கம்பர் நிறுத்து நிரூபிக்கின்றார்.

வேளாளர் சோழனுக்குக் கொடுக்கின்ற வதுவை வரியைக் கம்பருக்குக் கொடுக்குமாறு குலோத்துங்கச் சோழன் சாசனம் எழுதிக் கொடுத்தான்.

அப்பொழுதாவது தம்மைப் பாடவேண்டும் என்று சோழன் கேட்க கம்பர் வேளாளர்களைப் பாடுகிற வாயால் யாரையும் பாடுகிறதில்லை என்றார். சோழன் தன் அம்பினால் கம்பரைக் கொன்றார் என இப்பட்டயத்தில் எழுதப்பெற்றுள்ளது.

பட்டயத்தின் கடைசிப் பகுதி கிடைக்கவில்லை.

---

* தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை, தொகுதி 4, எண் 1595, ப. 115.

## மூலம்

திரிச்சுற்றம்பலம். கலியுக சகார்த்தம் 801 மேல்ச் செல்லாநின்ற சார்வரி வருஷ பங்குனி மாதம் 10 ந் தேதியில் சுக்ரேவாரமும் உத்திர நச்சேத்திரமும் அமுர்த கேளிகையும் கூடின சுபதினத்தில் சோழதேசத்தில் சேரறாசா சோழறாசா பாண்டியறாசா மூவறாசாக்களும் செங்கோல்ச் செலுத்துகிற நாளில் வேழாழப் பிரவாகிய காராழ வம்முஷத்தார் வழங்கிவார காலத்தில் எளுபத்தியொன்பது வழநாட்டார்களுக்கும் கம்பர் பாடிப் படித்துப் புகள்ந்து கொண்டு தியாகம் வெகுமதி வாங்கிகொண்டு நடத்திவார காலத்தில் சோழறாசாவானவர் கம்பரைப் பார்த்து நம்முடைய பேரில் தமிள் பாடவேணுமென்று கேட்டார். அதர்க்குக் கம்பர் உன்னுடைய பேரில் யென்ன நாட்டுதலம் நாட்டிப் பாடுகுரதென்றும் கேட்டார். அதர்க்குச் சோழறாசாவானவர் பொன்னூதி மலையை நாட்டிப் பாடவேணுமென்று கேள்க்க பொன்னூதி மலையானது வேழாழருடைய போர்ப் பட்டரைக் கல்லென்று சொன்னார். நம்ம செங்கோல் முத்திரியை வய்த்து நாட்டிப் பாடவேணுமென்றுங் கேள்க்க செங்கோல் முத்திரியானது வேழாழருடைய உளைக்கோல் முத்திரியென்றுஞ் சொன்னார். நம்ம பொன்னி நதியை நாட்டிப் பாட வேணுமென்றுகேள்க்க நம்ம பொன்னிநதியாகப்பட்டது வேழாழருடைய யெச்சக்கலத் தண்ணீரென்றுஞ் சொன்னார். அதுக்குச் சோழறாசாவானவர் கம்பரைக் கூட்டிக் கொண்டு போயி நடுவில் எச்சல்க் காண்பிக்கச்சொலவும் அதுக்குக் கம்பர் கெங்காபரமேஷ்பரியை வேண்டி தமிள் பாடிநார். அப்போ கெங்காபரமேஷ்பரியானவழ் எச்சல்ப் பரிசோதனை காண்பிச்சுக் கொடுக்கவும் சோழராசாவானவர் மனது நொந்து வெகுகோபமாகி வாரபோது அப்போக் கெங்காபரமேஷ்பரியானவள் ரம்பவுங் கோபங் கொண்டு பொங்கி வழுஞ்சு வருகிரதைச் சோழராசாக் கண்டு பயந்து தன் அரமனைக்குப் போகவும் தன் அரமனையெல்லாந் தண்ணீர் போய் வளுஞ்சு நிர்க்கவும் அதர்க்கு சோழறாசாப் பெண்சாதியானவள் யிது யென்னக் காரணமென்று றாசாவைக் கேள்க்க றாசாவானவர் சொன்னது கம்பரை யெச்சல்ப் பரிசோதனை காண்பிக்கச் சொல்லவும் மகாதாயி கோபங்கொண்டு யெளுந்து வந்தாள். யிப்போது கம்பரைப் பார்த்து ரம்பவும் வணங்கி மகாதாயிநிட மனங்குளிர்ந்து தன்னிலைக்கி நிர்க்கும்படியாய் தமிள் பாட வேணுமென்று கேட்டார். அப்படியே தமிள்ப் பாடவும் கெங்காபரமேஷ்பரியான உமையவள் மனங்குழிந்து தன்னிலைக்கு நிர்க்கவும் சோழறாசாவானவர் கம்பரைப் பார்த்து சந்தோஷத்துடனே உமக்கு வேணுமென்கிர காரியத்தை கேட்டுக்கொள்ளுமென்று சொன்னாரப்போ வேணுமென்ற காரியத்தைக் கேள்க்கும்போது கேட்டுக்கொள்கிறேனென்று சொல்லவும்,

அப்போது றாசா சந்தோஷத்துடனே தன் பட்டத்து யானையும் யிளையாயிரம் பொன்பெற்ற துயிலும் சொர்ன்னமும் தியாக வெகுமதி கொடுக்கவும் கம்பர் யிடது கய்நாலே யேந்தினார். அப்போறாசாவானவர் யெடது கையேந்தின வழக்கமேதென்று கேள்க்க றாச சமூகத்தில் தியாகம் வாங்கிரது யெடது கையும் வேழாழர் சமூகத்தில் தியாகம் வாங்குரது வலது கைய்யென்றுஞ் சொன்னார். அப்போ றாசா வருமங் கொண்டு யிருந்தார். கம்பறானவர் தியாகம் வெகுமதி வாங்கிக்கொண்டு வாரபோது வேழாழப் பிரவாகிய காராள வம்முசத்தார் றாசிக்

கழத்துக்கு வரும்போது வேழாபுர் யேருக்கு எட்டு வள்ளக் கம்பு பேருவைச் சாட்டில் ஒரு சாடு கம்பும் கொங்கு முரத்தால் ஒரு முரக் கம்பும் பொளி வள்ளம் ஒன்று யிந்தப்படி தியாகம் வெகுமதியை யிந்த யிளையாயிரம் பொன்பெற்ற துயிலில் வாரிச் சுமை கட்டி யெடுத்துவரும்போது யிந்தச் சுமையைச் சோழராசா கண்டு கம்பரைப் பார்த்து யென்ன சுமை யென்றுங் கேள்க்கவும் கம்பர் வேழாழருடைய ராசிக் கழத்துக் கம்பென்று சொல்லவும் ராசாவானவர் யெளையாயிரம் பொன் பெற்ற துயிலில் யிந்தக் கொம்மைக் கம்பை

கட்டுகுரதாவென்று கேள்க்கவும் அப்போக் கம்பர் சொன்னது. யிந்த யிளையாயிரம் பொண்பெற்ற துயில் பெரிதல்ல. வேழாழருடைய கம்புதான் பெரிதென்று சொல்லவும், அப்போ ராசாவானவர் தன் அரை வீட்டில் யிருக்கும் முத்து, நவரற்றினம், கோமேதகம், வயிடூரியம், புஷ்பறாகம், மரகதம் யிப்பேர்க்கொற்ற நவ்ரற்றினாதிகளை யெடுத்துக் கொண்டு போகச் சொல்லவும், கம்பர் வேழாழருடைய ராசிக் கழத்தில் கூடையினால் மோந்து கொடுத்த கம்புக்கு நிகரல்லவென்றுஞ் சொன்னார்.

அப்போ சோழறாசாவானவர் நம்முடைய தியாகமும் நானும் பெரிதல்லவாவென்று கேள்க்க கம்பர் சொன்னது உம்முடைய நவரற்றினாதிகளும் நீரும் பெரிதல்ல. நமக்கு வேழாழரும் அவருடைய தியாக வெகுமதிகளும் பெருதென்று சொன்னார். சோழறாசாவானவர் பெரிது சிருது நிரை நிருத்துக் குடுக்க வேணுமென்று கேட்டார். கம்பர் அப்படியே நல்லதென்று சொன்னார்; அதுகேட்டு ராசா சம்மதிச்சு ஒரு வாரத்தில் நிரை குடுத்தால் சரி யில்லாவிட்டால் உம்மை சிரசாக்கினை செய்யப்படுமென்று சொன்னார்.

அதுகேட்டுக் கம்பர் சம்மதிச்சுப் போனார். அதின் பிரகு சோழறாசாவானவர் தன் சேனை படைபதாதிகளைத் தருவிச்சு சொன்னார். யினிமேல் யிந்த யெளுபத்தொன்பது வழநாட்டு வேழாழ வம்முசத்தாரை யிதுகாலவரையில் யிருந்தது சரிதான், யினிமேல் யிந்தத்தேசத்தில் நீங்களிருக்கக் கூடாதென்று சொல்லி சோழறாசாக் கட்டளைசெய்து யிருக்குறார்கள். யிதர்க்கு மீரி யாதாமொருத்தர் யிந்தத் தேசத்தில் யிருந்தீர்கழானால் சிரசாக்கினை செய்து போடுவோமென்று உத்திரவு கொடுத்துவிட்டார்.

யிந்தச் சமாசாரந் தெரிந்து யெழுபத்தொன்பது வழநாட்டார்களும் பயந்து ஓடி பிரிஞ்சுவிட்டார்கள். சோழறாசாவானவர் கம்பரைத் தருவிச்சு நீர் முன்சொன்ன படிக்கி நிரை நிருத்துக் கொடுக்கவேணுமென்று கேட்டார். கம்பர் நல்லதென்று மூன்று நாள்க் காலம் வாங்கிக் கொண்டு வேழாழரை தேடிக்கொண்டு போனார். யெங்குங் கிடைக்கவில்லை. மருநாள் தேடித் திரிந்தலைந்துவரும்போது வளியில் ஒரு போர்ப் பட்டரைக்குள் ஒரு பையன் யிருந்தது. அந்தப் பய்யனைக் கம்பர் கண்டு யென்ன பிள்ளையென்று கேள்க்க நான் வேழாழர் பிள்ளை யென்று சொல்லவும் கம்பர் அதிக சந்தோஷத்துடன் யெடுத்துக்கொண்டு வந்து தன் வீட்டில் வய்த்து பொளி வாக்கியஞ் சொல்லி வைய்த்து மருநாள் காலையில் ராசாவையும் வேழாழரையும் நிரை நிருக்குரதென்று சகலமான பேர்களையும்

தருவிச்சு நிரை நிருத்தார்கள்.

நிருக்கும்போது வேழாழரே பெருதென்று சோழறாசாச் சொல்லி யிரக்கி விடச்சொல்லவும், அப்போ கம்பர்க் கேட்டுக்கொண்டது நம்முடைய வேழாழ வம்முசத்தில் வாங்குகிர வதுவை வரியை றாசபடி பால் வருத்தினையென்று நமக்கு யென்றென்றைக்கும் நாட்டுதலம்பண்ணிக் கொண்டுக்கவேணுமென்று கேட்டார். அப்படியே நல்லதென்று சொல்லி கலியுக சகார்த்தம் 807 வருஷத்தில் வதுவை வரியை தாம்பூர சாசினத்தில் அரைக்களிஞ்சி மாடப்பணமும் றாசபடி வருத்தினையும் யின்ருமுதல் நாள் யென்றென்றைக்கும் சந்திறாதித்தருள்ளவரையில் பூமி ஆகாசமுள்ளவரைக்குமென்று பொன்னிநதி யுள்ளவரைக்குமென்று குலோத்துங்க சோழராசா கையெளுத்து நாட்டிக் கம்பருக்குத் தந்தோமென்று கொடுத்தார்.

அந்தத் தாம்பூர சாதானத்தைக் கம்பர் வாங்கிக் கொண்டு வந்து, பண்ண நாடு வெண்ணநல்லூர் ஆயிநயினாற்ருடைய குமாரன் சடையநயினாற் கய்யில்க் கொடுத்தார். அப்போ யெங்கள் பெரியோர் காஞ்சினாடு ஏனாதி நயினாரவர்களும், மீனநாடு ஆண்டாராகிய பாண்டிமன்றாடியவர்களும், அழக நாடு உடையநயினாரவர்களும், கண்டிநாடு காழத்திநயினாரவர்களும், பொன்னிநாடு கரியாண்டநயினாரவர்களும், வாழனாடு பிள்ளைநயினாரவர்களும், கண்ணிநாடு அச்சுதக்கொமாரநயினாரவர்களும், வீடுருக்கநாடு சிந்தாமணி நயினாரவர்களும், திருவாத்தினாடு யிளையநயினாரவர்களும், செஞ்சினாடு கருவாண்ட நயினாரவர்களும் இப்படி தொண்டமண்டலம் சோழமண்டலத்திலுள்ள 79 வழநாட்டாரும் ஒன்றாக கூடி எங்கள் காராழ வம்முசத்தை விழக்கம்பண்ண விழங்கி வாள்கவும் யெங்களுக்கு ஈஷ்பரன் கொடுத்த விருது ஏருக்குள்ள விருது சீருடனே கம்பர் வாக்குநாலே யேரெளுவதும் கவுதையும் பாடி வயித்துக்கொண்டு யெங்கள் வம்முசமு எங்கள் கலியாணத்துக்குள்ள சீரும் சிறப்புள்ளதெல்லாம் வாழிகவிதை பதினாரும், மங்கல வாள்த்தும் நாட்டுதலம் நாட்டி பாடிவயித்துக்கொண்டு கம்பரையும்ங் கூட்டிக் கொண்டு மூவறாசாக்களையும் கங்கைகுல வம்முசம் 64 கோத்திரத்தை 48 ஆயிரம் கோத்திரம்மென்று வகுத்து மருபடியும் 8000 கோத்திரமாக எடுத்து பொன்னிநதியிலே றாசாவுக்கு எச்சல்ப் பறிசோதனை காண்பிச்சதுக்காகக் கலத்து ரம்ப பால்விட்டு பசுபதி லிங்கர் முன்னிலைக்கி பழம், சர்க்கரை, நெயி, பஞ்சாமுர்தத்துடனே வயித்துக் குலோத்துங்க சோழறாசாக் கொடுத்த வதுவைவரி மாடை அரக்களிஞ்சிப் பணமும் வயித்துக் கம்பர் வாக்குநாலே மங்கழ வாள்த்தும், பதினாரும் வாழியும் படித்து நிரவேற்றிக் கொண்டு எங்கள் வம்முசங் குளிர்ந்துப் பசுபதி லிங்கர் முன்னிலைக்கி சத்திய சாச்சியாக சந்திர சூரியருள்ளளவும் பூமி ஆகாசமுள்ளளவும் யென்ற என்றைக்கும்மென்று சொல்லி யெங்கள் பெறியோர்கள் கம்பருக்கு றாசபடிபால் வருத்தினைப் பணமும் யின்றுமுத லென்றென்றைக்கும்மென்று சொல்லி கலத்துப் பாலெடுத்து தந்துகொண்டார்.

காஞ்சிபுரத்தில் ஏகாம்பரனாதறறிய ஏரெளுபதும்ந் தமிள் அரங்கறேற்றிப் பாடி வய்த்துக்கொண்டு மாத்துளி குரித்தெளுந்தவுடனே காமாச்சியம்மன்

முன்னிலைக்கி சத்திய சாச்சியாக கம்பர் தமிள் உள்ளவரைக்கும், காறாழ வம்முஷம் உள்ளவரைக்கும், காளிமலையுள்ளவரைக்கும் கெங்காபரமேஷ்பறி மாதாவறிய கம்பருக்கு அடுமைச் சாதினப் பட்டையம் ளெளிதிக் குடுத்து புலமை நிலைநாட்டி வயித்துக்கொண்டோம்.

யிந்தப்படிக்கிக் கம்பருக்கு றாசபடி பால் வருத்தினையும் யெங்கள் வம்முஷங் கலியாணத்தில் வாழிச்சீரும், மங்கழ வாள்த்தும், யேரெளுவதும் படித்துவார காலத்திலே சோழறாசாவானவர் கம்பரைப் பாத்து யினிமேலாகிலும் என் பேறில்த் தமிள்ப் பாடவேணுமென்று கேட்டார்.

அதுக்குக் கம்பர் வேழாழரைப் பாடுகிற நாவுநாலே உம்மைப் பாடுகிரதில்லையென்று சொல்லிப் போட்டார். அதுக்கு வருமங்கொண்டிருந்து சூதான்னத்துநாலே அம்புகொண்டெயிது போட்டார். சோழ றாசா கய்யம்புநாலே கம்பர் யிரந்து போனார். யிந்த றாசபடி பால் வருத்தினைப் பணமும் கம்பர் கையேட்டுக்காரர் செங்குன்னி கோத்திரம் போக்கன்கூட்டம் நஞ்சராயப் புலவன், றாசி கூட்டத்தில் திருக்கவேல்ப் புலவன், செல்லக் கொமாரப் புலவன் யிவர்களுடைய முன்பெரியோருகளுக்கு நடந்துவார காலத்திலே யெங்கள் முன் பெறியோர்கள் சோழறாசாவானவர் கலியுக சகார்த்தம் 807 வருஷத்தில்

---

# 19. வாரக்கநாட்டுப் பட்டயம்

தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையில் இப்பட்டயம் உள்ளது.* பெரியார் மாவட்டம் தாராபுரம் வட்டம் புதுப்பைப் புலவரிடமிருந்து பெற்ற சுவடிகளில் இதுவும் ஒன்று.

27_1_1882 அன்று தென்கரை நாடு முளையாம்பூண்டிக் கிராமம் சரவணக்கவுண்டன்வலசு, கரவலசு ஆகிய ஊர்களைச் சேர்ந்த பல கவுண்டர்கள் முன்னிலையில் வாரக்கநாட்டுக் கிணத்துக்கடவு கிராமம் மசரா வீரப்பக் கவுண்டனூர், பாலார்பதி, குப்பாண்டக் கவுண்டனூர், கோவிந்த நாயக்கன்புதூர் ஆகிய பல கிராமத்துக் கவுண்டர்கள் தங்களுக்கென்று புலவரை நியமித்துக் கொண்டதை விரிவாக இப்பட்டயம் விவரிக்கின்றது.

தென்கரை நாடு பெரியணப்புலவர் மகன் சாமிப்புலவனுக்கு எழுதிக் கொடுத்த ஓலைப்பட்டயம்.

புலவருக்குக் கொடுக்கவேண்டிய வரி முதலியவைகளைக் கும்பர் காலத்தில் உள்ளவாறு கொடுப்பதாகக் கூறுகின்றனர். விரிவாக அவைகள் குறிப்பிடபெறுகின்றன. பலர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். யார்யார் எத்துணை வள்ளத் தானியம் கொடுப்பது என்ற விவரமும் இறுதியில் காணப்படுகிறது.

## மூலம்

உ சிவமயம் சுபநமஷ்த்து ஸ்ரீமகாமண்டலீசுபரன் பாசைக்கி தப்புவறாத கண்டன் ஆரியதழ விபாடன் ஆரியமோகந் தவிள்த்தான் துலுக்கர்தழ விபாடன் துலுக்கர்மோகந் தவிள்த்தான் ஒட்டியதழ விபாடன் ஒட்டியமோகந் தவிள்த்தான் பலனாவுக் குரைவறாத மன்னன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாத கண்டன் வினவிசை கனவிசை யீழமும் ஒரப்பான் பட்டணமும் ரதபதி கெசபதி அசுபதி நரபதி நால்வகைப் படையோடுங் கூடி கெசவேட்டை கொண்டருளிய றாசாதிறாச மார்த்தாண்டன் றாசகுலதிலதன் றாசகெம்பீறன் நாடாளுநாயகன் றாடகுலதுங்கன் பூலோகதேவேந்திரன் ஆரண முரையார் ஆரிலொன்றுங் கடமை

* தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை, தொகுதி 4, எண் 1578, ப.93.

கொண்டு ஆடுங்கடைமணி நாவசையாமல் அரசாளுங் குலோத்துங்க சோழராசா நாளையில் ராசாக்கள் கொடுத்த பொன்னேரு விருது பெற்றருளிய காராழர் சுபநமஷ்த்து கலியுக சகார்த்தம் 4982 ந் மேல்ச் செல்லாநின்ற விசு வருஷம் தைய் மாதம் 16ந் தேதி சுக்குரவார நாள் அசுபதி நச்சேத்திரமும் மகர லக்குணத்தில்

தென்கரை நாடு தாறாபுரந் தாலூகா முளையாம்பூண்டிக் கிறாமம் சரவணக்கவுண்டன்வலசுலே யிருக்கும் வேலாயுதக் கவுண்டர் மகன் சிவன்மலைக் கவுண்டரவர்கள், பழனிமலைக் கவுண்டர் மகன் முத்தைய கவுண்டர், முத்துக் கவுண்டர் மகன் செல்லப்ப கவுண்டரவர்கள், புள்ளச்செல்லப்ப கவுண்டர் மகன் நஞ்சப்ப கவுண்டர், சிவன்மலைக் கவுண்டர் மகன் குப்பண கவுண்டரவர்கள், முத்துக் கவுண்டரவர்கள், நஞ்சப்ப கவுண்டரவர்கள், பெரியதம்பிக் கவுண்டர் மகன் சிவன்மலைக் கவுண்டரவர்கள், கரவலசு சின்னப்ப கவுண்டர் மகன் நாச்சிமுத்துக் கவுண்டரவர்கள் யித்தாதியிவர்கள் முன்பதாக வாரக்கநாடு புள்ளாச்சி தாலூக கிணத்துக்கடவுக் கிறாமம் மசரா வீரப்பகவுண்டன் ஊருலேயிருக்கும் வீரப்ப கவுண்டன் மகன் பழனிமலைக் கவுண்டர், நஞ்சப்ப கவுண்டர் மகன் காளியப்ப கவுண்டர், மேற்படியார் மகன் றாமசாமிக் கவுண்டர், வைய்யாபுரிக் கவுண்டர் மகன் ஆறுமுகக் கவுண்டர், நல்லாக் கவுண்டர் மகன் காளியப்ப கவுண்டர், மாரப்ப கவுண்டர், பாலார்பதி மாரப்ப கவுண்டர் மகன் கண்டியக் கவுண்டர், கொமர கவுண்டர் மகன் மலையாக் கவுண்டர், நஞ்சப்ப கவுண்டர் மகன் கருப்ப கவுண்டர், குப்பாண்டகவுண்டனூரு றாமய கவுண்டர் மகன் தேவண கவுண்டர், மாரிமுத்துக் கவுண்டர், கோவிந்தநாயக்கன்புதூரு குப்பாண்டக் கவுண்டர் மகன் கண்டிய கவுண்டர், பழனிக் கவுண்டர் மேற்படி உள்ளூருலேயிருக்கும் வரதப்ப கவுண்டர் மகன் பழனிக் கவுண்டர், றாமசாமிக் கவுண்டர் மகன் பழனிக் கவுண்டர், பழனிக் கவுண்டர் மகன் செல்லப்ப கவுண்டர், றாமசாமிக் கவுண்டர் கந்தப்ப கவுண்டர் மகன் வய்யாபுரிக் கவுண்டர், முத்துக் கவுண்டர், கருப்ப கவுண்டர் நாங்கழனவோரும்ஞ் சேர்ந்து தென்கரைநாடு பெரியணப் புலவர் மதன் சாமிப் புலவருக்கு யெளிதிக் குடுத்த சாசினப் பட்டையம்.

யென்னமென்றால் யிப்பவும் யெங்கள் வீட்டில் சோபன கலியாணத்துக்குப் படிபால் வருத்தினை பணம் மாடை யரக்களிஞ்சிப்பொன் றாசாக்கள் கட்டளையிட்டபடிக்கி யிப்பவு கலியாணத்துக்கு 1 1/4 ஒன்னேகால் ரூபாய் வீதம் பண்ணையத்துக்கு யேருக்கு எட்டுவள்ளத் தவசமும் கழத்தில் பேருவைச் சாட்டில் ஒரு சாடு கம்பு, கொங்கு முரத்தில் ஒரு முரக் கம்பு வேழாழப் பிரவாகிய காராழ வம்முசத்தார்களிடத்தில் றாசாக்கள் யிந்தப்படியா குடுக்கும்படியாய் கம்பருக்குக் கட்டளையிட்டது. யிப்பவும் நாங்கள் குடுக்கப்பட்டது,

பண்ணையத்துக்கு யெட்டு வள்ளத் தவிசம் வருச வருசத்தில் குடுக்குரோமென்று யிந்தப்படிக்கு மேற்படி சாமிப் புலவரை யிந்த வாளி வருத்தினைக்கி நாட்டுதலம் நாட்டியிறுக்கிறோம்.

யிந்தப்படிக்கி யெங்கள் வம்முசம் உள்ளவரைக்கும் சந்திறாதித்தர்

உள்ளவரைக்கும் பூமி ஆகாசமுள்ளவரைக்கும் குடுத்து நடந்து வருகிறோம். நான் நம்மிட வம்முசம் உள்ளவரைக்கும் உங்களுக்கு நான் புலவனென்றும் புலமை செலுத்தி வருகிறேன். நீங்கள் யிந்த வருத்தினைக்கி நிந்தினை சொல்லக் கூடாது.

அப்பிடி நிந்தினை சொன்னால் கெங்கைக் கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோசத்திலே போவார்கள். குருவைக் கொன்ற தோசத்திலே போவார்கள். மாதா பிதாவைக் கொன்ற தோசத்திலே போவார்கள். யிதுக்கு விகாதஞ் செய்யாமல் நடப்பிவய்த்த பேர்கள் புத்திர பவுத்திர பாரம்பரியமாய் சுகமே அசுவமேதி யாகம் பெருவார்கள். சிவன்மலை யாண்டவர், சுப்பிரமண்ணியர், சென்னிமலை யாண்டவர், தெண்டாயுதபாணி லச்சிக்கவும். நாட்டுறாயர், நாச்சிமுத்தய்யர், முத்துக்கருப்பணசுவாமியும், செல்லியாயி, சின்னம்மன், மாரியாயி, சரசுபதியம்மன் லச்சிக்கவும் உ.

பளனிக்கவுண்டன் றுசுவு, றாமசாமிக் கவுண்டன் ருசுவு. பழனிக் கவுண்டன் ருசுவு. ஆருமுகக் கவுண்டன் ருசுவு. தர்க்குரி சின்னமல்லக் கவுண்டன் அரிவேன். தர்க்குரி செல்லப்ப கவுண்டன் அரிவேன். நாச்சிமுத்துக் கவுண்டன் ருசுவு. முத்தய கவுண்டன் ருசுவு தர்க்குரி நஞ்சப்பகவுண்டன் அரிவேன். தர்க்குரி கண்டியணக்கவுண்டன் அரிவேன். தர்க்குரி செல்லப்ப கவுண்டர் அரிவேன். தர்க்குரி காளியப்பகவுண்டன் அரிவேன். தர்க்குரி வய்யாபுரிக் கவுண்டன் அரிவேன். தர்க்குரி கருப்பகவுண்டன் அரிவேன். பாலார்பதி தர்க்குரி கண்டியக் கவுண்டர் அரிவேன் தர்க்குரி மலையாக்கவுண்டர் அரிவேன்.

பண்ணையத்துக்கு இத்திணை தவசமென்கிர விபரம் உ.

| | |
|---|---|
| பெரிய கவுண்டரு வள்ளம் | 8 |
| யிதுக்கு தம்பி றாமசாமிக் கவுண்டர் வள்ளம் | 8 |
| மேற்படி தம்பி செம்பாக் கவுண்டர் வள்ளம் | 4 |
| மேற்படி தம்பி சுப்பியக் கவுண்டர் வள்ளம் | 4 |
| மேற்படி தம்பி காளியப்ப கவுண்டர் வள்ளம் | 4 |
| மேற்படி தம்பி நஞ்சப்ப கவுண்டர் வள்ளம் | 4 |
| ஆருமுகக் கவுண்டர் வள்ளம் | 8 |
| மேற்படி தம்பி பழனிக் கவுண்டர் வள்ளம் | 4 |
| மேற்படி ஆயிக் கவுண்டர் வள்ளம் | 4 |
| மாப்பிள்ளை காளியப்ப கவுண்டர் வள்ளம் | 8 |
| மேற்படி தம்பி றாமய கவுண்டர் வள்ளம் | 8 |
| மேற்படி செல்லப்ப கவுண்டர் வள்ளம் | 8 |
| மேற்படி பெரியபழனிக் கவுண்டர் வள்ளம் | 8 |
| வடக்குவழவு றாமயக் கவுண்டர் வள்ளம் | 8 |
| பாலார்பதி கண்டிய கவுண்டர் வள்ளம் | 8 |
| மேற்படி மலையா கவுண்டர் வள்ளம் | 4 |
| நாயக்கனூரு கண்டிய கவுண்டர் வள்ளம் | 4 |
| உள்ளூரு வய்யாபுரிக் கவுண்டர் வள்ளம் | 4 |

| | |
|---|---|
| சின்னப்பளனிக் கவுண்டர் வள்ளம் | 4 |
| மேற்படி முத்துக் கவுண்டர் | 6 |
| கருப்ப கவுண்டர் வள்ளம் | 3 |
| மேற்படி கருப்ப கவுண்டர் வள்ளம் | 2 |
| மேற்படி கருப்ப கவுண்டர் வள்ளம் | 4 |
| தேவண கவுண்டர் வள்ளம் | 4 |
| குப்பாண்டக் கவுண்டன்ஊரு மாரிமுத்துக் கவுண்டர் வள்ளம் | 4 |

# 20. பாசூர்ச் செப்பேடு - 1

திருவானைக்காவல் பாசூர் மடத்தில் மூன்று செப்பேடுகள் உள்ளன. அவற்றுள் ஒன்றான இது மேல்கரைப் பூந்துறை நாட்டில் பேரோட்டில் இருக்கும் ஞான சிவாச்சாரியார் இம்முடி அகிலாண்ட தீட்சிதர் அவர்களுக்குப் பூந்துறைநாடு வெள்ளோடு தென்முகம் கனகபுரம் எலவமலை சாத்தந்தை கோத்திரரான காலிங்கராயர் வழியினர் எழுதிக்கொடுத்த செப்பேடு. இச்செப்பேட்டில் காலிங்கராயர்க்குப் பட்டக்காரர் என்று பட்டம் அளிக்கப்பட்டுள்ளது. காலிங்கராயர் கால்வாய் வெட்டிய செய்தி இப்பட்டயத்தில் குறிக்கப் பெறுகிறது.

கிபி 13 ஆம் நூற்றாண்டில் வீரபாண்டிய மன்னனின் அமைச்சனாகவும், தளபதியாகவும் விளங்கிய காலிங்கராயன் பவானியாறு காவிரியில் கலக்குமிடத்தில் ஒரு அணைகட்டி வாய்க்கால் வெட்டிக் கொடுமுடி ஆவுடையாபாறைவரை நெல்விளையச் செய்தான். அக்காலிங்கராயனின் முன்னோர்கள் பூந்துறை நாட்டில் வாழ்ந்து அதிகாரம் செலுத்தி குருக்கள் மானியமும் கொடுத்துச் சஞ்சாரக் காணிக்கையும் தலைக்கட்டு வரியும் கொடுத்து வந்தார்கள். இப்போது ஊத்துக்குழிச் சீமையில் காணிவாங்கி அதிகாரம் செலுத்துகின்றனர். ஊத்துக் குளிப்பகுதியில் இருக்கும் அவர்கள் எல்லாம் அறிய இச்சாசனம் எழுதித் தரப்பட்டுள்ளது.

காலிங்கராயர் மரபினர் உடல் உயிர் பொருள் மூன்றையும் குருவுக்குத் தத்தம்பண்ணி தலைக்கட்டுக்கு ஆண்டுதோறும் நாகரம் பணம் நான்கு கொடுத்து வந்தனர். குரு சுவாமியாரின் வழிபடு கடவுளான மீனாட்சி சுந்தரேசுவரர்க்குப் பிரதோஷம் கட்டளை நடத்தவும் ஆண்டுக்கு 36 பொன் கொடுத்து வந்தனர்.

ஊத்துக்குழி காலிங்கராயக் கவுண்டர் சம்மதியில் பவானிகூடல் அருணாசலாசாரி மகன் சொக்கலிங்காசாரி இச்செப்பேட்டை எழுதியுள்ளார்.

## மூலம்

ஸ்வஸ்திஸ்ரீ விஜயாப்த்புதய சாலீவாஹந சகாப்தம் 1253 கலியப்தம் 4432 யிதுமேல் செல்லாநின்ற ப்ரஜோத்பத்தி வருஷம் உத்தராயணமும் வ்ருஷப மாசமும் சுக்ல பக்ஷமும் பிரதிமையும் குரு வாரமும் ரேவதி நக்ஷத்ரமும் சுபநாமயோகமும் கௌலவாகரணமும் பெத்த சுபதினத்தில் ஸ்ரீராஜாதிராஜ ராஜபரமேஸ்வர ராஜ

மாத்தாண்ட உத்தண்டராஜ தேவாண்டராஜ பிரதாப வீரப்பிரதாப நரபதி மயிசூரு கிருஷ்ணராஜ உடையாறய்யறவர்கள் ஸ்ரீரத்ன சிங்காஜநரூடராய் ப்ருதிவி ஸாம்ராஜ்யம் அருளாநின்ற காலத்தில் மயிசூருக்குச் சேந்த கொங்கு தேசம் மேல்கறைப் பூந்துறை நாட்டுக்குச் சேந்த பேரோட்டுக்கு பிரதிநாமதேயமான விருப்பாக்ஷிபுரத்திலேயிருக்கும் ஸத்யோஜாத ஞானசிவாசாரியாற் யிம்முடி அகிலாண்ட தீக்ஷித ஸ்வாமியாறவற்கள் பாத சன்னிதானத்துக்கு பூந்துறை நாட்டுக்குச் சேந்த வெள்ளோடு தென்முகம் கனகபுறம் யெலவமலை சாத்தந்தை கோத்திரமான குரு கடாக்ஷத்துனாலேயும் வேதநாயகியம்மன் வறபிறசாதத்துனாலேயும் வாணியை அணையாயிக் கட்டி கொங்கு தேசம் பூந்துறை னாட்டில் சென்னெல் வைத்தவறான பட்டக்காற யிம்முடி காலிங்கறாயக் கவுண்டறவற்கள் குருசுவாமியார் பாதத்துக்கு எழுதிக் குடுத்த தாம்பற சாசனம்.

னான் மகா மந்திர உபதேசம் பண்ணிக்கும்போது குருசுவாமியார் அப்பணையானது. உங்கள் வமுசத்தாற் பெரியோருகள் பூந்துறை னாட்டுலே அதிகாறம் செலுத்தி அணையும் கட்டி நமக்கு குருக்க மானியமும் குடுத்து சஞ்சாற காணிக்கையும் தலைக்கட்டு வரியும் குடுத்து வந்தாற்கள். யிப்போ ஊத்துகுழி சீமையிலே ஓங்கள் பெயரற்கள் காணி வாங்கி அதிகாறம் செலுத்தறபடியினாலே பெகு சமூகம் நமக்கு ஞாபகம் யிருக்கும்படிக்கி சாசனம் எழுதி குடுக்கச் சொல்லி சுவாமி சன்னிதானத்திலே அப்பணையானபடிக்கி குரு சுவாமியாற் பாதத்துக்கு ஓடல் உயிற் பொருள் மூன்றும் தெத்தம்பண்ணி எழுதிக் குடுத்த தாம்பற சாசனம். சாசனமாவது. யெங்கள் வமுசத்தாற் புத்திற பவுத்திற பாறம்பரியமாயி பாதசன்னிதானத்திலே தீட்சை மகாமந்திற உபதேசம் பண்ணிக்கொண்டு வறுஷம் பிரதி தலைக்கட்டுக் காணிக்கை னாகறம் பணம் னாலு குடுத்து சஞ்சாறம் வந்தபோது சஞ்சாறக் காணிக்கையும் குடுத்துவறுவேனாகவும். ஆதீனத்து சிவபூசை மீனாட்சி சுந்தறேசுவற சுவாமிக்கு பிறதோஷக் கட்டளை நடப்பிவிக்கும்படிக்கி சன்னிதானத்திலே அப்பணையானபடிக்கி நடப்பிவிக்குறது. அபிஷேகம் நெவேத்தியம் வில்லுவாற்ச்சனை சகிதம் பிறதோஷம் ஒண்ணுக்கு பணம் பதினஞ்சு மேறைக்கி வறுஷம் ஒன்னுக்கு பொன் 36 பிரதோஷக் கட்டளை சாசுவதமாயி நடப்பிவிக்குறபடிக்கி னாங்கள் யெந்த னாட்டிலே யெந்த தேசத்துலே யென் வமுசத்தாற் காணி வாங்கி அதிகாறம் பண்ணி பட்டம் செலுத்தினாலும் யிந்தப்படிக்கி வறுஷம் பிரதி நடத்திவறுவோமாகவும். சுவாமியாரிட்ட தெண்டனை கண்டனை ஆக்கிணை அபறாதத்துக்கு உள்ப்பட்டு நடந்து வறுவோமாகவும்.

யிப்படிக்கி நடந்துவருங்காலத்தில் யென் வமுசத்தாற் யிதுக்கு விகாதம் சொல்லாமல் சன்னிதானத்துக்கு பயபக்தியாயி நடத்திவைத்தவன் சுகமாயி சனசம்பத்தும் தான்னிய சம்பத்தும் அஷ்டைஸ்வர்யமும் ஆயுறாறோக்கியமும் தேவ பிரஸாதமும் குரு பிரஸாதமும் மேன்மேலும் உண்டாயி கல்லு காவேரி புல்லு பூமி ஆசந்திறார்க்க உள்ளவறைக்கும் பாடகவல்லி சறுவலிங்கமூர்த்தி அகத்தூறம்மன் கடாக்ஷத்துனாலே சுகமாயி யிறுப்பாற்கள். யிந்த சாசனம் பாத்து படித்த பேறும் செவியில் கேட்ட பேறும் சுகமாயி யிறுப்பாற்கள். யிதுக்கு விகாதம் சொல்லி குரு நிந்தனை சொன்னவன் கெங்கைக் கறையிலே காறாம் பசுவயும் பிறாமணாளையும் மாதா பிதாவையும் கொண்ண தோஷத்துலே போவாறாகவும். யிந்தப்படிக்கி பவாநி

வேதநாயகி சங்கமேஸ்வர சுவாமி சன்னிதானத்துலே ஸஹிரண்யோதக தாராபூறுவமாயி யெழுதிக் குடுத்த தாம்பற சாசனம். வேதநாயகி ஸமேதர சங்கமேசுவர ஸ்வாமி ஸஹாயம். மீநாக்ஷி ஸௌந்தரேஸ்வர் ஸ்வாமி ஸஹாயம். அகத்தூறம்மன் துணை.

தாநபாலந யோர்மத்யே தாநா ஸ்ரயோநு பாலநம் தாநாத் ஸ்வர்க்க மவாப்நோ திபாலநாத் அச்சுதம் பதம்: ஸ்வதத் தாத்வி குணம் புண்யம் பரதத்தாநு பாலநம் பரத்தாப ஹாரோண ஸ்வதத்தாம் நிஷ்பலம் பவேது: ஊத்துக்குழி காலிங்கறாயச் கவுண்டற். யிவற் சம்மதியில் யிந்தச் சாசனம் எழுதினவன் பவாநி கூடல் அருணாசலாசாரி மகன் சொக்கலிங்காசாரி கய்யெழுத்து உ.

# 21. காலிங்கராயன் அணைப் பட்டயம்

இப்பட்டயத்தின் முற்பகுதி எழுமாத்தூர் வேலம்பாளையம் புலவர் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் தொகுப்பிலும்*, பிற்பகுதி தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையிலும் உள்ளன.+

மேல்கரைப் பூந்துறை நாட்டு வெள்ளோடு கிராமம் கனகபுரம் நஞ்சையன் மகன் லிங்கையன் பவானியாற்றில் கூடுதுறை அருகே அணைகட்ட இடம் பார்த்தபோது வெள்ளை வேட்டுவர் அந்த இடம் தன்னுடையது என்று எதிர்த்தான். வேளாளக் கவுண்டர்கள் பலர்கூடி எடுத்துச் சொல்லியும் வெள்ளை வேட்டுவர் கேட்கவில்லை.

காலிங்கராயனை ஆனைமலைக்கு அனுப்பி வைத்துவிட்டு எண்ணமங்கலம் காளியண்ணன் மதுரைப் பாண்டிய மன்னனிடம் சென்று படைபெற்றுவந்து கவுண்டர்கள் ஆலோசனையின்படி வெள்ளை வேட்டுவரை எண்ணமங்கலம் காளியண்ணன் வெற்றி பெறுகிறார். காளியண்ணன் சாதிப்பட்டம் கேட்டபோது பொங்கலூர் நாட்டுத் தெய்வசிகாமணி தனக்கே பட்டம் சேரவேண்டும் என்று போட்டியாகக் கேட்டான்.

ஈரோடு கொங்கிலம்மன் கோயிலில் சீட்டுக் கேட்டதில் எண்ணமங்கலம் காளியண்ணன் பெயருக்குச் சீட்டு வருகிறது. (பின்னர்க் காலிங்கராயனால் பவானியாற்றில் அணையும் கால்வாயும் வெட்டப்பட்டிருக்கவேண்டும்).

எண்ணமங்கலம் காளியண்ணனுக்குச் சாதிப்பட்டம் கொடுத்து எந்தெந்தச் சாதியார் எவ்வளவு வரி கொடுக்க வேண்டும் என்று விரிவாகக் கூறப்படுகிறது. குயவன், குறவன், வலையன், மறவன், பறையன், சக்கிலி ஆகியோருக்கு வரி இல்லை என்ற விவரமும் கூறப்படுகிறது.

---

* இதன் ஒருபகுதி 1975 ஆம் ஆண்டு ஆறாம் இதழ் தேனோலையில் வெளியிடப்பட்டுள்ளது.

+ தமிழ்ச்சுவடி' விளக்க அட்டவணை, தொகுதி 4, எண் 1294, பக். 141. (தென்கரைநாட்டுப் பட்டயம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது.)

காலிங்கராயன் பணிகட்கு, எண்ணமங்கலம் காளியண்ணன் உதவி செய்திருக்க வேண்டும். வேட்டுவரை வெல்வதிலும், அணைகட்டிக் கால்வாய் வெட்டுவதிலும் காளியண்ணன் முன்னின்றிருக்கலாம். பட்டயத்தில் செய்திகள் விளக்கமாக இல்லை. இடையில் சில பகுதிகள் விடுபட்டிருக்கவேண்டும்.

## மூலம்

ஸ்ரீமது சுபநமஸது ஸ்ரீமன் மகாமண்டலீசுவரன் பாசைக்கி தப்புவராத் கண்டன் ஆரியதள விபாடன் ஆரியமோகந் தவிழ்த்தான் துலுக்கர்தள விபர்டன் துலுக்கர்மோகந் தவிழ்த்தான் தொட்டியதள விபாடன் தொட்டியமோகந் தவிழ்த்தான் ஒட்டியதள விபாடன் ஒட்டியமோகந் தவிழ்த்தான் பலநாவுக் குறைவராத கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாத கண்டன் வினவிசை கனவிசை ஈழமும் ஆழமும் ஓரப்பான பட்டணமும் ரதபதி கெசபதி அசுவபதி நரபதி நால்வகைப் படையோடுங்கூடி கெசவேட்டை கொண்டருளிய ராசாதிராசன் ராசமார்த்தாண்டன் ராசகுலதிலகன் ராசகெம்பீரன் நாடாளு நாயகன் நாடகுலதுங்கன் பூலோகதேவேந்திரன் ஆரண்முறையார் ஆறிலொன்று கடமை கொண்டு ஆடுங்கடைமணி நாவசையாமல் அரசாளும் கரிகால் சோழன் மகாராசாவய்யரவர்கள் யகமகிழ்ந்து கொடுக்கும் மக்கள்முறையும் தரிப்பான நன்மையும் பொருந்தியிருந்தி யிருந்தபடியினாலே பொன்னூஞ்சலும் பூந்தேரும் பூச்சக்கரக் குடையும் பெற்றருளிய கங்காகுலதிலகன் காராள சிரோமணி மேழிக் கொடியோன் மின்குவளை மாலிகைமார்பன் நாற்பத்தி யெண்ணாயிரம் கோத்திரத்துக்கும் முதன்மையாயிருக்கும் கொங்கு தேசத்துக்குச் சேர்ந்த தென்கரைநாட்டு செட்டி வேணாவுடையான், நரையநாடு காசிப கோத்திரம் பிராமணபிள்ளை பொங்கலூரு தெய்வசிகாமணி, பூந்துறைநாடு வாரணவாசி, வெள்ளோட்டுக் கனகபுரம் நஞ்சையன், ஆருநாட்டு மசக்காளி வேலணன், குருப்பைநாட்டு ரகுநாதணன், ஒடுவெங்கநாடு முத்து வேலப்பன் நல்லுருக்காநாடு வாணவராயன். வாரக்கநாடு பொங்கணன், காவுலுக்காநாடு உடையணன் எங்களைப் பத்துப் பேரையும் காங்கய நாட்டுச் சரவண காங்கேயன் பார்த்துச் சொன்ன வசனம்.

கனகபுரத்து நஞ்சையன் மகன் லிங்கையன் வாணியாற்றில் அணைகட்ட வேணுமென்று நம்மையுந் தாவுதுறை பார்த்துவரச் சொல்ல வேணுமென்று யீரோட்டுக்கு யெங்களை அழைத்துக்கொண்டு போய் வாணியில் தாவுதுறை அணைகட்டுகிறதற்குப் பார்த்த இடத்தில் வெள்ளோட்டிலிருக்கும் வெள்ள வேட்டுவன் பாளையக்காரன் யென்னுடைய எல்லையிலே தாவுதுறை பார்க்கிறதென்ன அணை கட்டுகிறோமென்று பேசுகிறதென்ன நீங்கள் அணைகட்ட வேண்டாமென்று பிலத்துடனே மறித்தான்.

அதன் பிறகு நாங்கள் பத்துப் பேரும் ஈரோட்டுக்கு வந்து அதுக்குத் தக்கின சோமாசிகளை அனுப்பிவிச்சு வெகு பிரீதியுடனே சொல்லக் கேளாதபடியினாலே இவனுடைய கெருவத்தையடக்கி அந்தத் தாவில் அணை கட்டாமல் விட்டுப்

போறதில்லையென்று பிரதிக்கிணை செய்து அவையஸ்தங் குடுத்து ரண்டு மூணு மாசவரைக்கும் அவனுடனே சண்டை செய்து யெங்களினாலே செயிக்க மாட்டாமல் எழச்சுப் போயிருக்கும் வேளையிலே எண்ணைமங்கலம் பதியிலேயிருக்கும் காளியண்ணன் மதுரைக்குப்போய் சமஸ்தானம் ஆளப்பட்ட உக்கிரகுமாரராசா சமூகத்துக்குப் போயி வெகுமதியும் கட்டக்கயிரும் வெட்டவாளும் துஷ்ட சம்மாரமும் சிஷ்ட பரிபாலனமும் செய்து கொண்டு யிருக்கச் சொல்லி வரப்பிரசாதம் வாங்கிக்கொண்டு ஆனைமலைநாட்டு பாளையப்பட்டு செங்கோல் செலுத்திக் கொண்டு இருக்கிற நாளையிலே நாங்கள் பத்துப்பேருங் கூடி காலிங்கராயனை ஆனைமலைக்கு அனுப்பிவிட்டு காளியணனை யீரோட்டுக்கு வரவழைத்து வெள்ளவேட்டுவன் விருத்தாந்தமெல்லாம் வழிவிபரமாய்ச் சொல்லி அவனைச் செயம்பண்ணி அந்த ஆற்றில் அணை கட்டுகிற படிக்குச் செயிச்சுக் கொடுக்கவேணுமென்று மெத்தவும் பத்துப் பேருங் கூடி வெகுவிதத்திலே கேட்டுக்கொண்டதுனர்லே நல்லது என்று சம்மதிச்சு அந்த வெள்ள வேட்டுவன் யிருக்கும் வெள்ளோட்டுக்கு ஓருரவு கொண்டு போயி அவன் ஊடையத்தையும் தகற்த்தி ஊரெயும் கொள்ளைபண்ணி சிருது றாணுவங்களெயும் வெட்டி அவன்தலையும் வெட்டி கொண்டுவந்து யெல்லோருங் காணத்தக்கதாயி வயித்த படினாலே நாங்கள் இருபத்து நாலு நாட்டாருங் கூடி செட்டி வற்த்தகற்கள் பல பட்டரைச் சாதிகளெயும் வறவளித்து நம்ம சனங்கள் மேற்கே நல்லூரிக்கிநாடு, ஆனைமலைநாடு, காவிலிக்கநாடு, வாறக்கநாடு, ஆறுநாடு, குறுப்பநாடு, ஓடுவெங்க நாடு இந்த யேளு நாட்டிலேயும் சீவாற்தனம் செய்ய வேண்டிய நிமித்தயமாக பறந்து போயிருக்கும் சனங்கள் அந்தந்த 'சாதிகளுக்குண்டான வறமுறைமை தப்பி நடக்குறதாக சேதி கேள்விப்பட்டுது.

அப்படி வறமுறைமை நடவாமல் நாயம் நடத்தை மற்ற குற்றம் வுருமை பெருமை தாய்தகப்பனுக்கு அமுது படையாதவன், புருஷன் பெண்சாதியெ முடிக்கி விட்டவன், | பெண்சாதியானவள் புருஷன் வார்த்தைக்கி யேறுமாறு பேசினவள், ஒருத்தரு கொருத்தற் மித்துரு பேதகம் செய்குறபேற்கள். இப்படி நாலாவிதமாயி முறைமை தப்பி நடவாமல் தற்மம் நீதமாயி நடக்குறபடிக்கி இருபத்துநாலு நாட்டாருங் கூடி செட்டி வற்த்தனற்களும் பலபட்டரைசாதிக்கும் சம்மதிச்சு காளியணனுக்கு சாதி பட்டயம் நேமுகம் செயிது குடுக்கவேனுமென்று சகலமான செனங்களும் அனவறுங் கூடி ஈரோட்டு கொங்கிலியம்மன் சன்னதிக்கி போயி அம்மனுக்கு பதினாயிறம் பளம் நெபேதினம் செயித பின்ம்பு காளியணனுக்கு சாதினபட்டயங் குடுத்தபோது பொங்குலூரு நாட்டு தெயிவசிகாமணி வந்து யிந்த பட்டம் யெனக்கு சேறவேணுமென்று மரித்து சொன்னான்.

நல்லது யென்று தாறாபுரம் பிறமியணன் சொல்லும் வசனம். வுங்கள் ரெண்டு பேற் படிக்கி திருவிளச் சீட்டெழுதி அம்மன் பாதத்திலே வைத்து ரெண்டு பேரையும் பார்த்துச் சுனையிலே ஸ்தானம் செயிது அம்மனை பிறதஷ்ஷனம் வலமாயி வந்து தெய்வசிகாமணி நான் முன்னமே யெடுப்பேனென்று சமத்துச் கூரினான். சறவண காங்கயன் சொல்லும் வசனம். நீ போயி வுன்பேற் படிக்கி இருந்த சீட்டு வுன் கையிக்கி வந்தால் வுனக்கே நேமுகம் செயிது முடிக்குரோமென்று சொன்னார்க்ள். அப்போ கோவிலுக்குள்ளே அடியெடுத்து வயிக்கவும் அம்மன்

மடிப் பிடவையில் இருந்து ஒரு நீற்ச்சற்ப்பம் வடவாமுகாக்கினி போலும் சீரி கோவித்து யெளுந்தது கண்டு பயந்து நடுநடிங்கி பிறண்டுருண்டு பின்னிட்டு வந்து சோபந்தட்டி மயங்கி விளுந்தவனெ காளியணன் யெடுத்து மாற்போடே அணைத்து நெஞ்செ தட்டி அம்மனைத் தியானிச்சி தண்ணீரெ முகத்துக் கெறச்சி பயத்தை தீற்து அவன் மனசெ தகிறியம் பண்ணினான்.

அதின் பிற்ப்பாடு பத்துபேறுங்கூடி காளியணனெஉன் பேறுபடிக்கி சீட்டெ யெடுத்துவறச் சொன்னார்கள். அதின் பிறகு சுனையிலே ஸ்தானம் செயிது அம்மனை வலப்பிறதஷ்ஷனமாயி சுத்திவந்து கோவிலுக்குள்ளே பூதவும் நாக சற்ப்பம் கோபமாறி மாயமாயி போயிவிட்டுது. அதின் பிறகு அம்மன் பாதத்திலேயிருந்த திருவிளச் சீட்டெடுத்துவந்து பத்துபேருங் காணத்தக்கதாக சபையிலே வயித்தான். பத்துபேறும் சீட்டெ பார்த்து வுன் பேற்படிக்கி சீட்டு இருந்துதுயென்று அனவறுங்கூடி சொன்னார்கள். யெண்ணைமங்கலத்திலே யிறுக்கும் ஆனைமலை காளியணனுக்கு சாதி பட்டயம் குடுத்து பாகு பச்சடமும், ரெட்டபடி பாக்கு வெத்திலையும், குதிரை, குடை, தீவட்டியும், ஒத்தைக் கொம்பும், ஒத்தை துடுமமும், தப்பட்டை, கட்டகயரும், வெட்டவாளும், அடிக்க ஆத்தி யாக்கையும், அஷ்ட்டாவுதாரமும், வேண்டிய விருதுகளும், அளியாத தறும்மமும் சிலாசாதன பட்டயமும் அமுந்துது.

கலியுக சகார்த்தம் பிறமாதி வருஷம் கோவுணாண்டி வமுசத்துக்கு பெரியதனம் நல்லுரிக்கி நாட்டுக்கு பளனியாண்டிகோவில் குறுஞ்சேரியம்மன், குறுப்பு நாட்டுக்கு குமறாண்டி விசையமங்கலம் விசையாபுரியம்மன், ஆறுநாடு பெறுமாநூரு கொண்டத்துக்காளி, வாறக்க நாடு பொயிங்கறாண்டிகோவில் பொயிங்காளியம்மன், ஆனைமலை நாடு நல்லாண்டி தெக்குலூரம்மன், காவிலிக்க நாடு உடையாண்டி காப்பாடியம்மன், ஆறுநாடு கோனியாண்டி சோளியம்மன், வொடுவெங்க நாடு காளியாண்டிகோவில் வஞ்சியம்மன் மயிலாப்பூரில் கோவிள வயற்றில் பிறந்தபடினாலே ஆருகட்டி பின்குடுமெ பூணூலு சித்தானந்தமாக 1700 வருஷம் மாயச்சொடுங் கூடியிருந்த நன்மை திண்மைக்கி தள்ளின பேற்களே கொங்குலம்மன் விசாறிப்பாள். சித்திரை மாதம் 1 தேதி வெள்ளிக் கிளமை நவமியும் பொருந்தின சுபதினத்தில் பிறந்த கலியுகம் ஆண்டவார் பரிச்சித்து றாசன் 300 வருஷம், செனமீசுறாசன் 300 வருஷம், நறேந்திறறாசன் 298 வருஷம், சாறங்கறாசன் 51 வருஷம், சத்திரியன் விக்கிறமாதித்தன் பட்டி அதிகாரமானது 1296 வருஷம் மேல் செல்லாநின்ற விசுவ வருஷம் பங்குனி மாதம் 22 தேதி சுக்குறவாறமும் திசமியும் திருவோண நட்சத்திரமும் துலா லக்கினமும் பொரிந்தின சுபதினத்தில் சாதி பட்டயமும் யெளுதிவச்சு அந்த பட்டயத்துக்கு வும்பளிக்கை சறுவமானியமாய் நடந்து வரும்படிக்கி அறுமுளை நல்லூரு இங்குற கிறாமமும் யென்றைன்றைக்கும் நடக்குறபடிக்கி கல்வெட்டு போடுவச்சு குடுத்து ஆள்சிலவுக்கு காறக்காட்டு வேளாளர், சேறகுல வேளாளர், சோளிய வேளாளர், தென்திசை வேளாளர், பறமுத்தி வேளாளர், நறம்பு வேளாளர், படைத்தலை வேளாளர், பாலை வேளாளர், தொளுக வேளாளர், பள்ளி வேளாளர், உடும்பரை வேளாளர், மலைகண்ட வேளாளர், கங்கா பவானிக்கு அடுமை பட்டு கெங்கடி வேளாளர், குடி வுக்கிலியற். ரெட்டி வேளாளர், பச்சை மலையாளன், பவள மலையாளன்,

கொடிகால் வேளாளர், சயின வேளாளர் இந்த வகை வேளாளர் யேற்கட்டி குடித்தினம் செய்யும் குடியானவர்களுக்கு அன்றாடகம் சீற்மையிலே வெளங்கத்தக்கின பணம் ஞமது ஏறுக்கு ஒரு பணம், குதிரைக்கு ஒரு வள்ள கொள்ளும் குடுத்து அட்டி செய்யாமல் குடுத்து வரவுன்.

வேளாஞ் செட்டி, கொங்க செட்டி, நகற செட்டி, பனிரண்டாஞ் செட்டி, மூத்தாரு செட்டி, கன்னடிய செட்டி, தெலுங்க செட்டி, கவறை செட்டி இவர்களுக்கு தலைக்கட்டுக்கு வருஷத்துக்கு ஒரு பணமும் அட்டியில்லாமல் குடுத்துவரவும். அகம்படியாற் கலியாணத்துக்கு மாப்பிள்ளை வீட்டுக்கு மூணு பணமும், 300 பாக்கு 300 வெத்திலையும், மூணு சீப்புப் பளமும், ஒரு தேங்காயும், பெண் வீட்டுக்கு யிந்தப்படி குடுத்து வரவும். செங்குந்தை கோத்திரத்தில் கைய்க்கோளநாற், தேவாங்கு யிவர்கள் மக்கத்துக்கு வருஷத்துக்கு ஒரு பணமும் குடுத்துவரவும். கண்ணாளற் அய்வறும் வருஷத்துக்கு · தலைக்கட்டுக்கு ஒரு பணமும் குடுத்து வரவும். வாணியற் மூவற் தலைக்கட்டுக்கு தீவட்டிக்கு எண்ணை வருஷத்தில் ஒரு பணம் குடுத்து வரவும். பாலிடையற் தலைக்கட்டுக்கு ஒரு பணம் குடுத்து வரவும். பாக்கு நாட்டாண்டி, வுகச்சாண்டி, கோவணாண்டி இவர்கள் வருஷத்துக்கு தலைக்கட்டுக்கு ஒரு பணம் குடுத்து வரவும். சாணான் பொட்டிக்கி வறுசத்தில் ஒறு பணங் குடுத்து வறவும். உப்பிலியன் காவிலிக்கு வறுசத்தில் ஒறு பணங் குடுத்து வரவும். நாவிதன் அடப்பத்துக்கு வறுசத்தில் ஒறு பணங்குடுத்து வறவும். வண்ணான் உப்பைக்கு வறுசத்தில் ஒறு பணங் குடுத்து வறவும். சவளக்காறன், செம்படவன், வன்னியன், சிவியான், வேதன், பள்ளன் யிவற்கள் தலைகட்டுக்கு வறுசத்தில் ஒறு பணங் குடுத்து வறவும். ஒட்டற் தலைகட்டுக்கு வறுசத்தில் ஒறு பணங் குடுத்து வறவும்.

கொசவன், குறவன், மறவன், வலையன், பறயன், சக்கிலியன் இவர்களுக்கு வரியில்லாமல் விடுவிச்சு பட்டக்காறறுக்கு ஏவின வூளியம் செயிது கொண்டு வரவும். படிக்காறப் புலவற்கள் காறாள மாணிக்கி. முடவாண்டி, குறுப்பாண்டி இவர்களுக்கு செல்ல வேண்டிய வறுத்தினை பட்டக்காரன் வீட்டுக்கு மானியமாயி நிறுத்திக் குடுத்துயிருக்குரோம். மணவரி, வெட்டி, சுங்கம்மில்லாமல் அறமனை அமிஞ்சி நிறுத்தியிருக்குரோம். வருஷம் பிறதியில் நாட்டுபுறங்களுலே போயி வரன்முரைமை தவறாமல் விசாரிச்சு பட்டக் காணிக்கையும் வாங்கி அனுப்பிவிச்சுக்கொண்டு சுகத்துலே யிருக்கவும்.

புத்திற பாறம்பரிக்கையாக சந்திறாதித்தர் கல்லுங் காவேறியும் பூமியுள்ளவரைக்கும் அழியாத சிலாசாசனப் பட்டயம் எளுதி கொங்குலம்மன் பாதத்தில் வச்சு பூசை நெமித்தியம் செயிது நமஸ்காறம் செயிது அம்மன் பாதத்திலேயிருக்கும் பட்டயத்தை சறவணை காங்கேயனும் செட்டி வேணு உடையானும்ப் பிறமியனும் வாறணவாசியும் இவர்கள் அம்மன் பாதத்திலிருந்த பட்டயத்தை யெடுத்து நாடுவூரு சகலமான செனங்களும் அனவறும் அரியத் தக்கதாக மண்டல மதிக்க கொண்டருளிய மகாசந்தோஷத்துடனே எண்ணை மங்கலத்துலேயிருக்கும் யெண்ணை குலாதிபன் சங்குமணன் ஆனைமலை காளியணன் கையில் அம்மன் சாதன பட்டயங் குடுத்து இந்த பட்டயத்தை யாதாமொருவற் யெகச்சி சொன்னவர்கள் அவனுடைய வம்முஷம் காசியிலே

கெங்கைக் கரையிலே காராம் பசுவை கொன்ற பாவத்துலே போவாநென்று இந்தப் படிக்கி கொங்குலம்மன் சாட்சியாக சகல செனங்களும் சம்மதியாகி பட்டையம் யெளுதினவன் செம்பகுல ஆசாறி.

சறவணை காங்கயன் ஒப்பிதம் செட்டி வேணுஉடையான் ஒப்பிதம் வாரணவாசி ஒப்பிதம். பிறமியணன் ஒப்பிதம். றகுநாதன் ஒப்பிதம். முத்துவேலப்பன் ஒப்பிதம். வாணவறாயன் ஒப்பிதம். தாறாபுரத்திலேயிருக்கும் தேவாங்கு வகையில் பெரியதனம் சாந்திச்செட்டி ஒப்பிதம். சென்னிமலைசெட்டி ஒப்பிதம். திருவத்துரை சத்த ரிஷியாப்பிள்ளை ஒப்பிதம். பாலுடையாங் கோத்திரம் மாறசோளிய வேழாமூர் றாவுத்தப்பெருமாள் ஒப்பிதம். பாண்டிய வேளாளற் பெரியதினம் குப்பனாதன் ஒப்பிதம். கெங்கடி வேளாள பெரியதினம் உச்சணன் ஒப்பிதம். குடி வொக்கிலி வேளாளர் பெரியதினம் வெள்ளிரிங்கன் ஒப்பிதம். குறும்பற் வகையில் சோளி பெரியதினம் மல்லணன் ஒப்பிதம். கம்பளத்து பெரியதினம் பறஞ்சோதி நாகநாயக்கன் ஒப்பிதம். அய்ந்து பட்டணத்துலேயிருக்கும் குருகுல வம்ஷத்துக்கு பெரியதினம் சந்திரகோப்பணன் ஒப்பிதம். நெளவி பெரியதினம் உப்பிலியர் வகையில் மொட்டைநாயக்கன் ஒப்பிதம். அகம்படியார் வகையில் பெரியதினம் தாறாபுரம் கையிலாசமுகந்தன் ஒப்பிதம். மருதண்ணன் முகந்தன் வொப்பிதம். கன்னார் வகையில் பெரியதினம் குண்டு வேலப்பன் வேலப்பசெட்டி ஒப்பிதம். கொங்கைசெட்டி வகையில் நடைகொண்ட நாறாயண செட்டி ஒப்பிதம். சேவூறு சாணாறுக்கு பெரியதினம் கோப்ப மூப்பன் ஒப்பிதம். ஒட்டருக்கு பெரியதினம் அளகிரி ஒப்பிதம். சென்னப்பட்டணம் கெம்ப பட்டையாறுக்கு பெரியதினம் மாரணன் ஒப்பிதம். வலங்கைக்கி பெரியதினம் தேசத்து கஞ்சம்செட்டி ஒப்பிதம். தெலுங்கசெட்டி வகையில் பெரியதினம் கொண்டிசெட்டி ஒப்பிதம். கன்னடியருக்கு பெரியதினம் வீராணசெட்டி ஒப்பிதம்.

யிந்த பட்டயம் சீறணமாயி போனால் இதுக்கு பதில் கீரனூறிலே கண்டியம்மன் கோவில் கெறுப்பகிரி மண்டபத்தில் கீள்பாற்சத்திலே யெளுதி இருக்கும் பாற்து கொள்ளவும். அதுவும் சீறணமாயி போனால் அறுமுளநல்லூரிலே தேனீசுர கோவிலு கெற்ப்பகிரி மண்டபத்துக்கும் கீள் பாற்சத்தில் குமந்த வரியிலே பாத்து கொள்ளவும். அதுவும் சீறணமாய் போனால் மதுரை மீனாட்சியம்மன் நிலவரை மண்டபத்துக்கு தென்பாறிசத்தில் கல்த்தூணில் யெளுதியிருக்கும் பாற்த்து கொள்ளவும். கூடிய சனங்களையும் கொங்குலம்மன் றஷ்ஷிக்கவும். பாக்கு நாடாண்டிக்கி பெரியதினம் செங்கோட பண்டாரம் ஒப்பிதம். பட்டயத்தில் வந்த காணிக்கை ஆதாயம் தென்கரை நாடு வேணுஉடையானுக்கு ஆனைமலை காளியண்ணனுக்கு மூணுலே ஒரு பங்கு குடுக்கவும் உ

# 22. தென்கரைநாட்டுப் பட்டயம்

தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையில் இப்பட்டயம் உள்ளது. தாராபுரம் வட்டம் புதுப்பைப் புலவர் வீட்டிலிருந்து பெற்ற சுவடிகளில் இதுவும் ஒன்று*.

சோழ நாட்டிலிருந்து முடிமுடி அவிநாசி வேணாவுடையார், மாந்தியப்பத் தொண்டைமான், அச்சுதத் தொண்டைமான் என்று பட்டம் பெற்றுக் கொங்கு நாட்டுக்கு வேளாளப் பெருமக்கள் குடியேறினர்.

தென்கரை நாட்டில் வேணாவுடையார் மரபினர் பெரியண்ண வேணாவுடையார் என்று பட்டம் பெற்று வாழ்ந்து வந்தனர். அரசர் அச்சுதராயர் மகன் இரண்டு கிடாய்களைக் கட்டிச் சாரட்டு வண்டி ஓட்டி வரும்போது காடை குலம், பூசகுலம், சேரிலான் குலம் ஆகிய குலவேளாளர்கள் படையுடன் எதிர்த்தனர். அச்சுதராயர் இவர்களைப் பிடித்துப் பன்னிரண்டு வருடம் சிறையிலிட்டார்.

பூச குலத்தான் மட்டும் (தொண்டைமான்) எங்களைச் சிறையில் அடைக்கவேண்டிய காரியம் என்னவென்று அரசரைக் கேட்டான். பின் இராயர் மகனையும் கிடாயையும் காதறுத்தான். அரசனும் பூச குலத்தானை மெச்சி வாதரு (பகதூர்_ பாதரு) என்ற பட்டம் கொடுத்தான். எனவே அச்சுதராயர் பெயரால் தொண்டைமான் அச்சுதத் தொண்டைமான் எனப்பட்டார்.

பின்னர் அச்சுதத் தொண்டைமான் மதுரை சென்று பாண்டியன் ஆதரவில் இருந்தார். தொண்டைமான் வேணாவுடையாருடனும், அரசு அதிகாரி வீரப்ப ராயருடனும் சேர்ந்து அமராவதியில் அணை கட்ட முயலுகிறார். வேறு சிலர் எதிர்க்கின்றனர். இரு சாராரும் மதுரை சென்று மீனாட்சியம்மனிடம் சீட்டுப் பெற்றுத் தொண்டைமான் வேணாவுடையான் வகையினர் அணை கட்ட அனுமதி பெற்றனர். பட்டயத்தின் இறுதிப்பகுதி கிடைக்கவில்லை.

---

* தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொகுதி 4, எண் 1294, பக்.141.

## மூலம்

சுபநமஷ்த்துஸ்ரீ மகாமண்டலீசுபரன் பாசைக்கி தப்புவறாத கண்டன் ஆரியதழ விபாடன் துலுக்கர்மோகந் தவிள்த்தான் ஒட்டியமோகந் தவிள்த்தான் பலனாவுக் குரைவராத மன்னன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாத கண்டன் வினவிசை கனவிசை யீழமும் ஒரப்பான பட்டணமும் ரதபதி கெசபதி அசுபதி நரபதி நால்வகைப் படையோடுங் கூடி கெசவேட்டை கொண்டருளிய றாசாதிறாசன் றாசமார்த்தாண்டன் றாசகுலதிலகன் றாசகெம்பீரன் நாடாளுநாயகன் றாடகுலதுங்கன் பூலோகதேவேந்திரன் ஆரணமுரையார் ஆறிலொன்றுங் கடைமை கொண்டு ஆடுங் கடைமணி நாவசையாமல் அரசாளுங் குலோத்துங்க சோழறாசன் பரிசித்துறாசன் நாளையில் நன்மைபொரிந்தியிருந்த நாளையில்ப் பொன்னூஞ்சலும் பூந்தேரும் பூச்சக்கிரக் குடையும் விசிரி வெஞ்சாமரம் சுருட்டி தீவெட்டியும் யின்னமிக விருது பெற்றருளிய கங்காகுல திலதன்

காறாழ சிரோமணி மேளிக்கொடியான் மின்குவளை மாலிகாபரணமுடைய நார்ப்பத்தெண்ணாயிரங் கோத்திரத்துக்கு முதல் முதமையாயிருக்கும்ஞ் சோழ தேசத்தில் மூவறாசாக்கள் பரிசித்துறாசா நாளையில் மும்முடி வேணாவு டையாரென்றும், மாந்தியப்பத் தொண்டைமானென்றும், அச்சுதத் தொண்டை மானென்றும் பட்டம் கலியுக சகாத்தம் 808ற் மேல் செய வருஷம் வைய்யாசி மீ 13ந் தேதியில் அமரபச்சம் சஷ்ட்டி லக்குனம் பூறாட நச்சேத்திரம்

சுபனாம யோகமதில் அவினாசி வேணாவுடையாரென்றும் பட்டம் ரண்டாவது கலியுக சகார்த்தம் 855ற் மேல் விழம்பி வருஷம் அர்ப்பிசை மாசம் 16ந் தேதியில்ச் சோமவார நாள் ரேபதி நச்சேத்திரம் திரையோதெசி லக்குனத்தில் மாந்தியப்பத் தொண்டைமானென்றும், அச்சுதத் தொண்டைமானென்றும் பட்டம் சோழதேசம் விட்டு கொங்கு தேசத்துக்கு வந்து தென்கரை நாட்டில் பெரியண வேணாவுடையாரென்றும் பட்டம் விசநகரப்பட்டணத்கில் அச்சுதறாயர் மகன் வழகிடாய் ரண்டு சாரட்டுக் கட்டிச் சவ்வாரி வந்தான். காடை குலத்தானும், பூச குலத்தாளியும், சேரிலானும் யிவர்கள் படையைச் சேகரம்பண்ணி சனசேகரத்துடனே அச்சுத றாயரிடத்தில்ச் சண்டைசெய்தார்கள். அவர் பார்த்து உங்களுக்கு யித்தினை ஆக்கிரமமென்று சொல்லி ஆளைவிட்டு யிவர்களைப் பிடிச்சுத் தெண்டினைபண்ணிப் போட்டார்கள். பனிரண்டு வருஷம்ங் கேள்வியில்லை. யிவர்கள் மூணுபேரில் ஒருவன் பூச குலத்தான் நிகாரிச்சுத் துணிந்து யெங்களை அடைக்கவேண்டிய காரியமென்னவென்று அந்த றாயர் மகனைப் பிடித்துக் காதை அரிந்து கிடாயுங் காதருத்தான். அந்தச் சேதி றாசாவுக்குக் கேள்வியாச்சுது. ஆளை விட்டு யிவர்களைக் கூட்டிக்கொண்டு வரச்சொன்னார்கள். றாயர் பார்த்து யார் யிந்தக் காரியஞ் செய்தவநென்று கேட்டார். காதையரிந்தது நான்ந்தானென்று பூச குலத்தான் சொன்னான். யிதுநாள் யிதுவரைக்கும் ஒருவன் நிகாரிச்சு ஒருகாரியஞ் செய்தவனல்ல. நீ சற்றும் பயமில்லாமல்ச் செயிதிருக்கிறாய் நீய்யே வாதரு யென்று அச்சுதறாயர் நாளையில் அச்சுதத் தொண்டைமானென்றும் பட்டம் சூட்டி வய்த்தார். மதுரைக்குப் போய் மதுரை மீனாட்சியும் சொக்கநாத சுவாமியைத் தெரிசினம் பண்ணிக்கொண்டு மதுரையாழப்பட்ட உக்குரகுமார பாண்டிய

மகாறாசா சமூகத்திலே யிருந்துக்கொண்டு கொங்கு தேசத்துக்குச் சேர்ந்த தாராபுரம் அதுக்குச் சேர்ந்த நால்ப்பாங்கு யெல்லையுமானங் கிழக்குக் கோட்டைக்கரையும் தெர்க்குப் பன்றிமலையும் மேர்க்கு வாளையாறு வடக்குப் பாலைமலையும் யிந்தச் சதிர் மத்தியத்திலிருக்கும் தாறாபுரம் அதிகாரம் ஆளப்பட்ட வீரப்ப றாயர் கொங்கு தேசத்துக்கு 24 நாடு யிந்த யிருவத்தினாலு நாட்டுக்கும்

நதிகள் வானி நதி, காவேரி நதி, காஞ்சி மாநதி, நல்லமங்கை நதி, ஆன்பொருனை நதி, மீன்கொல்லி நதி, சிற்றாரு, குடகையார், நன்ங்காஞ்சி நதி, நல்லாரு, உப்பாரு ஆக நதி 11, யிதில் வானியாற்றில் நாலணையும், நொய்யலாற்றில் முப்பத்திரண்டணையும், உப்பாற்றில் நாலணையும், மீன்ங்கொல்லியாற்றில் பதினெட்டணையும், ஆன்பொருணையாற்றில் யிருபதணையும், நங்காஞ்சியாற்றில் நாலணையும், நல்லமங்கையாற்றில் ஆரணையும குடகுரநாற்றில் ரண்டணையும் ஆக அணை 96 யிந்த ஆன்பொருனை ஆத்துக்கு அணைகட்ட வேணுமென்று வேணாவுடையாரும் தொண்டமாக் கவுண்டரும் வீரப்பறாயரும் இன்னம் யிருக்கப்பட்ட சேனையுஞ் சேர்ந்து யோசினை பண்ணியிருக்க மூல குலத்தாளி சேரிலான் கம்பழத்தான் காவுலுவன் குழாயன்

யித்தாதி பேர்களும் அவர்களுடைய சேனைதழத்தாருங் கூடி அணை நாங்கள் அணை கூட்டுகிறோமென்று வழக்குப்பண்ணிக் கொண்டு பிலத்துடனே வந்து மரித்தார்கள். ஒன்றுக்கொன்று கலகமாயிருக்கும்போது அடுத்த நாட்டாரு கிறாமத்தாரு ஞாயமாய்க் கட்டுங்களென்று சமாதானஞ் சொன்னார்கள். கேள்க்கிரதே யில்லையென்று பின்னும் வியாச்சியம் பேசுகுறார்கள். யிந்த ஞாயம் யிவடத்தில் தீராதென்று மதுரைக்குப் போய் உக்கிர வீரகுமார பாண்டிய னிடத்துக்குப் போனால் தீருமென்று சொன்னார்கள். யிவர்கள் போய் விட்டார்கள். அவிடத்தில் றாசாக்களும் உக்குர வீரகுமார பாண்டிய றாசாவும் யிவர்களுடைய யிரு கச்சைக்காரர் நாயத்தைக் கேட்டார். அவர்கள் யிவர்களுடைய ஞாயத்தைப் பார்த்துச் சொன்னார். அதுயென்ன வென்றால் மீனாட்சியம்மன்ஞ் சன்னதியில் மூல குலத்தாளி சேரிலான் வகையறாப் பேருக்குச் சமாதானஞ் சொன்னார். அது யென்னவென்று கேட்டால் உங்களுடைய பேர்ப்படிக்கித் திருவிழச்சீட்டு யெளிதி வய்யுங்களென்று சொன்னார்கள். அவர்கள் வேணாவுடையாருக்கும் தொண்டமாக் கவுண்டர் வகையறாப் பேர்களுக்கு உங்கள் பேர்ப்படிக்கித் திருவிழச்சீட்டு யெளிதி வய்யுங்கழென்று சொன்னார்கள். முந்தி அந்த மூலகுலத்தாளி வகையறாப் பேர்களை ஷ்த்தானஞ் செயிது சுவாமிக்கி அபிஷேகந் தீவாத்தினை ஆகும்போது உங்களுடைய சீட்டை வையயுங்கள். நீங்கள் மாலை சந்தனம் போட்டுக்கொண்டு யிடம்பிரி வலம்பிரி சுத்திவந்து நீங்கள் யெடுங்கள் உங்களுக்கே அந்தச் சீட்டு வந்தால் நீங்களே அணைகட்டலாமென்று சொன்னார்கள், யிவர்கள் அந்தப்படிக்கி நேம நிஷ்ட்டையாய் வந்து கோவில்க்குள்ப் போயிக் கும்பிடும்போது சுவாமியிடத்திலிருந்த தீப மரைஞ்சு போச்சுது. பின்னும் சர்ப்பமானது சுவாமியிடத்திலிருந்து குருக்கே விழுந்துது. பின்னும் அனேகங் காரியமுண்டாச்சு. றாசாக்களும் உக்குர வீரகுமார பாண்டிய றாசாவும் யிவர்கள்

வேணாவுடையார் தொண்டைமான் வகையறாப் பேர்களுக்குச் சொன்னார்கள். யினி நீங்கள் ஷ்த்தானஞ் செய்து சுவாமிக்கி அவிசேகம் தீவாத்தினை ஆகும்போது சுவாமி உங்களுடைய சீட்டை சுவாமி முன்னாலே வய்யுங்களென்று சொன்னார்கள். வச்சுக் கும்பிட்டு யெளுந்திருந்து நிக்கும் போது சுளிகாற்றுப்போல் வீசி யிவர்களுக்கு யிருள் மூடினாப்போல் மூடி முளிச்சுப் பார்க்கும்போது யிவர்கள் கய்யில் ரண்டுபேர் கையிலு ரண்டு சீட்டு யருந்துது. அந்தச் சீட்டை சபை சுத்திவந்து யிவர்கள் சபையில் வய்த்தார்கள். அப்போது சபையார்களும் றாசாக்கலும் யின்னம் யிருக்கப்பட்ட பேர்களும் யிது நல்வு காரியமென்று யோசிச்சு உக்கிர வீரகுமார பாண்டியனும் மூவறாசாக்களும் றாயரவர்களும் பரிசித்து றாசன் றாளையில் பிரமாதி வருசம் . . . . . . *

---

* பட்டயம் முடியவில்லை.

# 23. பருத்திப்பள்ளிச் செப்பேடு

சேலம் மாவட்டம் திருச்செங்கோடு வட்டம் பருத்திப்பள்ளியை அடுத்த கூத்தாநல்லூர் கருப்பநாயக்கர் வசம் இச்செப்பேடு உள்ளது.

முதலிக்காமிண்டன் என்று சிறப்புப் பெயரும் பட்டமும் பெற்ற சங்ககிரி உலகப்ப கவுண்டரும், கொங்கு நாட்டின் பல்வேறு பகுதிகளில் இருக்கும் கொங்கு வேளாளரில் செல்ல குலத்தார் பலரும் கூடி வேளாளர் கூத்தாடிகளில் கந்தபட்டன் மகள் அத்திப்பெண்ணுக்கு 24 நாட்டுக்கும் செல்லகுல மாணிக்கி என்று பட்டம் சூட்டிப் பல்வேறு வரிசைகளுக்கும் நல்கினர். நிலமும் கொடையாக அளித்தனர்.

கொன்னையாத்துச் செல்லாண்டியம்மன் சன்னதியில் மேற்படி சடங்கு நடைபெற்றது. நாட்டியமும் மெரமனையும நடைபெற்றது.

இதுக்குப் பல கவுண்டர்கள் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். வேட்டுவர், அர்ச்சகர், ஆண்டி, உப்பிலியர், மலையாளன், முதலியார், தச்சன், கொல்லன், மூப்பன், தோட்டி முதலிய உள்ளூர் மக்களும் கையெழுத்திட்டுள்ளனர்.

இப்பட்டயம் கி.பி. 1364 ஆம் ஆண்டு எழுதப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. காலம் தவறாக எழுதப்பட்டுள்ளது. மதுரை நாயக்கமன்னர் முத்துவீரப்ப நாயக்கர் காலத்தில் எழுதியதாகக் கூறப்பட்டுள்ளது.

### மூலம்

அப்பற்ச் சித்தம்பலக் குருசுவாமியார் அருள்பெற்ற செல்ல கோத்திரத்து வெள்ஆளர் குடுத்த செப்பேட்டுச் சாஸனம். குருபாதம் துணை. சிவன் ரட்சிப்பார்.ஸ்ரீபத்திராமன் மகாமண்டலேசுவரன் அரியர விபாடன் பாசைக்கித் தப்புவராய் கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான் துறுக்கர் ஒட்டியர் மோகந் தவிழ்த்தான் எம்மண்டலமுந் திறைகொண்டருளிய ரா்சாதிராசன் ராசமாற்த்தாண்டன் ராசகெம்பீரன் ராசவல்லவன் அசுபதி கெசபதி னரபதி நவகோடி னாறாயணன் ஈழமும் மிலங்கையுந் திறைகொண்டருளி வாளால் வளிதிறந்த பெருமாள்

பூறுவ தெட்சிண பட்சிம உத்திர சத்த சமுத்திராதிபதி கெசவேடடை கண்டருளிய ஸ்ரீவிசையமாநகரில் பிறதாபரான வீர[illegible]ராயர் கிஷ்ணராயர்

நரசினருடைய புசபெலராயர் மல்லிகார்ச்சுனராயர் கொங்கணராயர் வேங்கடபதிராயர் ராமதேவ மகாராயர் ஸ்ரீரங்கராயர் பிறுதிவுராச்சியபாரம் பண்ணிஅருளாநின்ற காலத்தில் விசுவப்பதி கிஷ்ணப்ப முத்து வீரப்ப னாயக்கரய்யறவர்களுக்குச் செல்லாநின்ற கலியுக சகாற்த்தம் 4465க்கு மேல் செல்லாநின்ற விப வருஷம் சித்திரை மாதம் 15 தேதி சுக்குறவாரமும் திசமியுங் கூடின சுப தினத்தில் அரவகிரி அர்த்தனாரீசுரரிட பிறதாபத்தினாலேயும் சங்ககிரிச் சென்னகேசவரிட பிறதாபத்தினாலேயும் வானீசுரர் சீயாலநாதர் சிவகாமியம்மன் பாண்டீசுரர் காமாட்சியம்மன் திருவேலினாதர் அழகாதேவர் சுப்பிறமன்னியர் அர்த்தநூராள் அழகுனாட்சியம்மன் கரியகாளியம்மன் சின்னாயி பெரியாயி செல்லாண்டியம்மன் பணிமலைக்காவலர் பொன்காளியம்மன் கொங்கிலம்மன் இத்தியாதி தேவர்களிட பிறதாபத்தினாலேயும்,

கொங்க னாட்டில் ஸ்ரீமது முள்வாயி சூழ்ந்த சங்ககிரி துற்க்கத்துச் சேந்த பூந்துறைனாடு பூவாணினாடு பரித்திபளினாட்டில் செல்லா வங்கிஷத்தில் ராசாமன்னியர் ஸ்ரீ கிஷ்ணராயரிட சிம்மாசனத்தில் வைத்துக் கீரிடம் வைத்து முதலிகாமிண்டனென்று விருதும் பெத்து கிருஷ்ணராயரிட ஆருகால்ச் சிங்காசனத்தில் வைத்து பட்டாபிஷேகம் செயிது நாடும் உடுகறையும் பெற்ற சங்ககிரிச் செருமா னுலகப்ப கவுண்டரும், பருத்திப்பளினாட்டில்ப் பருத்திப்பளியில் காகத்தலைக் கவுண்டரும், அத்தம்பிக் குமாரசாமிக் கவுண்டரும், மேல்கரைப் பூந்துரை னாட்டில் ஈரோட்டில்க் கொங்கச்சி கவுண்டர், வெள்ளோட்டில்ப் பெரியண கவுண்டர், எளுமாத்தூர் ஆனந்த கவுண்டர், குழவிளக்குச் சித்தம்பல கவுண்டர், இறாசம்பளி குமாரசாமி கவுண்டர், அறச்சலூற்ச் சடைய கவுண்டர், வாய்ப்பாடியில் காங்கய கவுண்டர், மேல்கரை அரையனாட்டில் அஞ்சியூர் அத்தப்ப கவுண்டர்,

ஆறைதொளுவில்ப் பெரியண கவுண்டர், காங்கயனாட்டில் வள்ளிஅறச்சல் அழகப்ப கவுண்டர், தாறாபுரம் ராசா கவுண்டர், கதளினாட்டில் வெஞ்சமாக்கூடல் பெரிச்சி கவுண்டர், மட்டுலகத்தில் மாறப்ப கவுண்டர், முட்டத்தில் முத்து கவுண்டர், கடம்பையில் கைலாசக் கவுண்டர், குப்பத்தில் குமாரசாமி கவுண்டர், குறுப்பனாட்டில் குறும்பந்தூரில் வேல கவுண்டர், கோசனத்தில் குமரப்பெருமா கவுண்டர், ஒடுவங்கனாட்டில் சதுமுகையில்ச் சாமினாத கவுண்டர், வடகரைனாட்டில் கறுகல்பாடியில் வடிவேல் கவுண்டர், சேலனாட்டில்த் திருமலைகிரியில் அழகாத்திரிக் கவுண்டர், வடகரை னாட்டில் ஆப்புக்கூடல் குப்பண கவுண்டர், பருத்திப்பளி னாட்டில் கொண்ணயாத்தில்ச் செல்லப்ப கவுண்டர், பிறசையில் கருமா கவுண்டர், பாலமேடு பெரியண கவுண்டர், மொஞ்ச னூற் வேல கவுண்டர், ராசிபுரனாட்டில் அத்தனூரில் அத்தப்ப கவுண்டர்,

ஏளூற் னாட்டில் நவுனியில்ச் சின்னப்ப கவுண்டர், கீள்கரை பூந்துறை னாட்டில் பட்டிலூரில்ச் செங்கோட கவுண்டர், ஆனங்கூற் நல்லதம்பி கவுண்டர் இருப்பிலிச் செருமான் உலகப்ப கவுண்டர், கோக்கிளாயி கருமாண்ட கவுண்டர், காவல்க்குரிச்சிப் பளனி கவுண்டர், பூவாணி னாட்டில்க் கச்சிவளியல்ச் செல்லப்ப கவுண்டர், நெடுங்குளம் காளி கவுண்டர், கீள்கரை அரையனாட்டில் இடையாத்தில்

நல்லி கவுண்டரும் அந்தந்த ஊரிலிருக்கும் காணியாட்சியிலுள்ள செல்லகுல வேழாழர் னாங்களனைவருங் கூடி பருத்திப்பளி னாட்டில் பருத்திப்பளியிலிருக்கும் வேழாழர் கூத்தாடிகளில் கந்தபட்டன் மகள் அத்திப்பெண்ணுக்கு னாங்களனைவரும் கூடி செல்லகுல மாணிக்கியென்று பட்டமுங்கட்டிப் பேருங் கொடுத்தோம்.

இந்தப்படிக்கிச் செல்லகுல மாணிக்கியென்று பேற்குடுத்து செல்ல கோத்திரத்தார் னாங்களனைவருங் கூடிக் கட்டளையிட்ட சுயந்திரம். பண்ணையத்துக்கு ஒருமிடாக்கம்பும், பயலாளுக்கு எட்டுவள்ளமும், பண்ணையத்துக்கு ஒரு சுமை கதிரும், கலியாணத்துக்கு ஒருபணமும், ஒருவள்ள அரிசியும் கட்டளையிட்டோம். கொண்ணையாத்தில் நஞ்சை மானுபம் கருவேலங்குளத்தில் ராசாங்குழத்துக்கு மேற்க்கு, கறடிபள்ளத்தில் குருக்கள் மானுபத்துக்கு வடக்கு, நஞ்சை குளி அன்பதுக்குப் பனங்காடைமெச்சன் மானுபம் குளி இருபத்தஞ்சுபோக நீக்கி நிண்ண குளி நிலமும், தோட்டக்கண்டம் ஈசுபரங் கோவில் மானுபத்துக்கும் தெற்க்கு, குளி இருபத்தஞ்சுக்குப் பாதிக்குளி பன்னண்டரையும், எடுத்தலாங் குழத்தில் நஞ்சை மானுபம் அம்மைச்சியார் கோவிலுக்கு தெற்க்கு, குளி அன்பதுக்கு பாதி இருபத்தஞ்சும், மா மர மூன்றுக்குப் பாதி தென்னமரம் மூணுக்குப் பாதியும், புஞ்சை மானுபம் குப்பய்யன் மானுபத்துக்கு தெற்க்கு, ஆய மரத்துக்காடு வள்ளம் ஒண்ணுக்குப் பாதியும், கன்னாங்குட்டைக்கு மேற்க்கு, கருங்கல்லுக்காடு வள்ளம் ஒண்ணுக்குப் பாதியும், ஊருக்கு மேற்க்கு கருங்கல்லுக்காடு வள்ளம் ஒண்ணுக்குப் பாதியும்,

நஞ்சையில் அரிச்சுயந்திரம் நூத்துக்கு ரண்டுவள்ள நெல்லுக்குப் பாதியும் இந்தப் படிக்கெல்லாம் கொண்ணையாத்தில் பாதி அனுபவிச்சுக் கொள்ளவும். பருத்திப்பளிப் புஞ்சை மானுபம் அவையார் பாறைக்கும் தெற்க்கு தளுதலங்காடு வள்ளம் ஒண்ணு புல்லாமேட்டு நஞ்சை மானுபம் குளி இரநூறு அரிச்சுயந்திரம் நூத்துக்கு ரண்டு வள்ளம் இந்தப்படிக்கு கட்டளையிட்டோம். இந்தப்படிக்கு கட்டளையிட்டோம். சுவந்திரமும் அனுபவிச்சுக் கொண்டு சந்திராதித்த ருள்ளவரைக்கும் அனுபவிச்சுக் கொண்டு சுகத்திலே யிருக்கவும்

யிந்தப்பட்டயம் னாங்களனைவருங் கூடி எளுதிக்கொடுத்தபடிக்கு செல்ல கோத்திரத்தார் இந்தச் சுவந்திரம் குடுத்து நடத்திவயித்த தற்மத்தை யாதா மொருவர் விக்கினங்கள் பண்ணினபேற் கெங்கைக் கரையிலே பிராமணனையும் காராம் பசுவைய்யும் மாதா பிதாவையும் குருவையுங் கொன்ற தோஷத்தில்ப் போகக் கடவானாகவும் .

இந்தப்பட்டயம் எளுதினபடிக்கு இந்த தற்ம பரிபாலனம் பண்ணினவர்களுக்கு சகாயம் சதுற் சகாயம் பண்ணினவர்களுக்கு திருவணாமலையிலே திருக்காற்த்திகை தீபாறாதனை தெரிசித்த பலனும், சிதம்பரத்தில் மார்களித் திருமஞ்சனத்திலே தெரிசித்த பலனும், மதுரையிலே ஆவணிமூலத்தில் சொக்கனாயகரையும் அங்கயக் கண்ணம்மனையும் தெரிசித்தபலனும், காசியிலே கெங்கா ஸ்நானம் பண்ணி ராமேசுரத்துக்குவந்து காசிதீற்த்தம் அபிஷேகம் பண்ணி ராமலிங்கத்தை தெரிசித்த பலனும், அரவகிரி அற்த்தனாரீசுர சுவாமியாரையும் தெரிசித்த பலனும்

உண்டாவதாகவும். இந்தப்படிக்கு செல்லகுலமாணிக்கி யென்று பேருங் கொடுத்து கொண்ணையாத்துச் செல்லாண்டியம்மன் சன்னதியில்ச் சந்தணம் தெளிச்சு பருத்திப்பளியில் அழகனாட்சியம்மன் சன்னதியில் னாட்டியம் பார்த்து ஒருவரிசை உடமையும் போட்டு வீரவாளிச் சேலையுங் குடுத்து பொட்டுங் கட்டி மிரவனையும் செயிது கொங்கு இருபத்துனாலு னாட்டுக்கும் செல்லகுல மாணிக்கியென்று பேற் விழங்கத் தக்கதாக கட்டளையிட்டோம்.

யிதுக்கு சாட்சி பூந்துறைனாட்டில் மோரூரில் மதுரை யாகவராமன் தென்னவன் கட்க சுடர்மணி சீர்வளிச் செளியன் மதுராபுரிமன்னன் தெய்வப் பாண்டியன் அத்தப்ப கவுண்டர், வடகொங்கு மன்னியன் அன்னத்தியாகன் முழசையாதிபன் பெத்தபெருமாளும், செங்கைச் சுரிகைமுனைகாற கண்டன் அகழங்கராயன் படைகண்ட ராசாவளி மல்லைசமுத்திரம் அனந்தய கவுண்டரும், ராசிபுரனாட்டில் செம்புராய கவுண்டரும், ஏளூற்னாட்டில் விருது செம்பயராய னத்தநாரி நகுலன் திருமலை கவுண்டரும், ஆவளிக் கவுண்டரும், அத்தியண கவுண்டரும், குடியானவர்களில் பாலமேட்டில் குள்ளப்பிடாரப்பக் கவுண்டரும், தூறன் செல்லப்ப கவுண்டர் மகன் செல்லப்ப கவுண்டன், ஆடையா முத்தண கவுண்டன் மகன் பெரியண கவுண்டன், குழங்கண்டைச் செங்கண்ணன் சின்னமுத்தண கவுண்டன் மகன் குமர கவுண்டன்,

பிறசையில் செம்பூத்த குலத்தில் வாழவந்தி கவுண்டன் மகன் செட்டியாக் கவுண்டன், சீரங்க கவுண்டன், கொண்டரசன் மின்னாம்பழியிலே கூரைகுலச் சிதம்பர கவுண்டன் மகன் செல்லப்ப கவுண்டன், கொண்ணையாத்தில் பனங்காடரில் பெரிச்சிக் கவுண்டன் மகன் சின்னபெரிச்சி கவுண்டன், வேல கவுண்டன் மகன் கரும்பெரிச்சி கவுண்டன், வண்டித்தம் நம்ப கவுண்டன் மகன் நம்ப கவுண்டன், திண்டமங்கலம் சாமி கவுண்டன், உஞ்சனை காளி கவுண்டன் மகன் கொங்கச்சி கவுண்டன், அகரம் வேட்டுவரில் கந்தப்பன் மகன் தூங்க கவுண்டன், குண்ணாடி வேட்டுவன் புல்லயன், நரியன், வேம்பயன், சாந்தப்படை முகைகாளி, பரித்திப்பளி ஈசுரன் கோவில் குமாரசாமி நம்பியார், பெருமாள் கோவில் சின்னநம்பி அய்யன், கொண்ணையாத்தில் ஈசுர கோவில் அமராபதி அய்யன், பெருமாள் கோவில்ப் பொன்னத்தாசன், அம்மன் கோவில் வேலாண்டி மகன் ஆறுமுகத்தான், பருத்திப்பளி அம்மன் கோவில் விறுமாண்டி, மாரிஅம்மன் கோவில் உப்பிலியன் மலையாளன், முதலி தச்சன், வெத்திவேல்க் கொல்லன், வேல மூப்பன் மகன் கவுண்ட மூப்பன், தோட்டி சீரங்கன், அல்லாளன், கொண்ணையாத்து தோட்டி செம்பன், அல்லாழன், பழனி, எல்லன் சாட்சி.

இந்தச் செப்பேடு சாசனம் எளுதின நன்மைக்கு தெட்சண கயிலாசவாசர் அர்த்தனாரீசுர சுவாமியார் லட்சிப்பார். சிவமயம்.

# 24. கண்ணகுலப் பட்டயம்

பெரியார் மாவட்டம் தாராபுரம் வட்டம் கன்னிவாடி எஸ். கே. சின்னசாமி அவர்களிடம் முழுமையான இப்பட்டயம் உள்ளது. மூன்று பகுதிகளாக உள்ள இப்பட்டயத்தின் இரண்டாம் பகுதி மட்டும் தனிப்பட்டயமாகச் சில ஊர்களில் வரையப்பட்டுள்ளது. அவை பொள்ளாச்சி காவல் நிலையம் ஒன்றிலும், ஈரோடு கலைமகள் அருங்காட்சியகத்திலும், தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையிலும் உள்ளன.

## முதல் பகுதி

சேர சோழ பாண்டியர் மூவேந்தரும் மதுக்கரைச் செல்லாண்டியம்மன் கோயிலில் கூடியபோது தங்களுக்குள் எல்லைச் சண்டையிட்டுக் கொள்ளுகின்றனர்.

ஸ்ரீவில்லிபுத்தூர் முத்துச்சாமி கவுண்டர் மகன் கண்ணர்குல நல்லதம்பிக் கவுண்டர் மூவேந்தர் வழக்கையும் தீர்த்து வைத்துப் பல பட்டங்களையும் வரிசைகளையும் பெற்றார். செல்லாண்டியம்மனை நடு எல்லையாக வைத்துக் கிழக்கே சோழனுக்கும், தெற்கே பாண்டியனுக்கும், மேற்கே சேரனுக்கும் எல்லையாகக் கூறப்படுகிறது. மும்முடி நல்லதம்பி மன்றாடியார் என்று பட்டம் பெற்ற அவர் தலைய நாட்டுத் தலைவர் ஆகிறார். அப்பகுதிச் செட்டியார்களும், வேட்டுவர்களும் கூட அவரைத் தலைவராக ஏற்றுக் கொள்ளுகின்றனர்.

## இரண்டாம் பகுதி

மும்முடி நல்லதம்பி மன்றாடியார் வழியினரான கொங்கு வேளாளக் கண்ண குலத்தினர் கன்னிவாடியில் தொடர்ந்து ஆட்சிபுரிந்து வருகின்றனர். அவர்கள் வழிவந்த மும்முடி சீரங்கராய மன்றாடியர்ர் ஆதிநல்லராண்டி என்னும் தன் குடிபடையைச் சேர்ந்தவருக்கு எழுதிக்கொடுத்த பட்டய விவரத்தைத் தங்கள் வரலாற்றுடன் கூறுகிறது இரண்டாம்பகுதி. இதில் இவர்களின் குடிப்பெயர்ச்சியும் கூறப்படுகிறது.

கன்னிவாடி கண்ணர்குலம் கந்தசாமிக் கவுண்டர் மகள் நல்லம்மாளும் இடைக்கலபாடி பள்ளி வெள்ளாளன் மகள் வள்ளியம்மாளும் விறகு பொறுக்கக் காடு சென்றனர். பள்ளிகுல வள்ளியம்மாள் கண்ணகுல நல்லம்மாளிடம் தண்ணீர்

கேட்டபோது அவள் பள்ளியர் தாழ்ந்தவர் என்று கூறித் தண்ணீர் கொடுக்க மறுக்கின்றாள். தன் அண்ணனாகிய பள்ளி வேளாளனுக்குக் கண்ணகுல நல்லம்மாளைத் திருமணம் செய்விப்பதாக வள்ளியம்மாள் சூள் உரைக்கின்றாள்.

அரசன் ஆதரவோடு பள்ளி வேளாளர் கண்ணகுலத்தார் வீட்டில் பெண் கேட்கவே கருநாயை வளர்த்துப் பெண் என்று கொடுத்து ஊரைவிட்டே அனைவரும் ஓடி விடுகின்றனர். காரி குலத்தினரும், செட்டியார்களும் உடன் செல்லுகின்றனர். அமராவதிஆற்றைக் கடந்து செல்லுகின்றனர். பள்ளியர் பின்வரப் பொன்னை ஒழுக்கித் தப்பிய ஊர் பொன்பரப்பி ஆயிற்று. கண்ணபுரம், சோமன் கோட்டை, புங்கங்கரை, நத்தக்காரியூர் முதலிய ஊர்கள் ஏற்படுத்திக் காவிரியைக் கடந்து மோரூர் சென்று தகடப்பாடியிலும் மோரூரிலும் ஆட்சிபுரிகின்றனர்.

கண்ணகுலத்தில் மோரூரில் சூரிய காங்கேயன் என்பான் தோன்றிப் பாண்டியன் படையில் சேர்ந்து ஆறகளூர் வாணனை வெல்லுகிறார். சித்தளந்தூர் சேரகுல வேளாளர் வீட்டில் பெண்கொண்டு சிறப்புடன் ஆட்சி செய்கையில் தகடப்பாடிக் கண்ணகுலக் குழந்தை கன்னிவாடி சென்று அரசாட்சி செய்கிறது. அதற்கு ஏற்பாடு செய்தவர் நல்லராண்டி. கண்ண குலத்தார் பெருமை நிலை நாட்டப்படுகிறது.

நல்லராண்டி, நாவித நல்லான், பறையன் காரி இவர்களின் உதவி மதிக்கப்பட்டு நல்லராண்டி 60 கண்ணகுலக் காங்கேயரில் 61ஆம் காங்கேயர் என்று மதிக்கப்படுகிறார். அவருக்குச் செப்பேடு சாசனம் அளிக்கபடுகிறது.

## மூன்றாவது பகுதி

கன்னிவாடி கண்ணகுலத் தலைவர் முத்துசாமிக் கவுண்டர் மரணமடைகிறார். பெண் கொடுத்த செல்லப்ப கவுண்டர், முத்துசாமிக் கவுண்டரின் மூன்று மனைவியர் காளியம்மாள், வேலம்மாள், சந்திராயி, நல்லராண்டி மனைவியர் (சின்னம்மாள், உருமாயி) நல்லா நாவிதன் வள்ளிப்பிள்ளை, பறைக்காளி வஞ்சாள்மாறாள், தேவிடியாள் அங்கமுத்து, நாச்சாயம்மாள் ஆகிய ஏழு படைக்கலக்காரிகளின் வீரமாத்திகள் கட்டிய விதம், வழிபடும் முறை, சடங்குகள் விபரம் இவைகள் மிக விரிவாகப் பேசப்படுகின்றன.

கலியுக சகாப்தம் 3011இல் முதல பகுதி எழுதப்பட்டுள்ளது. இது மிகவும் தொன்மையான காலமாகும். பிழையாக எழுதப்பட்டுள்ளது. இரண்டாவது பகுதியிலும், மூன்றாவது பகுதியிலும் பிழையான காலக் குறிப்பேயுள்ளது.

## மூலம்

ஹரி சுபமஸ்து கலியுக சகார்த்தம் 3011ல் செல்லாநின்ற ஈசுபர வருசம் ஆடி மாசம் 18 தேதி வெள்ளிக்கிழமை நவமி திதி விசாக நட்சத்திரம் கூடிய சுபதினத்தில் சேரன் சோழன் பாண்டியன் ஆகிய மூவேந்தர்களும் கூடி யெல்லைப் பிரிவில்

வழக்கிட்டு மதுக்கரை செல்லாண்டியம்மன் சந்நிதானத்தில் கத்தி உருவி நின்று உருவிப் பிடித்துக்கொண்டு இந்த வழக்கைத் தீர்த்தால் சரி இல்லாவிட்டால் உன்னையு வெட்டி கோயிலையுமிடிப்போமென்று செல்லாண்டியம்மன் முன் வாதிட்டு நின்றார்கள். அப்போது அங்கு கூடியிருந்த கூட்டத்திலிருந்த கண்ணர்குல நல்லதம்பிக் கவுண்டருக்கு நல்லநாயகி சொல்லிய உத்திரவின்படி நல்லதம்பிக் கவுண்டர் காவேரியில் ஸ்தானஞ்செயிது குலகுருவாகிய திருஞானசம்பந்த கண்ணுடைய வள்ளல் சுவாமிகள் உபதேசித்தருளிய மந்திரத்தை தியானித்து அந்த சபையில் நல்லதம்பிக் கவுண்டர் நின்று கொண்டு சபையாரையும் மூவறாஜாக்களையும் நின்றபடி நமஸ்க்கரித்து சொல்லுகிறார்.

இந்த வழக்கை நானே தீர்த்துத் தருகிறேனென்று உறுதியாய் சொன்னார். அப்போது சபையாரும் இராஜாக்கழும் நீர் யிந்த வழக்கை தீற்காவிட்டால் உம்மை யிந்த மதுக்கரை செல்லாண்டியம்மனுக்கு நரபலியாக்கி இடுவோமென்றார்கள். அதுகாலையில் நல்லதம்பிக் கவுண்டரும் நல்லதென்று சம்மதித்துக் கொண்டார். அப்போது செல்லாண்டியம்மனிடம் நல்லநாயகி யம்மன் வந்து வேண்டிக் கொள்ளுகையில் செல்லாண்டியம்மன் சொன்னதாவது, உன்பிள்ளை வேறு யென்பிள்ளை வேறா; அப்படிப் பலிவாங்குவதில்லையென்று சொன்னதுமல்லாமல் மூன்று செங்கப் பிடாரியையும் கொடுத்தாள். தனக்கு முந்தின பூசையென்றும் மேற்கண்ட செங்கப் பிடாரியாகிய கோட்டைக்கரையம்மனுக்கு பிந்தின பூசையென்றுஞ் சொன்னாள். அந்த செங்கற் பிடாரியை கீழ்புறம் பிரதிஷ்டை செய்தார். முன்னால் கருப்பணசுவாமியொன்று பிரதிட்டை செயிதார்கள். தனக்கு மதுக்கரை செல்லாண்டியம்மனென்றும் பேர் கொடுத்தாள். இது நிற்க, சபையார்கழுக்கு மூவறாஜாக்கழும் நல்லதம்பிக் கவுண்டரும் கோயில் வலம் வந்து ஆலையத்துக்குள் போனார்கள். அப்போது ஒருவர்மீது சன்னதமான அருள் வந்து சொன்னதாவது சோழனுக்குக் கிளக்கும், பாண்டியனுக்குத் தெற்கும், சேரனுக்கு மேற்கும் இந்த மூன்று யெல்லை நடுவில் செல்லாண்டியம்மனாகிய நான் இருக்கிறேனென்றும் இந்த நல்லதம்பிக் கவுண்டருக்கு யினாம் விமரிசை கொடுத்தால் யெல்லைப் பிரிவு காண்பித்துக் கொடுக்கிறேனென்றும் அந்த் அருளாடி சொன்னார்.

அப்போது சபையார்களும் மூவறாஜாக்கழும் நல்லதம்பிக் கவுண்டருக்கு மேல்க்கண்ட தினத்தில் யெல்லைப் பிரிவில் தென் திருவிடதேசம் ஸ்ரீ வில்லிபுத்தூரில் கண்ணர்குல முத்துச்சாமிக் கவுண்டர் குமாரன் நல்லதம்பிக் கவுண்டருக்கு மூவராஜாக்கழும் சேர்ந்திருந்து முடிசூடிச் சந்தோஷமாகப் பல்லக்கு, சுருட்டி, சூரியவாணம்விருது, தீவிட்டி, விசரி, வெண்சாமரை, வெள்ளைக்குடை முதலிய இறாஜ விருதுகழுங் கொடுத்து மகுடாபிஷேகம் செயிது மும்முடி நல்லதம்பி மன்றாடியார்ரென்று பெயருங் கொடுத்து தலையனாடு பாடி 12 பூண்டி 36ம் கூடிய 48 அமரத்தையும் ஆண்டுவரும்படி செய்து மேர்கண்ட தலைநாட்டிலுள்ள ஆனங்கூர்க் காரி, தலையூர் வண்ணக்கன், கூத்தம்பூண்டி செம்பூத்தன், பூச்சந்தை, இனுங்கனூர் தனஞ்சயன் இந்தப் பாதிப் பங்காளிகளையும், மற்ற பாதிப் பங்காளியான வில் வேட்டுவர், விழக்கு வேட்டுவர், கரும்பிளி வேட்டுவர், குண்ணாடி வேட்டுவர், மாச்சாடி வேட்டுவர், 500 கோத்திரம் செட்டிகளாகிய 12 முதமைப்

பங்காளிகளையும் வரவளைத்து வைத்துக் கொண்டு மேர்க்கண்ட மகுடாவிசேகமானது. ஆருகால்ப் பீடமீட்டு சோடச உபசாரத்துடன் அவிஷேகம் செயிவித்து முடிசூடி மும்முடி நல்லதம்பி மன்றாடியாறுக்கு மெறாசு முதல்ப் பிரசாதமும் பெரச்செயிது,

மூவறாஜாக்கழும் சவையார்கழும் முன்சொன்ன 12 முதமைப் பங்காளிகழும் கும்பிட்டு நல்லதம்பி மன்றாடியாருக்குச் சொன்ன சத்தியப் பரவசம யென்னவென்றால் சேரன் தியாகேசரையும், சோழன் நடேசரையும், பாண்டியன் சொக்கேசரையும், சபையார்கள் மதுக்கரை செல்லாண்டியம்மனையும், மற்ற 12 முதமைப்பங்காளிகள் அவரவர் குல தெய்வங்களையும் குரித்து இப்போது முடி சூடிய நல்லதம்பி மன்றாடியாருக்கு யாதொரு குரைவு செயிகிரதில்லையென்று பிரமாணிக்கம் சொன்னார்கள்.

பிரகு குல குருவான திருஞான சம்பந்தக் கண்ணுடை வள்ளல் தம்பிறானுக்கு அமுதுபடி தக்ஷிணை கொடுத்து இறாஜாக்கள் மும்முடி நல்லதம்பி மன்றாடியாருக்கு பச்சைவடங் கொடுத்து பின்பு நல்ல நாயகியம்மன், செல்லாண்டியம்மன், கோட்டைக்கரையம்மன் இந்த சுவாமிகழுகு அவிஷேகம் செய்து படி நெய்வித்தியம் செயிதுவைத்து பின்பு சபையோர்கழு வேந்தரு நல்லதம்பி மன்றாடியாரு மதுக்கரை செல்லாண்டியம்மன் கோயிலுக்குப் போயி அருளாடி சொன்னபிரகாரம் யெல்லைப் பிரிவும் பாகமும் கண்டார்கள். அப்போது மூவேந்தரு சபையோர்கழு சகலரும் கூடி யோசித்து நாம் யிப்போது செயித சன்மானம் கல்லும் காவேரி புல்லும் பூலோகமுள்ளவரைக்கும் நிலைபெற்று விளங்கும்படிக்கி மும்முடி நல்லதம்பி மன்றாடியாறுக்கு ஒரு செப்புப் பட்டையம் விபரித்து யெளுதிக் கோடுக்க வேணுமென்றும் தீருமானித்து யெளுதிக்கொடுத்த செப்பேட்டுப் பட்டையம்

இதை யாதாமொருவர் பொய்யென்று சொன்னா காசி கெங்கைக் கரையில்க் காறாம் பசுவைவு காசிப் பிறாமணனையும் கொன்ன தோசத்தில்ப் போவார்கள். ரௌவுரவாதி நரகத்தில் வீள்வார்கள். யாதாமொருவர் மெய்யென்று நம்பி விழக்கமாகப் பரிபாலினம் செயிதவர்கள் அனேக கன்னிகாதான முதலிய முப்பத்திரண்டு தருமபலனையடைவார்கள். இந்தப் பட்டையம் பொய்யென்றால் மதுக்கரை செல்லாண்டியம்மன் கோயில்ப் போயிப் பாற்றுக் கொள்ள வேண்டியது. இந்தப்படிக்கு இந்தப் பட்டையம் கொங்கு தலையநாடு கன்னிவாடியிலிருக்கும் கண்ணர்குல முத்துச்சாமிக் கவுண்டர் குமாரன் மகுடமுடி சூடிய மும்முடி நல்லதம்பி மன்றாடியாருக்கு மதுக்கரைச் செல்லாண்டியம்மன் சன்னியதானத்தில் முன் கூடிய சவையார்களரிய மூவேந்தரும் யெளிதிக்கொடுத்த செப்பேடு பட்டையம்.

கையொப்ப விபரம். சேரமான் மகாறாஜன் கையொப்பம் மேற்க்கண்ட சவையார்கள் சாக்ஷிகள் கையொப்பம். இவர்கள் சம்மதியில் இந்த செப்பேட்டுப் பட்டையம் யெளிதினது மதுரை முத்துக் கருப்பண ஆசாரி. நல்லநாயகியம்மன் துணை. செல்லாண்டியம்மன் துணை. கோட்டைக்கரையம்மன் றுணை. மதுக்கரைச் செல்லாண்டியம்மன் றுணை. திருஞானசம்பந்த கண்ணுடைய வள்ள்ல் சுவாமிகள் பாதமே துணை. முதல்ப் பட்டைய முற்றுப் பெற்றது. உபாத்தியாயர்

குழந்தையானந்தம் மெளிதியது. உ.

ஹரி ஓம்

கொங்கு தலையனாடு கன்னிபாடியிருக்கும் ஆதி நல்லராண்டிக்கு மேற்படி ஆதீனக் கர்த்தாவாகிய ஸ்ரீமான் மும்முடி சிரங்கறாய மன்றாடியார் எழுதிக் கொடுத்த செப்பேட்டுப் பட்டயம்.

இதன் அசல்ப் பிரதியைப் பார்க்க விரும்பினால் அவனாசி ஆதீன கர்த்தாவாகிய குருசுவாமிகளாகிய ஸ்ரீமான் பழங்கரை திருஞான சம்பந்த வள்ளல் சுவாமிகளிடம் போய்ப் பார்றுக் கொள்ளவும். இது நகல்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாம்அர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீரவே.

நல்லநாயகியம்மன் பாதமே துணை. செல்லாண்டியம்மன் பாதமே துணை. கோட்டைக்கரையம்மன் துணை. கருப்பணசாமி பாதமே துணை. கரியவரதராஜப்பெருமாள் துணை.

சுபநமஸ்து. கலியுக. சகார்த்தம் 4494 சாலியவானம் 1316ல் செல்லானின்ற ஈஸ்வர வருசம் வைகாசி மாசம் 13 தேதி சுக்கிரவாரம் தசமி சோதி நட்சேத்திரம் பாலவாகரணம் சுபநாம யோகமும் கூடிய சுபதினத்தில் சேரன் சோழன் பாண்டியன் மூவேந்தரும் தென் திருவிடதேசம் ஸ்ரீவிலிப்புத்தூரில் கன்னிபாடி கண்ணர்குலம் முத்துச்சாமிக் கவுண்டர் குமாரர் நல்லதம்பிக் கவுண்டருக்கு முடிசூடி வைத்து மூவரசரும் சந்தோசமாகப் பல்லக்கு சூரியபாணம், சுருட்டி, தீவிட்டி, விசாரி, வெண்சாமரை, வெள்ளைக்குடை முதலிய ராஜசின்னங்களும் கொடுத்து மகுடமுடி சூடி மும்முடி நல்லதம்பி மன்றாடியென்று பேரும் கொடுத்து தலையநாடு பாடி 12 பூண்டி 36 ஆக 48 அமரம் ஆண்டுவருகிற காலத்தில்,

இடைக்கலபாடி பங்கிலிருக்கும் பள்ளி வெள்ளாளன் கோபால கவுண்டன் மகள் **வள்ளியம்மாளும்,** கன்னிபாடியிருக்கும் கண்ணர்குலம் கந்தசாமிக் கவுண்டர் புத்திரி நல்லம்மாளும் ஊரிலுள்ள சிறு பெண்களுடன் கூடிக்கொண்டு காதப்பள்ளிக் காட்டுக்கு விரகு பொருக்க வந்த இடத்தில் விறகு சேகரித்துக் கட்டிவைத்துவிட்டுக் காய்கனி சாப்பிட்ட பின்பு தண்ணீர்த் தாகத்திற்கு அறுபதுபாகம் வெங்கலப்படிக் கிணத்தில் கண்ணர்குலம் நல்லம்மாள் இரங்கி தண்ணீர் சாப்பிடும்போது, பள்ளிக்குல வள்ளியம்மாள்'நங்கை தண்ணீர் அள்ளிக்கொடு' யென்று கேட்க அதர்க்கு நல்லம்மாள் 'பள்ளியும் சரி. பறையனும் சரி. ஆரடி யுனக்கு நங்கை. உனக்குத் தண்ணீர் அள்ளிக் கொடுத்தால் யெங்கள் பெரியோர்கள் ஜாதிக்குப் புறம்பு வைப்பார்கள்' என்று சொன்னாள். அதற்கு வள்ளியம்மாள் உன்னை எங்கள் அண்ணனுக்குக் கலியாண முடிக்காவிட்டால் நான் பள்ளி குலத்தில் பிறந்தவள்

அல்லவென்று சபதம் சொன்னாள். இதர்க்கு நல்லம்மாள் உன் அண்ணனுக்கு நான் கருனாய் வளர்த்து கல்யாணம் செய்து கொடுக்காமர்ப் போனால் நான்க் கண்ணர் குலத்தில் பிறந்தவளல்லவென்று சபதம் சொன்னாள். இவ்வாரு இருவரும் வாதிட்டுக் கொண்டு கங்காபவனியை சாக்ஷி வைத்துவிட்டு அவரவர்களிட ஊர்போய்ச் சேர்ந்து தங்கள் தங்கள் தாய் தந்தையர்களிடம் சொன்னார்கள்.

அந்தச் சமாச்சாரம் கேட்டவுடன் கண்ண குலத்தாரும் தங்கள் பனிரண்டு பங்கர்ளியாகிய ஆனங்கூர் காரி, தலையூர் வண்ணக்கன், கூத்தம்பூண்டி செம்பூத்தன், பூச்சந்தை, இனுங்கனூர் தனஞ்செயன், பாதிப் பங்காளிகளான வில்வேட்டுவர், விளக்கு வேட்டுவர், கரும்பிளி வேட்டுவர், குண்ணாடி வேட்டுவர், மாச்சாடி வேட்டுவர், 500கோத்திரச் சோமஞ் செட்டிகள், நல்லராண்டி முதலிய எல்லாரும் கூடி யோசித்து ஏவல் திருவுளம் கேட்டு பள்ளி வேளாளனுக்கென்று கருனாய் வளர்த்தி அதர்க்குச் சகல ஆடையாபரணங்களும் தரித்து அதற்குத் தொண்டியும் போட்டுவைத்து இருந்தார்கள். இப்பால் பள்ளி வேளாளறும் சகலருங்கூடி யோசித்து பள்ளியும் சரி பறையனும் சரியென்று சொன்னவளை நாம் கலியாணம் செய்தே தீரவேணுமென்று இராஜா ஸ்ரீராமராயரிடத்தில் போய் 'சுவாமி கல்யாணம் பண்ணுகிரதற்கு கண்ணர் குலத்தில் பெண் கேள்க்க வேணும். தேவரீர் என்ன சொல்லுகிறீர்கள்' என்று கேட்டான். அப்போது இராயர் உறவின்முறை விஸையத்தை அரண்மனையில் சொல்லவேண்டிய தென்னவென்று கேட்டார். அதற்குப் பள்ளி வேளாளர்கள் முன்பின் நடந்ததில்லை யென்றும், சூது நடந்த விபரத்தையும் சொன்னார்கள். இந்த சங்கதியை கேட்டு ராயர் நீ விடுதிக்குப் போவென்று அனுப்பிவிட்டு பின்பு ராயர் தீர்க்க யோசித்து மகுடமுடி சூடிய மும்முடி நல்லதம்பி மன்றாடியாருக்கு திருமுகம் யெளிதியனுப்பினார். அப்போது பட்டக்காரரும் மற்ற பங்காளிகளும் கூடி யோசித்து பள்ளி வேளாளனு நாம் கொண்டு கொடுத்ததில்லை. யிப்போது சூதின் பேரில் வந்திருக்கிறது. யினித் தேவரீர் கட்டுச் செயிதபடி நடந்து கொள்ளுகிறோம்மென்று பதில்த் திருமுகம் யெளிதியனுப்பினார்.

திருமுகம் இராயர் பாற்துக்கொண்டு முன்பின் நடந்தபடி நடந்துகொள்ளுங்களென்று மருபடியும் திருமுகம் அனுப்பிவிட்டு றாயர் பள்ளி வேளாளனுக்குச் சொல்லுகிறார்; உரவின்முரை சம்பந்தமாய்ப் பெண் கேள். அட்டி சொன்னா லிவிட வாவென்று அனுப்பினார். பள்ளி வேளாளன் வந்து சேர்ந்து கன்னிபாடிக்கி வந்து பட்டக்காரரைக் கண்டு பெண் கேட்டான். அவர் அதர்க்கென்ன உமக்கு னான் கொடாமலும் யெனக்கு நீர் கொட்டாமலும் பேதமென்ன. னான் பட்டக்கார னீர் நாட்டாமைக்காரறால்த் தடையின்றிப் பெண் கொடுக்கிறேனென்று சம்மதித்துக்கொண்டு இன்னும் இரண்டு மாஷம் போகட்டுமென்று அனுப்பிவிட்டு கலியாணமுஸ்தேதி சேகரம் செயிது கொண்டிருந்தார்கள். பள்ளி வேளாளனும் கலியாண சாமான் தேடி உரவின்முரையுங் கூட்டிக்கொண்டு நிச்சையதாற்த்தம் செய்ய வந்தவனுக்கு வெள்ளிக்கிளமை முகூற்த மென்று லக்கினம் வைத்து அனுப்பிவிட்டு பின்பு நல்லராண்டி, நாவித நல்லான், பரைக்காளி இந்த மூன்று பேரையும் அளைத்து நீங்கள் பிள்ளையானால் இந்த சூதை நிறைவேற்ற வேண்டும். வுங்களுக்கு னாங்கள்

தலைக்கட்டுக்கு அதாவது வீடு கட்டிக் குடியிருக்கும் வீடுவொன்றுக்கு 5 பணம் 8 வள்ளத் தானியம் ஒரு கட்டுக் கதிர் இவைகழும் நல்லநாயகியம்மன், செல்லாண்டியம்மன் கோட்டைக்கரையம்மன் இந்தச் சாமிகள்ப் படித்தரத்துக்கு 5 படி நெல்லு கொடுத்து வருகிறோம்மென்று நல்லநாயகி சன்னதி முன் மும்முடி நல்லதம்பி மன்றாடியார் முதல் சகலரும் சத்திய பரவசமாய்ச் சொன்னார்கள்.

அப்போது மூன்று பேரும் சம்மதித்து தங்களைச் சேர்ந்த காவல்க் கூடிய பென்கள் ஆண்கள் வைத்துக்கொண்டு மற்ற சனங்களையெல்லாம் அனுப்பிவிட்டு சாக்கிரிதியுடன் யிருந்தார்கள். பள்ளி வேளாளன் கலியாண முஷ்த்தாதியுடன் வந்து மாப்பிள்ளையை விடுதிக்கு அளைத்து விட்டபின்பு யேளு யெருமைக் கடாமேல் 1 காணப்பருப்பு, அருசி, பணம் இந்த மூன்றுங் கலந்து வரிந்து கட்டி, பின்பு சோளீஷ்பார் வஞ்சியம்மன் இந்த சாமிகளை 500 கோத்திர சோமன் செட்டிகள் யெடுத்துத் தென்னீஸ்பரர் பெரியநாயகியம்மந் அத்தநூர் அம்மன் செட்டிக் குமாரர் காரி கூட்டத்தார் வண்டியில் யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு சோளேஸ்பரர் கரியகாளியம்மன் இந்தச் சுவாமிகளையு யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு சூது போட்ட நல்லம்மாளுடனே வாடி வெட்டி வெளியே புரப்பட்டார்கள்.

அப்படிப் புரப்பட்டு வரும்போது நல்லராண்டி வந்து சொல்லுகிறான்; சுவாமிகளை யெல்லாம் நீங்கள் யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு போகிரீர்களே யெனக்கு இவிடத்தில் உருதி யென்னவென்று கேட்டான். இவிடத்தில் நல்லநாயகியென்ற செல்லாண்டியம்மன், கோட்டைக்கரையம்மன், கருப்பண சுவாமியாகிய இந்த முதமையான தெய்வங்களை யுனக்கு விட்டிருக்கிறபடியால் நீ பூசித்துக்கொண்டு யிருக்க வேண்டியது. வுங்கழுக்கு முன்சொன்ன மேரைக்கு நாங்கள் யெவிடமிருந்தாலும் தலைக்கட்டு தவிறாமல் நடப்பித்து வருகிறோமென்று சொல்லிவிட்டுக் கண்ணப் பரையர் 500 பேரை நல்லறாண்டியின் சொற்படி கேட்டு நடத்தும்படி திட்டம் செய்துவிட்டுப் போனார்கள். பின்பு நல்லறாண்டி கலியாண வாசலிலே வந்து நல்லான் மாத்து விரிப்பது தீபம் பார்பது முதலிய மேல் விசாரணை நடத்தவும், பரையன் வாத்தியம் செய்யவும், அயினூரு கண்ணப்பரையர் ஆயுதத்துடனே காவலாக நிற்க இப்படி இருக்கிறபோது பள்ளி வேளாளனுடைய அருமைக்காரி பெண்ணுக்குப் பொன் பூட்ட வந்தவள் பெண்ணின் முக்காட்டை சேலையை வாங்கிப் பார்த்துக் கருநாயென்று வெளியே வந்தவளை நல்லறாண்டி பெண்சாதி உனக்கு சொன்னது கருனாயிதானேயென்று அருமைக்காரியை சீவை மாத்தாலடித்தாள்.

அப்போது பள்ளி வேளாளன் விடுதியிலிருந்த அத்தனை பேரும் கோபங்கொண்டு கண்ணனெடுத்த காரியம் செலுத்தினானென்று ஆயிதத்துடனே பின்துடந்தார்கள். அப்போது நல்லறாண்டி நாவிதநல்லான் பரைக்காளி கண்ணப்பறையர் 500 பேரும் யோயி வளைத்து ஒன்றுக்கொன்று ஈடுதாடாகி இதிலு அதிலு சிரிது சேதமாகிப் பின்னு பள்ளி வேளாளன் மிஞ்சி நெருங்கித் துடர்வதைக் கண்டு யெருமைக் கடாவிலிருந்த பாரத்தை வொளிக்கி விட்டார்கள். பள்ளிச் சனங்கள்ப் பணத்தைக் கண்டு பொருக்கினார்கள். அப்போது அவிடத்தில்க் கட்டினவூர் பொன்பரப்பியென்று பெயருண்டாகிறு. பின்பு யெத்தாமல்ப்

போகிரபோது மூலநூர் யெல்லையில் வண்டி முரிந்து யெந்த மட்டும் போனாலும் ஆதீனத்துக்குத் தருவித்துக் கொள்ளுகிரோமென்று சோளீஸ்பரர், வஞ்சியம்மன், செல்லாண்டியம்மனும் நின்றுவிட்டன. 500 கோத்திரச் செட்டிகளும் அங்கே சோமன் கோட்டையென்ற வூர்கட்டி யிருந்துகொண்டார்கள். அப்பிரம் மற்றவர்கள் போகிரபோது ஆம்பராவதியாறு பெருகி வரக்கண்டு சனங்கள் திகைக்கும்போது சூதுபோட்ட னல்லம்மாள் தாயே கங்கா பவனி யெங்களைப் பள்ளி வேளாளனுக்கு ஒப்பிவைக்கிரதானால் நீய்யே ஒப்புக்கொள்ளு, யில்லாவிட்டால் இக்கரை பொங்கி அக்கரை வாங்கிப் பொருதி அன்று பிறந்த குழந்தைக்கி முழங்கால்த் தண்ணீறாகி முன் வற்றிப் பின் பெருக வேண்டுமென்று யிரங்கி அப்புர வாளவந்தானூர் சேர்ந்தார்கள்.

அங்கும் வண்டி முரிந்து தென்னீஸ்பரர், பெரியநாயகி, அத்தனூர் அம்மன், செட்டிக் குமாரரும் நின்றுவிட்டார்கள். பின்பு சனமெல்லாம் வந்து சேர்ந்தார்களாவென்று பார்த்து வஸ்த்திரம் நனையாமல் வந்தவர்கள் நாட்டாரென்றும், வஸ்த்திரம் நனைந்து வந்தவர்கள் ஆதி கண்ணனென்றும், முழுது நனைந்து வந்தவர்கள் ஆதி கண்ணந்தையென்றும் மூன்று குலமாய்ப் பிரிந்துகொண்டு அவரவர்கள் நிச்சையாய்ப் போனார்கள். ஆதி னாட்டார் வடக்கே வந்து கண்ணபர மென்றவூர் கட்டி. சோமேஸ்பரர் கரியகாளியம்மன் இந்த சுவாமிகளைப் பிரதிஷ்ட்டை செயிது அவிடத்தில் சிரிது சனம் நின்றது. சிரிது சனம் பட்டக்காரருடனே புங்கங்கரை போயிச் சேர்ந்து பட்டக்காரர் சேகரத்தில் ஒரு கெர்ப்பஸ்ரீ மெயிநொந்து புங்கு வெட்டிக் கட்டின குடுசையில் சூரியவுதையத்துக்கு ஆண்குழந்தை பிரந்தது. அதர்க்கு சூரிய காங்கையனென்று பேரிட்டு அவிடத்தில் நத்தக்காரியூர் கட்டி சிரிது சனம் அவிடத்தில் நின்றுவிட்டது.

சிரிது சனம் பட்டக்காரருடனே சூரிய காங்கயனை யெடுத்துக் கொண்டு கீள்கரைப் பூந்துரை நாட்டில்ப் போயிருந்தார்கள். சிரிது னாள்ச் சென்றபின்பு மோரூர் ஆந்தை கூட்டத்தில் பெண் கேள்க்க அதற்கு அவர்கள் நீங்கள் தலையனாடு கன்னிபாடியிலிருந்து வந்தவர்கள். வுங்கள் குலமென்ன என்று கேட்டார்கள். நாங்கள் கண்ண குலமென்று சொல்ல அப்போது சித்தளந்தூர் சேரகுல நல்லைய கவுண்டர் மகள் வெள்ளைப் பிள்ளையானதினால் ஒருவரும் கலியாணம் செய்யாமையால் அந்தப் பெண்ணை நீங்கள் கல்யாணஞ் செயிது கொண்டா லுங்களுக்குக் கால்க்காணி தருகிறோம் மென்று சொன்னார்கள். இவர்கள் சம்மதித்து முத்துக் கவுண்டர் குமாரர் செல்லப்ப கவுண்டருக்கு வெள்ளை வேலம்மாளைக் கல்யாணம் செய்து கால்க்காணி பெற்று அவிடத்தில்ச் சிரிது சனம் நின்றன. சிரிது சனம் சிதம்பரத்துக்குக் குடிபோயி காணி பூமி கொண்டு சிரிதுனா ளுங்கிருந்து பின்பு அங்கிருக்கப் பிடியாமையால் மருபடியும் சித்தெழுந்தூர் வந்துசேர்ந்து செங்கர்ப் பிடையான பகவதியம்மனைப் பிரதிஷ்டை செயிதுகொண்டு அங்கேயிருந்தார்கள்.

இங்கே மோரூரிலிருக்கிர நல்லைய கவுண்டர் குமாரர் சூரிய காங்கைய கவுண்டருக்கு மோரூர் ஆந்தைகுல செங்கோட கவுண்டர் குமாரத்தியைக் கல்யாணம் செயிது அவருக்கு நாலு குழந்தைகள் பிரந்து பிரபலமாகி தங்கள் பாட்டனாகிய

செங்கோட கவுண்டரை வீடு காடு வேணுமென்று அந்தக் குழந்தைகள் கேள்க்க அவர் காக்கைக் களரியைத் தூர்த்துக் கா்டும், பறயன் குடிசையைத் தூர்த்து வூடும் கட்டிக் கொள்ளுங்களென்று சொன்னார்கள். அதைச் சூரிய காங்கய கவுண்டர் கேட்டு நாம் தலைய நாடு பாடி 12 பூண்டி 36 ஆக 48 அமரம் நமக்கிருக்க பள்ளி வேளாளனுக்கு ராச்சியத்தை விட்டு ஒரு பெண் நிமித்தமாய் சூதின்பேரில் வந்து அல்லவா இப்படிக்கொற்ற சிரிய வாற்தை வந்ததென்று தாய் தந்தையிடத்தில் சொல்லிவிட்டு தேசாந்திரம் புரப்பட்டு தெய்வானுகூலத்தால் மதுரையில் ராமராயரிடம் சேவுகமாயமர்த்தார். அக்காலத்தில் தேவமகாராயர் ராகூியம் கட்டி வருகையில் ஆருகளேழு வாணன் மேற் பத்துத்தரம் படையெடுத்தும் கோட்டை பிடிபடாமல் முரிந்து வந்துவிட்டார். அப்போது அச்சுத மகாறாயர் கோட்டையின் சாதனம் அறிவோமென்று பரதேசிகளுக்குச் சிலவுகொடுத்து ஆறுகளேழு வாணன் கோட்டையினுடைய சாதனம் அரிந்து வாருங்களென்று அனுப்பினார்.

பரதேசிகள் கோட்டை வாசலில் இருந்து பிட்சை கேட்டுக்கொண்டு பாற்க்கும்போது தலைவாசற் காலிலே சாதனமெளுதியிருந்ததாவது அரக்குக் கோட்டையானதால் சூரியன உச்சியில் எரிக்கும்போது சுக்கிர வாரத்தில் யாதாமொருவர் வந்து கோட்டையை விடுவிக்கலாமென்று யெளிதியதைப் பார்த்துவந்து பரதேசிகள் றாயர் மூவரிடமும் சொல்ல அப்போது தேவமகாராயர் யாராவது கோட்டையைப் பிடிக்கப்பட்டவ ருண்டாவென்று கேட்டார். அதர்க்கு இராமராயர் நம்மிடம் சூரிய காங்கய கவுண்டனென்று ஒரு சேவுகனிருக்கிறான். அவனால் முடியுமென்று சொன்னார். அப்போது இராயர் மூவரும் சூரிய காங்கய கவுண்டரை யளைத்து இந்தக் கோட்டையச் செயிக்க உம்மாலாகுமா வென்று கேட்க அவர் தெய்வ அனுக்கிரகத்தாலும் தங்களுடைய கடாக்ஷத்தினாலும் மூணே முக்கால் நாளிகையில் செயித்து வருகிறேனென்று சொன்னார். நல்லதென்று இராயர் மூவரும் சண்டைக்கு வேண்டிய முஸ்திபுகள் கொடுத்து தங்கள் ஆயுதமும் கொடுத்தனுப்பினார்கள். அப்போது தன் குலதெய்வம் நல்லநாயகி, செல்லாண்டியம்மன், கோட்டைக்கரையம்மன், குருவள்ளல் சுவாமிகளையும் தொழுது வாக்குப் பெற்றுக்கொண்டு படையெடுத்து ஆருகளேழு வாணன் கோட்டைக்கிச் சமீபமாய்ப் போய்ப் படையிரங்கியிருந்து ஆயிரம் யெளவன தாசிகளை அழைத்து சிலவுக்கு வேண்டிய பொன்கொடுத்து ஆருகளேழு வாணன் கோட்டைக் கருகில் வீடுகட்டிக்கொண்டு கோட்டைக் காவல் சேவகர்களை அநேக வீலாவிநோதம் செயிது வுங்கள் வசப்படுத்துங்களென்று அனுப்பினார்.

அதே மாதிரி செயிது வெள்ளிக்கிளமை யன்றைக்கி சுவாமிக்கு பொங்கலிடுகிறோமென்று சேவகர் எல்லோரையும் இவாளவாள் நிறுத்திக் கொண்டாள். அன்றைக்கே பாண முஸ்தாதியுடனே படையெழும்பி கோட்டையின் வாய்வு மூலையிலே நின்று சண்டை செய்து அனேகரை வெட்டிச் செயித்து கோட்டையையும் விடுவித்து ஆருகளழே வாணனையு பிடித்துக் கொண்டு றாயர் மூவர்களுக்கும் திருமுகமெளிதினார்கள். சந்தோஷத்துடன் பீரங்கியெழுப்பி சக்கரை விழங்கி படையுடனே யிருந்தார். றாயர் மூவரும் ஆருகளழே வாணன் சிம்மாசனத்திலிருந்து சூரிய காங்கய கவுண்டறை அளைத்து நீர் மருந்து குண்டு யில்லாமல் கோட்டையைப் பிடித்தியல்லவா உம்மைப்போல் சாமாற்தியவாளில்லை

யென்று மெச்சி சந்தோஷமாக சிங்கமுக பல்லக்கு, சுருட்டி, சூரியபாணம், விசாரி, வெண்சாமரை, வெள்ளைக்குடை, பகல்வத்தி தீவெட்டி யின்னும் வேண்டிய ராஜ விருதுங் கொடுத்து இந்தக் கோட்டையை இராகூஷியபாரம் செய்யென்று மகுடமுடி சூடிய மும்முடி நல்லதம்பி சூரிய காங்கேய மன்றாடியென்று பெயரும் கொடுத்தார்கள். பின்பு சூரிய காங்கைய கவுண்டர் சொன்னார். அதாவது தையிர் முட்டி சுமக்கிற வேளாழனுக்கு இத்தினை அதிகாரம் வேண்டுவதில்லை. தேவரீருடைய கடாக்ஷமிருந்தால் போதும். ஆகிலும் கூடிய தலையநாடு கன்னிபாடியிலிருந்து நாங்கள் ஒரு. காலத்தில் யெழும்பி கீள்கரைப் பூந்துறை நாட்டில் |மோரூர் போய்ச் சேர்ந்து அவிடம் விட்டுச் சூதின்பேரில் தேசாந்தரம் புரப்பட்டுத் தங்களிடம் வந்து சேர்ந்தேன். அந்தச் சூது நிரவேரவேணும் சுவாமியென்று கேட்டார். அதர்க்கு சந்தோசமாய் றாயர் மூவரும் ராணுவமும் படையுங் கொடுத்து உன் மனதும்படி மோரூரைப் பாற்துக்கொள்ளென்று சொன்னார்கள். அப்போது சூரி காங்கய கவுண்டர் படையெழும்பி மோரூர் 32 அமரத்திலுள்ள ஆந்தை கூட்டத்தையெல்லாம் வெட்டித் துணித்து அவர் தெய்வங்களையெல்லாம் உடைத்தெரிந்து கிணர் குட்டைகளை யெல்லாம் மேவி தங்கள் தெய்வமான நல்ல நாயகியம்மனை பிரதிஷ்டை செயிது தகடப்பாடியென்ற வூர்கட்டி வெள்ளைப் பெண் கொண்ட காக்காணியும் பெற்று ஆனங்கூர் கட்டிக் காரிகுல நாத கவுண்டர் கொண்டுவந்த கரியகாளியம்மனைப் பிரதிஷ்டை செயிதுவைத்து மோரூர் 32 கிறாம்மமும் ஆண்டுவந்தார்கள். இது நிற்க. அப்போது விதரிப்போன வேட்டுவர்கள் யோசித்து சிரிது றாணுவத்துடனே கன்னிபாடி கட்ட வேணுமென்று வந்தார்கள். அப்போது கன்னப்பாடியிலிருக்கும் நல்லராண்டி, நாவிதநல்லான், பரக்காளி மூன்று பேரும் வேட்டுவர் வந்த சேதி கேட்டு அரசில்லாப் படை வெட்டுமாவென்று விசனப்பட்டுக் கொண்டு இருந்தார்கள். அப்போது செல்லாண்டியம்மன் கோட்டைக் கரையம்மனும் இரண்டு வெள்ளைக் குதிரை மேலேறிக் கொண்டு வேட்டுவர்களுக் கெதிர்வந்து வெட்டுகிரபோது வேட்டுவர் கண்டு சின்னாண்டி வெட்டினான் பெரியாண்டி வெட்டினான் என்று ஒருவருக்கொருவர் வெட்டிக்கொண்டு செத்தார்கள். பிழைத்தவர்கள் ஓடிப் போனார்கள்.

இந்த அதிசயத்தை நல்லராண்டி முதலிய மூவரும் கண்டு இனி ஆதீனத்துக்கு அரசன் வேணுமென்று மூவரும் தேடிப் புரப்பட்டு மோர்ரூர் தகடபாடிக்கி வந்து பட்டக்காரனைக் கண்டு சுவாமி நம்முடைய ஆதீனம் யெடுபட்டுப் போகிறதாயிருக்கிறதென்று தேடி வந்தோம். தாங்கள் வரவேணுமென்று சொன்னார்கள். அப்போது பட்டக்காரர் சொன்னதாவது. நமக்கு மோரூர் 32 கிராமம் இருக்கிறது. இதில் நீங்கள் நல்லநாயகியைப் பணிவிடை செயிது கொண்டு இருங்களென்று சொன்னார். மூன்று பேரும் சம்மதித்து நல்லராண்டி அம்மனுக்குப் பூசை செய்யவும், நாவிதன் ஊழியம் செய்யவும், பரையன் குதிரை பார்க்கவும் இப்படியிருக்கையில் ஒரு னாள் நல்லைய கவுண்டர் குமாரன் முத்துசாமிக் கவுண்டரை அஞ்சுவயதில் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு வந்தவரை நல்லராண்டி யெடுத்துக்கொண்டு நாவிதன் பரையன் மூன்று பேரும் இராத்திரி விடியக் காளமங்கலம் புதூர் ஆயிக் கவுண்டர் வீட்டுக்கு வந்து கவுண்டரைக் கண்டு நாங்கள் ஆதினத்துக்கு. பட்டக்காரர் குமாரன் முத்துசாமிக் கவுண்டர்

கன்னிப்பாடிக்கிக் கொண்டு போகிரோம். தாங்களந்த சங்கதியை யோருருக்கு எளிதியனுப்புங்கள் என்று சொல்லிவிட்டு கன்னிபாடி வந்து சேர்ந்து சிரிது காலம் விராடபுரம் விசையறாம ராயருக்குக் கலியாணம் பண்ண பெண் கேள்க்க கேட்டவிடங்களிலெல்லாம் யாரோ ஒரு பிள்ளையை ஆண்டி கொண்டு வந்து வைத்திருக்கிறானென்று ஒருவரும் பெண் கொடுக்கவில்லை.

அப்படியிருக்கிர போது மூலநூர் பாதர் தொண்டமாக் கவுண்டர் மண்டலச் சாவடி கட்டிக் கொண்டிருந்தார். முத்துச்சாமிக் கவுண்டரும் பரையனும் விராடபுரத்துக்கு அந்த வளியாகப் போனார்கள். அப்படிப் போனவர்கள் சாவடியண்டை நின்று பாற்துக் கொண்டிருந்தார்கள். அப்போது பாதர் தொண்டமாக் கவுண்டர் மாப்பிள்ளையவர்கள் நீங்கள் வாரதும் போரதும் தெரியும். ஆனாலிந்த விட்டத்தை ரண்டையும் நாலு ஊசிக் காலில்ம் பேரிலேற்றினால் உனக்கு னானே பெண் கொடுக்கிரேனென்று சொன்னார். நல்லதென்று நாவிதனை தன்னிடத்திலிருத்திக்கொண்டு பரையனை நல்லராண்டியிடம் அனுப்பினார். நல்லராண்டியுடனே வந்து பாதர் தொண்டமாக் கவுண்டரைக் கண்டு சுவாமி அவர் விட்டத்தை ஏரிடுவார். தாங்கள் தவிராதபடி பெண் கொடுக்க வேணுமென்று கேட்டான். அதற்கு அவர் கன்னிபாடி இராஜா சமர்த்தரென்று கேட்டிருக்கிரோம். ஆனால் உங்கள் சமர்த்தை அரிந்து பெண் கொடுக்கிரது தவரத்தக்கின தில்லையென்றார். அப்போது நல்லராண்டி குல தெய்வத்தை நினைத்து விபூதி போட்டார். முத்துசாமிக் கவுண்டர் ரண்டு விட்டத்தையும் நாலு ஊசிக் காலின் பேரில் ஏறிட்டார். அப்போதே சாவடி வேலையை நிறுத்திவிட்டு கல்யாணத்துக்கு வேண்டிய சாமக் கிரியைத் தேடி விவாக முடித்துக்கொண்டு சகலருடனே முத்துசாமிக் கவுண்டர் கன்னிபாடி போய்ச் சேர்ந்தார். அந்தத் தாரத்துக்குப் பிள்ளையில்லாமையால் வெள்ளைகோயில் ஆந்தை குலச் செல்லப்ப கவுண்டர் வீட்டில்க் கலியாணம் செயிது அதர்க்கும் பிள்ளையில்லாதபடியால் மணநாடு வெண்டுவ குலம் காளியப்ப கவுண்டர் வீட்டில்க் கல்யாணம் செயிது அதர்க்கும் பிள்ளையில்லாதபடியால் முத்துசாமிக் கவுண்டர் மூன்று கல்யாணஞ் செயிது நமக்குப் பட்டத்துக்குப் பிள்ளையில்லையென்று விசனத்துடன் நல்லநாயகி செல்லாண்டியம்மன் கோட்டைக் கரையம்மன் கருப்பணன் இந்தச் சாமிகளைப் பிரார்த்திக்க சொர்ப்பனத்தில் ஸ்ரீரங்கத்துக்கு யென் அண்ணனிடத்துக்குப் போனால் இரண்டு தாரத்துக்குப் பிள்ளையுண்டென்று நல்லநாயகி சொன்னாள்.

அப்போது மூன்றாநாள் முத்துசாமிக் கவுண்டரும் மூன்று மனைவியும் நல்லராண்டியும் ஸ்ரீரங்கத்துக்குப் போயி சுவாமியைத் தரிசனம் செய்து பிரசாதமும் பெற்றுக்கொண்டு ஊர்வந்து சேர்ந்து ஆம்பிராவதி யண்டை மணலூரில்க் கரிய வரதறாஜப் பெருமாளென்று பிரதிஷ்ட செயிதுயிருந்தார்கள். ஆந்தை குல காளியம்மாளுக்கு ஆண் குழந்தையும் வெண்டுவ குல வேலம்மாளுக்கு பெண் குழந்தையும் பிறந்து சீரங்கறாயனென்றும் சீறாய்யென்றும் பெயரிட்டு சந்தோசமாயிருந்தார்கள். சூதின்பேரில் கல்யாணஞ்செயித பூச குலம் சந்தறாயிக் கவுண்டிச்சிக்கிக் குழந்தையில்லை. சிரிது காலம் சென்ற பிறவு முத்துச்சாமிக் கவுண்டர் தாயி தகப்பனைத் தேடி மோரூர் தகடப்பாடிக்கிப் போகிரதற்கு

நினைத்து நல்லராண்டி நாவித நல்லான் பரைக்காளி மூன்று மனைவிமாருடனே முத்துச்சாமிக் கவுண்டர் மோரூருக்குப் போனார். தன் குமாரன் வந்ததைக் கண்டு சூரிய காங்கய மன்றாடியார் அனேக சந்தோசமாய் சுபசேமங்கள் விசாரித்து சகலமும் தெரிந்துகொண்டு இவ்வளவு காரியாதிகள் செயிது வைத்தது நல்லராண்டியல்லவாவென்று சந்தோசப்பட்டு இவர்கழுக்கு யென்ன யினாம் செயிவதென்று யோசித்து மோரூர் 32 கிராமத்திலுள்ள தாயாதி மாமன் மைத்துனன் சகலரையுமழைப்பித்து மேகரை பூந்துறை நாட்டிலுள்ள காளமங்கலம் புதூரில் யிருக்கும் ஆயி கவுண்டரையும் தரிவித்து யெல்லோருக்கும் தெரிவித்து இவளவு பிரயாசை யெடுத்துக்கொண்ட நல்லராண்டி முதலானவர்களுக்கும் யென்ன யினாம் செயிகிறதென்று யோசித்து முன்னம் நம் பெரியவர்கள் சொன்ன இனாம் நடந்துவரும்படியாயும் இந்த சரித்திரம் சகலருக்கும் தெரியும்படியாயும் நல்லராண்டிக் கினாம் ஒரு செப்பேடு சாசனமெளிதிக் கொடுக்கவேணுமென்று தீர்மானித்து இதனடியிர் கையெளுத்துச் செயிதுயிருக்கிற 60 காங்கையரும் கூடி நல்லராண்டிக்கி 61ங் காங்கையனென்று பேறுங் கொடுத்து சந்தோசமாகச் சூரியபாணம் சுருட்டி பகபத்தி தீவட்டி விசரி வெஞ்சாமரை டால்விருது வெள்ளைக்குடை பல்லக்கு முதலான சகல றாஜ விருது கொடுத்து நம்ம பெரியவர்கள் ஆதியில் சொன்ன பிரகாரம் நல்லநாயகி செல்லாண்டியம்மன் கோட்டைக்கரையம்மன் கருப்பணசுவாமிக்கும் படித்தரத்துக்கு அஞ்சுபடி நெல்லு நந்தா தீபர்த்துக்கு 5 பணமும் மேற்படி சுவாமிகளுக்குப் பணிவிடை செயிதுவருவதர்க்காக வுனக்கு யெட்டு வள்ளத் தானியம் ஒரு கட்டுக் கதிர் இலைகளைத் தலைக்கட்டுக்கு வருசா வருசமும் கொடுத்து நடப்பித்து வருவோமாகவும்.

நல்லநாயகி யரிய செல்லாண்டியம்மன் அரிய கோட்டைக்கரையம்மன் அரிய கருப்பண்ண சுவாமி யரிய கரிய வரதராஜப் பெருமா ளரிய அர்த்தநாரீஷ்பர ராிய மலைக்காவலர் நல்லைய நரிய மேர்க்கண்ட மேரை நடத்திவருவோமாகவும். யிதல்லாமல் மோரூர் 32 அமரமு வுன் காணிபுரியென்றும் நம்மிட வம்மிசமுள்ளவரையும் வுன்னுடைய வம்மிச உள்ளவரையும் சந்திர சூரியருள்ளவரையும் கல்லுங் கார்வரி புல்லும் பூமியுள்ள பரியந்தம் மேல்க்கண்ட மேரை நடப்பித்து வருகிரோமென்று 60வது காங்கையரும் 61ன்றாம் காங்கையனாகிய நல்லராண்டிக்கு யெளிதிக் கொடுத்த செப்பேடு சாசனம்.

இதைப் பொய்யென்று சொன்னவர்கள் இதைத் தள்ளினவர்கள் இதை விவகாரம் பண்ணினவர்கள் காசி கெங்கைக் கரையில் காறாம்பசுவையும் காசிப் பிராமணனையும் கொன்ற தோஷத்தில்ப் போவார்கள். வழக்கமாய்ப் பரிபாலனம் செயிதவர்கள் கன்னிகாதானம் முதலான முப்பத்திரண்டு தரும பலனை அடைவார்கள். இந்தப்படிக்கி யெளுதிக் கொடுத்த செப்பேடு சாஜனம். கையெழுத்து விபரம். மகுடமுடி சூடிய மும்முடி நல்லதம்பி சூரிய காங்கைய மன்றாடியார் அவர்கள், செங்கோட கவுண்டர், அர்த்தநாரிக் கவுண்டர், நல்லைய கவுண்டர், வேலப்ப கவுண்டர், செங்கோட கவுண்டர், முத்துக் கவுண்டர், காளியப்ப கவுண்டர், சின்னமுத்துக் கவுண்டர், வேலாயுத கவுண்டர், மாரப்ப கவுண்டர், ராவுத்த கவுண்டர், கந்தசுவாமிக் கவுண்டர், னாத கவுண்டர், குங்கும்க் கவுண்டர்,

பெரியண கவுண்டர், கோயில் கவுண்டர், நல்லைய கவுண்டர், பெரியதம்பிக் கவுண்டர், குப்பமுத்துக் கவுண்டர், தெய்வசிகாமணிக் கவுண்டர், பெரியதம்பிக் கவுண்டர், சின்னைய கவுண்டர், சிதம்பர கவுண்டர், இராமைய கவுண்டர், ராமசாமிக் கவுண்டர், நல்லண கவுண்டர், வெள்ளைய கவுண்டர், பழனிக் கவுண்டர், கருப்ப கவுண்டர், செங்கோட நல்லய கவுண்டர், குப்பாண்ட கவுண்டர், செங்கோடு நல்லய்ய குமாருக் கவுண்டர், பழனிமலைக் கவுண்டர், அனுமந்தக் கவுண்டர், லட்சுமினாறாயண கவுண்டர், குமாருசாமிக் கவுண்டர், நீலினாத கவுண்டர், பெரியாயி கவுண்டர், கருப்ப கவுண்டர், செல்லப்ப கவுண்டர், வாரணவாசிக் கவுண்டர், திருமலை கவுண்டர், கருங் கவுண்டர், நத்தக்காரியூர் வேலப்ப கவுண்டர், குங்காய கவுண்டர், சென்னிமலைக் கவுண்டர், கன்னபுரம் பெரியதம்பிக் கவுண்டர், சூரக் காளியப்ப கவுண்டர், வேலுக் கவுண்டர், குப்பிச்சி கவுண்டர், காளிநாத கவுண்டர், முத்துசாமிக் கவுண்டர், அத்தனூர்க் கவுண்டர்,. காரி கூட்டம் னாத கவுண்டர், காழமங்கலம் புதூர் ஆயிக் கவுண்டரு, கன்னிபாடி ஆதீன முத்துசாமிக் கவுண்டர்.

இவர்கள் சம்மதியில் செப்பேடு சாசனம் யெளிதினது மோரூர் வடக்கு சாவடியில் வெள்ளை விநாயகர் முன்பாக நல்லநாயகி முன்பாக தொட்டலிங்க ஆசாரி யெளிதினது. வெள்ள விநாயகர் துணை நல்லநாயகியம்மன் றுணை. செல்லாண்டியம்மன்றுணை. கோட்டைக்கரையம்மன் றுணை. கருப்பணசுவாமி துணை. அர்த்தனாரியீஷ்பரர் துணை. பாகம் பெரியவள் துணை. முற்றுப் பெற்றது. இது யெளிதினது உபாத்தியார் குழந்தை யானந்தம்.

## ஏழு படைக்கலக்காரி சரித்திரம்

### கலியுக சுதி 4500ல்ச் செல்லா நின்ற ஆசிரியம்

பன்னுபார்த் திபவருசம் ஆடிமா சம்தேதி
பதினெட்டு வந்தநாளில்
பத்திய விசாகனாள் சுபநாம யோகமும்
பாலவம் அமிர்தயோகம்

தின்னியம தாய்ச்சுக்கிர வாரத்தி லேதிவ்விய
சீரங்க ராயர்சரிதம்
செப்புகிர தற்குநிக ரொப்பிடச் சொல்லுவேன்
செயிகின்ற யாதிரையதாம்

துன்னுலகில் விரிகின்ற காவேரி சறையுநதி
பிரையாகை துங்கபத்திரா
சொல்கிருஷ்ணா நர்மதா கங்கைநதி யமுனையும்
தூயகோ தாவரினதி

யின்னதிகள் தன்னிலே மூள்குவதை யொக்குமே
இதமாக வேயுரைத்தேன்
யினியபுகழ் சேர்கொங்கு தலைசைவளர் கன்னிநகர்
இலகுமண லூரன்மொளியே

சிவமயம். வசனம். பறாசத்தி கோயிலுக்கும் கீள்புரம் 8 வேலி விஸ்தீரணமதில் 6 அடி அகலம் 9 அடி நீளம் 11 ரடி ஆழம் குளி வெட்டி தீவளத்தினபின் ஆந்தைகுல காளியம்மன் வெண்டுவகுல வேலம்மாள் இருவரையும் பூசகுல சந்திராயி அளைத்து, நம்முடைய யெசமான் முத்துசாமிக் கவுண்டர் சிவலோக பிராப்தியடைந்தார். னானிருக்க மாட்டேன். தீக்குளி பாயிகிரேனென்றாள். அவர்கள் நாங்கழும் கூட தீய்ப்பாயிகிரோமென்றார்கள். மூன்று கை நெய் தேயித்து ஷ்தானம் செயிது சந்திறாயி குங்குமவர்னச் சேலையும், காளியம்மாள் மஞ்சப் பட்டும், வேலம்மாள் யெலுமச்சங்காய் வர்னப் பட்டும் உடுத்திப் புனுகு சந்தனம் குங்குமம் புஸ்ப்பமுந் தரித்து ஆபரணம் பூண்டு நெயில்க் கைதோயித்து நடுவீட்டி லப்பிவிட்டு மகன் சீரங்கறாயக் கவுண்டரையும் கொழுந்தன் சிதம்பர கவுண்டரையும் பாற்து வுங்களுக்கு பூந்திடத்துக் கோடிக்கும் கதியில்லையா வென்று கேட்டாள்.

சிதம்பர கவுண்டர் சிவப்புச் சேலை வெற்றிலை பாக்குக் கண்ணாடி விசிரி சந்தன குங்குமம் புஸ்பம் யெலுமச்சங்கனியும் கொடுத்தார். இசமான் வலதுபுரமும் மற்ற யிருவரும் யிடதுபுரமும் இருந்து வெற்றிலை தின்றார்கள். சீரங்கறாயக் கவுண்டர் கண்கலங்கிச் சிதம்பர கவுண்டர் அங்க வஷ்த்திரத்தால் கண்ணீரை துடைத்துத் தேற்றினார். இவர்கள் கன்னிபாடித் தலைவாசல் சாவடியிலிருந்தார்கள். நல்லராண்டி பெண்சாதி சின்னம்மாள், கோயில்பாளையம் எழுவறாண்டி மகள் உருமாயி, தேவிடியாள் அங்கமுத்து, நல்லா நாவிதன் பெண்சாதி வள்ளிப்பிள்ளையும், பறைக்காளி பெண்சாதி வஞ்சாள், மாறாழும் இவர்கள் தீயுக்குளிப் பாயப் புறப்பட்டார்கள். அப்போது காளிப் பரையன் தம்பி கண்ணப்பரையன், தாயே எங்களுக்கு யென்ன கதி யென்று கேட்டவனை நல்லறாண்டி மகன் கருமராண்டி ஒரு அறை அரைந்தான். அப்போது சந்தறாயி கவுண்டிச்சி நல்லராண்டியையும் அவன் பெண்சாதியையும் பாற்த்து யெனக்கு நீங்கள் மாமனாரும் மாமியாருமாக வேண்டும். ஆகையால் நீங்கள் முன்னே தீக்குளிப் பாயுங்களென்று சொல்லி சீரங்கறாய கவுண்டரைக் கூப்பிட்டு நல்லராண்டிக்கு அவன் பெண்சாதிக்கும் கோடி கொடுக்கச் சொல்லி அவன் வம்மிசமும் உன் வம்மிசமும் இந்தக் கோடி நடப்பித்து வரவேணும். அவனும் நிய்யுமாவென்று சொல்லிவிட்டு அவர்கழுக்குப் பச்சைப்பட்டு கொடுக்கச் சொல்லிவிட்டு வுன் தாயி தகப்பனாருக்கு ரத சோடினையும் யெங்கழுக்கு மூவருக்கும் குதிரை குளிப்பாட்டி மாலை சந்தனம் போட்டுக்கொண்டு வாவென்று சொல்லிவிட்டு தகடபாடிக்கு வுன் பெரிய தகப்பனாருக்கு சமாசாரம் தெரியவையென்று சொல்லிவையென்று பின்பு செய்ய வேண்டிய சீருகளைச் செயிது பிரேதமான முத்துசாமிக் கவுண்டரை ரதத்தில் வைத்து மூவரு மூன்று குதிரை யேரி நல்லறாண்டி அவன் பெண்சாதி முதலான பேருடனே வார்த்தியத்துடன் வாரபோது சீரங்கராயக் கவுண்டர் குமாரன் குமாரசாமியைத் தன்னுடன்

குதிரையில் வைத்துக்கொண்டு தும்பிலி பரந்து வார பெண்களுக்கு தம்பல மடிப்பிச்சுக் கொடுத்து மணலூரில் வந்து நம்ம கண்ணன் தாசன் வீட்டுக்குத் தென்கிளக்கில் படைக்கல வீடுகட்டச் சொன்னான்.

தீக்குலியின்மேல்க் கோயிலு கட்டச் சொன்னார். வுடனே ஒரு கன்னிப் பெண்ணுக்குச் சன்னத்தம் வந்து நல்லநாயகி என்ற செல்லாண்டியம்மனை நீங்கள் பிரேதத்துடனிருந்து தெரிசனம் காணக்கூடாதென்று சொன்னபடியால் பல்லக்கு முன்னே செல்ல பின்பு குதிரை செல்ல சீரங்கறாயக் கவுண்டர் மகள் வஞ்சியம்மாளைக் கூப்பிட அப்போது வெள்ளைக்கோயில் ஆந்தைகுலப் பிரமாயி என்பவள் மாமியார் தீக்குளிப் பாய்கிறதற்கு கூப்பிடுகிறாளென்று மகளை ஒளித்தாள். சந்தறாயி கோபித்து கண்ணனுக்கும் ஆண்டிக்கும் பெண் விருத்தியில்லையென்ரு சபித்தாள். பூச குலாதிபன் னான் பெண் கொடாது போனாலு மென் மகனுக்கு பெண் கொடுக்க வேணுமென்றும் இந்த சாபத்தை நீக்க வேணுமென்று காலைப் பிடித்தான். அதற்கு கன்னிமார் செய்யச் சொல்லிவிட்டு தீக்குளி முன்னே வந்து சீரங்கறாய கவுண்டரை தானம் கோதானம் அஸ்வதான முதலிய சோடசதானமுஞ் செய்யச் சொல்லி குலகுரு வள்ளல் சுவாமிக்கித் தானம் கொடுக்கச் சொன்னாள்.

பின்பு குமாரசாமியையும் வஞ்சியம்மாளையும் செல்லப்ப கவுண்டரைக் கையில் பிடித்து சீரங்கறாயா நீ தவமிருந்து பெற்ற பிள்ளை செல்லப்ப கவுண்டன் வுன் தம்பி சிரிய தாயார் மகன் னான் ஒரு வாக்குச் சொல்லுகிறேன். நல்லநாயகி அரியக் குரு பாதம் மரிய வுன் தகப்ப னரிய ஒரு காசிக்கு வாங்கின தொண்டி வுன் பெண்சாதி பெரமாள் வுண் பிள்ளையை ஒளித்தாள். நீ யதற்கு சம்பந்தப்பட்டவன். செல்லப்ப கவுண்டருக்கு பனிரண்டு கிறாமம் நீ கொடுத்து விடு யென்று சொல்லிவிட்டு சந்தறாயி குருவை பிரதக்ஷணம் செயிது சொற்கலோக பதவி கேட்டு விபூதி வாங்கித் தரித்துக் கொண்டு குளியை பிரதக்ஷணம் செயிது நல்லறாண்டியையும் உருமாயியையும் மேலே சொன்னபடி முன்னே அக்கினியில் பிரவேசிக்கச் செயிது யெலுமச்சன் கனியைக் காளியம்மாள் கையிலும் கண்ணாடியை வேலம்மாள் கையிலும் கொடுத்து யெசமானை நமஸ்கரித்து நடுவில்த் திரைவிட்டு அதின்பேரில் பிரேதத்தை வைத்து அப்போது பிரமாயிக் காலைப் பிடித்ததற்கு சத்தியம் தவிறாமல் யெனக்கு பிள்ளையில்லாதபடியால் மூலநூருக்கு பெண்கொடுக்க வேண்டுமென்று சொல்லிவிட்டு யிரண்டு பேருக்கும் பூந்திடத்துக் கோடியில்லாதபடியால் யிந்தக் கோயில் சிரிது னாள் கேவல மடையக்கடவதென்று அக்கினியில் வீள்ந்து சிவலோகப்ராப்த்தி அடைந்து விட்டார்கள்.

தகடப்பாடியிலிருந்து மகிடமுடி சூடிய மும்முடி நல்லதம்பி சூரிய மன்றாடியார் முதலான பேர்கழு வந்து பிரலாபித்துவிட்டு சகல விபரமும் சிதம்பர கவுண்டரால் தெரிந்துகொண்டு செய்ய வேண்டிய சகல காரியமும் செயிதுவிட்டு தீக்குளியின்பேரிலே சந்தறாயி சொன்னபடிக்கே கோயிலும் கட்டி செங்கர்ப்பிடை சுவாமிகழும் பிரதிஷ்டை செயிது பூசாரி நெவேத்தியமும் னடத்தினார்கள். பின்னரவர்கள் தங்களிடம் சென்று சுகமா வாள்ந்தார்கள். மேலே சந்தறாயி

கவிண்டிச்சி சொன்னபிரகாரமாய் சகல காரியமு நடந்தேரியது. ஏழு படைக்கலக்காரி சரித்திரம் முற்றுப் பெற்றது.

## படைக்கலம் நடத்தும் முறை

நாயற்றுக் கிளமை இராத்திரிக் கோயில் சுத்திசெயிது 5 நெயி தீபம் வைத்துப் பெருமாள் கோயிலுக்கும் வடபுரம் குட்டையிருக்கிறது. அதின்பேரில் அணி வைத்து அணி விபரம் தென்னம்பாளை செவ்வர்ளிப்பூ தாளமடல் யெழுமிச்சம்பள 6 தீபம் பழம் சீப்புடன் தேங்காய் தாலி கூரை ஆயித யெலுமிச்சம்பளம் குத்தி யிலைகளை பேளை மூடியில் வைத்து சீப்பு கண்ணாடி விசிரி குங்குமம் சந்தன புனுகு புஷ்பமு வைத்து இந்தப்படி 6 அணிவைத்து அதற்குத் தென்புரம் பச்சைக் குடிசைகட்டி அந்தக் குடிசை கட்டுகிரவரும் படைக்கலம் செயிகிரவர்களும் முகச்சவரம் செயிது கொள்ள வேண்டியது. படைக்கலம் செயிகிர பெண்களும் உபவாசம்மிருந்து 5 படி புழுங்கல் நெல்லரிசி சமைத்துக் காயி கரியும் சமைத்து வாத்தியத்துடன் அணிக்கும் படைத்துக் காகத்துக்கிட்டுக் க்காக மெடுத்தவுடன் படைக்கலம் வீடு திரந்து தீயிப்பாய்ந்தவர்கள் கட்டிஇருந்த நிரமுள்ள சேலை வாங்கி வைத்து வாத்தியத்துடன் கோயிலுக்குப் போயி ஆரு படைக்கலத்திற்கும் ஆடையாபரணந் தரித்து ஆரு சீலையும் வைத்து தனித்தனி குருக்கே 6 திரையிட்டு 6 இளநீர் கண் திரந்து பாணக்கம் பால் தையிர் பாக்கு வெற்றிலையும் தனித்தனி வைத்து தீபம் அணையாமல்க் கதவு சாத்தி படைக்கலத்துக்கு பூசை செயிது வாசலில் தோரணங் கட்டிப் பட்டு அல்லது மாத்து விரித்து ஒரு பச்சைச் சட்டியில் ஒரு படி அரிசி ஆறு வெல்லம் 6 வெத்திலை 6 பாக்கு வைத்து சட்டிக்கு விபூதி சந்தனம் குங்கும புஷ்ப்பமிட்டு குதிரை குளிப்பாட்டி துலுக்கும்படி மாலை சந்தனமிட்டு படைக்கலத்துக்கும் குதிரைக்கும் பூசை செயிது குதிரை முன்னே போகப் படைக்கலத்துக்கு மேல்வஷ்த்திரம் விரித்துபிடிக்க படைக்கலக்காரி செம்பில் சலம் கொண்டு மின்னே போக படைக்கலம் கோயில் வலம் வந்து அம்மை யளைக்கிர காட்டில் கல் பரம்பிருக்கிரது.

அவ்விடத்தில் ஒரு குட்டி வெட்டி அம்மை அழைக்கிரது. அவிடத்தில் தேங்காய் 6 சீப்புப்பழம் 6 யிளநீர் பாக்கு வெற்றிலை 6 யெலுமிச்சம்பழம் இவைகளை மாத்து மீதில்த் தோரணத்துக்குள் வைத்து குல தெய்வங்களுக்கு தீபம் கொடுத்து நம்மளுக்குப் பிந்திவந்த கன்னபுரம் கன்னடிய பாளையும் செல்லன்கூட்டம் சின்னப்ப கவுண்டர் மகள் மூலத்துரை வஞ்சியப்ப கவுண்டர் பெண்சாதி னாச்சம்மாள் வீரத்துவத்தால் தீக்குளிப் பாய்ந்தவள் ஆக யேழு படைக்கலம் அவளுக்கு ஊசிவர்னப்பட்டு பிரதிக்கமால் ஒரு கல் நட்டிருக்கும். மூன்றடி வடக்கே நகர்ந்து தீப தூபம் கொடுத்துப் பின் அம்மை அளைக்க வேண்டியது. பிரகு படைக்கலத்துடன் கோயில் வலம் வந்து வள்ளல் சுவாமியை முன் பூசை செய்யச்சொல்லி பின்பு ஆண்டி பூசை செய்யவும். 7வது படைக்கலம் அம்மை அளைக்கிரவிடத்திலிருந்து தயார் செயிது பிரத்தீகமான ஒரு உபவாசக்காரர் யெடுத்துவரவேண்டியது. 6 படைக்கலத்தின் விபரம் சீரங்கராய மன்றாடியார் 1, செல்லப்ப கவுண்டர் 2, ஆண்டி 3, தேவிடியாள் 4, நாவிதன் 5, பரையன் 6, ஆனால் சந்தறாயி கவிண்டிச்சி நல்லராண்டியும் உருமாயியு மாமநார்

மாமியாரென்றும் முதல்ல தீக்குளிப் பாயும்படியாயும் சொன்னபடியால் முந்தின படைக்கலம் ஆண்டியெடுக்க வேண்டியது. படைக்கலப் பூசையில் சந்திராயிக்கு வைத்த சாமான்களைப் பகர்ந்து பாதியை நாச்சம்மாழுக்கு வைக்க வேண்டியது. 5 வள்ள நெல்க் குத்திப் பொங்கலிட்டு ஆறு படையலிட்டு படைக்கலத்துக்கு பூசித்து படைக்கலக்காரிக்கு தீர்தம் திருநீரு கொடுத்து வீரமாத்தி மாலையைக் கழுத்திலிட்டு நமஸ்கரித்துப் பின் வீரமாத்தி செய்து முடிந்தபின் படைக்கலம் வீட்டுக்கு வந்து மோர்க்கண்ட நிவேத்தியம் உபவாசமிடவும். படைக்கலம் செய்யும் விபரம் முற்றுப் பெற்றது. சிலவு விபரம். புள்காவசனம் ரூ 4. அம்மை அழைக்கிர ரூ 14. கங்கணங் கட்ட சுவாமியாருக்கு ரூ 4. ஆண்டிக்கிக் கோடி வஸ்த்திர சோடி 1.வாயி போற்றி பூசை வஸ்த்திரம் 1.தேவரடிக்கி சிவப்பு வஸ்த்திரம் 1.பரையனுக்கு அம்மையழைக்கிர தோரணக்கிடாய் 1.பெரிய தோட்டிக்கி வாயிக் கட்டின வஸ்த்திரம் 1.

தோரணம் பிடிங்கி யீசானி மூலையில் ஆற்றில் விடவும். தீக்குளி பாய்ந்தவர்கழுக்கு யிதுவே கோடியாகையால் படைக்கல வஸ்த்திரங்களை அவரவர்கள் கட்டிக்கொள்ள வேண்டியது. நாவிதனுக்கு கோயிலுக்கு தென்கிழக்கு தீக்குளி பாய்ந்த சாம்பல் இருக்கிரது. அதன்மேல் ஒரு முள் வேங்கக்கால் நட்டு இருக்கிறது. அவனுக்குப் பணம் 3. தேவிடியாள் அங்கமுத்துக்கு படைக்கலச் சாமனம் குடுக்க வேண்டியது. பரையன் தீக்குளி யீசானியத்தில் கோயில் கருங்கல் நட்டுயிரக்கிரது. பண்டாரத்துக்கு பூசைதோரும் 4 ரூபாயி காணிக்கை வைக்க வேண்டியது. படைக்கல வீடு இல்லாத பச்சத்தில் பண்டாரத்துக்குப் பெரிய வீட்டில்ப் படைக்கல வைக்க வேண்டியது. ஏழு படைக்கலக்காரி செய்யுமுன் செல்லாண்டியம்மனுக்கும் களியாட்டம் செய்யவேண்டியது. ஏழு படைக்கலக்காரி துணை.

ரண்டு படைக்கலம் குட்டையில் வைக்க வேண்டியதில்லை. குடையில்ப் பூசை செயிது படைக்கல வீட்டில் கூரைக்கி சோரிட்ட பின் படைக்கல வீட்டில் படைக்கலம் 6 தயார் செயிது பின் சந்தறாயி படைக்கலத்தை இரண்டாய்ப் பிரித்து ஊசிவர்னப் பட்டுடன் அம்மையழைக்கிர விடத்தில் 7வது படைக்கலம் நாச்சம்மாழுக்குத் தயார் செய்ய வேண்டியது. முன் விபரப் படாமையால் யிரண்டாவது யெளிதியிருக்கிறது. சிவசெல்வி துணை. நல்ல நாயகி துணை. தெச்சணம் ஸ்ரீவில்லிபுத்தூர் திருநெல்வேலி நட்டாத்தி உபாத்தியாயர் குழந்தை யானந்தம் யெழுதிய கண்ணகுலப் பட்டையப் பிரிநகல். கரிவரதராஜப் பெருமாள் துணை.

# 25. பாசூர்ச் செப்பேடு - 2

கண்டீரவ நரசராயர் சீரங்கப்பட்டணத்தில் ஆட்சி புரியும்போது மேல்கரைப் பூந்துறை நாட்டில் உள்ள பேரோட்டில் இருக்கும் கொங்கு வேளாளரின் குருவாகிய ஞானசிவாச்சாரியார் இம்முடி அகிலாண்ட தீட்சிதர் அவர்கட்குக் கொங்கு வேளாளர்களில் பூந்துறை நாட்டவர் பலரும், குறுப்பு நாடு, மேல்கரை அரையநாட்டைச் சேர்ந்த சிலரும் குருக்களாக ஏற்றுக் கொண்டு ஒன்று சேர்ந்து எழுதிக் கொடுத்த பட்டயம்.

மேலே கண்ட கொங்கு வேளாளர்கள் உடல், உயிர், பொருள் இவைகளைக் குரு பாதத்துக்குக் காணிக்கை ஆக்கி இச்செப்பேடு மூலம் எழுதிக் கொடுத்துள்ளனர்.

மேற்கண்ட பகுதியிலிருந்து அவர்கள் குடிபெயர்ந்து எந்த நாட்டிலே எந்த ஊரிலே இருந்தாலும் ஆண்டுதோறும் தலைக்கட்டுக்கு னாகறம் 5 பணம் குருக்களுக்குக் கொடுக்க வேண்டும் என்றும், குருசுவாமியார் சஞ்சாரம் வந்தபோது சஞ்சாரக் காணிக்கை கொடுக்கவேண்டும் என்றும், குருவிடம் உபதேசம் பெறவேண்டுமென்றும், பாதபூஜை செய்ய வேண்டுமென்றும், சுவாமியார் ஆணைப்படி நடக்க வேண்டும் என்றும் எழுதிக் கொடுத்துள்ளனர்.

வாரிசு இல்லாத சொத்து மடத்துக்கு உரியதென்றும், காணிபெற்று அதிகாரத்துடன் வாழ்ந்தாலும், பிறரிடம் பணி புரிந்தாலும் சுவாமியாருக்குரிய கடமைகளைச் செய்வோம் என்றும் எழுதிக் கொடுத்தனர்.

இச்செப்பேடு பூந்துறை புஷ்பவனேசுவரர் பாகம்பிரியாள் சன்னதியில் எழுதிக் கொடுக்கப்பட்டது. இறுதியில் சுமார் 20 ஊரைச் சேர்ந்த சுமார் 125 பேர் கையொப்பமிட்டுள்ளனர். ஈரோட்டைச் சேர்ந்த நாக ஆசாரி மகன் அளகாத்திரி ஆசாரி கை எழுதி அடிச்சது என்ற குறிப்புக் காணப்படுகிறது. இச்செப்பேட்டை எடுத்துக்கொண்டு சென்று குருக்கள் சீடர்களிடம் இன்றும் காணிக்கை பெற்று வருகின்றனர்.

இச்செப்பேட்டில் குறிக்கப்பெற்ற பேரோட்டு தீட்சிதர்கள் பின் பாசூரில் குடியேறி வாழ்ந்தனர். இப்போது அப்பாசூர் மடம் திருவானைக் காவல் வடக்கு வீதியில் உள்ளது. அந்த மடத்திலிருந்து இச்செப்பேட்டு நகல் பெறப்பட்டது.

இச்செப்பேட்டிலும், பின்வரும் பாசூர்ச் செப்பேட்டிலும் காலக் குறிப்புக்கள் பொருந்தி வரவில்லை.

## மூலம்

ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாஹன சகாப்தம் 1258 கல்லியப்புதம் 4477 யிதுமேல் செல்லாநின்ற தாது வருசம் தை மீ 17 தேதி சுக்கில பச்சமும் வெள்ளிக்கிளமையும் பஞ்சமியும் மிருகசீருஷ நட்சத்திறமும் பாலவாகறணமும் பெத்த சுபதினத்தில் ஸ்ரீமது ராஜாதிராஜ ராசபரமேசுவரன் ராசகெம்பீறன் ஆனைகுந்தி சமஸ்தானத்தில் புக்கறாயறவர்கள் றத்தின சிம்மாசனரூடராய் பிறிதிவி சாம்பிறாச்சியம் அருளாநின்ற காலத்தில் சீரங்கப் பட்டணத்தில் கண்டீரவ நரசறாயர் துரத்தினத்தில் மதுறையரச னாளையில் மேல்கரைப் பூந்துறை நாட்டுக்குச் சேந்த பேரோட்டுக்குப் பிறதினாமதேயமான விருப்பாட்சிபுரத்திலே யிருக்கும் ஞானசிவாச்சாரியார் இம்முடி அகிலாண்ட தீக்ஷிதர் சுவாமியாற் பாதம் மறவாதவறான

மேல்கரைப் பூந்துறை நாட்டிற் காடை கோத்திரம், வெள்ளோடு சாத்தந்தை கோத்திரம், பயறன் கோத்திரம், நசையநூறு கண்ணன் கோத்திரம், செம்பன் கோத்திரம், பூச்சந்தை கோத்திரம், கூறை கோத்திரம், கீறை கோத்திரம், பாண்டியன் கோத்திரம், யீஞ்சன் கோத்திரம், யெழுமாத்தூறு ஊறாச்சிக்கோட்டை பனங்காடை கோத்திரம், செல்லன் கோத்திரம், காறி கோத்திரம், அனுமன்பள்ளி செல்லன் கோத்திரம், அனுவன்பள்ளி கூடலூரு பண்ண கோத்திரம், யீங்கூறு ஈஞ்ச கோத்திரம், தோடை கோத்திறம், முருங்கத்தொழுவு பெரிய கோத்திரம், திருவாச்சி ஓதாளன் கோத்திரம், அந்துவன் கோத்திரம், ஆந்தை கோத்திரம், பெருந்துறை சாகாடை கோத்திரம், கனகபுரம் எலவமூலை சாத்தந்தை கோத்திரம், காளமங்கலம் கண்ணன் கோத்திரம், ஊத்துக்குளி வண்ணக்கன் கோத்திரம், சத்தியமங்கலம் பில்லன் கோத்திரம், செம்பன் கோத்திரம், மொடக்குறிச்சி தூறன் கோத்திரம், காறி கோத்திரம், கிளாம்பாடி கண்ண கோத்திரம், கொளாநல்லி கொளாயன் கோத்திரம், கண்ணன் கோத்திரம், காகம் கண்ண கோத்திரம், பிடாறியூறு பெறழந்த கோத்திரம், கூற கோத்திரம், கண்ண கோத்திரம், கொல்லன் கோவில் பேரோடு வெண்டுவன், பண்ண கோத்திரம், கொடுமணல் பனங்காடை கோத்திரம், பாண்டியன், சேரன் கோத்திரம், மேல்கரைப் பூந்துறை நாட்டாரும், கிராமத்தாரும் கூடி எழுதிக் குடுத்த தலைக்கட்டுக்கு தாம்பற சாதனம்.

சாசனமாவது குருசுவாமியார் பாதத்துக்கு உடல் உயிறு பொருள் மூன்றும் குருபாதத்துக்கு தெத்தம்பண்ணி எழுதிக்குடுத்த தாம்பிற சாசனப் பட்டயம். நாங்கள் யெந்த நாட்டிலே யெந்த ஊருலே யிருந்தாலும் யெங்கள் கோத்திறத்தாள் தலைகட்டு|- ஒன்றுக்கு னாகறம் பணம் அஞ்சு வருஷம் பிறதி குடுத்து சஞ்சாறம் வந்தபோது சஞ்சாரக் காணிக்கைகளையும் அப்பணைப் படிக்கி ஒபதேசம் பாத பூஜை முதலானதும் பண்ணிக்கொண்டு யெங்கள் வமுசத்தாறு புத்திரபவுத்திர பாறம்பரியமாயி பாத சன்னிதானத்தில் தீட்சை மகாமந்திரம் ஒபதேசம் பண்ணிக் கொண்டு சுவாமியார் தெண்டினை கண்டினை ஆணை ஆக்கினை

அபராதத்துக்குள்பட்டு நடந்துகொள்வோமாகவும். அபுத்திறிகம் சொத்து மடத்துக்கு சேத்தி குடுப்போமாகவும். யெங்கள் கோத்திரத்தார் யெந்த நாட்டிலே ஊரிலே காணிவாங்கி அதிகாரம் பண்ணினாலும் குடித்தனம் பண்ணினாலும் சுவாமியார் பாதத்துக்கு நடந்துகொண்டு வருவோமாகவும்.

யிப்படிக்கு நடந்துவரும் காலத்தில் யிதுக்கு விகாதம் சொல்லாமல் பரிபால்னமாயி யெங்கள் வமுசத்தார் பயபத்தியாயி நடத்தி வந்தவன் சுகமாய் தனசம்பத்தும் தான்னிய சம்பத்தும் புத்திரசம்பத்தும் அஷ்டைசுவரியமும் ஆயுளாரோக்கியமும் தேவப்பிறசாதமும் குருப்பிரசாதமும் மேன்மேலும் உண்டாகி கல்லும் காவேரிப் பில்லும் பூமி சந்திராதித்தியாள் வரைக்கும் அகிலாண்ட ஈசுவரர் கடாக்ஷத்தினாலே சுகமாயிருப்பார்கள். யிந்தச் சாசனம் படித்துப் பார்த்தவர்களும், செவியில் கேட்டபேரும் சுகமாயிருப்பார்கள். யிதுக்கு விகாதம் சொல்ல குருநிந்தனை சொன்னவன் கெங்கை கரையிலே காறாம்பசுவையும் பிராமணாள்களையும் மாதாபிதாவையும் கொண்ண தோஷத்திலே போவாறாகவும். யிந்தப்படிக்கி யெங்கள் வமுசத்தாறனைவரும் சம்மதிச்சு பூந்துறை புஷ்பவனீசுவரர் சுவாமி பாகம் பிரியாள் சன்னிதானத்திலே சகிறண்ணியோதக தானமாயி எழுதிக் கொடுத்த தலைக்கட்டு தாம்பற சாசனம். பாகம் பிறியாள் சமேத புஷ்பவனீசுவர சுவாமி சகாயம். பாடகவல்லி சமேத சறுவலிங்கமூர்த்தி சகாயம். மரகதவல்லி சமேத மூவேந்திர சுவாமி சகாயம். தானபாலன யோர்மத்யே தாநாத் ஸ்ரயோநு பாலநம் தாநாத் ஸ்வர்க்க மவாப்நோதி பாலனாத் அச்சுதம் பதம். பூந்தறை சின்னத்தம்பிக் கவுண்டன், நல்லதம்பிக் கவுண்டன், பெரியதம்பிக் கவுண்டன், சாச்சி. வாறண வாசிக் கவுண்டன், சின்னவிநாயக கவுண்டன், வெள்ளோடு விசுவறாயக் கவுண்டன், கருப்பராயக் கவுண்டன், பழனிக் கவுண்டன், சென்னிமலைக் கவுண்டன், . . . நசியநூறு பெரியசெங்கோட நல்லதம்பிக் கவுண்டன், கொழந்த மன்னாடிக் கவுண்டன், வெள்ளப் பொறப்பன கவுண்டன், மூத்தமன்னாடிக் கவுண்டன், காசி கவுண்டன், ஆவடையாக் கவுண்டன், கொழந்தவேல் கவுண்டன், குப்பக் கவுண்டன், முத்துக் கவுண்டன், பழனி கவுண்டன், மோளக் கவுண்டன், மருதமலைக் கவுண்டன், பச்சியாக் கவுண்டன், அத்தப்ப கவுண்டன், குப்ப கவுண்டன், நல்லப்ப கவுண்டன், எழுமாத்தூரு கொமற சின்னய கவுண்டன், நல்லய கவுண்டன், அவினாசிக் கவுண்டன், முத்துராம கவுண்டன், கெங்காளி கவுண்டன், பொங்காளி கவுண்டன், காளியப்ப கவுண்டன், குப்ப கவுண்டன், ஊராட்சிக் கோட்டை அருத்தனாரிக் கவுண்டன், பழனிக் கவுண்டன்,

அனுவன்பள்ளி முத்துநல்லய்யன், பெரியமுத்துக் கவுண்டன், முத்துப் பெரியண பழனிக் கவுண்டன், சின்னாயி கவுண்டன், பழனிமலைக் கவுண்டன், காசிக் கவுண்டன், பெரிய ராக்கியாக் கவுண்டன், சின்னத்தம்பிக் கவுண்டன், யீங்கூரு கரும கவுண்டன், பழனிக் கவுண்டன், சென்னிமலைக் கவுண்டன், மருதமலைக் கவுண்டன், முருங்கத்தொழுவு கண்ணுடையாக் கவுண்டன், பெரியசெல்லப்ப கவுண்டன், சொக்கனாத கவுண்டன், முத்தப்ப கவுண்டன், றாக்கியாக் கவுண்டன், தப்புறாக் கவுண்டன், ராமன்ன கவுண்டன், திருவாச்சி பெரியபொங்காக் கவுண்டன், பெரிய காளியப்ப கவுண்டன், பொன்னே கவுண்டன், கருமாண்ட கவுண்டன், சோளியப்ப கவுண்டன், ஞானராசாக் கவுண்டன்,

பெருந்துறை செல்லப்ப கவுண்டன், நல்லே கவுண்டன், பழனிக் கவுண்டன், கருப்ப கவுண்டன், யெலவமூலை பெரிய சின்னய கவுண்டன், சின்னய கவுண்டன், காலிங்கராயக் கவுண்டன், வீரமலைக் கவுண்டன், பழனிக் கவுண்டன்,

காளமங்கலம் சின்னாயிக் கவுண்டன், பெரியண்ண கவுண்டன், நல்லப்ப கவுண்டன், குட்டிண்ணாக் கவுண்டன், ராசாக் கவுண்டன், முத்துக் கவுண்டன், வெள்ளக் கவுண்டன், கருப்ப கவுண்டன், கொழந்தவேல் கவுண்டன், வெத்திவேல் கவுண்டன், பெரிய செல்லப்ப கவுண்டன், ஊத்துக்குளி முத்து வேலாயுதக் கவுண்டன், பெரிய வேலன்ன குட்டியாக் கவுண்டன், குப்ப கவுண்டன், பழனிக் கவுண்டன், சத்திமங்கலம் செல்லப்ப கவுண்டன், கொழந்தவேல் கவுண்டன், வெத்திவேல் கவுண்டன், பெரிய செல்லப்ப கவுண்டன், மொடக்குறிச்சி கருமாண்டக் கவுண்டன், சின்ன முத்துக் கவுண்டன், பெரியவடம கவுண்டன், கொமறண்ண கவுண்டன், கிளாம்பாடி பாம்ப கவுண்டன் கொமரசாமி சின்னாக் கவுண்டன், பெரிய செங்கோட கவுண்டன், சின்னபழனிவேல் கவுண்டன், குப்புச்சி கவுண்டன், முத்துக் கவுண்டன், கொமரவேல் கவுண்டன். வெத்திவேல் கவுண்டன்,

கொளாநல்லி பெரிய கொமராக் கவுண்டன், சின்னப் பொங்காளிக் கவுண்டன், குப்ப கவுண்டன், பெரிய குமாற கவுண்டன், முத்துரங்க கவுண்டன், திருமலைராயக் கவுண்டன், குப்பண கவுண்டன், வெள்ளைக் கவுண்டன், பெடாரியூர் பெரியதம்பிக் கவுண்டன், சென்னிமலைக் கவுண்டன், குப்பண கவுண்டன், கொல்லன்கோவில் பேரோடு கொமறநல்லய கவுண்டன், கொமற சின்னய கவுண்டன், முத்துக் கருமண கவுண்டன், முத்து ராக்கியாக் கவுண்டன், . பெரிய செங்கோட கவுண்டன், சீரங்கராய கவுண்டன், கொடுமணல் பெரியசிவமலை கவுண்டன், குட்டிண கவுண்டன், சின்னய கவுண்டன், பொன்னயன், காகம் திருமலை கவுண்டன், பழனிக் கவுண்டன், வேலப்ப கவுண்டன் யிந்தபடி சகல சனங்கள் கையினாட்டு.

யிவர்கள் சம்மதியில் சாசனம் யெழுதினவன் யீறோட்டு னாகஆசாரி மகன் அளகாத்திரி ஆசாரி கயி எழுதி அடிச்சுது.

# 26. பேரோடு கரிச்சிக்குமாரர் செப்பேடு

இந்தப பட்டயம் ஒரு வழக்கின் பொருட்டு நீதி மன்றத்தில் இருப்பதால் திருமலைப் பூசாரியின் வழியினராக இப்போது பூசை செய்யும் பேரோடு செல்லப்பம்பாளையம் இராமசாமிப் பூசாரியிடம் உள்ள நகலைப் பெற்று இங்குப் பதிப்பிக்கப் பெறுகிறது.

கி. பி. 1547 ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் தேதி பூந்துறை நாட்டுப் பேரோட்டில் இருக்கும் கரிச்சிக்குமாரர் கோயில் பூசை செய்யும் திருமலை பூசாரிக்குக் கொங்கு வேளாளர்களில் வெண்டுவன் குலத்தார், பண்ண குலத்தார், பெருங்குடியான் குலத்தார் ஆகிய மூவரும் எழுதிக்கொடுத்த செப்பேடு.

திங்கட்கிழமை தோறும் கரிச்சிக்குமார சுவாமிக்குப் பூசை செய்யவேண்டும் என்றும், திருவிழாவில் முப்பாடு, பச்சைப் பந்தல் ஆகிய உரிமை வெண்டுவன் குலத்தாருக்கும், கட்டியம் செய்தல் பண்ண குலத்தாருக்கும், திருக்கொடிப் பாத்தியம் பெருங்குடியான் குலத்தாருக்கும் உரியது என்று நிர்ணயம் செய்யப்பட்டது. இன்றும் இதே முறைமை நடந்துவருகிறது.

பூசாரி தன் முதல் வாரிசுக்குப் பட்டம் கட்டிப் பூசை செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டனர்.

ஆண்டுதோறும் தலைக்கட்டு ஒன்றுக்குக் குடித்தனம் செய்பவன் இரண்டு பணமும், மற்றவர் ஒரு பணமும் சுவாமிக்கு அளிக்க வேண்டும் என்றும் முடிவாகியது.

## மூலம்

### சிவமயம்

கரிச்சிக் குமாரர் கன்னெஞ்சியம்மன் துணை. சாலிவாகன சகாப்பதம் 1470 கலியுக சகாப்தம் 4650 இதன்மேல் செல்லாநின்ற பிலவங்க வருஷம் புரட்டாசி மாதம் 1ஆம் தேதி சுக்கிரவாரம் கூடிய சுபயோக சுபதினத்தில் பூந்துறை நாடு பேரோடு கிராமத்தில் இருக்கும் கரிச்சிக் குமார சுவாமிக்கு படித்தர நைவேதனம் செய்ய வாரம் ஒருதரம் சோமவாரத்தில் செய்துவரும்படியும் முப்பாடு பச்சைப்

பந்தல் வெண்டுவன் குலத்துக் கவுண்டர்களுக்கும், கட்டியம் செய்ய பண்ண குலத்துக் கவுண்டர்களுக்கும், திருக்கொடி பாத்தியம் பெருங்குடியான் குலத்திற்கும் என்று கீழே கண்டவர்கள் திருமலை பூசாரிக்கு எழுதிக்குடுத்த செப்பேடு சாசனப்பட்டயம்.

பெருங்குடி கோத்திரம் தேவணம்பாளையம் வெள்ளைக் கவுண்டன், காளிபாளையம் கருமாண்டக் கவுண்டன், பொன்னாளிபாளையம் திருமலை கவுண்டன், சின்னிய கவுண்டன், மோளபாளையம் நல்லாக் கவுண்டன், நல்லதம்பிக் கவுண்டன், சுக்குட்டிபாளையம் சின்னிய சுவுண்டன், பொங்கியாக் கவுண்டன், காளிபாளையம் வீரப்ப கவுண்டன், கருமாண்டக் கவுண்டன், சொக்கநாதவுரம் கொமர கவுண்டன், படியாண்டிபாளையம் கருமாண்டக் கவுண்டன், அகத்திலிங்கம் பாளையம் மீனாட்சி வலசு ராமைய கவுண்டன் மகன் திருமலை கவுண்டன், கொமார கவுண்டன், படியாண்டிபாளையம் வீரண கவுண்டன், படியூர் முத்து வேலப்ப கவுண்டன், பேரோடு கிராமம் தயிர்பாளையம் கருமாண்டக் கவுண்டன், கரட்டுப்பாளையம் பழனிக் கவுண்டன், கங்காபுரம் வெள்ளைக் கவுண்டன், ஒண்டிக்காரன்பாளையம், நல்லாக் கவுண்டன், ஆலத்துச் சீர் தளிகை கிராமத்தைச் சேர்ந்த உடுக்கம்பாளையம் திருமலைக் கவுண்டன், மலையாண்டி கவுண்டன், பொங்கியாக் கவுண்டன், கரிச்சிய கவுண்டன், கரியமாணிக்க கவுண்டன், சீரங்க கவுண்டன், விளாமரத்துப்பட்டி பொன்னிய கவுண்டன், கொடுங்கியம் பழனிக்கவுண்டன், கரிச்சிய கவுண்டன், கரிய மாணிக்க கவுண்டன், சர்க்கரைக் கவுண்டன், தாச கரிச்சிய கவுண்டன், நல்லூார் சர்க்கரைக் கவுண்டன், பொன்னாண்டாக் கவுண்டன், சின்னண்ண கவுண்டன், செல்லப்பம்பாளையம் நல்லமுத்துக் கவுண்டன், பொங்கியாக் கவுண்டன், வந்தப்ப கவுண்டன், ஊஞ்சவேலாம்பட்டி கருப்ப கவுண்டன், கோட்டூர் சின்னண்ண கவுண்டன், ஆனைமலை கவுண்டிய கவுண்டன், புதூர் அனுமந்த கவுண்டன் இத்தாதி பேர்கள் சேர்ந்து எழுதிக்குடுத்த செப்பேடு சாசனப் பட்டயம்.

பூசாரி வகையறாக்களில் முதல் வாரிசுக்குப் பட்டம் கட்டிப் பூசை செய்து வரும்படியும், கரிச்சிக் குமார சாமிக்கு படித்தரம் செய்ய வருஷா வருஷத்துக்கு தலைக்கட்டு ஒண்ணுக்கு குடித்தனம் செய்பவன் ரண்டு பணமும், ஆள் பேருக்கு ஒரு பணமும் குடுத்து சுவாமிகாரியம் நடைபெற வேண்டியதென்று நாங்கள் அனைவோரும் எழுதிக்குடுத்த சாசனப் பட்டயம். இந்த காரியம் நடக்க வேண்டியதை நடத்தும்படி திட்டம் செய்து இருக்கப்பட்ட காரியத்துக்கு இந்தக் கட்டளையை நம்ம வம்மிசம் குல கோத்திரம் உள்ளவரைக்கும், கல்லும் காவேரியும் உள்ளவரைக்கும், சந்திர சூரியர் உள்ளவரைக்கும் இந்தக் காரியம் நடைபெற வேண்டியதென்று நாங்கள் அனைவோரும் எழுதிக்குடுத்த சாசனப் பட்டயம்.

இந்தக் காரியம் நடக்க வேண்டியதை ஆராவது நிந்தனை செய்த பேர்கள் நூறு பசுவைக் கொன்றால் ஒரு பிராமணனைக் கொன்றதாம், நூறு பிராமணரைக் கொன்றால் ஒரு சிசுவைக் கொன்றதாம் என்னும் விபரத்துக்கு உள்ளாவதும் தவிற இதற்கு நிந்தனை செய்வார் அனுபவிக்க வேண்டிய சாபம். காசி கங்கா நதியில் ஒரு காராம்பசுவைக் கொண்ண தோஷத்திற்கும், விளக்கணைந்து சாப்பிடுவோர் செல்லும்

நரகத்திற்கும் அடையக்கடவர்கள் என்று இச்சாபம் இடப்பட்டிருக்கிறோம். கரிச்சிக் குமார சுவாமிக்கு பூசை செய்கிறவர்களில் இஷ்டம்போலவே கிரமப்படி சோமவார பூசை நடந்து கொள்ள வேண்டியது என்று அனைவோரும் நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. கரிச்சிக் குமாரர் பாதாரவிந்தமே துணை. லட்சிப்பார். அகிலாண்டேசுவரி துணை. உ.

# 27. பணிமலைக் காவலர் பட்டயம்

சேலம் மாவட்டம் திருச்செங்கோடு மலைக்காவலர் கோயில் பூசாரியார் சுப்பிரமணியம் அவர்கள் வசம் இருக்கும் ஓலை.*

ஒரு வாழ்த்துப் பாடலுடன் இப்பட்டயம் தொடங்குகிறது. அடுத்து அர்த்தநாரீசுவரர், வேலவர் புகழ் பாடும் பகுதிகள் உள்ளன. அடுத்து மன்னர் மெய்க்கீர்த்தி கூறப்படுகிறது.

1722ஆம் ஆண்டு திருச்செங்கோடு பணிமலைக் காவலர் கோயில் பூசை செய்கின்ற நல்லதம்பிப் பண்டாரம் ஏறருள்முத்து துலுக்கப் பூசாரிக்கு நிபந்தம் அளிக்கப் படுகிறது. வேலவருக்குத் திருமாலை கட்டளைக்கு வீட்டுக்கு ஐந்து வீரராயன் பணம் தருவதென்றும் முடிவரகிறது.

இக்கொடையைக் கொடுத்தவர்கள் அனைவரும் கொங்கு வேளாளரில் கண்ண குலத்துக் கவுண்டர்கள் ஆவர். அவர்கள் கன்னிவாடி, கண்ணனூர், பழமடம் முதலிய ஊரைச் சேர்ந்தவர்கள்.

### மூலம்

ஹரிஓம் - அப்பிலியபட்டி - 1

வைய்ய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய வன்பர் விளங்குக
சைய்வ நன்னெறி தான்தழைத் தோங்குகத்
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே

அருளா லாதிநந்திகேசுர சுவாமியா ரனுக்கிரகத்து திருவாய் மலர்ந்தருளினபடி கிறேதா துவாபுற கலியுக திறேதா யுகத்தில் விறும்ம அற்சனை பண்ணுகையில் விறும்ம கிரியும், விற்ம்ம தீர்த்தமும், விறுமீசுரருமானவர். திரேதா யுகத்தில் விஷ்னு அற்ச்சனை பண்ணுகையில் விஷ்னுகிரியும், விஷ்னு தீர்த்தமும்,

* தேனோலை எண். 22, அக்டோபர் 79, பக். 21_24.

விஷ்ணீசுரருமானவர். துவாபுர யுகத்தில் துற்க்கை யற்சனை பண்ணுகையில் துர்க்கை கிரியும், துற்கை தீர்த்தமும், துற்கீசுரருமானவர். கலியுகத்தில் நாகம் அற்சனை பண்ணுகையில் நாககிரியும், நாக தீர்த்தமும், நாகீசுரருமானவர்.

இப்படி அனேகம்ஞ் சதுர்யுகம் பூசை கொண்டருளிய அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயக தேவர்தேவன் தேவசிகாமணி தேவோத்தமன் தேவரசர் சறுவபூமன் பத்திப்பிரியன் பக்தவத்சலன் பார்பதிவல்லவன் பார்பதி பிராணநாயகன் முத்திக்கி வித்தகன் முக்கண்ணீசுரன் நின்றகோல மழகியநிமலன் நேரமொரு பஞ்சவற்னப் பிரகர்சன் திருமுகவோவன் தெண்டாயுத வஷ்த்தன் செம்புத்தீவிற் திராவிட தேசத்திற் தொண்டமண்டலத்தில் காஞ்சி மானகரிற் திருக்கம்பையாற்றில் பார்பதி தேவி யற்த்த பாகம் பெற வேண்டிய யரிய தவசு பண்ணுகையில் அப்போது காட்சி கொடுத்தருளிய கொங்கு மண்டலத்திற் தெஷ்சன கயிலாச ஸ்ரீநாக பறுவதத்தில் அற்த்தபாகங் கொடுத்தருளிய அற்த்தனாரீசுரருடைய தம்பிரானார் அவருடைய ஸ்ரீமற்குமாரராகிய விப்பிரப் பிறியன் விசுவமூர்த்தி சுவபாலன் குக்குடத்துவசன் குங்குமவற்னன் கெவுரி திருமகன் கெணபதிசகோதரன் சுரலோக லட்சாதி லட்சன் தேவசிறை மீட்ட தேவர்சேனாபதி பக்கறை பகட்ட ரக்கர் பட்டிட பதைக்க வீறுகொக்கரித் தமர்களித்த குக்குடத் துவசன் சக்தி வட்டமேட்டிரட்டித் தாவிச் சிரகாலடிக்குத் தோகைப் பிரதாப துரங்கன் வள்ளி தேவியானை மனோகரன் சிட்டிக்கும் விறுமாவைச் சிசு திண்டாட குட்டிக் குடுமியை நெட்டை வாங்குங் குமரர் கெண்பீரன் துஷ்ட்டச் சமணரை வெட்டிக் கழுமிசை வைத்த சுப்பிரமண்ணியசுவாமியார் திருவுளப் படிக்கி,

சுவஷ்திரிமன் மகாமண்டலேஸ்வரன் மேதினி மீசுரகண்டன் ஒருகுடைக்கீ ழுலக முழுதாண்டவன் கண்டநாடு கொண்டு கொண்ட கொண்ட நாடு கொடாதவன் எம்மண்டலமுந் திரைகொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன் ராசமாற்த்தாண்டன் ராசாக்கள்தம்பிரான் கண்டர்கண்டன் கட்டாரிச் சாழுவன் துஷ்ட்டர் கண்டன் துயரமோகந் தவிழ்த்தான் ஒட்டிய சுரதானன் துலுக்கர் தள விபாடன் அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாராயணன் பூறுவ தெஷ்ண பட்சிம்ம உத்திர சமுத்திரத்திலுள்ள தேவரருள் கருணை பெருகி வாளாநின்ற அப்பாச்சிராயர் மகாதேவராயர் கிஷ்ணராயர் ரனுமந்தராயர் வீரவசந்தராயர் கட்டாரி சாழுவராயர் வெங்கிட்டராயர் அவ்வுதரனராயர் பாப்புராயர் மீனாட்சிராயர் விறுதுபெற்றராயர் சேரன் சோழன் பாண்டிய ராயர் முதலாதிய தேவாதி தேவர்களறியும்படிக்கி திருச்செங்கோட்டிலிருக்கும் அற்த்தனாரீசுர சுவாமியாருக்கு பாகம்மான பார்பதி மனமகிழ் குமாரசுவாமியாருக்கு ஆதிகேசுரர் வயிரவன் தண்டீசுரர் பனிமலை காவல் சாமியார் பூசை அற்சனை புரிகின்ற நல்ல தம்பி பண்டாரம் ஏறருள்முத்துத் துலுக்கப் பூசாரிக்கி,

சுபகிருது வருஷம் வைய்யாசி மாதம் சுக்கிற வாரம் விசாக நஷ்சத்திரத்தில் உபயமான திருமாலைக் கட்டளை நடப்பிவிக்கத் தக்கதாக கண்ணியம்மன் அரியதக்கதாக கண்ணிபாடி கண்ணர் கண்ணன் குலத்தில் செங்கோட கவுண்டன், அற்த்தனாரிக் கவுண்டர், குமர கவுண்டன், சின்னய கவுண்டன், சென்னிமலை கவுண்டன், சுப்பிறமன்னியக் கவுண்டர். துலுக்க கவுண்டன், பழமடம் அற்த்தனாரிக்

கவுண்டன் இவர்கள் ளெல்லோருங்கூடி செங்கோடனுக்கு திருமாலை கட்டளைக்கி வைக்க வீட்டுக்கு வீரராயன் பணம் வீட்டுக்கு அஞ்சு பணமென்று கட்டளையிட்டு அரிச்சந்திர மகாராசாவைப் போல பொய்யாத சத்திய வாக்குநாலே சொல்லி நடப்பி விச்ச தருமத்தை,

ஆராமொருத்தர் அந்த மகா புண்ணிய தரும்ம கீர்த்திகளுக்கு நின்தனை சொன்னதே யானால் கெங்கைக் கறையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்தில்ப் போவான். அரவதாம் படியில் விளக்கு வைக்காத பாவ தோஷத்திலே போவான். அது பாவ புண்ணியமறிந்து யாதாமொருவன் நடந்து கொண்டதே யானால் மகாகாசியில் தானம் பண்ணின பலன் புண்ணியஞ் சேர்வார்கள். உ சிவமயம். அற்த்தனாரீசுர சுவாமியர் றட்சிப்பார் உ.

# 28. காஞ்சிபுரம் மடத்துப் பட்டையம்

எழுமாத்தூர் வேலம்பாளையம் புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் தொகுத்த சுவடிகளிலிருந்து இப்பட்டயம் கிடைத்தது.

நந்தன வருடம் வைகாசி மாதம் 11ஆம் தேதி காஞ்சிபுரத்திலிருக்கும் நாட்டார் மடம் சேசிகாவல் பண்டாரத்துக்குப் பழையகோட்டைப் பட்டக்காரர் காரையூர் கொற்றவேல் வீரசங்கிலி நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் மடம் கட்டிக் கொடுத்து தொடர்ந்து பூசை செய்துவர வருடம்தோறும் 40 பொன் கொடுத்துவர ஒப்புக்கொண்டு எழுதிக்கொடுத்ததை இப் பட்டயம் தெரிவிக்கிறது.

## மூலம்

நந்தன வருடம் வைய்யாசி மாதம் 11 ஆம் தேதி நகரங் காஞ்சிபுரம் காலாண்டார் தெருவிலிருக்கும் நாட்டார் மடம் சேசிகாவல் பண்டாரத்துக்கு காங்கய நாடு பழயகோட்டை காரையூர் கொற்றவேல் வீரசங்கிலி நல்லதம்பிச் சக்கரை மன்றாடியார் எழுதிக் கொடுத்த தரும சாசனம்.

யென்னவென்றால் உங்களுக்குப் பெரிய நாட்டு மடங்கட்டி அதில் சிவபூசை மகேசுர பூசையும் ஸ்ரீ ஏகாம்பிரநாதருக்கு வில்வார்ச்சனையும் நிரந்தரம் நடக்கும்படி வருஷா வருஷம் ஒண்ணுக்கு நாற்பது பொன் குடுத்து சந்தான பாரம்பரியமாயி நடப்பித்து வரக்கடவோமாகவும்.

இந்தப்படி சம்மதித்து தர்ம சாசனம் யெழுதிக் கொடுத்தோம். பழயகோட்டை காரையூர் கொற்றவேல் வீரசங்கிலி நல்லதம்பிச் சக்கரை மன்றாடியார் கையெழுத்து. இதுக்கு சாட்சி ஸ்தலம் உள்ளூர் தெய்வசிகாமணி பண்டாரம், நாட்டு முருகப்ப முதலியார், கோனேரி நாடு சபாபதி முதலியார். எழுதின நன்மைக்கு கைதந்தா பிள்ளை கையெழுத்து. ஸ்தலம் உள்ளூர் தெய்வசிகாமணி பண்டாரம் அறிவேன். நாட்டு முருகப்ப முதலி அறிவேன். கோனேரி நாடு சபாபதி முதலி அறிவேன்.

யிது எழுதினவன் காரையூர் தலத்துக் கணக்கு நல்லயபிள்ளை மகன் சடைய பிள்ளை கையெழுத்து உ.

# 29. பொருளந்தைகோத்திரச் செப்பேடு

இச்செப்பேடு சென்னை எழும்பூர் அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது. மைய அரசின் தொல்பொருள் துறைக் கல்வெட்டுப் பிரிவினர் படி எடுத்துள்ளனர்.*

முத்துவீர சொக்கலிங்க நாயக்கர் ஆட்சிக் காலத்தில் ருத்ரோத்காரி ஆண்டு ஆனி மாதம் 5 ஆம் தேதி கொங்கு வேளாளரில் காங்கேய மன்றாடியார் லோக காங்கேயன், கீழ்க்கரைப் பூந்துறை நாடு, ஏழூர் நாடு, பருத்திப்பள்ளி முதலிக் கவுண்டர், அவர் தம்பி வேலக் கவுண்டர் உட்படக் கொங்கு வேளாளரில் பொருளந்தை குலத்துக் கவுண்டர்கள் பலரும், காடையூர், தோட்டக்குறிச்சி, குப்பச்சிக் கவுண்ட நல்லூர், முத்தூர், கருமாபுரம் 60 காங்கேயரும் கூடிப் பொன்னாலிப் புலவனுக்குப் பொருளந்தை குல மெச்சன் என்று பெயர் கொடுத்து 200 குழி நன்செயும் கொடுத்து 15 பொன் கொல்லை ஆகியன கொடுத்துச் சாசனமும் பொறித்துத் தந்தனர்.

பெருங்குடிக்கு 1 மிடாக்கம்பும், சிறுகுடிக்கு 7 வள்ளக் கம்பும், கலியாணத்துக்கு 1 பணமும், சேவுக்கு 2 அரியும், காட்டுக்கு 7 கட்டுக் கருதும் கொடுப்பதாகவும் எழுதித் தந்துள்ளனர்.

கொடுக்காதவர்கள் வீட்டில் ஜப்தி செய்யவும் ஒப்புக் கொண்டனர். மையக் கல்வெட்டுத் துறையினர் கருமாபுரத்தைத் தருமாபுரம் என்று படித்துள்ளனர். தட்டுவடிவில் இச்செப்பேடு செய்யப்பட்டுள்ளது. அதன் விளிம்புகளிலும் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

### மூலம்

கருமாபுரம் செல்லாண்டி அம்மன், பெருமாள், கொங்கணாபுரம் செல்ல

---

* **ARE (A) 10 of 1936.** சேலம் மாவட்ட நீதிபதி அவர்களால் அருங்காட்சியகத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது என்று ஆண்டறிக்கையிலும், இராசிபுரம் துணைத் தாசில்தாரால் வழங்கப்பட்டது என்று செப்பேட்டுப் படியிலும் குறிக்கப் பெற்றுள்ளன.

அம்மன், ஏழூறு பண்ணை அம்மன், தேசிநாயனன், பிள்ளைகலத்துச் செல்லாண்டி அம்மன், எரணாபுரம் பெருமாள், மாறிஅம்மன் துணை. சறுவலோக தேவாதிகள் துணை. கருமாபுரம் பொருளந்தை கோத்திரத்துப் பட்டையம்.

உ சுவதி ஸ்ரீமன் மகாமண்டலேசுபரன் மேதினி மீசுரகண்டன் ஒறு கொடைக்கீள் ளுலகத்தையாண்டவன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதர்ன் எம்மண்டலமும் திறைகொண்டருளிய றாசறாசாக்கள் றாசாதம்பிறான் உத்துங்கறாயர் விருப்பாச்சிறாயுர் யெறிதிம்மிறாயர் வெங்கிடபதிறாயர் திருமலைறாயர் சிக்கணறாயர் அச்சுதறாயர் ஆனைகுந்திப்பதிறாயர்ப் பிறவிடதேவறாயர் அல்லமாகாப் பிறவுடதேவ மகாறாயர் யிப்படி றாச்சிய பாறம் இலையிலை தவறாயகண்டன் மூவறாயகண்டன் ஒட்டிய சுறதவு விபரீத விபாடன் அசுபதி கெசபதி னவகோடி னாறாயணன் பூருவ தெச்சண பட்சிம வுத்தர சத்த சமுத்திராதிபதி றாசபரமேசுவரன் றாசமார்த்தாண்டன் றாசநாயகன் றாசபுங்கவன் றாசமனோகரன் ராசகோலாகலன் றணமுக சுத்தவீரன் விற்பன்னன்.

அறிவுக்குள் ளகத்தியன், பொறுமைக்குத் தற்ம்மன், புகளுக்கு மன்னன், சத்தியத்துக்கு அரிச்சந்திரன், சாத்திரத்துக்குச் சகாதேவன், அளகுக்கு அனங்கன், வாக்கு [காண்] டிபன், பறிக்கு நகுலன், கரிக்கு வேந்தன், வில்லுக்கு விசையன், மல்லுக்கு வீமன் பெருமையும் பாற்க சங்கிலியும் படைத்த ராசாதிராசன் றாசமாற்தாண்டன் றாசகோமான் சேற சோள பாண்டியன் றாச்சியபாறம் பன்னி அறுளாறிண்ட காலத்திலே வீறலட்சுமி விசையலச்சுமி பாக்கியலச்சுமி வீரப்ப முதலியார் வீரப்ப முத்துக் கிருஷ்ணப்ப முதலியார் முத்து வீர சொக்கலிங்க னாயக்கனவர்கள் றாச்சியபாரம். பண்ணி செங்கோல் மனுநீதி தவறாமல் செலுத்துகையில்,

கலியுகச் சகாற்தம்ஞ் செல்லாநின்ற காலத்தில் ருத்திறோத்காரி வருஷம் ஆனி மாதம் 5ந் தேதி குருவார னாள் கொங்கு வெள்ளாள காங்கய மன்னாடியார் பாண்டியன்ங் கையில் விறுதுகொண்ட 1 - லோக காங்கயன் பொருளந்த குல கீழ்கறை பூந்துறை னாட்டிலிருக்கும் முதலிக் கவுண்டனவர்கள் தம்பி வேலகவுண்டன், பெறியாக் கவுண்டன், பச்சையாக் கவுண்டன், மலையாக் கவுண்டன், காங்கயக் கவுண்டன், ஏழூறு னாட்டிலிருக்கும் அப்பயாக் கவுண்டன், நல்லகுட்டிக் கவுண்டன், நல்லிக் கவுண்டன், சின்னயக் கவுண்டன், அருள்வேல கவுண்டன், கருப்ப கவுண்டன், கட்டிக் கவுண்டன், சுப்றமணிய கவுண்டன், பறித்திபல்லி னாடு குடியிறுக்கும் குப்ப கவுண்டன், மோகை நல்லாக் கவுண்டன், நாகப்ப கவுண்டன், நல்லய கவுண்டன், காடையூரிலிருக்கும் காங்கய கவுண்டன், மன்னாடிக் கவுண்டன், ஆண்டி மன்னாடியார், முத்துக் கவுண்டன், அத்தப்ப கவுண்டன், தோட்டக் குறிச்சியிலிருக்கும் மலைய கவுண்டன், சின்ன மலைய கவுண்டன், குப்பச்சி கவுண்டன் நல்லூரிலிருக்கும் அவனாசிக் கவுண்டன், காசிலிங்கக் கவுண்டன், முத்து கவுண்டன், சென்னிமலைக் கவுண்டன், பிடாரிக் கவுண்டன், நாகப்ப கவுண்டன், முத்தூரிலேயிருக்கும் சின்னப்ப கவுண்டன், குமாரசாமிக் கவுண்டன், குப்பச்சிக் கவுண்டன், சின்னய கவுண்டன், ரங்கய கவுண்டனவர்கள் யித்தண்டத்தாருங்கூடி கருமாபுரம் அரவது காங்கயருங்கூடி

கருமாபுரம் நல்லாக் கவுண்டன் குமாரன் முதலிக் கவுண்டன் தீத்தாப் பெறுமகன்

பொன்னாலிப் புலவனுக்கு கருமாபுரம் பொருளந்தைகுல மெச்சனெனப் பேறுங் குடுத்து யிரனூறு குலி நஞ்சையும் பதிநஞ்சு பொன் கொல்லையும் மன்ன மானியம் விட்டுச் சாதனம் அடிச்சுப் போட்டோம். பெரும்குடிக்கு ஒறுமிடாக் கம்பு, சிறுகுடிக்கு ஏழு வெள்ளக் கம்பு, கலியாணத்துக்கு ஒறு பனமும், சேக்கு இரு அரியும், காட்டுக்கு ஏளு கட்டுக் கறுதும், அறி சுவந்தரம் அழிவு னாளியும் யிந்த பிறகாரத்துக்கு நடக்கத் . தக்கதாக கட்டலையிட்டோம். சந்திராதித்தர் உள்ளவரைக்கும் நடக்கத்தக்கதாக கட்டலையிட்டோம். யிந்தத் தர்மத்தை ஆதாமொறுவன் அகடவிகடம் பண்ணி அளித்ததே உண்டானால் கெங்கைக் கரையிலே காராம்பசுவைக் கொண்ண தோசத்தில் போகக் கடவானாகவும். யிந்தப் பட்டயத்துக்குத் தப்பாமல் நடந்த பேர்கள் பிதிறாதிபதி ஆர்ய தர்மம் புண்ணியவாங்களாவார்களென்ன யித்துண்ட . . . . . . . மாக அயிசுவரிய முடையறாயிருப்பார்கள்.

யிந்தப்படிக்குக் கம்பும் கலியாண பணமுங் குடுக்க மாட்டோமென்ற . . . வீட்டில் மங்கலந் தவிழ்த்து வெங்கல மெடுத்து வாங்கிக் கொள்ளச் சொல்லிக் கட்டளையிட்டோம். சந்திராதித்த ருள்ளவரைக்கும் நடக்கத் தக்கக் கட்டளையிட்டோம். யிதுக்கு சாசியம் முளசித் தம்பல அய்யனவர்கள். வய்யாபுரி நயினார் பொருளந்திர குருக்களய்யனவர்கள். யிதுக்கு மதுரை மீனாச்சி அம்மன் துணை இருக்கவும். அற்த்தனாரீசுபரன், மலைகாவாள் சுவாமி சிவகாமி அம்மன் அத்தனூரு அம்மன் உ.

# 30. வரகுண்ணாய் பெருங்குடிச் செப்பேடு

சேலம் மாவட்டம் நாமக்கல் அருகே உள்ள வேட்டம்பாடி என்னும் ஊரில் அ. பழனிச்சாமிக் கவுண்டர் என்பவரிடம் இச்செப்பேடு உள்ளது.

இப்பட்டயம் புடாரமங்கலம் பெருங்குடியார் பச்சநாச்சிக் கவுண்டர், அம்மையக் கவுண்டர் ஆகியோருக்குச் சேங்குடி நாட்டார் கட்டியகவுண்டர், குறிச்சிக் கவுண்டர், வெளியூர் செம்பாக் கவுண்டர் ஆகியோர் எழுதிக் கொடுத்ததாகும்.

திருப்பாதூர் அகத்தீசுவரர் கோயிலில் தேர்த் திருவிழா நடத்திப் பொங்கல் வைத்துப் பிரசாதம் வழங்கும்போது கோயில் மேளத்தார்களுக்கும் மேற்படிப் பெருங்குடியர்குலக் கவுண்டர்களுக்கும் சில உரிமைகள் பற்றித் தகராறு மூளுகிறது.

மேளத்தார்கள், கவுண்டர்களில் ஒருவர் தம் பெண் குழந்தைக்குப் பொட்டுக் கட்டி விட்டே பிரசாதம் பெறவேண்டும் என்கின்றனர். அரசரிடம் வழக்குச் செல்லுகிறது. ஒரு பெண்ணை விலைக்கு வாங்கிப் பொட்டுக்கட்டி விடுமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். அவ்வாறு விட்ட பெண்ணை மேளத்தார்கள் கொன்று விடுகின்றனர். அரசர் அழைத்தபோது வரகுடன் சென்றதால் வரகுண்ணாப் பெருங்குடியர் என ஆயினர்.

பின்னர் பெருங்குடியர் வாழவந்தி நாட்டில் குடியேறினர். அதற்கு உதவியாக இருந்த சேங்குடி நாட்டார், நாட்டாக் கவுண்டர் ஆகியவர்கட்குப் பல்வேறு உதவிகளைச் செய்தனர். பிழைகள் மிகுந்துள்ள பட்டயம்.

கலியுக சகாப்தம் என்ற சொல் கலியுக சங்கற்பம் என எழுதப்பட்டுள்ளது. செப்பேட்டில் எழுதியுள்ள காலம் கி. பி. 1441 ஆகிறது.

---

1. சண்முகப் பிரகதம், தேனோலை 33, சூலை 82, பக். 4 - 6

2. அ. பழனிசாமி, பொன்னர் சங்கர் வரலாறு, பக். 26 - 28.

## மூலம்

**அழகநாச்சி அம்மன் துணை.**

கலியுக சங்கற்பம் 4542 வருஷம் மேல் செல்லாநின்ற வெகுதான்ய வருஷம் ஆடி மாதம் 28 தேதி புடாரமங்கலத்தில் இருக்கும் மகாறாயறாய ஸ்ரீ பச்சநாச்சிக் கவுண்டன், அம்மையப்ப கவுண்டன், சேங்குடி நாட்டாற் கட்டிய கவுண்டன், குரிச்சி முத்துக் கவுண்டன், வெளியூர் செம்பாக் கவுண்டன் இவர்களுக்குச் செப்பேடு பட்டயம் எளுதிக் கொடுத்தபடி அந்தச் செப்பேடு தெய்வாறங்களில் இருந்தது. அந்தப் பட்டயம் யாது என்னவென்றால்,

திருப்பாதூர் அகஸ்தீசுவரர் சுவாமி திருவிழா திருத்தேர் நடக்கிறமென்னியாவில்' நடந்துவரும்போது பிரசாதம் பட்டு பரிவட்டம் மரியாதைகள் நடந்துவரும் வழக்கத்தை அந்தக் கோயில் மேளத்தான் நிதானியான கவுண்டன் என்றால் வருகிற தேர்த்திருவிழாவிலே ஒரு வகுப்பு வரிசை பெற்றுப் போக வேண்டிய தேர் தவிதும் தினசேரி சாதம் பொங்க வேண்டிய தென்குறதுக்கிறது. அப்படி சாதம் பொங்கிறதாகிருந்தால் ஞன் மகளைப் பொட்டுக்கட்டி கோயிலுக்குச் சேவுகம் செய்தால் சாதம் வரும்யென்று சொல்ல அது விசையமாய் நாங்களும் [கைக்காளனான்] மேளத்தாறும் விவகாறம் செய்து கொண்டதில் மகாறாசாவிடத்தில் போயி பிறாது சொல்லி கொண்டதில் றாசாவானவற் ஞன் மகளை பொட்டுக்சுட்டி விடாமல் போனால் ஒரு பெண்ணை விலைக்கு வாங்கி கோயிலுக்குப் பொட்டுக் கட்டி விடும்படி சொன்னார். அந்தப் படிக்கி பொட்டுக் கட்டின பெண்ணை வஞ்சகங்களினாலே மேளத்தார்கள் கொன்று விட்டார்கள். நமக்குக் கோயில் சாதம் கிடைக்காமல் போய்விட்டது. திருவினையின்படி தெய்வச் செயலென்று இருந்தோம்.

அப்படியிருக்கும் காலத்தில் சாமிக்கு கொடியேறி திருவிழா நடத்துவதற்கு காரியஸ்தாள் சகலத்துக்கும் வந்து கோவில் சாமியை வரங்கேட்ட விடத்தில் சாமி ஆகாசமாய் வந்து நம்மிட புள்ளை காணியாளன் பச்சைநாச்சி கவுண்டன் அம்மையப்ப கவுண்டன் இவர்கள் இல்லாமல் உத்திறவு கொடுப்பதில்லை யென்று சாமியார் திருவிளம்பத்தினார். ஆ-சமாசாரம் றாசாவுக்கு அருக்கை பண்ணினார்கள். றாசா எங்களை அழைத்து வறசொன்னாற். றாசதானி சேவுகற் வந்து எங்களை அழைத்தார்கள். ஆக்காலத்தில் நாங்கள் மூணு பேரு வறகு அடித்து எங்கள் மேல்லெல்லாம் வறகுத் தவுடு அண்டியிருந்தது. அந்தப்படியே போனவிடத்தில் றாசா எங்கு நல்ல வசனம் சொல்லி கோயிலுக்குப் போக உத்தரவு கொடுத்தார்கள். அந்தப்படி கோயிலுக்கு வந்தயிடத்தில் சாமி வந்து உனக்கு யிந்த அவஸ்தை வந்ததென்னா. இநிமேல் யிந்த வறகைக் கைகளினால் தொடக் கூடாதென்று நம்பிக்கை வாங்கிக் கொண்டு வறகு தின்னாப் பெருங்குடி யென்னும் பேரு கொடுத்து திருக்கொடியேரி வறமும் தந்து அந்தப்படி யிருக்குற நாளையில்,

அந்த மேளத்தான் றாசாவை அடுத்துக் கொடுக்கிரதர்க்கா உத்தேசித்து தொளில் நினைத்திருந்தான். அப்பிடியிருக்கிற நாளையில் அது சமாசாரம்

எங்களுக்குத் தெரிந்து இதற்கு என்ன செய்கிரதென்று ஆலோசனை செய்து நம்முடைய ஷேநாதிபதி கோசிபதி ஈங்குடி நாட்டார்களிடத்தில் போனால் யிந்த ஆபத்தைக் காற்ப்பார்கள் யென்று சொன்னார்கள். அந்தப்படி நாட்டார்களைக் கண்டு கேட்டவிடத்தில் எங்களைக் கார்க்குறோம் என்று நாட்டுக் கூட்டம் கூடி எங்கள் பிறகே வந்து பதுங்கி இருந்தார்கள். வந்த சேவுகனுக்கு சாப்பாடு கொடுத்து விசாரித்து திட்டப் படுத்தினோம். மாகுறுக்கிநி பதினைந்து நாழிகையில் நம்மள் களிஞ்சியத்திளிருந்து திறவியங்களை எடுத்து கடாமாட்டு மேல் பொதி எடுத்து குஞ்சு குழந்தைகளை எல்லைக்கு மடிசுப் பூட்டிவிட்டுத் திரும்பி போயி கோட்டையேரிக் குதிச்சு அந்தப்பாழிக்காங் குருவாக்கிரி லைகழம் பண்ணி மருபடி கோட்டையேரி யிவெந்து வருகிடந்து அந்த அரிமனையார் சமாச்சாரம் கேட்டு பின்னாலே துடந்து வந்து வண்டியை மீட்டார்கள்.

நாங்கள் எதிர்த்துச் சண்டையிட்டு வெட்டி துரத்திடபத்துக்கு வதைத்தோம். யிந்த நாட்டார்கள் சேனத்தில் மூன்று பேர்கள் போனார்கள். யிப்படிப் பிரகாசப்பட்டு கொள்காணி வாங்கிக் கொடுத்து ஆதிறித்தபடியால் நம்மள் ஜனங்கள் கீள்கரை மேல்கரை தென்கரை யிதற்கு உட்பட்ட பேர்கள் வீடு ஒன்றுக்கு வருஷம் ஒரு தடவை வருத்தினை நாட்டாற் கவுண்டற்களுக்குக் கொடுக்கிர வருமானம் என்னவென்றால் தொட்டிக்கி ஒரு மாடு, பட்டிக்கு ஒரு ஆடு, தாளிக்கு ஒரு உருண்டை வெண்ணையும், உலுப்பைக்கு நவதானியமும், கலியாணத்துக்கு அஞ்சு பணமும், ஒரு பானை சோரும், ஒரு தாளி பருப்பு, ஒரு படி நெய்யும் யிந்தப் படிக்கி குதிரை குளாம்பு பட்டதோ அங்கு அங்கு கால் காணி மேல் நாட்டு அரசனுக்கு பட்டயம் கட்டளையிட்டறுளியப்படி. பச்சைநாச்சி கவுண்டன் அம்மையப்ப கவுண்டன் யிவற்கள் முதலான பேருங் குடியாரனைவறும் மேல் நாட்டு றாசனுக்கு பட்டையம் கட்டளையிட்டு கொடுத்தோம். யிந்தப் படிக்கி கல்லும் காவேரியும் புல்லும் பூமியும் உள்ளளவும் சந்திர சூரியர் உள்ளளவும் அகஸ்தீஸ்பர சாமி அயிலூர் திருவாலிநாத சாமி சாச்சி. புரியூர் காவடநாதற் சாச்சி. கரூர் பசுபதியம்மா சாச்சி. கங்கை காவேரியம்மா சாச்சி.

இதுக்கு யாதாமொருவர் யிடம்கேடு நினைத்தால் வம்மிசம் கறையத்து போவார்கள். தந்தாயைக் கொன்ற பாவத்தை யடைவாற்கள். குருவைக் கொன்ற பாவத்திலே போவாற்கள். காசி கெங்கைக் கறையில் காறாம்பசுவை கொன்ற பாவத்தில் போவார்கள். இந்தப்படிக்கி பச்சைநாச்சி கவுண்டன். அம்மையப்ப கவுண்டன் கையெளுத்து.

முத்துறாம கவுண்டன் கையில் கொடுப்பது.

# 31. ஆவுலப்பம்பட்டிப் பட்டயம்.

வித்துவான் இரா. சா. மயில்சாமி அவர்கள் எழுதிய கட்டுரை ஒன்றிலிருந்து இப்பட்டயம் எடுக்கப்பெற்றது.*

வாரக்கநாட்டு எல்லையில் இருக்கும் கரியகாளி அம்மனுக்குப் பார்த்திப வைகாசி 15 ஆம் தேதி வெள்ளிக்கிழமை தேரோட்டம் நடத்துவதற்குப் பல மக்கள் கூடி முடிவு செய்தனர்.

காணியாளன் பவளத்தாக் கவுண்டரும் பத்துப்பேரும் அம்மன் திருவுளம் கேட்டுத் தேரோட்டத்திற்குச் சம்மதி பெற்றனர்.

ஆவுலப்பம்பட்டி பெரியாக் கவுண்டர், நல்லிக் கவுண்டர் இருவரும் நாம் இருவரே உள்ளோம். இங்குள்ள மற்றவர் யாவரும் பாளையப்பட்டு என்று யோசித்தனர். எப்படித் தேரோட்டுவது என்று எண்ணினர்.

பவளத்தாக் கவுண்டன் கனவில் சுவாமி தேர் ஓட நரபலி கொடுக்க வேண்டும் என்று கேட்டது. எல்லோரும் பறையன் உருமன் வீடு சென்று அவனை நரபலி பற்றிக் கேட்கின்றனர். மற்றொரு பறையன் சின்னான் இச்செய்தி கேட்டு ஊரைவிட்டே போய்விடுகிறான். உருமன் கவுண்டர்களின் வேண்டுகோளுக்கு இசைகிறான்.

உருமன் தன் மனைவியைப் பலி கொடுக்க முற்பட்டான். தேர் ஏறியும் உருமன் மனைவி சாகவில்லை. வாரக்க நாட்டுக்கு உருமனையே காணியாளன் ஆக்கிப் பல உரிமைகளும் கொடைகளும் கொடுக்கின்றனர். நிலமும் கொடையாகக் கொடுத்தனர். நரபலி கொடுக்கும் வழக்கம் முன்பு இருந்தது. என்பதை இச்செப்பேடு விளக்குகிறது.

மூலம்

திரிபுரம் எரித்தருளிய தேவர்கள் பணிந்த சிங்காரி, திங்களுமறா சடைச்சி,

---

* வித்துவான் இரா. சா. மயில்சாமி, இராமகிருஷ்ண விஜயம், பவ-பங்குனி (15/3) பக். 108-110.

துங்க்மா பத்தினி, துடியிடைச்சி, ஓதிய உத்தராட்சி, உத்தண்ட எல்லைக் கரியகாளியம்மன், யெதுபூசை மகாபூசை மனுசபலிகொண்ட மகாதாய்.

அக்கறாயர் சென்னறாயர் வீமறாயர் சீரங்கராயர் யிப்படி துரைத்தனம் ஆன நாளையிலே கிரேதாயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகம் இந்த நாலு யுகமுங்கண்ட கரியகாளியம்மன் வாரக்கநாட்டு எல்லையிலேயிருக்கும் கரிய காளியம்மனுக்குத் திருக்கல்லியாணம் பார்த்திப வருஷத்தில் வையாசிமாசம் 15 தேதியில் வெள்ளிக்கிழமை யண்ணைக்கு கிறாமத்தாரெல்லாரும் கூடி தேரோட்டம் வைக்கிறோமென்று அம்மனைத் திருவுளம் கேட்டு நல்ல உத்தரவு கொடுத்து பத்துப் பேருக்குஞ் சம்மதியாச்சுது. இதற்குக் காணியாழன் பகழத்தாக் கவுண்டன் அவனைச் சேர்ந்த பத்து வீட்டுச் சனமும் வந்து ஆவுலப்பம்பட்டி நரியேறிச் சவாரிபண்ணும் பெரியாக் கவுண்டன், காட்டுப் பண்ணாடி நல்லிக் கவுண்டன் யிவர்கள் கூடி யோசனை செய்து,

நாமள் யிருக்கப்பட்டது 2 வீட்டுக்காரர். யிருக்கிறவர்களெல்லாம் கம்பளமும் பாளையப்பட்டு இருக்கிறது. அப்போ கிறாமத்துக்குத் தேரோட்டி வைக்கிறோமென்று தெரியப்படுத்தினாங்கோ. அப்படி மூணுநாள் இருக்க சுவாமி சொப்பனீத்திலே தச்சொரூபமாய் வந்து அதைக் காணியாழன் பகழத்தாக் கவுண்டனிடத்திலே சொன்னதாக அவன் விடிஞ்சு நாலு பேருங்கூடி ஆத்தாள் வந்து நமக்கு மனுசபலி கொடுக்காமல் தேறு ரதம் -பிடிக்கப்படாது என்று நாலுபேரிடத்தில் சொன்னான். நாலு பேரும் யோசனை செய்து ஆரைக் குடுக்கலாம் என்று நம்ம வீட்டிலே பிள்ளை குட்டி யிருக்குதா யிப்படி மதி மயங்கி ஆலோசனையாய்க் கண்ணீர் கண் கலங்கி யேங்கியிருக்கிற வேளையிலே பறைய உறுமன் வழவுக்குப் பத்துப் பேரும் வந்து கூட்டத்தைக் கண்டு கைதொழுது சரண சுவாமி நமக்கு உத்தரவு. நம்மட யெனமானம் வேண்டிய முஸ்தேதி தருவிக்கிறதற்கு உத்தரவும் வெத்திலை பாக்கும் குடுக்க வேணுமென்று கேள்கிற போது ஆகட்டும் உறுமா நீ வெத்திலை பாக்கு கேள்க்குறது சந்தோஷந்தானே ஆத்தாள் ஆனவள் வந்து மனுசபலி கொடுக்காமல் ரதம் பிடிக்கப்படாது என்று யென் சொப்பனத்தில் சொல்லியிருக்கிறாள். இதற்கு வயணம் என்னவென்று கேட்டார்கள்

சாமி நான்யென்ன சொல்லப்போறேன். அடியேன் அது யெங்களுக்குத் தெரியாது என்று சொன்னான். ஆனால் அதுக்கு நீயே குடுக்கிறாயோ நாங்களுமே குடுக்கட்டுமோ யில்லாத போனால் தேரை நிறுத்திப் போடலாமோ சொல்லென்று கேட்க, நாங்கள் ரெண்டு வீட்டுக்காரர் யிருக்கிறோம். நான் வளவுக்குப் போய் சின்னானைக் கேட்டு வந்து சொல்லுகிறேன். அவனிடத்திலே போய் சொல்ல யிந்த ஊரும் வேண்டா நீ ஒரு வீட்டுக்காரனே யிரு என்று சொல்லிப்போட்டு அவன் அந்த றாத்திரியே பிள்ளை குட்டியெல்லாம் கூட்டிக்கொண்டு போயிட்டான்.

மறுபடி உறுமனாகப் பட்டவன் வந்து நானே அந்தத் தாய்க்கு மனுஷ பலியும் நானே எருமைக் கிடா பலிக்கு நானேயென்று உறுதி சொல்லிப்போட்டான். யிந்தச் சமாச்சாரம் பாளையக்காரருக்குத் தெரியப்படுத்தினோம். பாளையக்காரர் ரொம்பவும் சந்தோஷம் ஆச்சுதென்று சொன்னார்கள். அந்தப்படியே மூணு நாளும்

ஒருசந்தியிருந்து பிருசனுக்கும் பெண்சாதிக்கும் தக்கதாய் நீ யின்னம் நமக்குப் பதிலாக ஒரு குடி கலியாணம் பண்ணிக்கோ. நம்மையே அந்தத் தாய்க்கு மனுஷ பலி கொடுத்திடு என்று மூணு நாள் ஒருசந்தியிருந்து. ரதத்தை யோட்டிவையுமென்று சொன்னாள். அந்தப்படிக்கு அவளையே மனுசபலி கொடுத்து ரதத்தையும் பூசை செய்து உறுமப் பரையன் பெண்சாதி யிறுவருக்கும் தீர்த்தமும் திண்ணீரும் கொடுத்து நாலு மூலையும் விழுந்து கும்பிட்டு கழுத்தில் மாலையும் போட்டுபோகையில் வலம்பிரி இடம்பிரியாய் கொட்டு முளக்குடனே சுத்திவந்து சகலமான பேரும் சுகமாயிருக்க வேணுமென்று கும்பிட்டு பாளையக்காரர்காலிலே விழுந்து கும்பிட்டதுக்கு எலுமிச்சங்கனியும் கைவஸ்த்திரமும் குடுத்து அனுப்பினார்கள்.

அங்கிருந்து வந்து வண்டி காலிலே விழுந்து கும்பிட்டு தாயே யென்னைப் பச்சித்துக்கொள் என்று கும்பிடுகிறபோது ரதம் நெறு நெறு என்று ஆறு வண்டியும் அவள் கால் கைகள் சேதமாகாமல் அவள் முதுகிலே நடந்து வந்து நின்றது. தேருக்கு வந்த சனங்கள் சகலமான பேரும் அறிவார்கள். துறைகளை காணியாளன் பகழத்தாக் கவுண்டனையும் நரியேறிச் சவாரி பண்ணும் பெரியாக் கவுண்டனையும் நல்லிக் கவுண்டனையும் கும்பிட்டு அவளை யெளுப்பித் தீத்தமும் திண்ணீரும் கொடுத்து சந்தோஷப்பட்டு அவளுக்கு மோகன மாலையும், உறுமனுக்கு இரண்டு கைக்கு தக்கக் கடகமும், பட்டுக்கரை வேஷ்டியும் கொடுக்கிறேனென்று சம்மதித்தார்கள். அதற்கு அந்த உறுமப் பரையன் சாமி நமக்கு அதெல்லாம் வேண்டியதில்லை. நமக்குச் சீவனம் பண்ணுகிறதிற்கு என்ன மார்க்கமுண்டோ அதுக்கு உத்தரவு கொடுக்கவேண்டும். ஆனால் ஆவுலப்பம்பட்டிக் கிறாமத்திற்கும் வாரக்க நாட்டுக்கும் நீடூழி காலமும் நீயே காணியாழனென்று சாசினப்பட்டயம் எழுதிக்குடுத்து,

இவனுக்கு நாடு ஊரு அறிய குடிபடையும் பாளையக்காரரும் கூடி யோசனை பண்ணி அம்மன் கோயிலுக்கு மேல்புறத்தில் பள்ளக்காடு 7 வள்ளக்காடு மானியமுங் குடுத்து உறுமனுக்கு 50 ரூபாய் சம்மானமும் குடுத்து அவன் பெண்சாதிக்கு வண்டிக்கரைச் சேலையும் கொடுத்து இந்த ஆதிக்கத்துக்கு நீயே பிள்ளையென்று வாக்குக் குடுத்து பகழத்தாக் கவுண்டன், நரியேறிச் சவாரிபண்ணும் பெரியாக் கவுண்டன், காட்டுப் பண்ணாடி நல்லிக் கவுண்டன், காப்பு கம்பளமும் குடிபடை பத்தும் பாளையக்காரரு முள்பட எழுதிக்குடுத்த சாசனப்பட்டயம்.

யாதாமொருத்தர் இதை மெய்யென்றவர்கள் சத்தியலோகம் சிவலோகம் தெய்வலோகம் அடைவார்கள். இதைப் பொய்யென்ற பேர்கள் விஷமுத்தி பிடித்து ஏழு காராம் பசுவைக் கொண்ண பாவத்தில் சேருவார்கள். இந்தச் சாசன பட்டயம் எழுதினவர்கள் பெருங்கருணை பிள்ளை கய்யெழுத்து. கரிய காளியம்மன் லச்சிக்கவும். பூசைக்கு 15 பணம்.....(பட்டயம் முடியவில்லை)

# 32. கீழ்க்கரைப் பூந்துறைநாட்டுப் பட்டயம்

திருச்செங்கோடு அ. முத்துசாமிக் கோனார் அவர்கள் தொகுத்த பட்டயங்களில் இதுவும் ஒன்று.* அவர் நடத்திய 'விவேகதிவாகரன்' ஏட்டில் வெளிவந்துள்ளது. திருச்செங்கோட்டுக்குப் புகழ் சேர்க்கும் சுந்தரசோழர் செப்பேடுகளைக் கண்டுபிடித்தவரும் இவரே.

31-12-1734 ஆம் ஆண்டு கீழ்க்கரைப் பூந்துறை நாட்டில் உள்ள 32 ஊர்களில் 18 ஊர்களைச் சேர்ந்த அக்கிரகாரத்தார், நாட்டுக் கவுண்டர்கள், காணியாளக் கவுண்டர்கள், மற்றக் கவுண்டர்கள், குடியானவர், கணக்குப் பிள்ளைகள், ஓபளி பாருபத்தியக்காரர்கள், சேனபாகர் இவர்கள் அனைவரும் கூடி அர்த்தநாரீசுவரருக்கும், சுப்பிரமணியருக்கும் கார்த்திகை அன்று உச்சிக் காலக் கட்டளையை ஏற்று நடத்த ஏற்பாடு செய்ததை இச்செப்பேடு விளக்குகிறது.

கிராமம் ஒன்றுக்கு 6. பொன் 5 பணம் கொடுப்பதாக ஒப்புக் கொள்ளுகின்றனர். இப்பட்டயத்தைச் சிவராம ஆசாரி எழுதியுள்ளார்.

( 18 ஊர்கள் போகக் கீழ்க்கரைப் பூந்துறை நாட்டின் ஏனைய 14 ஊர்கள் இதேபோன்ற திருப்பணி செய்த செப்பேடும் ஒன்று உண்டு)

மூலம்

ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1656 மேல் செல்லாநின்ற ஆனந்த வருஷம் தை மாதம் இரண்டாந்தேதி ஸ்ரீமத் ஆத்திரேய கோத்திரம் மைசூர் சிங்காசனாதீசுர மகா-ள-ள-ஸ்ரீ கிருஷ்ணராஜ துர்க்காதிபத்தியம் ராஜஸ்ரீ சஞ்சிவேட்டத்து ராஜாவையனவர்கள் அப்பணைபடிக்கு காணிக்காரர் சம்மதப்படிக்கு,

கீழ்கரைப் பூந்துறை நாட்டில் மோரூர் தகடப்பாடி மணலி ஆனங்கூர் குமரமங்கலம் படைவீடு கூத்தம்பூண்டி கத்தாரி சித்தளந்தூர் பள்ளிபாளையம் இருப்புலி காவல்குறிச்சி கருமாபுரம் மோடமங்கலம் வட்டூர் தேவணாங்குறிச்சி திருமங்கலம் சமயசங்கிலி ஆகக் கிராமம் பதினெட்டும் இதைச் சேர்ந்த அக்கிரகாரம்

* தேனோலை, இதழ் 25, சனவரி 80, பக். 47-48.

இந்தக் கிராமங்களிலே இருக்கிற நாட்டுகவுண்டர்கள் காணியாளக்கவுண்டர்கள் பின்னும் இருக்கிற கவுண்டர்கள் குடியானவர்கள் தலத்துக் கணக்குப்பிள்ளைகள் ஒபளிபார்பத்தியக்காரர்கள் சேனபாகர் சகலருங்கூடி சம்மதிச்சு திருச்செங்கோட்டில் அர்த்தநாரீசுவர் சுவாமியாருக்கும் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமியாருக்கும் திருக் கார்த்திகை திருநாளுக்கும் உச்சிக்காலக் கட்டளைப்படித்தர தீபாராதனைகட்கும் கிராமம் ஒன்னுக்கு ஆறு பொன்னும் அஞ்சு பணமுமாக வருஷப் பிரதியாகத் தப்பாமல் கொடுத்து நடத்திக் கொண்டு வருகின்றோமெனச் சகலரும் சம்மதிச்சு எழுதிக் கொடுத்த தாம்பிர ·சாசனம்.

இந்தத் தர்மம் சந்திராதித்தர் உள்ளவரைக்கும் புத்திர பௌத்திர பாரம்பரியமாக நடத்திவருவோமாகவும் இந்தத் தர்மத்தை யாதாமொருவர் பரிபாலனம் பண்ணி நடத்தி விச்ச பேர்களுக்கு சுவாமியார் அர்த்தபாக தரிசனையும் அஷ்டைசுவரியமும் கொடுத்து ரட்சிப்பார். இந்த தர்மத்துக்கு விகாதம் நினைச்ச பேர் கங்கைக் கரையிலே கோகத்தி பண்ணிண தோஷத்திலே போவார்கள். அதுவறிந்து தர்மத்தைப் பரிபாலனம் பண்ணின பேர்கள் சுவாமியார்கள் கிருபை பெற்று சுகமாய் இருப்பார்கள். செங்கோடர் துணை. இந்த சாசனம் குருக்கள்மார்வசம் கொடுத்தோம். சிவராம ஆசாரி கையெழுத்து.

# 33. பூந்துறைநாட்டார் மேலோலை

இது சென்னை அடையாறு உ. வே. சுவாமிநாதய்யர் நூலகத்தில் அவர்கள் தொகுப்பில் உள்ளது. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடான 'கல்வெட்டு' முதல் இதழில் வெளியிடப்பெற்றது.*

மதுரை முத்துவீரப்ப நாயக்கர் ஆட்சிக்காலத்தில் கொங்குத் தாராபுரம் சீமையில காங்கய நாட்டுப் பழையகோட்டைப் பட்டக்காரர் சீமையான காரையூருக்கும், மேல்கரைப் பூந்துறை நாட்டு அறச்சலூருக்கும் எல்லைத் தகராறு ஏற்பட்டது.

பட்டக்காரர் வஞ்சியங் குளத்திலும், அறச்சலூரார் சேனாதிபதி பாளையத்திலும் தங்களுடைய படை ஆட்களை நிறுத்தினர். சண்டை ஏற்பட்டுப் பலர் மரணமடைந்தனர்.

இதைக்கண்ட அரசு அலுவலர்களும், மற்றும் சிலரும் மேற்கண்ட எல்லைத் தகராறைத் தீர்த்தனர். 1617 ஆம் ஆண்டு ஒப்பந்தமும் கையெழுத்தாயிற்று.

தாராபுரம் நாயக்க அதிகாரி திம்மப்ப முதலியார் யானை மேலும், மற்றவர்கள் குதிரை மேலும் ஏறிக் கொண்டு போய் எல்லை நிர்ணயம் செய்தனர். பூந்துறை நாட்டு ஊரார் வேளாளர், வேட்டுவர் ஆகியோர் கையொப்பமிட்ட ஓலையைப் பட்டக்காரருக்குக் கொடுத்தனர்.

இதை மீறுவோர் 1200 பொன் அபராதம் செலுத்தி எல்லையும் இழக்கவேண்டும் என்று எழுதப்பட்டுள்ளது. பலர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர்.

## மூலம்

சுவஸ்தி ஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரியராய விபாடன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதான் மூவறாய கண்டன் கட்டாரிச் சாளுவ மீசுரகண்டன் துட்ட நிற்கிற சிட்ட பரிபாலன்

---

* ஆனந்த, சித்திரை (14-4-1974) இதழ் I, பக். 6-9.

எம்மண்டலமும் யீளமும் யிளங்காபுரியுந் திறைகொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுர னிராசாமாத்தாண்ட னிராசவல்லவன் ராசபுங்கவன் ராசகேசரி ராசராச நவரற்றின நாராயணன் துலுக்கர்தள விபாடன் துலுக்கர் மோகந் தவிள்த்தான் யிரணது பரராமன் துஷ்ட்ட நெஷ்ட்டூர கொட்டர் கோலாகலன் மதியாத மன்னர் மகுடஞ் சிதறப் பதிசூறை கொள்ளும பரசுராமன் அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாராயணன்,

அங்க வங்கமர் கலிங்கர் கேரளர் மகதர் வங்களர் துலுக்கர் கெவுடர் மத்தகர் கோச்சர் அவுணர் மறவர் மலையாழர் கொங்கர் கம்பளர் குமுதர் குச்சரர் கொந்தழர் ரெட்டியர் தெலுங்கர் துளுவர் துலுக்கர் சலஅட்டகர் மறாட்டகர் மறாடர் நம்மிக்கர் மபோசர் கோசலர் ஆரியர் பப்பரர் கன்னாடர் சோனகர் சீனகர் மலையாழர் மலைதேவி விபாடர் மத்தக கொடேமரி பதினெட்டுக் கோட்டத்து மன்னியக்ண்டன் நவனதி புடைசூள்கிற பூலோக புரந்தரர் உத்தரர் தெட்ஷண பூறுவ பட்ஷம சதுச் சமுத்தராதிபதி வீரதீர சேர சோழ பாண்டியர் வல்லாழ பயங்கர தேவராயர், வீரமதராயர், மல்லிகார்ச்சுனராயர் விருப்பாட்ஷிப் பொசபெலராயர், வல்லாழராயர், பிரவுடதேவராயர், வெங்கிடபதிராயர், கிஷ்ட்டணராயர், இராமதேவராயர், சிக்கராயர், சக்கராயர், இஷ்ட்டிரங்களராயர், காரியற்றுக்குக் கர்த்தரான கச்சிப்பதியையுடைய விசுவநாத கிஷ்ட்டணப்ப முத்துவீரப்ப நாயக்கரய்யனவர்கள் மதுரை பாண்டிமண்டலம் கொங்குமண்டலம் பலமண்டலமுதலாய்ப் புடவி சூழ்ந்த இருநூற்றுக்காத வட்டகையும் வனாதி சுத்தமாக செங்கோல் நீதி ஓதியுணர்ந்து உலக முழுதாண்டு மும்மூர்த்தியும் முத்தமிழ் வினோதன் சரிபுடை தாங்குந் தானவினோதன் அளிக்குச் சந்திரன் ஒளிக்குக் கதிரோன் அறிவுக் ககஸ்தியன் அறத்துக்கு அரிச்சந்திரன் மறத்துக்கு வன்னி சொல்லினில் தருமன் தோழினில் வீமன் வில்லினில் விசையன் வாளினில் பீமன் பரிதனில் நகுலன் கரிதனி லுதையன் போகத்தி லிந்திரன் புகளினில்ப் போசன் செலத்தினில் வாரி நடுவினி லியமன் தயிரியத்தில் நிருதி தனத்தில் குபேரன் எனப் புகழ்படைத்து யின்சொலா லினிதளித்து வன்சொலால் மறங்கடிந்து அளுங் குளவிக்கு அன்புடைய தாயே போல் அனைத்து உயிர்களுக்கும் இனிமையே நல்கி சற்குண நான்கும் வள்ளுவருரைத்த முப்பால் மொளியும்படியே அறிவையறிந்து அல்லவை கடிந்து நல்லவை நாட்டி இப்படி செங்கோல் நீதி வளுவாமல் நடத்தி வருகிற காலையில்,

கொங்கு மண்டலம் ராதாபுரஞ் சீர்மையில் காங்கய நாட்டில் சக்கரைக் கவுண்டர் சீர்மை காரையூருக்கும்; மேல்கரைப் பூந்துறை நாட்டில் அரச்சலூருக்கும் எல்லைப் பிசகாய் சக்கரைக் கவுண்டர் வஞ்சியங்குளத்திலே கோட்டை போட்டும் அரச்சலூரார் சேனாபதிபாளையத்திலே கோட்டை போட்டும் வெகு மோதண்டங்களாய் சக்கரைக் கவுண்டர் வகைச் சேவுகரிலே முற்பது நாற்பது பட்டும், அறச்சலூர் பூந்துறை நாட்டார் வகையிலே நாற்பது அறுபது படக்குடுத்தும் இப்படி மோதண்டங்களாய் சண்டையாய்க் கிடந்தபடியினாலே இருபத்துநாலு நாட்டாரும் ராதாபரம் சீர்மைக்குக் கற்த்தராய் வந்த அரமனை மனுஷர் திம்மப்ப முதலியாரவர்களும் ராதாபுரந் தலத்துச் சம்பிறுதி தக்ஷிணாமூர்த்தியய்யன் திருவாளிப்பிள்ளை தலத்துச் சேர்வை எல்லாரிமாவுத்தர்

தளவர்ய்த் திருமலைநாயகர் சிட்டராவுத்தர் நஞ்சைய நாயக்கர்,

நயினப்ப நாயக்கர் இராமய நாயக்கர் கொளுமம் வாலராசா இவர்கள் அனைவருங் கூடித் தீர்த்தது. சக்கரைக் கவுண்டர் கையெளுத்துப்படி மேலோலை பூந்துறை நாட்டாருக்குக் கொடுத்து பூந்துறை நாட்டாரனைவருங் கூடி நாட்டார் கைய்யெழுத்துப்படி எழுதிக் குடுத்த மேலோலைப் படி

. கலியிக சகார்த்தம் 4718க்கு மேல் செல்லாநின்ற பிங்கள வருஷம் ஆடி மாதம், 10 தேதி பூர்வ பக்ஷமும் திசமியும் பெற்ற மங்களவாரநாள் அனைவருங் கூடி இசகு தீர்த்து நடந்ததுக்கு விபரம்

திம்மப்ப முதலியாரவர்களும் இருபத்து நாலு நாட்டாருக் குதுறையிலிறங்கி திம்மப்ப முதலியாரவர்கள் ஆனையின் பேரிலே ஏறிக்கொண்டு நாடனைவரும் குதிரையின் பேரிலே ஏறிக்கொண்டு நடந்து கல்ப்போட்டுக் குடுத்ததுக்கு விபரம்.

காங்கய நாடு அறச்சலூருக்கும் நடு எல்லைக்கும்ங் கிணறு, இதன் கிளக்குச் சென்னாய்க் கல்லு, இதன் கிளக்கு வளஞ்சியங் குளம். ஏரிக்குக் தெற்கு நல்லமங்கைபுரம், காரையூற் காடு. ஏரிக்கு வடக்கு அறச்சலூர்க் காடு. இதன் கிளக்குக் கருங்கல்மேடு. இதன் கிழக்குத் தாந்தூக்கிப் புளியமரம். இதன் கிளக்கு நெடுஞ் சாத்துக் கருந்தேவன் குதிச்ச கல்லடுக்கு. இதந் கிளக்கு நல்லாகட்டிப் பாளையத்துக்கு வடக்கு. இலவநத்தத்துக்குத் தெற்குக் 'காரைமடைக் கல்லடுக்கு.

இந்தப் படிக்கு திம்மப்ப முதலியாரவர்களும் இருபத்து நாலு நாட்டாரும் இம்மட்டும் நடந்து தேறுகடை பண்ணி தீர்ந்தபடிக்கு நாங்கள் நாடனைவரும் சக்கரைக் கவுண்டருக்கு மேலோலை கொடுத்தோம். இதற்கு பூந்துறை அளப்பிச்சாக் கவுண்டர்,வெள்ளோட்டு முதலியாக் கவுண்டர், நசையனூர்ப் பிறப்பணக் கவுண்டர், எளுமாத்தூர் விசுவநாதச் சின்னையக் கவுண்டர், வேட்டுவரில்ப் பட்டாலிக் கவுண்டர், அறச்சலூர்ப் பொட்டக் கவுண்டர், முருங்கைப் பெருந்தொழுத் தீத்தாக் கவுண்டர், அனுமப்பள்ளி சர்க்கரைக் கவுண்டர், ஈங்கூர் செங்கோட கவுண்டர் இந்தப்படிக்கு அனைவரும் சம்மதித்தோம்.

இதிலே ஆதாமொருவர் இசகினால் அரமனைக்கு ஆயிரத்திருநூறு பொன்னும் அவதாரமிறுத்து ஆய்க்கினையும் பட்டு எல்லையும் இளந்து போகக் கடவனாகவும். இப்படி தீர்ந்தது. இதற்கு இசகு இல்லை. கர்த்தாக்கள் பாதத்தாணையே. திம்மப்ப முதலியாரவர்கள் பாதத்தாணையே. இருபத்து நாலு நாட்டாரவர்களாணையே. இதுக்குத் தப்பாது இந்தப்படி எல்லை யனுபவிச்சுக் கொண்டுவரக் கடவாராகவும்.

இதற்குச் சாக்ஷி தென்கரைநாடு வேணாவுடையாக் கவுண்டர், தலையநாடு வெள்ளக் கவுண்டர், பிறிவியாக் கவுண்டர், பொம்மய நாயக்கர், வெங்கலநாடு காளத்தி கவுண்டர், மணல்நாடு தெண்ணிலி அனந்த கவுண்டர், அரையநாடு தலையநல்லூர் நாச்சியப்ப கவுண்டர், கொந்தழம் முட்டத்துராயன், காங்கயநாடு காங்கய மண்ணாடியார், பல்லவராயக் கவுண்டர், குறுப்புநாடு விசையமங்கலம்

வடமலைக் கவுண்டர், திங்களூர் சிதம்பரக் கவுண்டர், புங்குலிக்க நாடு வேளராசி அவுனாசிக் கவுண்டர், பெருந்தொழூர்ப் பிடாரப்பக் கவுண்டர், கண்டியங்கோவில் உடையாக் கவுண்டர், ஆறுகாடு மச்சக் கவுண்டர், சோளியாண்டாக் கவுண்டர், சத்தியமங்கலத்தார், ஸ்தானாதிபதி தளஞனூ ரங்கப்ப நாயக்கர், தலத்தாரில் எல்லாரி மாவுத்தர், தளவாய்த் திருமலை நாயக்கர் சாக்ஷி.

இந்த மேலோலை தலந் திருவாளிப்பிள்ளை கைய் எளுத்து. சென்னிமலையப்பர் லட்ஷிக்கவும். இந்த மோலோலை பளங்கடையாச் சீரணமாயிருந்த படியினாலே சபாது எளுதினது. காரையூர் தலத்துக் கணக்கு அரசபிள்ளை கைய்எளுத்து. ஜயங்கொண்டீசுவரர் லட்சிக்கவும். பெரியோர்கள் பொறுத்தருளவும். அளப்பிச்சான் முதலி, பிறப்பணந், சின்னையன், பட்டாலி பொட்டன், தீத்தான், சாதகணன், செங்கோடன்.

# 34. முத்தூர்ப் பட்டயம்

பெரியார் மாவட்டம் ஈரோடு வட்டம் எழுமாத்தூர் வேலம்பாளையம் அமரர் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் வீட்டில் இருந்த ஓலைப் பட்டயங்களில் இதுவும் ஒன்று.

காங்கேய நாட்டு முத்தூரின் நாற்பாங்கு எல்லைகள் முதலில் கூறப்படுகின்றன. அவற்றின் பல பகுதிகள் சுவாமியாருக்கு உரிமையுடையது என்று சாசனம் வெட்டித் தந்தனர்.

சிவன் சமுத்திரம் மல்லிகார்ச்சுனருக்குக் கொங்கில் 64 காத வட்டதை கொடை விட்டனர். உம்மத்தூர் விருப்பாச்சி உடையார்க்குத் தாராபுரம் சீமைப் பகுதி ஆட்சிக்கு வருகிறது. முத்தூர்க்காரர்கள் 15 பேரைச் சிறை பிடித்துக் கொண்டுபோய் சிவன் சமுத்திரத்தில் வைக்கின்றனர். சிலர் விடுதலையாகி வருகின்றனர். முத்தூர்க்காரர்கள் கீழ்க்கரையில் வாழவந்தி நாட்டுக்குக் குடிபெயர்ந்து சென்று விடுகின்றனர். நஞ்சைய உடையார் காலத்தில் மீண்டும் முத்தூரரார் தங்கள் ஊருக்குக் குடி வந்தனர்.

காங்கேய நாட்டார் 12 ஊரவரும் மணலூர் நாட்டுத் தென்னிலை வெங்கச்சி வேட்டுவர்க்கு காணிக்கை கொடுக்கவேண்டும் என ஏற்பாடாகியிருந்தது. வேட்டுவர்கள் மாந்தபுரத்தில் வேளாளரின் மாடுகளைப் பிடித்தனர். வள்ளியிறைச்சல் தொண்டைமான் போன்ற சிலர் வேட்டுவருடன் போராடி வீரமரணம் எய்துகின்றனர். பழையகோட்டை அழகன் உத்தமக் காமிண்டன் வேட்டுவர்களை வென்றார். வேட்டுவத் தலைவன் கொங்கராயனும் பட்டான். வேட்டுவர்குலப் பெண்களும் வீரமாசத்திகள் ஆகப் பழையகோட்டைப் பட்டக்காரர் ஆவன செய்தார். தென்னிலைப் படையில் முத்தூரரார் சிலர் இறந்தனர். 13 பேரின் மனைவிமார்களும் வீரமாசத்தி ஆனார்கள். வேளாளர் தவிரப் பிற இனத்தாரும் அதில் உள்ளனர்.

இவர்களை வழிபடக் கொடை கொடுக்கப்பட்டது. இப்பட்டயத்தின் இடையில் சில பகுதிகள் இல்லை. சில முறைமாறியுள்ளதுபோல் காணப்படுகின்றன.

## மூலம்

சுபஸ்தீஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரியராய விபாடன் பாஷைக்குத் தப்புவராயர் கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான் மூவராயர் கண்டன் கட்டாரிச் சாளுவ மீசுரகண்டன் துட்ட நிக்கிரகச் சிட்ட பரிபாலன் எம்மண்டலமும் ஈழமும் இலங்கையும் திறைகொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுவரன் இராசமார்த்தாண்டன் இராசவல்லவன் இராசபுங்கவன் இராசகேசரி இராசநவரத்தின நாராயணன் துலுக்கர்தள விபாடன் துலுக்கர் மோகந் தவிர்த்தான் யிரனதும்பரராமன் துடஷ்த நெடஷ்த காட்டா கோலாகலன் மதியாதமன்னர் மகுடஞ் சிதற பதிசூறை கொள்ளும் பரசூரராமன்,

அசுவபதி கஜபதி நரபதி நவகோடி நாராயணன் அங்க வங்கலர் கலிங்கர் கோலர் மத்தர் மாளுவர் துலுக்கர் கெவுடர் மத்தகர் கோசலர் அவுணர் மறவர் மலையாளர் கொங்கர் கம்பளர் குக்குரர் குச்சரர் கொந்தளர் ஒட்டியர் தெலுங்கர் துளுவர் துக்கரர் சவுறாட்டர் மராட்டிகர் மராடர் காம்போசர் ஆரியர் பப்பரர் கன்னாடர் சோனகர் மலைதேவி விபாடர் மத்தக்குடோரி 18 கோட்டத்து மன்னியர்கண்டன் புடைசூழாகிய பூலோக புரந்தரர் உத்தரர் தட்சிண பூருவ பச்சிம சத்த சமுத்திராதிபதி ஸ்ரீஈழநாடு சேர சோழ பாண்டியர் வல்லாள பயங்கர தெய்வராயர், வீரமதராயர், மல்லிகார்ச்சுணராயர், விருப்பாச்சி புஜபெலராயர், வல்லாளராயர், பிரபுடதேவராயர், காரியத்துக்குக் கருத்தரான அரியணவுடையார் கொங்கு மண்டலத்தில் நரையனூர் நாட்டில் இராதாபுரத்தில் எழுந்தருளியிருந்து,

ஓதியுணர்ந்து உலகமுழுதாண்டு மும்மூர்த்தியும் முத்தமிழ் வினோதன் சரிபுடை தாங்கும் தானவினோதன் அளிக்குச் சந்திரன் ஒளிக்கும் கதிரோன் அர்த்தத்துக்கு அரிச்சந்திரன் மறத்துக்கு வன்னி சொல்லினில் தருமன் தோளினில் வீமன் வில்லினில் விசயன் வாளினில் அபிமன் பரிதனில் நகுலன் கரிதனில் உதயன் போகத்தில் இந்திரன் புகழினில் போஜன் செலத்தினில் வாரி நடுவினில் இயமன் தைரியத்தில் நிருதி தனத்தினில் குபேரன்—முத்தூருக்கும் கொல்லன்கோயிலுக்கும் எல்லைப்பிரிவு வீதிக்கல்லு கரும்பள்ளம் தோரணப் புளியல் கருங்கரடு அஞ்சூர் எல்லைப்பிரிவு எல்லையில் பூவனக்கல்லு சுனைத்துறை நொய்யலுக்குத் தெற்கும் கிடாக்கிடாந்தான் மடு ஒழுகுவாரைப் பரப்பு நரப்புமடை வெங்கமேடு பச்சைப்பாளி வெளிஎல்லைப்பிரிவு வட்டப்பாறை இருப்புக்கரடு முத்தூருக்கும் முஞ்சனூர்க்கும் வெள்ளகோயிலுக்கும் முக்கூட்டு எல்லைப் பிரிவு ஒழுகுபிளியில் கல்லப்பாழி வளவன் குளத்து உலக்குளத்துப் பெரிய ஆலமரம் நவவள்ளியிறை சட்டைப்பாறுப் புளியல் எல்லைப் பரப்பு முத்தூர்க்கும் காரையூர்க்கும் வள்ளியிறைச்சலுக்கும் முத்தூருக்கும் தெற்கு வெங்கைமேடு பச்சைப் பாளியூர்க்கு மேற்கு கருமணக் கொம்பூருக்கு வடக்கு நொய்யலாறு இந்தப்படிக்கு சுவாமியார்க்கு நாற்றிசையும் வெட்டிப் போட்டோம்.

இதற்குக் காங்கயம் பல்லவராயன், வள்ளியிறைச்சல் தொண்டைமான் மன்றாடி, காடையூர் கழுவன் காங்கேயன், பட்டாலிக்காலில் பெரிய சிதம்பரன், கீரனூர் குடுமி வேட்டுவரில் செம்பராயக் கவுண்டன், காரையூர் சோமன் உத்தமக்காமிண்டன், மருதுறை விழுப்பராயன், பார்ப்பதி சேனாபதி செட்டி,

பரஞ்சேரிவெளி காவிழச்சேனாபதி, கன்னபுரத்துச் செட்டி பட்டக்கார அர்த்தநாரி, வெள்ளைக்கோவில் காவல் வீரபெருமாள் இவ்வனைவோமும் சாட்சியாக சுவாமியாருக்கு சந்திராதித்தர்வரை நடப்பதாகச் சாசனம் வெட்டிக் குடுத்தோம்.

எல்லைப்பிரிவு காறப்பள்ளம் காரையூர் எல்லைப்பிரிவு கருமணக்கொம்பு இந்தப்பிரகாரம் நால்திசை எல்லை அறியவும். யிப்பால் விசய வருஷம் சிவன் சமுத்திரத்து மல்லிகார்ச்சுனலிங்கத்திற்கு கொங்குமண்டலம் 64 காத வட்டகையும் நாற்புத்தெண்ணாயிரம் ஊரும் யிறை எண்ணை செல்லத்தக்கதாகப் பிரபுடதேவராயர் கட்டளையிட்டு இராதாபுரம் சீமைக்கும் மாயப்பருடையாரையும் கட்டளையிட்டபோது அதுவும் எண்ணை செல்லாமலிருக்கையில் பிரபுடதேவராயர் உம்மத்தூர் விருப்பாச்சி உடையார்க்கு இராதாபுரத்துச் சீமை கட்டளையிடுகையில் அவர் வந்து கொங்குமண்டலத்தில் சிறைகொண்டு போகையில் முத்தூர் காணியாளப் பிள்ளையரில் காவுள வேந்தரில் கருமத சரவண கவுண்டர் மகன் சோழியப்பனும், கர்ச்சலில் அர்த்தநாரிக் கவுண்டர் மகன் குமாரசாமியும், கள்ளிபில்லரில் வேலப்ப கவுண்டர் மகனான வேம்பா கவுண்டனும், வெங்கச்சி வேட்டுவரில் கண்டியதேவன் மகன் பெரியசோழியப்பனும், செட்டி மொட்டரில் அர்த்தநாரிசெட்டி மகன் வேலப்பனும், கொல்லுக்கட்டி செட்டியரில் தெய்வசுவாமி மகன் பெருங்கருணையும், அவிநாசியுடையார் செட்டியாரில் சரவணச் செட்டி மகன் செம்மாண்டனும், வெள்ளாளரில் மணிய பெரியநயினா கவுண்டர் மகன் குமரியப்பன், வெள்ளம்பரில் அவினாசிக் கவுண்டர் மகன் திருவம்பலத்தானும், சேரன் செம்பியாக் கவுண்டன் மகன் அர்த்தநாரியும், முத்தரில் சின்னாக் கவுண்டன் மகன் பொன்னாண்டானும், பிரளந்தையரில் தேவண கவுண்டர் மகன் நல்லதம்பியும், திருப்பையரில் சோழியப் பெரியபெருமாள் மகன் சருவேசுவரனும், உப்பிலியரில் அங்கண்ணன் மகன் மாதநாதனும் இந்த 15 பேரையும் பிடித்துக் கொண்டுபோய் சிவன் சமுத்திரத்தில் விலங்கில் போட்டார்கள்.

அப்போது மாதவநாதன் காவல்காரருக்கு இதம்படப் பேசி தன்னுடைய காவலுமகன் நக்கசருவேசுவரனுடைய காவலும் யிரண்டுபேரும் விலங்கு விடுவித்துக்கொண்டு அந்தப் பயகளுக்குள் பட்டணம் சிவன் சமுத்திரம் வந்து கொப்பாவும் எடுத்து யிப்படிப் பன்னிரண்டு வருஷம் சிறையில் சிக்கி அங்கு இருந்தார்கள். அந்தப் பயகளைச் சிறைப்பிடித்த காலாதினாலே முத்தூரார் அனைவரும் வலசுக்குக் கீழ்க்கரையில் வாழவந்திநாட்டில் அரியூரில் போய் இருந்தார்கள்.

அதில் சென்னை பட்டணத்தாருக்கும் சிவனே சமுத்திரத்தாருக்கும் சண்டையாய்க் காலதியாய் இருந்த தருவாயிலே மாதவநாதன் அந்தப் பயகளுக்கு விலங்கு நிறுத்து அந்தக் காவலும் அறியாமல் கரியகண்டன் கணுவாயும் தணாயக்கன் கோட்டையும் கடந்து இரவும் பகலுமாக அந்தப் பயகளை முத்தூருக்குக் கூட்டிக் கொண்டு வந்து அங்கிலுங் குடியில்லாமல் வலசு போயிருக்கிற தலமும் தேடிப்போய் கீழ்க்கரை வாழவந்தி னாட்டில் அரியூரில் முத்தூரார்அனைவரும் முன்பாக அவரவர்கள் பிள்ளையும் ஒப்புவித்துக் கொண்டு இப்படி முத்தூர் 12 வருஷம் குடியில்லாமல் பாழ் நத்தமாயிருந்தது. அதனிடையில்

குரோதி வருஷம் அற்பசி மாதம் 12 கொங்குமண்டலம் இராதாபுரம் சீமை நஞ்சைய உடையார் கட்டிக்கொண்டு வந்து கட்டின யேருக்கு 5 பணமாகக் கட்டளையிட்டு குடியூர்க்கு அங்கங்கு அழைப்பித்து வைத்தார்கள்.

இப்படிக்கு இந்தப் புண்ணியம் நடத்தி வந்தவர்கள் குலோத்துங்க சோழீச்சுரமுடைய தம்பிரானார் அருளாலேயும், தெய்வசிகாமணி பண்டிதர் அருளாலேயும், சாமீப சாரூப சாலோக சாயுச்சிய பதமும் பெற்று புத்திர சந்தானம் மதன சந்தோஷம் உண்டாய் பலவருஷம் பெற்று வாழ்ந்திருப்பார்கள். அரியண உடையார் பிரிதானி சிங்கண்ண தேவருடையார் முன்பாக காங்கேய நாட்டு மூத்தாரு எல்லை நாற்பாங்கும் பலரையறுத்து யிப்பால் காங்கனாடு 12 ஊரும் மணலூர் நாட்டு தென்னிலை வெங்கச்சி வேட்டுவன் கொங்குராயனுக்கு வருஷா வருஷம் சவளக் காணிக்கை இருந்துவந்தபடியினாலே பராபவ வருஷம் ஆனி மாதம் 7 ஆம் தேதி மக நட்சத்திரம் சதுர்த்தியும் பெற்ற வியாழக்கிழமை நாள் கொங்குராயன் வந்து மாந்தபுரத்திலே மாடு பிடித்துக்கொண்டு போனார்கள். ஆகையினாலே வள்ளியிறைச்சல் புள்ளைத் தொண்டைமான் மன்றாடி மகன் மாந்தியப்பனும், வள்ளியிறைச்சல் காவுள பெரியதம்பிக் கவுண்டர் மருமகன் காரையும், இராவுத்தக் கவுண்டன் மகன் வாரணவாசியும் இவர்களிரண்டு பேருமாக மாடு பிடித்துக் கொண்டு போய்ப் பட்டார்கள். அது கருமமாக அழகன் உத்தமக் காமிண்டனும் நாம காங்கயனாடு 12 ஊருமிருந்து அவனுக்குச் சவளக் காணிக்கை குடுக்கிற தென்னயென்றும் விசயநகரம் கன்னப் பறையர் நல்லஅனுவான் சேவுகராக அழைப்பித்து அவர்களுக்கும் வேண்டியது கொடுப்பித்துக் காங்கயனாடு 12 ஊரா்ருமர்கக் கொங்குராயன் பேரிலே படை எடுத்துக் கன்னப் பறையரைக் கொண்டு கோட்டையும் சுரங்கமிடுவித்து அந்தச் சுரங்கமிடிந்து விழுந்தும் அதில் சிலயேர் பட்டும் அந்தக் கோட்டையைத் தூளி கோட்டை கொண்டு வெட்டினபோது தென்னிலை கொங்கராயனும் பட்டான்.

ஆகையினால் கொங்கராயன் பெண்களும் வீரமாஸ்தியாகப் புறப்பட்டு அழகன் உத்தமக் காமிண்டனையும் கண்டு வலங்கைச் செட்டியர் விருது அல்லா நாங்களும் வாழ்த்திக் கொண்டு விற்றுக் கொள்ளுகிறது. எங்களுக்கும் செட்டியார் தந்த விருது வலங்கைக்கும் உடையவர்கள் எல்லோ விற்பது. எங்களையும் சாகவரங்கண்டு போகவென்று அந்த வீரமாசத்தி சொன்னதினாலே அப்படியே அவர்களையும் சாக வரங்கண்டு போகவென்று வருகையில் வாலரப்பிள்ளையாரையும் வண்டியிலே பூட்டிக்கொண்டு காரையூருக்குக் கொண்டு போகையில் அந்தப் பிள்ளையாரும் முத்தூருக்கும் காரையூருக்கும் நடுவில் பொத்திப் பிள்ளையாராக இருந்து கொண்டது.

ஆகையினால் தென்னிலைப்படையில் முத்தூரார் பட்டவர்கள் காவில கருமருத சரவணக் கவுண்டர் மகன் சோளியப்பன், மணியரில் பெரியநயினாக் கவுண்டன் மகன் சிலச்செல்லப்பன், வளவரில் சிதம்பரனாதக் கவுண்டன் மகன் விருத்தாளியப்பன், காச்சலில் தீர்த்தாக் கவுண்டன் மகன் வேலப்பன், சேரரில் செம்பியாக் கவுண்டர், நல்லதம்பிக் கவுண்டர், முத்தரில் சோழியப்ப கவுண்டர் மகன் பாண்டியப்பனும், உப்பிலியரில் அங்கண்ணநாயக்கர்

மக்ன் சின்னவயிரவனும், மாகுளவரில் பருதலையர் மகன் செம்மனும், தச்சரில் சோழத்தச்சன் மகன் அர்த்தநாரியும், உகச்சரில் வேலன் மகன் சைவசிகாமணியும், இருளரில் கூத்தன் மகன் மசப்பணிக்கனும், பரம்பரில் பெரியபிள்ளான் மகன் செய்யானும், பறையரில் வீரத்தோட்டி மகன் மதசரவனும் இந்தப் பதிமுனு பேரும் தென்னிலையில் பட்டார்கள்.

ஆகையினால் இந்த 13 பேரிட பெண்களும் வீரமாசத்தியாகப் புறப்பட்டார்கள். அது கருமம் காணியாழப்பட்டவர்கள் 6 பேரும் மற்றவர்கள் 7 பேருக்கும் இந்த 7 பேரின் பெண்டுகள் தங்களுக்கு பட்டித்தாருக்காடு எந்தக் காலமும் உண்டாயிருக்கத் தக்கதாக காடு விடவேண்டுமென்றபடியினாலே காணியாழப் பட்டவர்கள் 6 பேரின் பெண்டுகள் வீரமாசத்திகளும் அப்படியே பேசி 7 பேருக்கும் பட்டித்தாருகாடு விடவேண்டுமென்று முத்தூரார் அனைவருக்கும் சொன்னபடியினாலே அனைவருமாகக் கூடி யிவர்களுக்குக் காடு விட்டபடிக்கு,

சின்ன வயிரவனுக்கு செம்பாளிக்கு நிருதி மூலை சோழசமுத்திரத்திற்கு வடகிழக்கு, செம்மனுக்கு நாவல் பரப்புக்கு மேற்கு, அர்த்தநாரிக்கு சிறுமுத்தூருக்கு மேற்கு, பச்சைச்சுனைக்குத் தென்மேற்கு, செய்யானுக்கு முத்தூருக்கு மேற்கு, ஓலைப்பரப்புக்குத் தென்மேற்கு மூலை, ஈழவச் சோழ மூப்பன் மகன் பெரிய செல்லனுக்கு சோழசமுத்திரத்திற்குத் தெற்கு, இருள மசப்பணிக்கனுக்குப் பாலைப்பரப்புக்கு வடக்கு, மதசரவனுக்கு கொக்கரளத் தீர்த்தத்துக்குக் கிழக்கு. இந்தப் பிரகாரத்திற்கு அனைவருமாகக் கூடிப் பட்டித்தாருக்காடு விட்டோம். இதுவும் சந்திராதித்தர்வரை நடந்து வரவு. தெய்வசுனைக்கு அக்கினி மூலைக்காடு காவிலுவர் நாலு முதன்மைக்கும், வேட்டுவர் நாலு முதன்மைக்கும் கழிமிடு இவருக்கு விட்டகாடு. இந்தச் செப்பேடு எழுதினமைக்கு தொண்டமண்டலத்து இறைவரசநல்லூர் சிற்பாசாரியிரில் அண்ணாமலை மகன் சேனாபதி எழுதின பட்டயம், அனாதியாய் ஏடு பழையதாய்ப் போனபடியினாலே கலியுக சகம் 4059 க்கு மேல் செல்லாநின்ற விளம்பி வருஷம் ஆடி மாசம் ஏகாதசியும் அனுஷமும் பெற்ற வியாழக்கிழமை நாள் குன்னத்தூரிலிருக்கும் பிராமணரில் வடமலைப் பிள்ளை மகன் ரங்கனாத புத்திர நல்லையன் எழுதினேன். யிது பெரியோர்கள் பொருத்தருளவும்.

# 35: அனுப்பப்பட்டிச் செப்பேடு

தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையில் இச்செப்பேடு உள்ளது.*

சேரமான் பெருமாள் கொங்கு நாட்டைச் சிறப்புடன் ஆண்டு வரும்போது சோழ மன்னன் கொங்கு 24 நாட்டையும் கைப்பற்ற வேண்டுமென்று கரூர் காங்கயம் கொள்ளையிட்டு மீண்டும் படையெடுக்கும்போது மேற்குத் தலைவாசல் காக்கும் இராமலிங்கம்பிள்ளை, மூனு தலைவாசல் நாட்டார், அண்ட நாட்டார் ஆகியோர் காவலைவிட்டு ஓடிவிடுகின்றனர். அதனால் அவர்கள் பதவி நீக்கம் செய்யப்படுகின்றனர்.

சேரமான் பெருமாள் வ...யமங்கலம் கோயில் திருப்பணி செய்விக்கையில் இதனைக் கேள்விப்படுகிறான். அம்மன் அசரீரி வாக்கால் 'அபயம்' கூறுகிறாள். அம்மன் துணையால் சோழர் படைகள் ஓடிவிடுகின்றன.

தாராபுரம் தில்லாபுரி அம்மன் கோயில் திருப்பணி செய்யப்படுகிறது. பழனியில் மூவேந்தர் கூடி ஆலோசனை செய்கின்றனர். எல்லாச் சனங்களும் பட்டக்காரர்களிடம் உள்ள செப்பேடு சாசனப்படி அவர்கள் பேச்சைக் கேட்டு நடந்துவர வேண்டும் என்று இறுதியில் கூறப்படுகிறது.

இறுதியில் பட்டக்காரர்களும் கொங்கு வேளாளத் தலைவர்கள் சிலரும் கையொப்பமிட்டிருக்கின்றனர். இச்செப்பேட்டில் காலக் குறிப்புத் தவறாக உள்ளது. பிழைகளும் அதிகமாக உள்ளன.

இச்செப்பேட்டில்,

---

* இச்செப்பேட்டைக் கோவை மாவட்டம் பல்லடம் வட்டம் அனுப்பப்பட்டி சித்தமருத்துவர் பசுமணியம் அவர்களிடமிருந்து பெற்று இத்துறைக்கு அளித்தவர் தமிழ்நாடு அரசு தொல்பொருள்துறை அலுவலர் இரா. பூங்குன்றன் அவர்கள்.

கொங்கு மலைனாடு குளிர்ந்தநதி பன்னிரண்டும்
சங்கரனார் தெய்வத் தலம்ஏழும்-பங்கயஞ்சேர்
வஞ்சிநகர் நாலும் வளமையால் ஆண்டருளும்
கஞ்சமலர்க் கையுடைபோன் காண்

என்ற வெண்பா எழுதப்பட்டுள்ளது.

மூலம்

கலியுக சகார்த்தம் 2949 மேல் செல்லாநின்ற சாலியர் சகார்த்தம் யிருவத்தியேளு வருஷம் மேல்ச் செல்லாநின்ற ஆங்கிற வருஷம் வையாசி மாதம் 15ந் தேதி வெள்ளிக்கிழமை அத்த நட்செத்திரமும் திசமியும் சித்தனாம யோகமும் கரசையும் பெற்ற சுபதினத்தில் மகாறாசா மான்னியர் றாசாஸ்ரீ அம்பத்தாரு தேசத்தையும் ஒருகுடை கீழா ஆழாப்பட்ட சாலியவாகன றாசாவினுடைய அதிகாறத்தில் றாசாதிறாசன் றாசாமார்த்தாண்டன் றாசாபரமேசுபரன் றாசாகுலதீறன் றாசாகம்பீரன் பாசைக்குத் தப்புவாறாத கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு கொடாத யெம்மண்டமும் திரைகொண்டருளிய மகாராச ராசேந்திரன் கொங்கு மலைனாடு குளிர்ந்தனதி பன்னிரண்டும் சங்கரனார் தெய்வ தலமேளும் பங்கையஞ்சேர் வஞ்சிநகர் நாலும் வழமையால் ஆண்டருளுங் கஞ்சமலற்க் கைய்யுடையோன்ங் காண்.

நாலு வஞ்சி சேறப்படைத்த சேறமூாம் பெருமாளையனவர்கள் ஆடுங்கடமணி நாவசையாமல் ஆறிலொன்றுக் கடமை கொண்டு நவரத்றின கிரீடாதிபதிய றத்றின சிம்மாசனத்தில் மேலெளுந்தருளி ராச்சியப் பரிபாலினஞ் செய்துக்கொண்டு வருகிற னாளையில் சோழாராசன் இந்தச் சீமையைக் கொள்ளையடிக்க வேணும் மென்று யிருவத்தினாலு நாட்டையும் அடக்கி தீத்துப் போடுவோமென்று மனதிலே திட்டப்படுத்திக் கொண்டு கருவூறு காங்கையத்தையும் கொள்ளையிட்டுக் கொண்டு நல்லஓடையிலே தாணையம் யிறங்குனது கண்டு,

மேர்க்குத் தலைவாசலிலே யிறுந்த காரியக்காறன் காசி கோத்திரம் ராமலிங்க பிள்ளை மூனு தலைவாசல் நாட்டாரும் அண்டநாட்டுக்கு ஓடிப்போனபடியினாலே யிந்த சமாசாரம் விசையமங்கலத்தில்க் கோவில்கட்டிவிச்சுக் கொண்டு யிருந்தபோது ஓலையெளுதிக் கடைசுட்டு அனுப்பிவிச்சான். அதைபாத்துக் கொண்டு விசையாபுரி அம்மன்ங் கோவிலுக்குப் போய் அவுஷேகம் பண்ணி அந்த அம்மனை அட்டம் விளுந்து கேள்க்குறபோது,

நான் பூதா பெசாசை யெளுப்பிக் கொண்டு நான் கூடவந்து துஷ்ட்ட நிக்கிரப் பரிபாலினஞ்செய்து குடுகுரென்நென்று ஆகாச வாக்குக் குடுத்தப்படியினாலே தீர்த்தப் பிறசாதம் வாங்கிக் கொண்டு தாறாபுரத்துக்கு வந்து தில்லாபுரி அம்மனுக்கு அவுஷேகம் பண்ணிவிச்சு ஆம்பிறாம்பதி ஆறுயெறங்கி கீள்ப்பரம் நடக்கும் போது கோட்டை வடக்குத் தலைவாசாலிலே ஒரு பீரங்கிவேட்டு யெளுந்திரிச்சபடியினாலே சோழாராசனும் அவன்றானுவமும் கெற்ப்பங் கலங்கி

கிளக்கு முகமாய் ஓடுறபோது யிவர்கள் போய் குறுக்காட்டி சண்டை செய்தபடியினாலே மேற்க்கே முரிந்து ஓடியாந்த படியினாலே அவர்களை வெட்டி செயித்ததுனாலே கேட்டு திருவஞ்சிகளத்திலிருந்து பழனிக்கு வந்து யிரங்கி பாண்டியர் ராசாவை தரிவிச்சு யிருவர் றாசர்களும் ஓசினை பண்ணி யிருவத்திமூணு நாட்டாரையுந் தரிவிச்சு யிப்படி மோசஞ் சீமையை விட்டுப் போட்டு ஓடிப்போகா ஆகுமா உங்களுக்கு யெளுதிக்குடுத்த பட்டையத்தை வெச்சுடுங்கள்யென்று நெட்டூரமாய்க் கட்டுப்பண்ணிவிச்சப்படியினாலே பட்டையத்தை வெச்சிட்டார்கள்.

அண்ணரஞ் சங்கம தனதனம் யீந்தனம் யென்னைதன் கோத்திரன் யிவநென்று யெங்குமுள்ளோர் புகழா விண்ணோடு திண்பரி சிவிகை முடியும் சூட்டிநான் மீனவன்மியென் மண்ணு உனக்கும் சேர சங்கம கவுண்டநென்று பேருவச்சு யிருவத்திமூணு ஊடையத்தையும் நாட்டையும் ஆண்டுக்கொண்டு பரிபாலன செய்துக் கொண்டு சுகத்திலே யிருமென்று நாடாளுபதியும் ராசேந்திரன்நென்றும் பெரியதினமுங் குடுத்து யிருக்குறோம். நாட்டையும் பிறபலப்படுத்தி ஆண்டுகொண்டு நாலு தேசத்தையும் பிறபலப்படுத்தி நடந்து வருகிறபடிக்கு திட்டப்படுத்தி செங்கோல் முத்திரையும் நடத்திகொண்டு கள்ளற் குளுப்பன் ஊருக்குள்ளே பூந்து ரூட்டி செய்யாமல் கன்னக்காறரை விட்டு திட்டமாய் விசாரிச்சு நடப்பிச்சுக்கொள்ளவும்.

அந்தந்த சாதி வற்க்கத்துக்கு சாதி ஞாயம் சாதி முறைமை நடத்திக் கொண்டு வருகுறபடிக்கு சாதிக்குச் சாதி விசாரிக்கும்படியாய் பெரிய தினமுங் கொடுத்து நடப்பிச்சுக் கொள்ளவும். சாதியார் பேச்சைக் கேளாமல்ப் போனால் அவர்கள் பெரிய யிடத்தில் அரிக்கைப் பண்ணிக் கொள்ளவும். கள்ளன் குளுப்பன் திருடன் திருட்டு அதிகமான படியினாலே ஊருக்கு ஊரு தலையாரியை வச்சிருக்குறோம். திருட்டுப் பிறட்டுப் போனால் தலையாரி ஒப்பிக்கிறவன். நாடு ஊரு உள்ளசனங்களுங் சகல சாதியரும் பட்டக்காரர்ப் பேச்செக் கேட்டு நடந்து வரவேண்டியது. சகல காரியத்துக்கும் செப்பு சாதானம் யெளுதிக் குடுத்தியிருக்குறோம்.

மகாறாசா மானியர் றாசாஸ்ரீ சேரமாம் பெருமாளையனவர்கள் கை ஒப்பிதம். சோழமகாராசர்உடைய ஒப்பிதம். பாண்டியர் மகாராசா கை ஒப்பிதம். நாட்டார் காடையூர்ப் பட்டம் கொமாரர் காங்கயம் மண்ணாடியார் ஒப்பிதம். தாராபுர வடக்கு தலைவாசலுக்குச் சேர்ந்த தென்கரைநாடு பெரியவீடு வேணாவுடையாக் கவுண்டன் கைஒப்பிதம். காங்கயம் பல்லவராயாக் கவுண்ட கைஒப்பிதம். பழையாகோட்டை சக்கரைக் கவுண்டந் கை ஒப்பிதம். பூந்துறை நாட்டு வாரணவாசிக் கவுண்டன் கைஒப்பிதம். புங்கிலிகநாடு தெய்வசிகாமணிக் கவுண்டன் ஙகைஒப்பிதம். நல்லுருக்கிநாடு பிரமைராயர்கவுண்ட கைஒப்பிதம். காவிடிக்கநாடு அடகுகோத்திரம் நஞ்சையக் கவுண்டன் ஒப்பிதம்.

# 36. தென்னிலைச் செப்பேடு _ 1

திருச்சி மாவட்டம் கரூர் வட்டம் தென்னிலைக் கிராமத்தில் உள்ள வேட்டுவகுலப் பட்டக்காரர் எம். ஏ. பகவதிக் கவுண்டர் அவர்களிடம் உள்ள செப்பேடு.

கொங்கு நாட்டின் பூர்வீக மக்கள் வேட்டுவர்குலப் பெருமக்களே. அவர்கள் பகைவர்களை வெட்டி முடிக்கின காரணத்துக்காகப் பல ஊர்களைக் காணியாகப் பெற்றனர்.

சேரன், சோழன், பாண்டியன், செட்டி, சிவப்பிராமணன் ஆட்சிக்காலத்தில் கொங்கு வேளாளர்கள் குடியேற்றம் கொங்கு நாட்டில் ஏற்படுகிறது.

ஆத்தூர், அஞ்சூரு, கார்வழி, கோடந்தூர், காரைப்பரப்பு, தலையநல்லூர், நாகம்பள்ளி போன்ற பல ஊர்களில் வேட்டுவ சமூகத்திற்குரிய ஊர்கள் நிலம் (எல்லை கொல்லை ) வேளாளப் பெருமக்களுக்கு மாறுகிறது. ஊராட்சி உரிமை, கோயில் காணி உரிமை இவைகளும் வேளாளருக்கு மாற்றப்படுகின்றன. (இராச முப்பாடு, கோயில் முப்பாடு).

சில ஊர்களுக்கு ஐயர், கணக்கர், தட்டார், பறையர், நாவிதர் யார் என்று கூட நியமனம் ஆகின்றனர். பல நாடுகளில் வேட்டுவர்கள் காணி பெற்ற விவரமும் ஊர்களின் எல்லைகளும் எல்லைகளில் பொறிக்கப்பட்டுள்ள சின்னங்களும் குறிக்கப்பெறுகின்றன.

வேட்டுவக் கவுண்டர்கள், வேளாளக் கவுண்டர்கள் இருவருமே சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். காசித்தட்டான் என்பவர் இச்செப்பேட்டை எழுதியுள்ளார். இதற்குப் பல நகல்கள் எடுக்கப்பட்டு ஆங்காங்கு வைக்கப்பட்டுள்ளதாக இடங்களும் இறுதியில் கூறப்படுகின்றன.

## மூலம்

கலியுக சகார்த்தம் 3108 மேல் சாலியவாகன சகார்த்தம் 3108 மேல் செல்லான்னென்ற சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமண காலத்தில் செயவருஷம் பங்கினிமாதம் 25ந் தேதி யித்தாதிபேர்கள் கூடி சேரன் சோழன்

பாண்டியன் காலத்தில் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் யெல்லைகொல்லை தீர்மானம் பண்ணினது. காடு செலுதிக்கு முன்னைவேட்டுவன் ராயபூசாரி கவுண்டன் இந்த நாலுபேர் இதுப்போனபடியினாலே வடமலைராயருக்கு அண்டவாணி வேட்டுவனுக்கு ராசமுப்பாடு கோயில்முப்பாடு குடுத்ததுக்கு சாச்சி வெங்கலனாடு சல்லிகாளத்தி கவுண்டன் சாட்சி. நீலியப்ப கவுண்டன் சாட்சி. ஆத்தூர் மாந்தைப்படைவேட்டுவன் வன்னிய கவுண்டன் சாட்சி. காக்காயிவாடி குழந்தவேலப்ப கவுண்டன் சாட்சி. பூவாணிவேட்டுவன் வடமலைராயருக்கு ராசமுப்பாடு கோயில்முப்பார்டு கொடுத்ததுக்கு இத்தாதிபேரும் சாட்சி.

குப்பத்துக்கு பூவாணி வேட்டுவன் சின்னாக்கவுண்டன் ராசமுப்பாடு கோயில் முப்பாடு யெனக்கு கொடுத்தால் நான் ஊரிலேபணம் எடுத்துக்கட்டுவேன் நாடுஊரு எனக்கு நம்பிக்கை சொன்னால் நான் பணமும் கொடுப்பேன் என்று சொன்னபடியினாலே லக்ஷமதேவராயர் நாளையிலே செயவருஷம் பங்குனிமாதம் 27 தேதியில் பூவாணி வேட்டுவன் சின்னாக் கவுண்டனுக்கு ராசமுப்பாடு கோயில் முப்பாடு குடுத்ததுக்கு சாட்சி வேங்கலனாடு நீலியப்ப கவுண்டன் சல்லிகாளத்தி கவுண்டன் சாட்சி. ஆத்தூரு மாந்தைப்படை வேட்டுவன் வண்டிக் கவுண்டன் சாட்சி. காக்காயிவாடி குழந்தவேலப்ப கவுண்டன் சாட்சி. இத்தினைபேரு அவன்க்கு ஊரு கொடுத்ததுக்கு சாட்சி. சேரன் சோழ பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் நாளையிலே ஊரு குடுத்ததுக்கு காக்காயிவாடி தம்பிக்கவுண்டன் ஆத்தூரு மாந்தைப்படை வேட்டுவன் வன்னியக் கவுண்டன் சாட்சி. கிழங்குநாடு கரடிவேட்டுவன் கண்டிக் கவுண்டன் சாட்சி. வெங்கம்பூரு சம்பந்தராயன் புல்லையன் சாட்சி. தலையநல்லூரு கூறைகாளியப்ப கவுண்டன் சாட்சி. அஞ்சூரு பாண்டிவேட்டுவன் நல்லதம்பி கவுண்டன் சாட்சி.

செய வருஷம் வைகாசி மாதம் 28 ந்தேதி சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் ஆத்தூரு சோளியம்மன் கோவிலுக்கு இத்தாதி பேருகளும் கூடி வேளாளர் காடை குலத்துக்கு ராசமுப்பாடு கோயில் முப்பாடு குடுத்ததுக்கு சாட்சி தலையநல்லூரு கூரை காளியப்ப கவுண்டன் சாட்சி. வேங்கலனாடு போத்தி சேசுவராய கவுண்டன் சாட்சி. நீலியப்ப கவுண்டன் சல்லி காளத்தி கவுண்டன் சாட்சி. கிழங்குநாடு கண்டிக் கவுண்டன் சாட்சி. ஊத்துக்கல் பாறையிலே குளிரண்டு, அதுக்கு வடக்குப்புரம் கருங்கல்லிலே குளிமூனு. அதுக்கு கிழக்கு தேட்டுப்பாறையில் குளிரண்டு. அதுக்கு கிழக்கு யெல்லை கொல்லைக்கு வட்டப்பாறையிலே கல்லுசாதனம் போட்டிருக்குது. அது கிழக்கு வெடிச்சாம்பாளியிலே குளிரண்டு. அதுக்கு தெற்கு மூக்குப்பாளியிலே குளிரண்டு.

சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் அஞ்சூரு கவுண்டர்களுக்கு யெல்லை கொல்லை தீர்மானம் பண்ணி தீர்ந்தபடியினாலே புல்லை வெள்ளாளன் மலையாமிரங்கி கவுண்டன் முளைவேட்டுவன் வேலப்ப கவுண்டன் மணநாடு கோடந்தூரு குன்னாடி வேட்டுவன் ராசா கவுண்டன் சாட்சி. கூடலூரு மாந்தைப்படை வேட்டுவன் வண்டிய கவுண்டன் சாட்சி. வேங்கலனாடு சல்லி காளத்தி கவுண்டன் சாட்சி. குடையூரு பொரக்கிலாக் கவுண்டன் சாட்சி. கிழங்குநாட்டுக்கு கண்டி கவுண்டன் சாட்சி. புன்னம் பூவாணிவேட்டுவன்

சேசுவராயன் சாட்சி. வெங்கம்பூருக்கு சம்மந்தராயன் சாட்சி. தூரைகுலம் சாமிநாதகவுண்டர் சாட்சி. கூரைகாளியப்ப கவுண்டன் சாட்சி. முத்தூரு மணிய வேட்டுவன் சாட்சி. அஞ்சூரு கட்டுகல்லைக்கு திரவிபிள்ளை, பிராமணன் மலையாமிரங்கி ஐயன், அம்மன்கோவில் பூசைக்கு அண்ணாமலை பண்டாரம், சின்னாண்டி பண்டாரம், நோட்டக்கார வீரமதட்டான், நாவித விராமன், சங்கிடு பரயன், சொக்கன், தங்குலத்து பரயன் மாட்டயான், கருமன், காத்தான் அஞ்சூர்கவுண்டர்கள்க்கு எல்லை கொல்லை தீர்மானம் செய்ததுக்கு இத்தினை பேரும் சாட்சி.

சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் செயவருஷம் வய்யாசி மாதம் 29 தேதி கார்வழிக்கு எல்லை கொல்லை தீர்மானம் செய்தது. ஊமைகாளிகோயிலுக்கு மேற்கு குளிஇரண்டு. அதுக்குத் தெற்கு குளி ஒன்று அதுக்குத் தெக்காலே சூலம் போட்டிருக்குது. அதுக்கும் தெக்காலே பரப்பிலே குளிமூணு. பாப்பான்பரப்பிலே குளிமூணு. அதுக்குக் கிழக்கே குழி ஒண்ணு. அதுக்குக் கிழக்காலே குளிரண்டு. அதுக்குக் கிழக்காலே செம்மடையிலே குளிஒண்ணு களுதை மடையிலே குளிஒண்ணு. அதுக்கு வடக்காலே குளிஒண்ணு. அதுக்கு வடக்காலே குளிமூணு. இதுக்குத் தீர்மானம் பண்ணி கார்வளிக் கவுண்டர்களுக்கு எல்லை கொல்லை விட்டதற்குச் சாட்சி கோடந்தூரு வெம்பவேட்டுவன் உத்தமலிங்கக் கவுண்டன் கீரைவேட்டுவன் லச்சும கவுண்டன் சாட்சி. தென்னிலைக்கிறாம மோக்காளி வேட்டுவன் சின்னாக் கவுண்டன் சாட்சி. துக்காச்சி முன்னை வேட்டுவன் காளியப்ப கவுண்டன் சாட்சி. வேலப்ப கவுண்டன் சாட்சி. இதுக்குக் கட்டுக்கல்லணை சிவபிராமணன் கள்ளப்புரவி ஐயன் கூட்டம் கோமனாண்டிக்குள்ளே சின்னாண்டிப் பண்டாரம் கார்வளிக்கிராமம் தீர்மானம்

விட்டதற்கு இத்திபேரும் சாட்சி. அதுக்குமேற்குக் குளிமூணு. அதற்கு மேற்கு குளிரண்டு. அதுக்கு மேக்கு குளிமூணு. இடைக்காட்டுக்கு மேற்கு குளிரண்டு. அதுக்கு வடக்கு குளிரண்டு. அதுக்கு வடக்கு புல்லை கல்லுலே குளிஒண்ணு. குருக்கத்திக்கு மேற்கு குளிரண்டு. அதுக்கு வடக்காலே குளிரண்டு. அதுக்கு வடக்காலே குளிஒண்ணு. விரிதலைக்காட்டுக்கு மேக்கு குளிமூணு. அதுக்கு வடக்கு உப்பிலியன்காவலி போட்டிருக்குது. அதுக்கு வடக்குப்புரம் குளிமூணு. அதுக்கு வடக்கு குளிரண்டு. கோடந்தூரு கவுண்டர்கள் கீரை வேட்டுவன் லச்சும கவுண்டன் வெம்பவேட்டுவன் உத்தமலிங்கக் கவுண்டன் குறாண்டி வேட்டுவன் ராசாக்ககவுண்டன வெங்கச்சி வேட்டுவன் கூடை யெராக் கவுண்டன் சலிய உலகன்.

சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் கோடந்தூருக் கவுண்டர்களுக்கு எல்லை கொல்லை தீர்மானம் பண்ணித் தீர்ந்த பிரகாரம். இதுக்குச் சாட்சி தென்ங்கரைநாடு வேணுடையாக் கவுண்டன். தலையூர் தம்பனை கவுண்டன் சாட்சி. கூடலூார் புண்ணம் பெரியாக் கவுண்டன் சாட்சி. தென்னிலைக் கிறாமம் மோக்காளிவேட்டுவன் கொங்குமொட்டையன் சின்னக் கவுண்டன் சாட்சி. புல்லைவேட்டுவன் சம்பந்தராயன் சாச்சி. மணநாட்டில் இருக்கும் சிறுத்தலை வேட்டுவன் காசியப்ப கவுண்டன் சாட்சி. கட்டுக்கல்லணை பிராமணன் அழகிரி ஐயன், திருக்கணக்கர் வகையில் அச்சுதபிள்ளை, தட்டார் வகையில் கணபதி

தட்டான், கோமணாண்டிக்குள்ளே காளியாண்டி, பறையருக்குள்ளே நல்லான், பெரியான் இத்தனைபேரும் சாட்சி.

சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் எல்லை கொல்லை தீர்மானம் பண்ணி சம்மதிச்சு காணிவிட்டது. கோடந்தூரு ராசாக் கவுண்டனுக்கு அறுதியாய் முத்துச்செட்டி காணிகுடுத்தது. சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் செயவருசம் ஆனிமாதம் 15ஆம் தேதி தலையூருக்கு வடபுரம் கூடலூரு. அதுக்குக் கிழக்கு குளிஒண்ணு. அதுக்குத் தென்புரம் தலையூருக்கு வடபுரம் கூடலூரு. அதுக்குக் கிழக்கு சூலம் போட்டிருக்குது. அதுக்குக் கிழக்கு குளிரண்டு. அதுக்குக் கிழக்கு சூலம் குளிமூணு. அதுக்குக் கிழக்கு குளிரண்டு. அதுக்குக் கிழக்கு குளிஒண்ணு. அதுக்குக் கிழக்கு குளிரண்டு. அதுக்குக் கிழக்கு அணைக்குத் தென்புறம் குளிஒண்ணு. அதுக்குக் கிழக்கு குளிமூணு. அதுக்குக் கிழக்கு அணைக்குத். தென்புறம் குளிஒண்ணு. சூலம். தெற்குப்புறம் தலையூருக்கு வடக்குப்புறம் மணல்நாடு. அதுக்கு வடபுறம் குளிஒண்ணு. அதுக்கு வடக்கு குளிரண்டு. அதுக்குக் கிழக்கு மூலையில் குளிரண்டு. அதுக்குக் கிழக்கு குளிஒண்ணு. தாராபுரத்திற்குக் கிழக்குக் கடையில் கரும்பாறையில் குளிரண்டு. அதுக்கு வடக்கு சந்திரசூரியன் போட்டிருக்குது. அதுக்கு வடக்கு காரைப்பரப்பில் குளிரண்டு. அதுக்கு மேற்கில் நெட்டுக்குளி ஒண்ணு. ஊஞ்சப்பரப்பில் குளிரண்டு. அதுக்கு மேற்கில் முன்னைப்பரப்பில் குளிஒண்ணு. அதுக்குமேற்கு செம்மடையிலே நீலப்பாறையில் சூலம் போட்டிருக்குது. அதுக்கு மேற்கு குளிஒண்ணு. அதுக்கு மேற்கு கருங்கல்லிலே குளிரண்டு. அதுக்கு, மேற்கு குளி ஒண்ணு.அதுக்கு மேற்கு கருங்கல்லிலே குளிரண்டு. அதுக்கு மேற்கு குளிஒண்ணு. அதுக்கு மேற்கு குளிரண்டு.

கூடலூருக் கவுண்டர்கள் சிறுத்தலை வேட்டுவன் காசியப்பன் கொங்குமொட்டையன் நாளையிலே மோகாளி வேட்டுவன் வெம்பவேட்டுவன், உத்தமலிங்கக் கவுண்டன், மாந்தைப்படை வேட்டுவன், பனையவேட்டுவன் வேலப்ப கவுண்டன், வெங்கச்சிவேட்டுவன் கூடயெராக் கவுண்டன், இதுக்குக் கட்டுகல்லணை பாப்பாருக்குள்ளே அவிநாசிஐயன், திருக்கணக்கர் அச்சுதபிள்ளை, கோமணாண்டியில் வயிராண்டி, நோட்டக்காரக் கணபதிதட்டான். சங்கிடும் பறையன் நம்பன், நாவித உலகன் இதுக்குச் சம்மதிச்சுக்கொண்டு சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் ஒக்கிலியரை வெட்டி முடுக்கினபடியினாலே இந்த ஆறு கவுண்டர்களுக்கு எல்லை கொல்லை தீர்மானம் பண்ணித் தந்த பிரகாரம்.

இதுக்கு சாட்சி. உருமைப்படை வேட்டுவன் கிஷ்ண கவுண்டன், தலையூரு தம்பண கவுண்டன் கீரை வேட்டுவன் லச்சம கவுண்டன், புல்லை வேட்டுவன் சம்பந்தராயன் சாட்சி. வேங்கலநாடு மருதக் கவுண்டன் இந்த ஆறு பேர் கவுண்டர்களுக்குக் காணி பூமி எல்லை கொல்லை சம்மதிச்சு விட்டதுக்கு இத்தனைபேரும் சாட்சி. புண்ணம் பெரியாக் கவுண்டர், சிறுதலை வேட்டுவன் கால்பங்கு. கொங்குமொட்டையன் கால்பங்கு. உத்தமலிங்கக் கவுண்டன் கால்பங்கு. மாந்த கவுண்டன் கால்பங்கு. வேலப்ப கவுண்டன் கால்பங்கு. கட்டயராசாக் கவுண்டன் கால்பங்கு. இந்த ஆறுபேர் கவுண்டர்களும் கூடி ஊழியத்திற்கு

ஆனில்லை என்று சொல்லி புண்ணம் பெரியண கவுண்டனுக்குக் காணி பூமி எல்லை கொல்லை தங்களுக்கு நடந்தபிரகாரம் நடத்திக் கொண்டார்கள். வேட்டுவன் பொன்னாக் கவுண்டனுக்கு ராசம்மாள் அதவப்பிள்ளையைக் கொண்டதுக்கு புண்ணம் பெரியணகவுண்டன் மகளுக்குக் கால் பங்கு குடுத்தான். புண்ணம் பெரியண கவுண்டன் இந்த ஆறு கவுண்டர்களையும் கேட்டு ராசம்மாள் கவுண்டச்சிக்கு கோயில் முப்பாடு வாங்கிக் குடுத்தான். ராசம்மாள் கவுண்டச்சி மகன் பொன்னாக் கவுண்டன் தில்லையப்ப கவுண்டன் தில்லை அவிநாசி கவுண்டன் ராசாக் கவுண்டன் இந்த நாலு பேருக்கு நாலு கிணறு வெட்டி விச்சுக்குடுத்தான். ராசம்மாள் மூத்தகுடி மகனுக்கு கோயில் முப்பாடு வாங்கிக் குடுத்தாள். தில்லையப்ப கவுண்டருக்குக் கோயில் முப்பாடு மதியாக்கூடலூரிலே வாங்கிக் குடுத்தாள்.

இந்தப்படி சம்மதி பண்ணித் தீர்ந்த பிரகாரம். செயவருசம் ஆனி மாதம் இருபதாம் தேதி சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் காரைப்பரப்புக்கு கிழக்கு குளி ஒண்ணு. அதுக்குக் கிழக்கு புல்லைக்கல்லிலே குளிரண்டு. அதுக்குக் கிழக்காலே நடந்தைக் கிராமம் ஆலாம்பறப்புக்குத் தெக்காலே குளிஒண்ணு . அதுக்கிழக்காலே குளிரண்டு. அதுக்குக் கிழக்காலே குளிஒண்ணு. அதுக்குக் கிழக்காலே குளிரண்டு. அதுக்குக் கிழக்காலே நல்லிபாளையத்துக்கு வடக்காலே குளிமூணு. அதுக்குக் கிழக்கால குளிஒண்ணு. கருமபாளையத்துக்குக் கிழக்கு குளி . ஒண்ணு. அதுக்குத் தெற்கால் கரைக்குக் கீழ்ப்பிரம் குளிரண்டு. சல்லிபட்டிக்குத் தெற்கால் குளிஒண்ணு. அதுக்குத் தெற்கு வட்டப்பாறையில் குளிரண்டு. அதுக்கு மேக்குக் குளிஒண்ணு. அதுக்கு மேக்கு தொக்குப்பட்டிக்கு வடக்கால் குளிரண்டு. அதுக்கு மேக்கால் குளிரண்டு.

வேட்டுவக் காளியப்ப கவுண்டன், வேலப்பகவுண்டன் இந்த ரண்டுபேர் கவுண்டர்களுக்கு நடந்தைக் கிறாமும் காணிபூமி எல்லை கொல்லை தீர்மானம் பண்ணி இதுக்குத் தீர்ந்த பிரகாரம் இதுக்கு கட்டு கல்லணை பாப்பாரில் லிங்கர் வட்டய்யன், கோமணாண்டியில் காளியாண்டி, தட்டார் வகையில் வேலத்தட்டான்,திருக்கணக்கரில் அன்னாபிள்ளை, நாவிதருள் செல்லன், பறையருள் காத்தான், இதுக்குச் சாட்சி வேளாம்பூண்டி நாச்சியப்ப கவுண்டன், முன்னூரு அல்லாளிக் கவுண்டன், முன்னைவேட்டுவன் சாட்சி. சேர சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் ஒக்கிலியரை வெட்டி முடக்கினபடியினாலே காணிபூமி எல்லை கொல்லை சம்மதிபண்ணித் தீர்ந்தபிரகாரம். இந்த மூணுபேர் கவுண்டர்களும் சாட்சி. செய வருஷம் ஆனி மாதம் 25 ஆம் தேதி கள்ளிப்பறப்புக்கு கிழக்குக் குளிமூணு. அதுக்கு மேற்குக் குளிஒண்ணு. அதுக்கு மேற்கு குளிரண்டு. அதுக்குமேற்கு குளிஒண்ணு. அதுக்கு மேற்கு கயிரு மத்துகோலு கலில் போட்டிருக்குது. அதுக்கு வடக்கு ஆத்தோரம் குளிரண்டு. அதுக்கு வடகரையில் குளிரண்டு. அதுக்கு மேற்கு குளிஒண்ணு. பாலையணையில் குண்ணாங்கல்லில் கல்சாதனம் போட்டிருக்குது. அதுக்கு மேற்குக் குளிஒண்ணு. அதுக்கு மேற்குக் குளிரண்டு. ஆமைக்கல்லுப் பாளியில் குளிஒண்ணு. அதுக்கு மேற்கு தெக்கு அண்டினாப்போல அதுக்கு மேற்குசொக்கட்டான் கல்லு அடிச்சிருக்குது. அதுக்கு மேற்குக் குளிஒண்ணு. அதுக்கு மேற்கு குளிரண்டு. அதுக்கு மேற்கு

குளிஒண்ணு. களுதைமடைக்கு வடக்கு குளிரண்டு. களுதை மடையில் குளி ஒண்ணு. அதுக்கு வடக்கு முட்டப்பறப்பில் குளிரண்டு. பில்லாப்பறப்புக்குக் கிழக்கு குளி ஒண்ணு. அதுக்கு வடக்கு குளிஒண்ணு. செம்மடை வடக்கால் குளிரண்டு. அதுக்கு வடக்கு குளிஒண்ணு. அதுக்கு வடக்கு குளிரண்டு. அதுக்கு வடக்கு குளிஒண்ணு. அதுக்குத் தெற்கு குளிமூணு.

தென்னிலைக்கிராமம் கவுண்டர்கள், சிறுதலை வேட்டுவன் காசியப்பன், கொங்கு மொட்டைய கவுண்டன், உத்தமலிங்கக் கவுண்டன், மின்னை வேட்டுவன் அல்லாளிக் கவுண்டன், திருக்கணக்கு அச்சுதபிள்ளை, பாப்பாரில் அவிநாசி ஐயன், கோமணாண்டியில் வயிராண்டி, தட்டாரில் கணபதித்தட்டான், பறையருக்குள் சொக்கன், காட்டான். இவுகளுக்கு எல்லை கொல்லை தீர்மானம் பண்ணினத்துக்கு இத் ாதி பேரும் சாட்சி.

இடப்பிச்சநாடு கிராமத்திற்கு எல்லை கொல்லை மலைக்குத் தெற்கு குளிரண்டு, அதுக்குத் தெற்கு குளிஒண்ணு. ஆரியூரு நத்தத்திற்கு மேற்கால் இடப்பிச்சநாடு, வேங்கலநாடு அதுக்குத் தெக்கு நடுப்பிர குளிஒண்ணு. அதுக்கு தெற்கு குளிமூணு. சின்ன முத்தாம்பாளையத்துக்குக் கிழக்கால் குளிமூணு. இடப்பிச்சநாடு கவுண்டர் முன்னைவேட்டுவன் அல்லாளிக் கவுண்டன், சிறுத்தலை வேட்டுவன் பெருமாள் கவுண்டன், மோக்காளி வேட்டுவன் குட்டைத்தேவண கவுண்டன். இதுக்குக் கட்டு கல்லணை பிராமணன் அவிநாசிலிங்க ஐயன், கோமணாண்டியில் வயிரன், காளியாண்டி, கணக்கரில் அண்ணாபிள்ளை, தட்டாரில் மருதைத்தட்டான் பறையரில் சொக்கன், மாந்தை வெள்ளாளன் குப்பிச்சிக் கவுண்டன். இவர்களுக்கு எல்லை கொல்லை தீர்மானம் பண்ணினதுக்கு இத்தாதிபேர் கவுண்டர்களும் சாட்சி.

பரமத்தி பாப்படை வேட்டுவனுக்குக் காணிஆட்சி குடுத்தது. பாப்படை வேட்டுவனுக்கு பறையவர்த்தனை குடுத்தது. மக்கத்து அஞ்சபணமும் ஊத்தைக்குக் கால்பணமும் தீர்ந்தபிரகாரம். அம்மைகோயிலுக்குத் தெக்கு கல்செக்கு அதுக்கு வடக்கு இட்டாறிக்ள். கல்செக்கு ஓரமே மேற்கால் அம்மைகோவில் ஆண்டி காட்டில் சூலம் போட்டிருக்கும். அதுக்குக் கிழக்குக் குளிஒண்ணு. அதுக்குக் கிழக்கு குளிஒண்ணு. வெள்ளாளரில் மொண்டி காளியப்ப கவுண்டன்| தட்டாரில் மருதைத்தட்டான், மொண்டி காளியப்ப கவுண்டனுக்கு படித்தாரு கிழக்கு மூலை.

சேர சோழ பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் செயவருசம் ஆனி மாதம் 25 ஆம் தேதி தலையநல்லூர் கவுண்டர்களுக்கு எல்லை கொல்லை தீர்மானம் செய்தது. பூணைக்கடையிலே குளிரண்டு. அதுக்கு வடக்கால் கருங்காளிபாளையத்துக்கு மேற்கு குளிஒண்ணு. அதுக்கு வடக்கால் நிலப்பாளிக் கரும்பாறையில் சூலம் போட்டிருக்குது. அதுக்கு மேற்கு குளிஒண்ணு. அதுக்கு வடக்கு ஆரியப்படிப்புக்காட்டில் குளிரண்டு. அதுக்கு வடக்கால் குன்னாங்கால் காட்டில் குளிஒண்ணு. அதுக்கு மேற்கு குளிஒண்ணு. அதுக்கு மேற்கு வெள்ளைப்பாளிக்கு நேரு வடக்கு நிலப்பாளியில் குளிஒண்ணு. கருந்தேவன் குட்டை மேல்புறம் ரண்டு. காடன் குளி மூணு. வடபுறம் பூந்துறைநாட்டுக்குத் தென்புறம் அரையநாடு. அதுக்கு மேற்கு

குளிஒண்ணு. அதுக்கு மேற்கு அண்ணாமலைபாளையம். நாலு காடெங்ககுளி ஒண்ணு. அதுக்கு மேற்கு வட்டப்பாளியில் குளி மூணு. அதுக்கு மேற்கில் சூலம் போட்டிருக்குது. இந்தச் சூலத்திற்கு தெற்கு மேற்குப்புறம் தலையநல்லூர் நாடு எல்லையில் குளிஒண்ணு. அதற்குத் தெற்குக் குளிரண்டு. அதுக்குத் தெற்கு குளிமூணு. அதுக்குத் தெற்கு குளி ஒண்ணு. அதுக்குத் தெற்கு சூலம் போட்டிருக்குது. முகப்பாளியில் சூலம்ரண்டு சக்கரைப்பாளியில் சூலம்ரண்டு. தலையநல்லூர்க் கிராமம் கவுண்டர்கள் வெம்ப வேட்டுவ உத்தமலிங்கக் கவுண்டன், மாச்சாடி வேட்டுவன் மாரப்பகவுண்டன், கொல்லிவேட்டுவ கிஷ்ணகவுண்டன், வெலையவேட்டுவன் அரிச்சந்திரக் கவுண்டனுக்கும் கட்டு கல்லணை பாப்பாரில் பங்கயன், தட்டார்க்குள் பொங்காளித் தட்டான், கோமணாண்டிக்குள் காளியாண்டி, பறையரில் கருமன், காத்தன்.

சேர சோழ பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் ஒக்கிலியரை வெட்டி முடிக்கின படியினால் காணிபூமி எல்லை கொல்லை தீர்மானம் பண்ணித் தீர்ந்த பிரகாரம். இதுக்குச் சாட்சி பாண்டிவேட்டுவன் குள்ளக் கவுண்டன், வெங்கம்பூரு புல்லைவேட்டுவ சம்பந்தராயன், பூந்துறைநாடு கோட்டைக் கவுண்டன், உத்தமலிங்கக் கவுண்டன், முன்னைவேட்டுவ வேலப்ப கவுண்டன், மணல்நாடு கோடந்தூரு குன்னாடிவேட்டுவ ராசாக்கவுண்டன், கூடலூரு மாந்தைப்படைவேட்டுவ வண்டிக் கவுண்டன், சல்லி காளத்திக் கவுண்டன், கொடையூர் புரக்கிலக் கவுண்டன், கிழங்கு நாடு கண்டிக் கவுண்டன், புன்னம் பூவாணிவேட்டுவ சேசுவராயன், துவரைகுலம் சாமநாதக் கவுண்டன், கூரை காளியப்ப கவுண்டன், கொல்லங்கோவில் சொன்னவேட்டுவன் சாட்சி. பதரி வேட்டுவன் முத்தூர் மணிய வேட்டுவன் சாட்சி.

சேர சோழ பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் ஒக்கிலியரை வெட்டி முடுக்கின படியினாலே தலையநல்லூர்க் கவுண்டர்கள் உத்தமலிங்கக் கவுண்டன், மாச்சாடிவேட்டுவன் மாரப்பகவுண்டன், கொல்லிவேட்டுவன் கிஷ்டணகவுண்டன், வெலையவேட்டுவன் சந்திர கவுண்டன், நரியவேட்டுவன் அரிச்சந்திரக்வுண்டன். இந்த அஞ்சு பேர் கவுண்டர்களுக்குக் காணி பூமி எல்லை கொல்லை தீர்மானம் பண்ணித் தீர்ந்த பிரகாரத்துக்கு நாட்டாரு ஊரார் இத்தனைபேரும் சாட்சி. யிந்த அஞ்சுபேர் கவுண்டர்கள் கூடி கூரை காளியப்ப கவுண்டன் கையிலே ஐயாயிரம் பொன் வாங்கிக் கொண்டு காணிபூமி எல்லை கொல்லை தங்களுக்கு நடந்த பிரகாரம் நடத்திக்கொண்டு வருவீராகவும். இத்தனை பேரு நாட்டார் ஊரார் சாட்சி.

செய வருசம் ஆனி மாதம் 27 ஆம் தேதி நஞ்சராயன் காலத்தில் தின்றான் கையில் பாப்பான் நீலான் தன்னுடைய அவசர நிமத்தியமாக வாங்கியது ஐநூறு பொன். யிந்த ஐநூறு பொன்னு பாப்பான் நீலான் கையில் குடுக்கிறதுக்கு சக்கிலியத் திம்மன் நம்பிக்கையில்லாத படியினாலே பில்லைவேட்டுவ சம்பந்தராயக் கவுண்டனும், பாப்பான் நீலான் இந்தக் கவுண்டர்களையெல்லாம் அழைச்சு வச்சுக்கொண்டு சக்கிலியத் திம்மனுக்குத் தனங்காட்டை யருதி பண்ணிவச்சு கல்வெட்டிப் போட்டுக் குடுத்ததுக்கு அங்கே சாதனம் காட்டுக்கு மேற்கு மூலையிலே

துத்தாரி வடக்கு மூலையிலே புல்லைக்கல்லிலே கருவிக்கூடம் போட்டிருக்குது. தென்கிழக்கு மூலையிலே கிச்சுக்கத்தி தென்மேற்கு மூலைப்பாளியிலே கல்சாதனம் போட்டிருக்குது. இந்தப்படி சம்மதி பண்ணிக்குடுத்ததுக்குச் சாட்சி மொஞ்சனூர் ஆந்தைகுலம் நல்லதம்பிக் கவுண்டன், கோடந்தூர் பனையவெள்ளாளன் புள்ளாக் கவுண்டன் ஆக இத்தினை பேரும் சாட்சியாகத் தீர்ந்த பிரகாரம் சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் செய வருசம் ஆவணி மாதம் 11 ஆம் தேதி தென்னிலைக் கிராமம் கவுண்டர்கள் சிறுதலைவேட்டுவன் காசியப்பகவுண்டன், மோர்க்காளிவேட்டுவன் கொங்கு மொட்டைய கவுண்டன் வெங்கச்சிவேட்டுவன் அல்லாளிக் கவுண்டன், மாந்தப்படைவேட்டுவன் காசியப்ப கவுண்டன், கீரைவேட்டுவன் பழனிக் கவுண்டன், குழந்தைவேலப்ப கவுண்டன், பெருங்குடி வெள்ளாளன் திரும கவுண்டனுக்குக் கால்பங்கு, ஆயிரத்து ஐநூறு பொன் இத்தினை பேர் கவுண்டர்கள் கூடி அவர் கையில் வாங்கிக் கொண்டு கால்பங்கு திரும கவுண்டனுக்குக் கொடுத்தார்கள். யிதுக்குக் கோடந்தூரு குன்னாடிவேட்டுவன் சாட்சி கூடலூரு மாந்தபடைவேட்டுவன் சாட்சி. பனையவேட்டுவன் சாட்சி. பழனிக்கவுண்டன் சாட்சி. நடந்தைக்கிராமம் குழந்தை வேலப்பகவுண்டன் சாட்சி. சல்லிகாளத்தி கவுண்டன் நீலியப்பகவுண்டன், கிழங்குநாடு வடுகவேட்டுவன் கண்டிய கவுண்டன் சாட்சி. சம்பந்தராயக் கவுண்டன் சாட்சி. தலையநாடு சாமிநாதக் கவுண்டன் சாட்சி.

கலியுக சகாப்தம் மூவாயிரத்து நூற்றி எண்பத்துக்கு மேல் சாலியவாகன சகாப்தம் மூவாயிரத்துநூற்றி எண்பதுக்கு மேல் செல்லாநின்ற சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் மின்னாம்பள்ளி வள்ளியம்மன் கோவில் இத்தாதிபேர் கவுண்டர்களும் வெள்ளாளர் கண்ணந்தை குலத்துக்கு ராச முப்பாடு கோயில் முப்பாடு குடுத்ததுக்குப் புன்னம் சேசுவராயன் சல்லி காளத்திக் கவுண்டன், கிழங்குநாடு கண்டிக் கவுண்டன், மணநாடு புரக்கிலாக்கவுண்டன், தலையநல்லூர் கூரை காளியப்பகவுண்டர் சாட்சி. ஆத்தூரு மாந்தைப்படைவேட்டுவ வண்டிய கவுண்டன் சாட்சி. சம்பந்தராய கவுண்டன் சாட்சி.

மன்மத வருசம் பங்குனி மாதம் சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் கிழங்குநாடு வராக வேட்டுவன் கண்டியக் கவுண்டனுக்கு கிழங்குநாடு எல்லை கொல்லை விட்டது. கொடுமுடிப் படித்துறையில் பொளிகாட்டினது. கொடுமுடிக்கும் தென்பாதி எல்லை மஞ்சிக்காட்டிலே குளிரண்டு. அதுக்குத் தென்பாதி வெங்கக்கல் மேட்டிலே குளிரண்டு. அதுக்குக் கீழ்பாதி அத்திப் பாளையத்துக்குக் கீழ்பாதி சூலக்கல் அடிச்சிருக்குது. அதுக்குக் கிழ்பாதி புங்கப் பள்ளம் ஓடப்பு வாயிலே நெட்டுக் குளிரண்டு. அதுக்குக் கீழ்ப்பாதி சுக்கக்கரட்டுக்குத் தென்பாதி செம்மடையில் குளிஒண்ணு. அதுக்குக் கீழ்ப்பாதி நிபச்சிக்கல்லில் குளி ஒண்ணு. அதுக்குக்கீழ்ப்பாதி சாலியச் செம்மடையில் குளிஒண்ணு. அதுக்குக் கீழ்ப்பாதி வீரனத்தக்காட்டில் பாறையில் குளிஒண்ணு. அதுக்குக் கீழ்ப்பாதி ஒருவாக் கிணத்துக்குக் கீழ்ப்பாதிப்பாறையில் குழிஒண்ணு. அதுக்குத் தென்பாதி துண்டுப்பெருமாபாளையத்துக்கு தோட்டம். தோட்டத்துக்குத் தென்பாதிக்கும் கல்லில் சூரியன் அடிச்சு இருக்குது. அதுக்குத் தென்பாதி ஆத்தூரு நத்தத்துக்கு மேல்புறம் மூக்கறைப்பிள்ளையார். அதுக்குக் கீழ்ப்பாதி நிலப்பாறையில்

குளிஒண்ணு. அதுக்குக் கீழ்ப்பாதி சூலக்கல்லில் இருபுரம் சந்திரசூரியன் அடிச்சிருக்குது. அதுக்குக் கீழ்ப்பாதி கொளத்துப்பாளயம். அதுக்குத் தென்பாதி பாறைமேல் குளிஒண்ணு. அதுக்கு கீழ்ப்பாதி பசுபதி ஈசுவரன் கோவிலுக்குப் பாதி ஆலாமரத்துக்காட்டில் சூலக்கல் அடிச்சிருக்குது. சூலக்கல்லுக்குத் தென்பாதி வெங்கலநாடு வடபாதி கிழங்குநாடு. சூலக்கல்லுக்குக் கீழ்ப்பாதி கருரு வய்த்ததில் குருவப்பநாய்க்கன் வீட்டுக்கு தென்பாதி தட்டையநாடு. வடபாதி கிழங்கு நாடு. குருவப்பநாயக்கன் வீட்டுக்குக் கீழ்ப்பாதி பாறைமேல் குளிரண்டு. அதுக்குக் கீழ்க்கரைக்கு பசுபதிபாளையத்திற்கு கீழ்ப்பாதி பிச்சன் தண்ணிப்பந்தல். புள்ளையார் கோவிலுக்குக் கீழ்ப்பாதி குளிரண்டு. அதுக்கு வடக்குக்கரைக்கு வடபாதி பஞ்சமாதெய்வப் பாறைமேல் குளிஒண்ணு. அதுக்கீழ்ப்பாதி கோயம்பள்ளிக்கு வடபால் கருங்காட்டில் பாறைமேல் குளிரண்டு. தேவிக்குக் கீழ்ப்பாதி அதுக்குக் கீழ்ப்பாதி ஊருக்கு வடபாதி காவேரிக்கு வடபாதி பண்ணைக்கெணறு.

வெள்ளை புள்ளையாருக்கு வடபாதி சூலக்கல் அடிச்சிருக்குது. சூலக்கல்லுக்குக் கீழ்புறம் வாழவந்தி நாடு. அதுக்கு மேல்புறம் கிழங்குநாடு. வடபாதி மூலிவிட்டான் கல்பாறைமேல் குளிரண்டு. அதுக்கு மேற்பாதி ஆரியூருக்கு மேபாதி ஆமைப்பாறையில் சந்திர சூரியன் அடிச்சிருக்குது. அதுக்கு மேபாதி ஒட்டைப்புள்ளையார் கோவில் சூலக்கல் அடிச்சிருக்குது. அதுக்கு மேபாதி சீதேவியம்மன் பாறையில் குளிஐந்து. பாறைக்கு வடபாதி வாழவந்தி நாடு. தென்பாதி கிழங்குநாடு. அதுக்கு மேபாதி இடும்பன்குளம் கீழ்க்கடையில் குளிஒண்ணு. அதுக்கு மேபாதி பரமுத்தி. பரமுத்திக்கு வடபாதி அரையநாடு. பரமுத்திக்கி மேபாதி கரும்பாறையில் சூலம் அடிச்சிருக்குது. அதுக்கு மேபாதி வீரணம்பாளையத்து நெல்பாறையில் குளிமூணு. அதுக்கு மேபாதி கபிலமலைக்கு மேற்பாதி குளி ஒண்ணு. அதுக்கு மேற்பாதி எல்லைபுள்ளையார் கிட்ட கல்லிலே தூபக்கால் மணியும் போட்டிருக்குது எல்லை புள்ளையாருக்கும் வடபாதி அரையநாடு. தென்பாதி கிழங்குநாடு. அதுக்கு மேபாதி காவேரியில் பாறையில் குளிஒண்ணு. அதுக்குத் தென்பாதி பிலிக்கல்லில் குளிரண்டு. அதுக்கு மேபாதி காவேரிக்குத் தென்பாதி கொடுமுடிப் படித்துறையில் கீழ்ப்பாதி குளிமூணு. இதுக்கு எல்லை கொல்லை தீர்மானம் செய்தது.

சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணர் காலத்தில் ஒட்டரை வெட்டி முடிக்கினபடியினாலே வராகவேட்டுவன் கண்டிக் கவுண்டனுக்கு எல்லை கொல்லை தீர்மானம் செய்ததுக்குத் தென்கரை வேணாவுடையாக் கவுண்டன், காங்கேயமன்னாடியார், வெங்கலநாடு சல்லிகாளத்திக் கவுண்டன், நீலியப்ப கவுண்டன், ஆத்தூரு மாந்தப்படைவேட்டுவன் வண்டிக் கவுண்டன், சம்பந்தராயக் கவுண்டன், கூரைகாளியப்ப கவுண்டன், அஞ்சூரு பாண்டிவேட்டுவன் நல்லதம்பிக் கவுண்டன், மணநாடு கோடந்தூரு உத்தமலிங்கக் கவுண்டன், கண்ணாடிவேட்டுவன் ராசாக் கவுண்டன் சாட்சி. கொடையூரு புரக்கிலாக்கவுண்டன் சாட்சி. தென்னிலை மோக்காளி வேட்டுவன் சின்ன கவுண்டன் சாட்சி. கட்டுகல்லணை சிவபிராமணர்கள் புரவி ஐயன் சாட்சி. கிழங்கு நாட்டுக்குச் சிவபிராமண சுப்பையன், கோமாணாண்டியில் கண்டியாண்டிப்

பண்டாரம் சாட்சி. சங்கிடு பறையன், கண்டித்தோட்டி, தங்குலத்து பறையன் முத்தான் இத்தாதி பேரும் எல்லை கொல்லை தீர்மானம் செய்தோம். கிழங்கு நாட்டுக்கு பில்லை வேட்டுவன் எனக்குப்பங்கு உண்டு என்று கேள்க்க நாங்கள் இத்தாதிபேர் நாட்டார் ஊரார் கூடி ஆயிரம் பொன் செலவு பணம் குடுத்தால் நாங்கள் பங்கு குடுக்கிறோம் என்று சொன்னோம். அவனும் குடுக்கிறோமென்று சொன்னான். குடுத்த போது பேருபாதி பிரிச்சுக் குடுக்கறோம் என்றோம். இதுக்கு மேல்கண்ட சாதகம் தென்னிலைக் கோட்டையில் அஞ்சுபேரு கவுண்டர், அஞ்சு அரமனை, அஞ்சுபிள்ளையார் கோவில் மேல்புறத்துத் தலைவாசலில் சிங்காதனப்பாறையில் ஒக்கலியன் தாலி முக்காத்தாலி செப்புப்பட்டயம் மூனு மூத்தாந்தாளியில் சிங்காதனக் கல்லுக்கடியில் வச்சிருக்குது. இதுக்கு மேல் சாதகம் கண்டுயிருக்கும்.

கொடுமுடி மகுடீஸ்வரர் கோவிலில் சாதகம் போட்டிருக்குது. அதுக்கு அடையாளம் வெள்ளக்கல்லில் உப்பிலியன் காவிலி அடிச்சிருக்குது. உண்மை சாதகம் காவேரிக்கு வடகரை கிழங்கு நாட்டு. மடப்பள்ளி ஈசுவரன் கோவில் சாதகம் போட்டிருக்குது. இன்னம் சாதகம் சீதேவியம்மன் கோவிலுக்கு வடபாதி வாழவந்திக்குத் தென்பாதி நாலுகல் நட்டிருக்குது. அதுக்குண்டு புறம் சாத்தன்கல் அடிச்சிருக்குது. நாகம்பள்ளிக் கிராமத்தில் செல்லாண்டியம்மனுக்குக் கோவில் முப்பாடு குடுத்தது. வெள்ளாளகுலப் பூச்சந்தை சரத்தந்தைக்குக் கோவில் முப்பாடு குடுத்ததுக்குச் சாட்சி வெங்கலநாடு சல்லிகாளத்திக் கவுண்டன், நீலியப்பக் கவுண்டன், முத்தூர் மணியவேட்டுவன் சாட்சி. தென்னிலை மோக்காளி வேட்டுவன் சின்னக் கவுண்டன் சாட்சி. கொடையூரு புரக்கிலாக் கவுண்டன், புன்னம் பூவானி வேட்டுவன் சின்ன கவுண்டன் சாட்சி. சம்பந்தராயன் சாட்சி. துவரைகுலம் சாமநாதன் கவுண்டன் சாட்சி. சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் மன்மத வருசம் சித்திரை மாதம் 26 ஆம் தேதி முப்பாடு குடுத்ததுக்கு இத்தாதி பேரும் சாட்சி.

இந்த சிலாசாசனம் எழுதினது காசித்தட்டான். உ. சிவமயம். மண்மங்கலம் கிராமத்தில் காளியம்மன் கோவிலுக்கு வெள்ளாச்சாரி குலத்துக்கு ராச முப்பாடு, கோயில் முப்பாடு குடுத்ததுக்குச் சாட்சி சல்லி காளத்திக்கவுண்டர், வராக வேட்டுவன் கண்டிக்கவுண்டன் இத்தாதி பேர் சாட்சி. இந்தப் பட்டயம் உப்பிலிய நாயக்கன் வசம் மூனு பட்டயம் நாட்டார் ஒப்பி வச்சிருக்கிறோம்.

# 37. தென்னிலைச் செப்பேடு-2

இப்பட்டயமும் திருச்சி மாவட்டக் கரூர் வட்டத் தென்னிலை வேட்டுவப் பட்டக்காரர் எம். ஏ. பகவதிக் கவுண்டர் அவர்கள் வீட்டில் உள்ளது. கொங்கு மாத இதழில் வெளிவந்துள்ளது.*

கொங்கு நாட்டின் பூர்வீகக் குடிகள் வேட்டுவர்குலப் பெருமக்கள். அவர்களுக்குச் சொந்தமான ஊர்களையும் கோயில்களையும் கொங்கு வேளாளர்கள் கொங்கு நாட்டில் குடியேறியபோது படிப்படியாகப் பொன்னும் பொருளும் கொடுத்துப் பெற்றனர். அதனையே இப்பட்டயமும் முந்தைய தென்னிலைப் பட்டயமும் விளக்குகிறது.

உக்கிலியரை விரட்டியதால் வேட்டுவர் தாம் பெற்ற தென்னிலைக் காணியில் கால் பங்கு உரிமையை 1000 பொன்னுக்குப் பெருங்குடி வேளாளராகிய கொங்கு வேளாளருக்கு விலைக்கு விற்றனர்.

இதே போல் நீலியம்மன் கோயில், வேங்கபுரம் அம்மன் கோயில், கண்டியம்மன் கோயில், மங்கலம் காளியம்மன், மின்னாம்புலி வன்னியம்மன் கோயில் ஆகியவற்றின் காணி உரிமைகள் வேட்டுவர் குலத்தாரிடமிருந்து வேளாளருக்கு மாறுகிறது. ஆனால் கோயில் உற்சவங்களும் உற்சவத்தின்போது கோயில் பணியாளர்கட்குக் கொடுக்கின்ற கொடைகளும் எந்தவிதமாற்றமும் இல்லாமல் அப்படியே முன்பு நடைபெற்ற முறை போலவே நடைபெறவேண்டும் என்பதையும் தெளிவாக எழுதிக் கொடுத்துள்ளனர்.

## மூலம்

கலியுக சகார்த்தம் 3689 இல் சாலிவாகன சகாப்தம் 360 மேல் செல்லாநின்ற சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் விகாரி வருஷம் பங்குனி மாதம் 15ஆம் தேதி சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்தில் யுக்கிலியரை வெட்டி முடுக்கினபடியினாலே இந்த அஞ்சு பேரும் கவுண்டர்க்கு மாகாணி பூமி எல்லை கொல்லை சம்மதிச்சு விட்டதுக்குத் தென்னிலைக் கிராமத்திலே மேரு மிராசு பத்திக் கொண்டது.

---

* கொங்கு, தொகுதி 2, பக்கங்கள் 90, 91, 129, 144_146.

சிறுத்தலை வேட்டுவன், மாகாளி வேட்டுவன், வெங்கச்சி வேட்டுவன், மாந்தாக் கவுண்டன், குட்டியாக் கவுண்டன் இந்த ஐந்து பேரும் கவுண்டர்களுக்குத் தென்னிலைக் கோட்டையிலே அஞ்சு பிள்ளையாரும் அஞ்சு அரண்மனையும் மேரு மிராசு இந்தப் பட்டயத்தில் உள்ளபடிக்கு முந்தினார் பிந்தினார் உள்பட்டப் பட்டயப்படிக்கு விபூதி சந்தனம் பற்றிக் கொள்ளவும். தென்னிலைக் கோட்டையிலே மேல்கண்ட சாதினம் மேற்புறத்துத் தலைவாசலுக்கு அண்டினாற் போலே வடக்கியாலே உக்கிலியன் தாலி முதல் தாலியும் 3 செப்புப்பட்டயம் மூத்தாந் தாழியிலே போட்டுப் புதைச்சு இருக்குது. மேல் சிங்காதனக்கல்லுப் போட்டு மேற்கண்ட சாதினம் போட்டு இருக்குது. இந்த ஐந்து பேர் கவுண்டர்கள் வெள்ளாளச் சாதி திருமலைக் கவுண்டன் பெருங்குடி வெள்ளாளன் கையிலே ஆயிரம் பொன் வாங்கிக் கொண்டு கால் பங்கு கொடுத்து உங்களுக்கு நடந்த பிரகாரம் மேரு மிராசு பத்திக் கொள்ளவும். இதுக்குத் தலையநல்லூர் கூரை காளியப்ப கவுண்டர், வெங்கம்பூர் சமந்தராயக் கவுண்டன் சாட்சி. வராகவேட்டுவன் கண்டி கவுண்டன் சாட்சி. போத்தி சேசுவராயக் கவுண்டன் சாட்சி. சல்லி காளத்திக் கவுண்டன் சாட்சி. இந்த ஐந்து பேர் கவுண்டர்களும் பத்திக்கொண்டோம்.

செய வருஷம் பங்குனி மாதம் 13 தேதி தென்னிலைக் கிராமத்திலே வெங்கச்சி வேட்டுவன் குட்டைக் கவுண்டன் நீலியம்மன் கோயில் முப்பாடு ராச முப்பாடு இதனைப் பெறும் கவுண்டர்களும் கொடுத்தோமிதுக்குச் சாட்சி சிறுத்தலை வேட்டுவன், மாகாளி வேட்டுவன், மாந்தை கவுண்டன், கூரை காளியப்ப கவுண்டன், திருமலைக் கவுண்டன். போத்தி சேசுவராயக் கவுண்டன், சல்லி காளாத்தி கவுண்டன், ஆத்தூர் வண்டிக் கவுண்டன், கிழங்கு நாடு கண்டிக் கவுண்டன், குப்பத்துப் பசுபதி ஐயன் இத்தனை பேர் சாட்சி. முப்பாட்டுக்காகப் பொன்னு 5, நெல்லு மொடா 3, ஆட்டுக்கிடாய் 1, சங்கிடு புறையன் மருதன் நெல்லு மொடா 2, பொன்னு 2 ஆட்டுக்கிடாய் இந்தப்படிக்கு நடத்திக்கொள்ளச் சிறுத்தலை வேட்டுவன், மாகாளி வேட்டுவன், மாந்தைக் கவுண்டன், வெங்கச்சி வேட்டுவன் குட்டியாக் கவுண்டன் இந்த ஐந்துபேரு கவுண்டர்களும் வெள்ளாளச் சாதி சின்னுக் கவுண்டனுக்கு ராசம்மாள் அதவப்பிள்ளையைக் கொண்டது. பெண்ணம் பெரியண கவுண்டன் இந்த ஐந்து பேர் கவுண்டர்களுக்குக் காப்பங்கு வீதம் ஊழியத்துக்கு ஆளில்லை என்ற புண்ண பெரியாக் கவுண்டர் இந்த ஐந்துபேர் கவுண்டர்களையும் கேட்டு ராசம்மாள் கவுண்டச்சிக்கு மகன் பொன்னம்பலக் கவுண்டன், தில்லையப்ப கவுண்டன், தில்லை அவனாசிக் கவுண்டர், ராசாக் கவுண்டன் இந்த நாலுபேர் நாலு கிணறு வெட்டி வைச்சுக் கொடுத்து இராசம்மாள் கவுண்டச்சிக்கு மூத்தமகனுக்குக் கோயில் முப்பாடு மதியாக் கூடலூரு வாங்கிக் கொடுத்தாள். இந்தப்படி சம்மதிச்சு தீர்ந்த பிரகாரம்.

குரோதி வருஷம் புரட்டாசி மாதம் 28.ம் தேதி சேரன் சோழன் பாண்டியன் காலத்திலே முப்பாட்டுக்காரனுக்கு 5 பொன்னு, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, பண்டாரம் சின்னாண்டிக்கு பொன்னு 3, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, சங்கிடு பறையன் வேலனுக்குப் பொன்னு 3, நெல்லு மொடா 2 இந்தப்படிக்கு தீர்ந்த பிரகாரமாய் இது சாட்சித் தலையநல்லூர் கூரை காளியப்ப கவுண்டன் சாட்சி.

போத்தி சேசுவராயக் கவுண்டன் சாட்சி. சல்லி காளாத்திக் கவுண்டன் சாட்சி. நீலியப்ப கவுண்டன் சாட்சி. கிழங்கு நாடு கண்டிக் கவுண்டன் சாட்சி. குப்பத்துப் பசுபதி ஐயன் சாட்சி. மாந்தைப் படை வேட்டுவன் கண்டிய கவுண்டன் சாட்சி. சம்மந்தராயக் கவுண்டன் சாட்சி.

விகாரி வருஷம் பங்குனி மாசம் 15ம்தேதி வேங்கபுரம் அம்மன் கோயில் சாமந்தராயக் கவுண்டன் ராச முப்பாடு கோயில் முப்பாடு கொடுத்து சாட்சி இந்தக் கவுண்டர்களுக்குச் சாட்சி. காப்புக் கட்டி அஞ்சு பொன்னு, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, பண்டாரம் கருப்பாண்டிக்குப் பொன்னு 4, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, சங்கிடு பறையன் மருதன் பொன்னு 2, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய். 1, இத்தியாதி கவுண்டர்களும் சம்மந்தராயன் கையில் 9 பொன் வாங்கிக் கொண்டு எங்களூர் நடந்த பிரகாரம் நடத்திக் கொள்ளவும்.

செய வருஷம் பங்குனி மாசம் 21ம் தேதி ராச முப்பாடு கோயில் முப்பாடு வராக வேட்டுவன் கண்டிக் கவுண்டன் கண்டியம்மன் கோயில் ராச முப்பாடு கோயில் முப்பாடு கொடுத்து சாட்சி. பொத்தி சேசுவராயக் கவுண்டர் சாட்சி. சல்லி காளாத்திக் கவுண்டர் சாட்சி. சிறுத்தலை வேட்டுவன் சாட்சி. மாகாளி வேட்டுவன் சாட்சி., பெருங்குடி வெள்ளாளன் திருமலைக் கவுண்டர் சாட்சி. கூரை காளியப்ப கவுண்டர் சாட்சி. சம்மந்தராயக் கவுண்டன் சாட்சி. கிழங்குநாட்டு பசுவையன் சாட்சி. முப்பாட்டுக்காரன் பொன்னு 5, நெல்லு மொடா 3, ஆட்டுக்கிடாய் 1, பண்டாரம் கண்டியாண்டிக்கு பொன்னு 3, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, காவல்கார மருதன் பொன்னு 2, நெல்லு மொடா 1, ஆட்டுக்கிடாய் 1, மாரி மூப்பனுக்குப் பொன்னு 1, நெல்லு மொடா 1, ஆட்டுக்கிடாய் 1, பறையனாண்டிக்கு பொன்னு 2, நெல்லு மொடா1, ஆட்டுக்கிடா 1, ஒக்கிலியரை வெட்டி முடுக்கின படியினாலே காணி பூமி இந்தக் கவுண்டர்களுக்குத் தீர்ந்த பிரகாரம் கோயிலில் கல்லுச் சாதனம் போட்டு இத்துணை கவுண்டர்களும் கூடி வெள்ளாள குலம் காடை குலத்துக்கு ராச முப்பாடு கோயில் முப்பாடு கொடுத்தது.

சாட்சி தலையநல்லூர் கூரை காளியப்ப கவுண்டர் சாட்சி. திருமலை வேட்டுவன் சாட்சி. போத்தி சேசுவராயக் கவுண்டன் சாட்சி. சல்லி காளாத்திக் கவுண்டன் சாட்சி: வேங்கலநாடு நீலியப்ப கவுண்டன் சாட்சி. கிழங்கு நாடு கண்டிக் கவுண்டன் சாட்சி. குப்பத்து பசுவையன் சாட்சி. ஆத்தூர் மாந்தைப்படை வேட்டுவன் வண்டிய கவுண்டன் சாட்சி. வெங்கம்பூர் சம்மந்தராயக் கவுண்டன் சாட்சி. ஒக்கிலியரை வெட்டி முடுக்கின படியினாலே வராக வேட்டுவன் கண்டிக் கவுண்டன் 10 பொன்னு வாங்கிக் கொண்டபடியினாலே முன் நடந்த பிரகாரம் நடத்திக் கொள்ளவும். முப்பாட்டுக்காரன் காடைகுலத்துப் பொன் 5, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, பண்டாரம் சோழியாண்டிக்குப் பொன்னு 3, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய்1, பறையன் மருதனுக்கு பொன்னு 2, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, இந்தப் பிரகாரம் நடத்திக் கொள்ளவும்.

செய வருஷம் தை மாதம் 25ஆம் தேதி மங்கலம் காளியம்மன் கோயில் ராச முப்பாடு கோயில் முப்பாடு கொடுத்தது. வெள்ளாள குலம் வெண்டுவன் குலத்துக்கு

சாட்சி வெங்கம்பூர் சம்பந்தராய கவுண்டன், போத்தி சேசுவராயக் கவுண்டன், சல்லிக் காளத்தி கவுண்டன், ஆத்தூர் மாந்தைப்படை வேட்டுவன் வண்டிக் கவுண்டன் சாட்சி. சிறுத்தலை வேட்டுவன் சாட்சி. கிழங்குநாடு சுப்பையன் சாட்சி. கண்டிக் கவுண்டன் சாட்சி. திருமலை கவுண்டன் சாட்சி. வராக வேட்டுவன் வாங்கிக் கொண்டது பொன்னு 150. முப்பாட்டுக்காரனுக்குப் பொன்னு 5, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, பண்டாரம் காளியாண்டிக்குப் பொன்னு 3, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, பறையன் கருப்பனுக்கு பொன்னு 2, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1, ஒக்கிலியரை வெட்டி முடுக்கினபடியினாலே முன் நடந்த பிறகாரம் நடந்து கொள்ளவும்.

விகாரி வருஷம் பங்குனி மாதம் 15ஆம் தேதி மின்னாம்புளி வன்னியம்மன் கோயில் இத்துணை பேர் கவுண்டர்களும் கூடி வெள்ளாளன் கண்ணந்தை குலத்துக்கு இராச முப்பாடு கோயில் முப்பாடு கொடுத்ததற்குச் சாட்சி கிழங்குநாடு கண்டிக்கவுண்டன், ஆத்தூர் மாந்தைப் படை வேட்டுவன் வண்டிக் கவுண்டன், சம்மந்தராயக் கவுண்டன்.

செய வருஷம் பங்குனி மாதம் 14ம் தேதி சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்திலே எல்லை கொல்லை தீர்மானித்து வராக வேட்டுவன் கண்டிக் கவுண்டன் வாங்கிக் கொண்டது. பொன்னு 50. முப்பாட்டுக்காரன் பொன்னு 5, நெல்லு மொடா 3, ஆட்டுக்கிடாய்1, பண்டாரம் கருப்பாண்டிக்குப் பொன்னு 2, நெல்லு மொடா 1, ஆட்டுக்கிடாய் 1, காவல் மருதன் பொன்னு 2, ஆட்டுக்கிடாய் 1, நெல்லு மொடா 2, பறையன் மருதன் பொன்னு 2, நெல்லு மொடா 2, ஆட்டுக்கிடாய் 1 முன் நடந்த பிரகாரம் நடத்திக் கொள்ளவும். ஒக்கிலியரை வெட்டி முடுக்கினபடியினாலே வன்னியம்மன் கோயிலிலே கல்லுச் சாசனம் போட்டிருக்குது. பெரிய வீட்டுத் தவசம் வள்ளம் 2, சின்ன வீட்டுக்கு வள்ளம் 1 இந்தப் பிறகாரம் இத்துணை கவுண்டர்களும் வெள்ளாள குலங்களும் பூசிக்கிற பண்டாரமும் பறையனும் இந்தப் பிரகாரம் நடந்து கொள்ளவும். கல்லாநாய்க்கன் வசம் மூன்று செப்புப் பட்டயம் ஒப்புவிச்சு இருக்கிறோம். எந்த நாட்டிலே எந்த ஊரும் அந்த நாட்டுப் பட்டயம் கொண்டு போகவும்.

வேங்கலநாடு போத்தி சேசுவராயன் சாட்சி. காளத்திக் கவுண்டன் சாட்சி. கூரை காளியப்ப கவுண்டன் சாட்சி, கண்ணந்தை கூட்டம் அம்மையப்ப கவுண்டன் சாட்சி.

வெண்டுவன் கூட்டம் காளியப்ப கவுண்டன் சாட்சி. திருமலை கவுண்டன் சாட்சி. வெங்கச்சிவேட்டுவன் சாட்சி. சிறுத்தலைவேட்டுவன் சாட்சி. மாகாளிவேட்டுவன் சாட்சி. எழுதினது காசித்தட்டான்.

# 38. ஊசிப்பாளையம் செப்பேடு

பெரியார் மாவட்டம் அறச்சலூர் ஊசிப்பாளையத்தில் உள்ள அறச்சாலையம்மன் கோயில் முப்பாட்டுக்காரர் வேட்டுவர் சமூக பி. ஆறுமுகக் கவுண்டர் அவர்களிடம் இச்செப்பேடு உள்ளது.*

மேல்கரைப் பூந்துறை நாட்டில் ஊசிப்பாளையத்தில் சாந்தப்படை வேட்டுவர் சக்கரைக் கவுண்டர், நல்ல காளியப்ப கவுண்டர் இருவரும் வாழ்ந்து வந்தனர். அவர்கள் வீட்டில் ஒரு வெள்ளைப்பெண் இருந்தாள். அப்பெண்ணை எவரும் திருமணம் செய்து கொள்ளவில்லை.

சோழியனூர் மிளகு வியாபாரியாகிய செட்டியாருடன் பண்ணைக் கிணற்றில் தங்கியிருந்த கரைய வேட்டுவர் காளியப்ப கவுண்டருக்குத் தம் வெள்ளைப் பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்து ஊசிப்பாளையம், அறச்சலூர்க் காணியாட்சியும் தருகின்றனர்.

காளியப்ப கவுண்டர் தன் சொந்த ஊர் சென்று வரும்போது அறச்சலூர் பத்ரகாளியம்மன் திருவிழா நடைபெறுகிறது. மருமகனாகிய தான் இல்லாதபோது திருவிழா நடத்தியது ஏன் என்று கோபித்துக் காளியப்ப கவுண்டர் தன் மாமனாராகிய சாந்தப்படை வேட்டுவரைத் துரத்திவிட்டு அவர் காணியாட்சி முழுவதையும் கைப்பற்றிக் கொள்ளுகிறார்.

அறச்சலூர் ஆலயம் கட்டிக் குடமுழுக்கு விழாச்செய்து தன்னை ஆதரித்த செட்டியாருக்கு இரண்டாவது உரிமை கொடுக்கிறான். கோயில்கட்குப் பலர் கொடையளித்தனர். அதைக்குறிக்கும் கல்வெட்டுக்களும் கோயிலில் உள்ளன. காளியப்ப கவுண்டர் மகன் செய்யான் பல்லவராயன் பெயரும் ஒரு கல்வெட்டில் காணப்படுகிறது.

---

* தேனோலை ; இதழ் 8, ஏப்ரல் 76, பக் 18-22.

## மூலம்

உ

சிவமயம்

கலியுக சகாப்தம் 3992ல் பிரபவ வருஷம் தை மாசம் தாம்பிர சாசனம். மேல்கரைப் பூந்துறைநாடு அர்ச்சநகரம் என்னப்பட்ட ஊசிப்பாளையத்திலிருக்கும் சாந்தப்படை வேட்டுவ சாதி சக்கரைக் கவுண்டந் நல்ல காளியப்பக் கவுண்டன் இருவரும் இருக்கயில் மேற்படியார் வீட்டில் ஒரு வெள்ளைப்பிள்ளை இருந்து ஒருவரும் கலியாணம் செய்யாமல் அனேக நாள் சும்மா யிருக்கும்போது ஒரு நாள் சோளியனூரிலிருந்து மொளகு வியாபாரி ஒரு ஆளுடன் பண்ணைக் கிணத்தி லிறங்கி இருக்க அந்த ஆளைச் சாந்தப்படை வேட்டுவன் விசாரித்து கரய வேட்டுவன் காளியப்பக் கவுண்டன் யென்று சொல்லத் தெரிந்து தன் வீட்டுப் பெண்ணைக் கலியாணம் செயிது கொண்டால் காணியாச்சி கொடுப்பதாய்ச் சொல்லிக் கலியாண செய்து கொடுத்து சில காலஞ் சென்ற பிறகு தான் தன் ஊருக்குப் போய் வருவதாய் சொல்லிப் போனான்.

வருமுன் பத்ரகாளிக்கு திருவிழா நடத்த என்னையில்லாமல் நடப்பித்தபடியால் அந்த சாந்தப்படை வேட்டுவனை அடித்துத் துரத்தி விட்டு அவன் வீடு வாசல் காணியாச்சி எல்லாம் ஆண்டுகொண்டு யிருக்க இவன் மகன் செய்யான் பல்லவராயன் மாடு மேய்த்துக் கொண்டு யிருக்கும்போது ஒரு சங்கஞ் செடியில் காராம்பசு தினம் பாலைச் சொரிய ஒரு நாள் கண்டு அந்தச் செடியை வெட்டும்போது மண்வெட்டியில் இரத்தம் கண்டது. பின்னும் பரிசோதிக்கக் காயம்பட்டு இரத்தமயமாக ஒரு சுவாமி இருக்கக் கண்டு தகப்பனிடத்தில் சொல்ல அவன் வந்து பார்த்து ஆலயங் கட்டுவித்து கும்பாபிஷேகஞ் செய்ய பெருந்துரை வடிவேல்அய்யனைக் கொண்டு பூசை செய்யும்படி செய்தான்.

செய்யான் பல்லவராயக் கவுண்டன் அம்மனுக்குக் திருவிழா நடத்த தன் சகலனைக் கொண்டு முப்பாடெடுக்க மேற்படி செட்டியார் நான் அம்மன் கோவில் கட்டினேன். வுன் தகப்பனுக்குக் காணியாச்சியும் பண்ணி வைத்தேன். முதலில் விபூதி கொடுக்க வேணுமென்று சொல்லக் கவுண்டன் முதலில் நான் வாங்கிக் கொண்டு இரண்டாவது வுனக்குக் கொடுக்கும்படி திட்டம் செயிது யிருக்கிறேன். இதற்க்கு பாதகம் செய்தவனுக்கு காராம் பசுவுக் கொன்ற பாவம் வருமென்று சொன்னேன். மேற்படி கோயில் பட்டிவரியில் சிலாசாசனத்தின்படி சில சங்கதிகளைக் காண்பித்துயிருக்கிறேன். யிதற்க்கு றாஜாக்கள் சில மானியம் விட்டு இருக்குறார்கள். யிதற்கு யாதொருவற்கள் ஙிந்தனை செய்தார்களோ அவற்கள் காராம் பசுவைக் கொன்ற பாவம் வரும்.

# 39. நல்லூர்ப் பட்டயம்

பெரியார் மாவட்டம் சத்தியமங்கலம் அருகில் உள்ள நல்லூர் ஆசிரியர் என். எம். தங்கவேலு அவர்கள் அளித்த பட்டய நகல்.

மதுரை நாயக்கர் ஆட்சிக் காலத்தில் 1717 ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 12 ஆம் நாள் அதிகாரி லெட்சும நாயக்கர் அந்தப் பகுதிக்குக் காரியத்துக்குக் கர்த்தராக இருந்தார். அப்போது மின்ன வேட்டுவரில் பொன்ன கவுண்டர் மகன் காளியப்ப கவுண்டர் ஒடுவங்கநாட்டு நல்லூரில் கரியகாளியம்மன், கண்ணப்ப நாயனார், கறுப்பணசுவாமி ஆகிய தெய்வங்களைப் பிரதிட்டை செய்தார்.

நாள்தோறும் மூன்றுகால பூசை செய்ய ஏற்பாடும் செய்தனர்.

## மூலம்

அரிஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை.

சுபமஸ்து. ஸ்வஸ்திஸ்ரீமந் சகலகுல சம்பந்நறான ஸ்ரீஅறியறாய விபாடனன் பாஷைக்கு தப்புவராயர் கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான் தச்சின பச்சிம உத்தர சத்த சமுத்திராதிபதி யாப்பான பட்டணமும் கொங்கும் ஈழமும் இறைகொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுறன் றாச்சமாத்தாண்டன் றாயஸ்ரீ மருதைச் சமத்தானம் ஸ்ரீ மகாறாசாவின் மகாமண்டலாதிபதி காரியத்துக்குக் கத்தறான ஸ்ரீலெச்சும னாயக்கரய்யன் செங்கோல் செலுத்துநாளில்,

கொங்கு ஒடுவங்க நாட்டுக்கு . . . . . வடபாரிசார னாட்டில் கலியுக ஆதியான நாள்முதல் சென்ன வறுஷம் 4818 சாலிவாகன சாகாந்தம் 1639 இதன்மேற் செல்லாநின்ன ஏவிளம்பி வருஷம் சித்திரை மாதம் 15 தேதி பூறுவ பட்சம் திறியோதசியும் அத்த நட்சத்திறம் சுக்கிறவாரமும் கூடின சுபதினத்தில் அவனிகாத்த அருக ராசாக்கள் வம்முசத்து குறுபரம்பறை சீற்முன் கானத்தி கண்ணப்ப நயினான் வங்குஷத்தில் பிறந்து வேடன்காணி வேட்டுவன்கொண்டு ஆண்டு அனுபவித்து வருகிற மின்ன வேட்டுவரில் காளியப்ப கவுண்டன் மகன் பொன்ன கவுண்டன் மகன் காளியப்ப கவுண்டன் ஒடுவங்க நாட்டு நல்லூரில் . . . கட்டி நம் இஷ்டதெய்வமான கரியகாளியம்மனையும், கண்ணப்ப நாயனாரையும், கறுப்பண

சாமியையும் ஏறியருளப் பண்ணி தம் அயிசுவரியத்தைக் கொண்டு கோயிலுஞ் செயிவித்து னித்தம் திரிகால பூதான கரதானமும் விட்டார் . . . .

இத்தன்மம் சந்திறப் பிறவேசம் சூறியப் பிறவேசம் உள்ளவரைக்கும் பூதானமும் கயிங்கரியமும் மின்னவேட்டுவரில் நானென்று வருவார் . . . . . காத்து லட்சிக்கவும். இதுக்கு விகாதம் செயுவான் கெங்கை கரையிலே காறாம்பசுவை கொன்ன தோசத்தில் போகக்கடவன். யிதுக்கு மேன்மேல் ஆலயம் செயிதான் அசுவமேதயாகம் பண்ணின பலன் பெறுவான். இப்படிக்கு மின்னவேட்டுவரில் பொன்ன கவுண்டன் மகன் காளியப்ப கவுண்டன் ருசவு கயி ஒப்பிதம். கரியகாளி லச்சிக்கவும். கண்ணப்பர், கறுப்பணசாமி லச்சிக்கவும். நாகீசுவரன் லச்சிக்கவும், தவளமலையான் லச்சிக்கவும். உ. சுபமஸ்து உ.

# 40. அல்லாள இளையான் செப்பேடு

இப்பட்டயம் பற்றிக் கட்டுரை வாசித்து இதழிலும் எழுதியவர் முனைவர் ஏ. சுப்ரமணியம் ஆவர்.*

1584 ஆம் ஆண்டு இச்செப்பேடு வெட்டப்பட்டது. பாடலுடன் தொடங்கும் இச்செப்பேடு வேலவர் மெய்க்கீர்த்தியை முதற்கண் விரிவாகக் கூறுகிறது. அடுத்து விசயநகர அரசர் புகழ்ச்சிப் பகுதி உள்ளது. மீண்டும் திருச்செங்கோட்டுப் புராணச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

காவலவர், பூவலவர், மாவலவர், வேடர், வேட்டுவர் என்ற வேட்டுவர்கள் கண்ணப்ப நாயனார் வழித் தோன்றியவர்கள். அவர்களுக்குப் பல பட்டப்பெயர்கள் உள்ளன. வேளாண்மையில் ஈடுபட்டு வேட்டுவர்கள் மேழிக்கொடியும் படைத்துக் கொண்டனர்.

24 நாட்டு வேட்டுவப் பெருமக்கள் பலர் பெயர்கள் கூறப்படுகின்றன. ஊராளும் பொறுப்பு அல்லாள இளையானுக்கு இருந்தது. அவருக்கு நாயக்கர் பட்டமும் உண்டு.

வேட்டுவகுலப் பெருமக்கள் காமாட்சித் தம்பிரான் என்பவருக்கு மடம் ஏற்படுத்திக் கொடுக்கின்றனர். அதன் செலவுகட்கு யார்யார் எவ்வளவு பணம் கொடுக்கவேண்டும் என்று நிர்ணயம் செய்யப்பட்டது. இப்பணி தொடர்ந்து நடைபெறவேண்டும் என்ற தம் விருப்பத்தையும் தெரிவித்துள்ளனர்.

## மூலம்

வைய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக

---

* அ) இந்தியக் கல்வெட்டியல் கழகக் கருத்தரங்கு, சென்னை.
ஆ) *Journal of Tamil Studies, No 13,* Triuchengodu plates of Srirangaraya - A *Study.*
இ) தேனோலை, இதழ் 22 அக்டோபர் 79, பக். 7-14.

சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீரு சிறக்கவே

அருளா லாதிநந்திகேசுபர, னனுக்கிறகித்துத் திரேத துவாபரக் கலியுக கிறேதா யுகத்துக்கு விறுமா அற்சனை பண்ணுகையில் விறும்மகிரியும் விறும தீர்த்தமும் விறுமீசுரருமானவர். திறேதாயுகத்துக்கு விஷ்ட்டுணுகிரியும் விஷ்ட்டுணுதீற்தமும் விஷ்ட்டுணுயீசுவரருமானவர். துவாபர யுகத்தில் துற்கை அற்சனை பண்ணுகையில் துற்கைகிரியும் துர்கதீற்தமும்ந் துற்கீசுரருமானவர். கலியுகத்துக்கு நாக அற்சனை பண்ணுகையில் னாககிரியும் னாக தீற்த்த முனாகீசுபரருமானவர்.

யிப்படி அனேகஞ் சதுர்யுகம் பூசை கொண்டருளிய தேவர் தேவன் தெய்வசிகாமணி தேவதேவோர்த்தமந் தேவதாசாரப்பூமன் பத்தர்ப்பிரியன் பத்தவத்சல பாற்பதிவல்லவன் பார்பதிமனோகரன் பார்பதினாயகன் முத்திக்குவித்து முக்கணீசுபர னின்றகோல மழகியநிமலன் நேரமொரு பஞ்சவற்னனப் பிரகாசன் திருமுகவோவன் தெண்டாயுத அஷ்த்தன் சம்புத்தீவில்த் திராவிடதேசத்தில் தொண்டமண்டலத்தில் காஞ்சி மானகரில் திருக்கம்பை யாத்திலே பார்பதா தேவி அற்தபாகம் பெறவேண்டி அரிய தபசு பன்னுகையில் அப்போது காட்சி கொடுத்தருளிய அற்தனாரீசுபரருடைய தம்பிரானார் அவருடைய ஸ்ரீமன் குமாரராகிய விப்பிறப்பிரியந் விசுவமூற்திச் சுவபாலன் சறவனபவன் குக்குடத்துவசன் குங்குமவண்ணன் கெவுரி திருமகன்க் கெணபதிசகோதரன் சுரலோக லட்சாதி லட்சம் தேவர் சிறைமீட்ட தேவர்சேனாபதி யீகரைப் பகட்டரக்கர் பட்டிடப் பதைக்க வீறு கொக்கரித்து மறக்கனீத்து குக்குடத் துவசத்தினன் சக்கிற வட்டமேட்டிரட்டிக் தாவிச் சிறகாலடிக்குந் தோகைப் பிறதாப துரங்கன் வள்ளி தெவியானை மனோகரன் சிறுட்டிக்கும் விறுமனை சிரசு திண்டாடக் குடுமியை நெட்டை வாங்குங் குமரர் கண்டீரவன் துஷ்ட்ட சமணரை வெட்டிக் கழுமிசை வைத்தப் பிறமண்ணிய சுவாமியார் திருவுளப்படிக்கி.

சவ்விதிரி மன் மகா மண்டலேசுபறன் மேதினி மீசுர கண்டன் ஒருக்குடைக்கீ ளுலகமுழு தாண்டவன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு கொடாதான் எம்மண்டலமுந் திறைகொண்டருளிய ராசாதிராசன் ராசபறமேசுபரன் ராசமாத்தாண்டன் ராசாக்கள்தம்பிரான் கண்டர்கண்டன் கட்டாரிச் சாளுவன் துட்டர்கண்டன் துட்டர்மோகந் தவிழ்த்தோன் துஷ்ட்டநெட்டுரன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் மூவராய கண்டன் ஓட்டிய சுரதானன் துலுக்கர்தள விபாடன் அசுவபதி கசபதி நரபதி நவகோடி நாராயணன் பூறுவ தெஷ்சன பஷ்சிம்ம உத்திர சத்த சமுத்திராதிபதி ராசநாராயணன் ராசகேசரி ராசபுங்கவன் ராசமனோ பயங்கரன் ராசகோலாகலன் ரணமுக சுத்தவீரன் அறிவுக்கு அகத்தியந் பொறுமைக்குத் தன்மன் புகளுக்குக் குமணன் கொடைக்குக் கருணன் சத்தியத்துக்கு அரிச்சந்திரன் மறத்ததுக்கு வன்னியன் அழகுக்கு மன்மதன் வாழுக்கு அபிமன் பரிக்கு நகுலன் கரிக்கு உதையன் வில்லு விசையன் மல்லுக்கு வீமன் பதினெட்டுப் பொம்மையும் பார சங்கிலியும் படைத்த ராசதேவேந்திரன் அஷ்ட்டபோக துரந்திரன் சேரன் சோழ பாண்டியப் பிறதிஷ்டாசாரியன் சத்த சாகரமும் மொரு

குடைக்கீழுலகமுழுதாண்டவன் ஸ்ரீ கட்டாரிச் சாமுவன் உத்துங்கராயர் கட்டாரி ராயர் விருப்பாட்சிராயர் நரசிங்கராயர் பிரவிடதேவமகாராயர் தேவமல்லிகாஷ் சுணராயர் சசாசிவதேவமகாராயர் வீரவசந்தராயர் ராமதேவராயர் ஆனைகொந்தி வேங்கிடபதிராயர் சீரங்கராயர் பிரிதிவி ராச்சியபாரம் பண்ணியருளா நின்ற விக்கிறமாற்கப் பிறதாப வீறலட்சுமி விசையலட்சுமிவாசரான விசுவனாத னாயக்கர் வீரப்பனாயக்கரய்யனவர்கள் னாழில்,

விசையநகரம் பெநுங்கொண்டை, சந்திரகிரி, திருப்பதி, திருக்காளத்தி, காஞ்சிபுறம், படைவீடு, திருவனாமலை, தேவக்காபுரம், செஞ்சி, வளுதிலன்பட்டிச்சாவடி, தஞ்சாவூர், திருவாரூர், திருவிடைமருதூர், திருக்குடந்தை, திருவையாரு, சீரங்கம், திருச்சிராபழி, திருவானைக்காவல், மதுரைக் கடுக்காடு, ராமேசுரம், கொங்குதாராபுரம், மலையாளம், கொச்சி, ஈழ மார்ப்பாணப் பட்டண மற்றுமுண்டாகிய அன்பத்தாறு தேசம் பதிநெட்டு யுகமாவது முதலாகிய யுகம் அனந்தியனென்கிற யுகம் அந்த யுகத்தில் பரந் தோன்றிச்சு. ரண்டாவது அற்புதனென்னும் யுகத்தில் ஆகாச தோன்றிச்சு. மூன்றாவது தீவாரசனென்னும் யுகத்தில் சந்திராதித்தந் தோன்றினர். னாலாவது த்ராசனென்னும் யுகத்தில் காற்றுத்தோன்றிற்றது. அஞ்சாவது தண்டசனென்னு யுகத்தில் நெருப்பு தோன்றிற்றது. ஆறாவது வின்னசனென்னு யுகத்தி மழை தோன்றிச்சு. ஏளாவது வினாயகனென்னு யுகத்தில் விளைவு தோன்றித்தது. யெட்டாவது அயபுத னென்னு யுகத்தில் வித்தை தோன்றிச்சி. ஒன்பதாவது மையுதனென்னு யுகத்தில் வேதம் தோன்றித்து. பத்தாவது மணமீரணனென்னு யுகத்தில் தன்மந் தோன்றிச்சு. பதினோராவது மணியாரணன் என்னு யுகத்தில் சோதிரிசம் தோன்றித்து. பதிமூன்றாவது அலங்கிதனென்னு யுகத்தில் சந்திராதித்தர் பொருந்தினர். பதினாலாவது அரவிந்த னென்னு யுகத்தில் மற்ச கூற்ம பொருந்தினர். பதினஞ்சாவது கிறேதா யுகத்தில் தேவசுரர் பொருந்தினர். பதினாராவது திறேதா யுகத்தில் இராமர் பொருந்தினர். பதினேழாவது துவாபுர யுகத்தில் தன்மர் திரியோதனர் பொருதினர். பதிநெட்டாவது கலியுகத்தில் கலியன் பிறந்த யின்னாள் வரையும்,

னாலு வேதமும் ஆறு சாத்திரமும் பதிநெட்டு புராணமும் யிருபத்தெட்டுத் தேய வியாகமும் முப்பத்திரண்டு அறமும் அறவத்துனாலு கலைக்கியானமும் உள்சமையமாறு பிறசமையமாறு விழங்கபடாநின்ற சோம சூரிய வங்கிஷ மானவந் அமுதிராசாச் சூரன் மகன் ஆதினாறாயணந் மகன் விறுமர் விறுமர் மகன் வீறரு மகன் மாரீசந் மகன் காசிபன் மகன் ஆதித்தன் மகன் சினியன் மகன் நயதிரியன் மகந் போச வாகனந் மகன் துந்துமி ராசன் மகன் திறிச்சங்கு மகன் அறிச்சந்திரன் மகன் லோபிதாவிசனன் மகன் நிளன் மகன் இருமூச்சியந் மகன் பொன்னுருவி மகன் பரிதாபி மகன் அமிற்தன் மகன் அனந்தராசன் மகன் மத்துக்குரிச்சினன் மகன் சேவின்திருயுரு மகன் ராகு மகன் பீரேசன் மகன் அரன் மகன் திசரதன் மகன் ராமர் மகன் லவனென் மகன் விருது மகன் நீளகோபாலன் மகன் நந்தகோபாலன் மகன் வாசுதேவன் மகன் கிருஷ்றாயர் மகன் மன்மதன் தலமுறை முப்பத்தாறும் புறத்த இன்னாள் வரைக்கும் தேவரிஷி விஷ்ணுரிஷி விறுமரிஷி தேனியே அஷ்டமாசித்தர் நவனாத சித்தர் கலியாண சித்தர் இருக்கபடாநின்ற

போமீசை மாமுனி பாதலோக மாமுனி துருவாசமுனி கண்டலாமாமுனி தவமுனி கோமுனி வனச மாமுனி மகாமுனி கவசமாமுனி னுர்தமாமுனி அகத்திய மாமுனி பிறலவிச மாமுனி,

சகன் சனந்தன் சனக்குமாரீசர் சாத்தி அக்கினி தெரிசினிகள் விசுவாமுத்திர மாமுனி சோமாக்கினி மாமுனி அரவாச மாமுனி பரஞ்சோதி மாமுனி கணனாதர் விறும கணனாதர் வீரகணனாதர் சிவயோக கணனாதர் ஞானகலியாணர் அஷ்ட்ட மாசித்தர் கணனாதர் ஆந்திரமா சித்தர் கலியாணர் அதிசெய ஞானசித்தர் கலியானர் ஆகாசஞான சித்தர் கலியாணர் அம்பிறகசித்தர் கலியாணர் பிலவேச ஞான சித்தர் கலியாணர் அனுமீசர் நிடைக்காடர் தவமுனி மழைமுனி வியாக்கிரம பாதமுனி பதஞ்சலி மாமுனி இப்படியாக் கொத்த னாற்பத்தென்னாயிறம் இருஷிகளுக்கு மறு பதினாயிறம் முனிவர்களும் முப்பத்தினாலாயிரம்ங் கணனாதர்களும் னாற்பத்தினாலாயிரம் ஆதி அந்த வயிரவர்களுடன் ஆயிரங் கெருடன் காந்துறுவர்களும் முப்பத்தி முக்கோடி தேவர்களும் ஆகாச வருண நந்திவாகன ஒரு கோடி கண்ணுள்ளவர்கள் னொரு கோடி பேர் ஆயிரங்கண் ணொரு கோடி பேர் ஈசுபரனுக்கு ஒரு னொடிப் பிறமாணம் யிப்படியாக் கொத்த ரிஷபாவாகன வேதசாத்திற புராண ஆகமும் ஆதிவேதனாகி விறையில்லாத வித்தாகி ஞான சுருபமாயி ஞான பரனாய சிவப்பிறகாசனாயி சிற்சுருபனாய நீடுள்ள நிற்குணனாய நிராமயமாய நிர்மலனாய துரிய ரத்தனாய சச்சுதானந்த சுருபனா யறியாதவனுமா யிதர்க்கு மெட்டாதவனுமா யிழிந்த விடத் தனுகாதவனுமாயி மூன்று நடுவிறுதிவ் வியாதனுமாயி காடிக் குமாரன் கூழி கொட்டட கூகை பாசாசு தொக்கெண தாளமொத்த துறிசனக் கூழை கொட்டபாரியாய் நீழிய சச்சை கட்டய்யரா வேலெடுத்த யோத்தீரன் னாககிரி வேலாதசுவாமி திருவிளத்தில்,

காவலவற் பூவலவர் மாவலவர் வேடர் வேட்டுவர் கங்கையைத் தரித்த கடவுளாற்கு எச்சமிட்டு கண்ணையிடந்து சாத்தி முத்தி பெத்த கண்ணப்பனான பெரியோர் காளஸ்திரி மலைகாவலர் செம்பொற் சிலை கொண்டு வில்வத்திலேறியே சிவறாத்திரி கண்ட பெரியோர் சித்திரபுத்திரர் சீமைக்குடைய பெரியோர் சேவுகத்துக்கும் உடையபேர் கொங்குதேசத்துக் குடையபேர் கொளவர்கள் சுற்றவர்கள்,

கொல்லிகிரிக் குடையவர்கள், கூற்றிய னாடுதனிலே வாசகங் கூறி வைத்துக் கொரண்ட பெரியவர்கள். வங்கக் கடலொலி கைவர கைமாலை யுயத்தோர். சித்திரமேழிக் கொடிப் படைத்த பெரியோர். வாகிருது சொன்னவறை வாயைக் கிழித்திடும் வெத்தி வாழரசர் மணவாழரெண் பெரியோர். குன்றத்தூர் துருகம் குன்னாடிக் கவுண்டர், மோரூறு பொன்ன வேட்டுவரில் கீழ்கரை பூந்துரைனாட்டில் பாண்டிக் கோத்திரத்தில் பேரக் கவுண்டன், வேம்பங் கோத்திரத்தில் குமர கவுண்டன், சினாக்கவுண்டர், பரமத்திச் சீமை மூளை கோத்திரத்தில் அல்லாழி யிளையான் னாயக்கர், திருமலை னாயக்கரவர்கள், னாத கவுண்டர், முத்துக்காழி கவுண்டர், தலைய நாடு குன்னாடு கோத்திரத்தில் வள்ளய கவுண்டர், மணனாடு நீலியப்ப கவுண்டர், கெழங்குனாடு திருமலை கவுண்டர், குமாரசாமி கவுண்டர், பின்னும் கொங்கு மண்டலத்திலுள்ள வாழரச மணவாழரெலாரும் கூடி.

திருச்செங்கோட்டில் கலியுக சகாற்பிதம் 4685க்கு மேல் செல்லாநின்ற ஈசுர வருஷம் வைய்யாசி மாதம் 15 ந் தேதி பூர்ணமும் விசாக நட்செத்திரமும் பெத்த சுபதினத்தில் காமாட்சித் தம்பிரானுக்கு மடதற்மம் உண்டுபண்ணிக் குடுத்தது. மடம் னாககிரியின் மேல் அற்தனாரீசுபர சுவாமியார் சன்னதிக்கு மேற்கு, விஷ்டுனு தீற்த்தத்துக்கு தெற்கு, துற்கை அம்மன் சன்னதிக்கு வடக்கு, அமரமணியார் மண்டபத்துக்கு கிழக்கு. யிது நடுவில் மடம் யிதிலிருந்துக் கொண்டு அற்தனாரீசுபர சுவாமி சன்னதியில் திருவிழக்கும் திருமாலைக் கட்டிக் கொண்டு வரவும். யிதுக்கு வற்தனை பல்லக்கு பிறபுக்கு னாகறம் பணம் 21, குதிரையேரிய பிறபுக்கு னாகறம் பணம் 5, சேறுவைகாறனுக்கு னாகரம் பணம் 5, பண்ணைய குடிக்கி ஏறுக்கு கம்பு வள்ளம் 2, கலியாணத்துக்கு மாப்பிளை வீடு னாகறம் பணம் பெண் வீடு னாகறம் யிந்த மேறைக்கி நடப்பிவிச்சி குடுக்குறோமென்று ஙாங்களனைவரும் கூடி யெழிதி குடுத்த தற்ம சாசனப் பட்டையம். யிந்தப்படிக்கு சந்திராதித்த ருள்ளவறைக்கும் மலைய்ள்ள காலத்துக்கும் நிலையுள்ள தன்மமாயி கட்டளை யிட்டது. யிந்த தற்மம் தேசஞ் சீர்மை நாடு எங்கிலுண்டாகிய வாழரசர் மணவாழரும் தற்ம பரிபாலனம் பண்ணி நடப்பிச்சிகொண்ட பேர்கள் யிந்திராதி போகமும் அனுபவிச்சு சந்திராதித் தருள்ளவறைக்கும் சாயுச்சிய பதவியிலிருப்பார்கள். யிந்த தற்மத்துக்கு விகாதம் பண்ணினபேர் கெங்கைக் கறையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலே போவார்கள்.

நட்டகல் லிட்ட சூலம் நீடு கல்வெட் டெல்லை
வட்டமா லயங்கள் தோறு மகதேவர் தான தற்மம்
யிட்டிடை பண்ணி மெத்த யிடஞ்சலே செய்பு வாற்க்கு
குட்டனோய் நரகந் தன்னில் குழிப்பது தின்னந் தானே.

செங்கோடர் லட்சிப்பார் உ

# 41. பேரூர்ச் செப்பேடு-1

கோயமுத்தூர் அருகில் உள்ள பேரூர் சின்னக்கோயில் குருக்கள் செந்திநாத குருக்கள் அவர்களிடம் இச்செப்பேடு உள்ளது.

1792 ஆம் ஆண்டு திருவாரூரில் சூரியகுல தீரராகிய சோழரும், மதுரையில் சந்திரகுல தீரராகிய கூன் பாண்டியரும், தாராபுரத்தில் அக்கினிகுல தீரராகிய சேரரும் ஆட்சிபுரியும்போது வேட்டுவர் சமூகத்தினர் பேரூரில் கோயில், மடம் கட்டியது பற்றிய செப்பேடு. காலக் குறிப்பு பொருந்துவதாக இல்லை.

வேடன், வேட்டுவன், காவிலுவன், மாவிலுவன், பூவிலுவன் என்ற ஐந்து பிரிவுகள் வேட்டுவச் சமுதாயத்தில் உண்டு. பூவிலுவர் பிரிவைச் சேர்ந்த புரவிபாளையம் முத்துவேல்மணி சந்திர கோப்பண கவுண்டர் அவர்கட்கு மூவேந்தரும் மும்முடிப் பட்டம் சூட்டிப் பல்வேறு சிறப்புக்களும் செய்தனர். ஆட்சி புரிவதற்குச் சீமையையும் நல்கினர்.

கோப்பண கவுண்டர் பல கோயில் திருப்பணிகள் செய்தார். குலகுருவும், குலதெய்வமும் நியமனம் செய்து கொடைகளும் அளிக்கப்பட்டன. களந்தை ஆதிபுராணலிங்கேசுவரர் கோயிலும் திருப்பணி செய்யப்பட்டது. (கோப்பண கவுண்டர் கல்வெட்டு பேரூர்க் கோயில் கருவறை வடக்குச் சுவரில் உள்ளது.)

## மூலம்

சுவஸ்த்திஸ்ரீமன் மகாமண்டலீசுரன் ஆரியதழ விபாடன் ஆரியமோகம்ந் தவுள்த்தான் ஒட்டியர்தழ விபாடன் ஒட்டியமோகந் தவுள்த்தான் ஆறிலொரு கடமைகொண்டு அருள்பெருகி அன்ம்புகூர்ந்து ஆதுரசாலையும் அந்தணர் வேள்வியும் வேதவொலியும் விழாவறா வீதியும் தபோதன மடங்களும் தர்ம சாலையும் யிச்சயில் முப்பத்திரண்டறமும் விழங்கிய மண்டல மதிரை கொண்டருழிய றாசாதிராசன் ராசபரமேசுரன் ராசமாற்த்தாண்டன் ராசமனோபயங்கரன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான் சொல்லுக்கு அரிச்சந்திரன் அளகுக்கு அனங்கன் அறிவுக்கு அகத்தியன் பொருமைக்குத் தற்மன் போருக்கு வீமன் வில்லுக்கு விசையன் பரிக்கு நகுலன் குடைக்குக் கற்னன் சாத்திரத்துக்கு சகாதேவன்

சுவஸ்திஸ்ரீமன் சகாத்தம் உ 1714 கலியுக சகாப்த்தம் 2681ந் செல்லாநின்ற

விரோதிகிருது வருஷம் அற்பசை மாதம் 10ந் தேதி குருவாரமும் தெசமியும் ரோகணி நக்ஷத்திரமும் சக்கிரனாம யோகமும் வச்சிர வாகறணமும் பெற்ற சுபதினத்தில் அசுபதி கெசபதி நரபதி தனபதி ஆகிய ராசமானிய ராசஸ்ரீ சோழமண்டல திருவாலூரில்[1] சூரியகுல தீரராகிய விக்கிரம சோழராசன், பாண்டியமண்டலம் மதுரையில் சந்திரகுல தீரராகிய கூந் பாண்டியன் ராசன், சேறமண்டலம் தாராபுரம் அக்கினிகுல தீரராகிய பதுருண சேற ராசராகிய இந்த மூன்று ராசாக்களும் ராச்சிய பரிபாலன செய்கின்ற னாளையில் சேர ராசாவுடைய ராச்சியத்தை அம்பார பழ நிமித்தயமாக சோழராசா கட்டியும், சோழ ராசானுட் ராச்சியத்தை பாண்டிய ராசா கட்டியும், அவரவர் ராச்சியம் அவரவற்கென்று இந்த பாபம் நிபத்தியாகத் தக்கதாக சிவதெரிசனமும் சிவபிறதிட்டையும் செய்த பேர்கள் னாடும் யெங்கள் ஊரும் யெங்கள் பேரும் யெங்கள் குலமும் விழங்கத் தக்கதாக தற்மசாதன பட்டையம்.

தற்மசாசன பட்டையமாவது அப்பற் சுந்தரர் மாணிக்கவாசகர் செல்லாப் பணங்கொண்டு செலுத்தியும், தீஷா திருமுடியும் வணங்கி சீகாழியில் மூவாயிரம் சமணரை அக்கினியினாலே அளியப்பண்ணிவித்தார். அப்படிக் கொற்ற கனகசபாபதி பெரிய முதலாகிய பண்டிதற் யென்று பட்டம் சூடியும் பத்து பதியமும் பதித்து அப்படிக்கொற்ற களகபாபதி பெரிய முதலாகிய பண்டிதற் யிடத்தில் னாங்கள் மூன்று பேற் ராசனும் தீஷா திருமுடியும் வணங்கி உடல் பொருள் ஆவி மூன்றும் கனகசபாபதி பெரிய முதலாகிய பண்டிதற்கென்று யெங்கள் னாட்டிலுள்ள சிவபிறதிட்டையும் சிவ தெரிசனங்களும் வெள்ளிஙெ்கிரி நகரத்தில் சென்று ஆளுடையார் கோவில் தேனுண்டீசுரசுவாமி சிர்னோத்தாரங்கள் சிவ தெரிசனமும் செய்ய அந்த காணியாளர் காழத்தியீசுபரன் வரப்பிறசாதத்தில் அவருடைய கரத்தினாலே புறக்க கண்ணப்ப நயினார் கோத்திரத்தில் பூலுவனென்றும் வேடன் வேடுவனென்று காவலவன் மாவலவனென்று பூவுலுவராகிய முத்து வேல்மணி சந்திர கோப்பண கவுண்டன் அவடத்தில் கோட்டைகொண்டு யிருந்தவனை மகாறாசசிறி மூன்று பேரும் அளைக்கசெய்து அதிச்சந்தோஷமாக அவற்க்கு மும்முடிப் பட்டம் சூடி கிரிதரித்து மும்முடிப் பட்டம் முத்து வேல்மணி சந்திர கோப்பண மன்றாடியென்று பேருங்கொண்டு அவற்க்கு விருது கெசமுகத் தண்டிகை சிங்கமுக தண்டிகை பகல்தீபட்டி பச்சைகுடை வெள்ளைகுடை பூச்சக்கறகுடை உபய சாமரம் ரெணபாசிங்கமும் முத்து துராயம் செங்கோல் முத்திரையும் வெட்ட வாளும் கட்ட கவுறும் வெங்கல பேரிகையும் றணவிரசின்னமும் சந்திர சூரிய வாத்தியமும் நாகேச வாத்தியமும் அநேகம் விருதுகள் கொடுத்து,

சிற்மை சென்னிமலை அத்திமலை கருமலை பாலமலை யிதற்க்குள்ள சிற்மையும் கொடுத்து ஆறிலொன்று கடமை தவராதபடி குடுத்துகொண்டு யாதொரு ராசனுக்கு பட்டம் சூட வேணும்யென்றால் நீய் முதல்வனாக எளுபத்தெளு பாளையபட்டுக்கு முதல்வனாகவும் உங்கள் அஞ்சுசாதி உள்ப்பட்டவற்குப் பட்டக்காறனாக கட்ட கவுறும் கொட்ட கோலும் மகாராசிறீ மூன்று பேரும் கட்டு செய்தாற்கள்.

---

1. திருவாரூரில்

கனகசபாபதி பெரிய முதலாகிய பண்டிதரிடத்தில் தீஷா திருமுடியும் வாங்கசெய்து தேனுண்டிசுற சுவாமி காரியங்களுக்கு பூசை பிறதிட்டை செய்து பூமி சாதனமாக அன்பது மா நிலமும் குருக்களுக்கு தாராதத்தம் செய்து மகாராசசிறி குரிஞ்சி நகறத்தில் சென்று சுவாமி பூசை பிறதிட்டையும் செய்து வாலீசுரசாமி யென்று அவருடைய னாமங்களும் கூறி அவடத்தில் குருக்களுக்கு பூமி சாதனமாக ஏளு மா நிலமும் தாரதெத்தம் செய்து பிரவாநெறியென்று யிருக்கப்பட்ட காஞ்சி னதி சூழ்ந்த காட்டுப் பேரூருக்கு மகாறாசசிறி மூன்று பேரும் மும்முடிப் பட்டம் கோப்பண மன்றாடியும் கூட சென்று பட்டியார் தெரிசனாற்த்தம் கண்டு தலத்துடைய மகுத்துவம் கண்டு அரசம்பலவாண பிறதிட்டையும் செய்து பட்டியார் சீறனோத்தாரம் செய்து சிறிவசிய கோத்திரம் திருத்தளியார் சிவபிராமணன் கோவில் சாந்தியும், காசிப கோத்திரம் கனகசபாபதி பெரிய முதலாகிய பண்டிதற் யிடத்தில் திவிர உச்சவங்களும், சண்மத சைய்வாசாரத்துக்கு வரைகடறாமல் ஆணை ஆக்கினை கட்ட கயறும் கொட்ட கோலும் பள்ளி பண்ணையமும் பக்குவாயிக்கு விசேஷமும் தண்டிகை குதிரை ஆனை ஒத்தைசங்கு ரெட்டைதீபட்டி உபயசாமரம் சுருட்டி சூரியபாண் லவண்டை மல்லாரி வீரகிங்கிணி முரசு வாத்தியம் பூமி சாதனமாக அறவத்திமூனு மா நிலமும் அவடத்திலுள்ள குடிவற்த்தனை அறியத் தக்கதாக,

யெங்கள் னாட்டிலும் தேசத்திலும் சிவத்தலம் உள்பட கெணபதி முதல் ஒரு யிடத்தில் எளுந்தாரையும் ஒரு யிடத்தில் பிறந்தாரையும் பிரவாநெறியுட காஞ்சிமகானதி சூள்ந்த காட்டு பேரூராகிய தலத்துக்கு பிரதிஷ்டா உச்சவமும் எங்கள் மூன்று ராச உடமை எங்கள் குலம் கோத்திரம் விமங்கத் தக்கதாக னாங்கள் பட்ட சூடிய மன்றாடி அதிகமும் அவற் புத்திரர் பவித்திர பாரம்பறைக்கும் அவற் அஞ்சு சாதியில் தீஷா உச்சவமும் வைத்துக்கொளக் கமுஞ்சி நகரம்[1] ஆதிபுறாணீசுரசுவாமி தெரிசினாற்த்தமும் பிறதிஷ்டா பூசையும் செய்து பூமி சாசனமாக குருக்களுக்கு னாங்கள் மூன்று பேரும் னாங்கள் பட்டம் சூடிய மன்றாடியும் அங்கே உள்ள குடி வற்த்தனை அறியத் தக்கதாக அறுதோட்டமும் யிருவள்ள காடும் காஞ்சினதி சூள்ந்த முட்டங் கோடி முப்பத்திரெண்டு அனைக்கும் கனகசபாபதி பெரிய முதல்மையாகிய பண்டிதற் பூசை பிறதிஷ்டா உச்சவம் செய்துகொண்டுவற செம்பிலையும் சிலையிலையும் வெட்டி நாங்கள் மூன்று ராசனும் கனகசபாபதி பெரிய முதல்மையாகிய பண்டிதற்க்கு எமுதி குடுத்த தற்ம சாசனம்.

யிதற்குச் சாஷி சின்ன மதகில் தீற்த்த தொட்டியில் பாற்க தெரியவரும். யிந்த னாட்டில் முடிதரித்த மன்றாடியும் யாதொரு ராசன் நாட்டுக்கு வந்தால் யவரே சாஷியாக. யிந்த தற்மங்களுக்கு அனிவு செய்த பேற்கள் காசியில் கெங்கைக் கரையில் அசுவத்தி சிசுவத்தி கெசவத்தி கோவத்தி விறுமத்தி செய்த பாபங்களிலே அடைவாற். யாதொருத்தர் வரைகடறாமல் யிந்த தற்மங்களும் பரிபாலனம் செய்த பேற்கள் காசி கெங்கையில் தானம்பண்ணி சிவ தெரிசனம் செய்து தனுகோடி தான பண்ணி றாம லிங்கத்தை தெரிசனம் செய்து சந்திராதித்தியன் உள்ள வரையிலும் னாங்கள் மூன்று ராசனும் எளுதிக் குடுத்த தற்ம சாதனம்.

---

1. களந்தை நகரம்

# 42. மதுக்கரை வேட்கோவர் பட்டயம்

சேலம் நகரத் தமிழாசிரியர் புலவர் கு. கந்தசாமி அவர்களிடம் இதன் ஓலைச்சுவடி இருந்தது. இதன் மூலச் செப்பேடு பழையகோட்டைப் பட்டக்காரர் அவர்கள் மாளிகையில் இருப்பதாகக் கூறுகிறார்கள். இதன் ஓலை நகல் ஒன்று தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையில் உள்ளது.

கொங்கு நாட்டில் குடியேறிய வேளாளர்குலப் பெருமக்கள் காணி உரிமை கொண்டு பல இடங்களில் குடியேறி 24 நாடுகளாகக் கொங்கு நாட்டைப் பிரித்தனர்.

பின்னர்த் தங்களுக்கு நவபாண்டம் செய்யக் குலாலர்குலப் பெருமக்கள் வேண்டும் என்று அவர்களை அழைத்துவந்து மதுக்கரையில் மாநாடும் கூட்டினர்.

குலாலர்கள் 24 பேரையும் 24 நாட்டுக்கு அனுப்பி வைத்தனர். தம் உற்றாரையும் உறவினரையும் விட்டு வந்த குலாலர்கட்கு வேளாளர்கள் தங்கள் பழக்கவழக்கம் பலவற்றைப் பின்பற்றச் செய்தனர். 'கொள்வதும் கொடுப்பதும் வேறு'; மற்ற எல்லாம் ஒன்று என்றனர். அதற்காகப் பட்டயமும் எழுதித் தந்தனர்.

விளைச்சலிலிருந்து குறிப்பிட்ட அளவு நெல் பெறவும், சில கோயில் வழிபாடு செய்யவும், கிராமசாந்தி செய்யவும் வேளாளர்கள் குலாலர்களுக்கு உரிமை அளித்தனர்.

கொங்கு வேளாளர் திருமணத்திற்கும், பிற சமூகத்தார் திருமணங்கட்கும் குலாலர்கள் கொடுக்க வேண்டிய நவபாண்டங்கள், அதற்காக அவர்கள் பெறவேண்டிய பொருள்கள் ஆகியவை இறுதியில் விரிவாக விளக்கமாகக் கூறப்படுகின்றன.

கொங்கு நாட்டுச் சமுதாய வரலாற்றுக்கு இது மிகவும் முக்கியமான பட்டயமாகும்.

---

சண்முகப்பிரகதம், மதுக்கரைப் பட்டயம், கொங்கு வெளியீடு, 1974. தேனோலை 1, ஜூலை 1974, பக். 1.16.

## மூலம்

சுபமஸ்த்து சொஷ்த்திரி விஜெயாற்புதம் · கலியுக சகாற்புதம் 4360 மேல் சாலியவாகன சகாற்புதம் ·1317 விசைய வருஷம் மார்களி மாதம் 17 தேதி தெட்ஜணாயம் பூருவபஷ்சதிதியும் திருவோண நட்செதிரமும்ஞ் சுபநாம யோகமும் பாலவாகறணமும் கும்பலக்கினமும் பெற்ற சுபதினத்தில் இந்த சாசனம் யெழுதினது.

கலியுகம் ஆதியில் பிறதமை பாதத்தில் பூச்சக்கிறவற்த்திகளாகிய பரிசித்து மகாறாசா செனமேசெயறாசன், நறேந்திர விக்கிறமாதித்தன், போசராசன், சேற றாசன், சோளறாசன், பாண்டியறாசன், அன்னதேவறாயர், பிறதாபருத்திரறாயர், நறசிம்மறாயர், கிஷ்ட்டணறாயர், அறிகறறாயர்,

மகாமண்டலாதிபதீசுவருடையறாயர் காரியத்துக்கு கற்தறாகிய சேறறாசன், சோளறாசன், பாண்டிறாசன், திருமலைனாயக்கர், வெங்கிடபதினாயக்கர், கிஷ்டணமனாயக்கர் இவர்கள் எல்லாருங் கூடி மூன்று றாசாக்களுக்கும் யெல்லை பிரிச்சது.

மதுக்கரைக்கும் மேற்கு, மலையாளத்துக்கும் கிளக்கு, பாலமலைக்கும் தெற்கு, பழனிமலைக்கும் வடக்கு உள்பட சேறமான் சீமையென்றும், வெண்பாவடக்குப் பெரும்பாலை, வயிகைவூருக்குந் தெற்கு குடக்கு பொருப்பு வெள்ளிக் குண்டு, கடல்க்கரைசூள் களித்தெண்டலை மேவுங் காவேரி சூள்னாடு குளித்தென்றலை ஊத்தென்பது காதங் கொங்கு யென்று யெல்லை பிரிச்சி கொங்கு 24 நாலு நாடு யென்றும் பேருங் கொடுத்து,

தென்திசைக் குடியானபேரையும் மதுக்கரைக்கு அழைத்துகொண்டு வந்து கொங்கு வேளாளறென்றுஞ் சேறறாசனும் றாயரும் பேரு கொடுத்து நாடு பிரித்து,

தென்கரைநாடு வேணுவுடையா கவுண்டர், காங்கயனாடு காங்கய மன்றாடியார், பல்லவறாய கவுண்டர், சக்கரைக் கவுண்டர், பூந்துரைநாடு வாறணவாசி கவுண்டர், அரையநாடு தீத்தாக் கவுண்டர், மணநாடு காளியப்ப கவுண்டர், வேங்கலநாடு காளத்தியப்ப கவுண்டர், நீலியப்ப கவுண்டர், தட்டையனாடு றாசியண கவுண்டர், கிளங்குநாடு செம்பாக் கவுண்டர், தலையனாடு பெரியாக் கவுண்டர், வல்லைய கவுண்டர், அண்டநாடு பெரியதம்பிக் கவுண்டர், வய்யாபுரிநாடு மங்கலக் கவுண்டர், பழனிக் கவுண்டர், நல்லுருக்காநாடு மலையாண்டி கவுண்டர், ஆனமலைநாடு காலிங்கறாயக் கவுண்டர், கோப்பண கவுண்டர், பொன்குளிக்கனாடு தெய்வசிகாமணிக் கவுண்டர், நரையனூர்நாடு நஞ்செய கவுண்டர், வாறக்கனாடு. பொன்னப்ப கவுண்டர், ஓடுவங்கனாடு வேலுமணிக் கவுண்டர், காஞ்சிக்கோவில்னாடு காசிக் கவுண்டர், பறுத்திப்பள்ளினாடு பழனிமலைக் கவுண்டர், குருப்பனாடு றாசியண கவுண்டர், பூவாணிநாடு, குமறவேலுக் கவுண்டர், றாசிபுரனாடு · நல்லதம்பிக் கவுண்டர், வடகரைனாடு சின்னத்தம்பி கவுண்டர், வாளவந்தினாடு செம்பாக்கவுண்டர், யிப்படி யிருபத்தினாலு னாடும் யெல்லை பிரித்தது.

யிந்தப்படி சரி யிருபத்தினாலு நாட்டு கவுண்டருக்கும் கட்டுக்கல்லையும் அளைப்பித்துக் குடுத்து அவர்களுக்கு பிளைப்புங் குடுத்து அவர்கள் யெந்தப் பிறகாறும் குடியானபேர்களும் நாட்டுக் கவுண்டர்களும் யெந்தப்படி தவிறாமல் நடந்துக் கொள்குறோமென்று தொளிலாளிகள் அனைவோருஞ் சொன்னாற்கள். 24 நாட்டு கவுண்டர்களும் உங்களுக்கு சீவனத்துக்கும் நடத்திக் குடுக்குறோமென்றும் நம்பிக்கை சொல்லிக் குடுத்தார்கள்.

அப்படியிருக்கிறபோது 24 நாட்டுக் கவுண்டர்களும், நம்மளுக்கு நவபாண்டம் வேணுமென்கிறதாக யோசனை செயிது 24 நாட்டுக் கவுண்டர்களும் நாட்டுக் கொருத்தர் பாண்டியத் தேசத்துக்குப் போய் வேள்க்கோபரை அளைத்து நீங்கள் நம்ப கொங்கு னாட்டுக்கு குடியேறவேணுமென்கிறதாக 24 நாட்டுக் கவுண்டர்களும் கேள்க்க அதுக்கு வேள்க்கோபர்,

நாங்கள் இவ்விடத்தில் அண்ணன் தம்பி மாமன் மயித்துனன் இவர்களெல்லாரையும் விட்டு நாங்கள் யெப்படி உங்கள் நாட்டுக்கு குடிவாறது யென்று வேள்க்கோபர் சொல்ல, அதுக்கு 24 னாட்டு கவுண்டர்கள் சொன்னது.

யெங்களுக் குண்டானபடி தவிறாமல் காணியாட்சி சாதனப் பட்டயம் நாடும் ஊரும் காணிபூமி மண்ணு மனை யெங்களுக் குண்டானபடி தவிறாமல் காணியாட்சி சாதனப் பட்டயம் யெளுதிக் குடுக்குறோமென்றும், மதுக்கரை செல்லாண்டியம்மன் முன்ம்பாக நம்பிக்கைப் பிறமானமுஞ் சொல்லிக் குடுக்குறோம்மென்றும், அளைத்துக் கொண்டு வந்து 24 னாட்டுக்கு 24 பேரை அளைத்துக்கொண்டு வந்து அப்போது கொங்கத் திருநீலகண்டரென்று பேருங் கொடுத்தார்கள்.

யெங்களுக்கு உடைந்தையாக வேணுமென்று கேள்க்கும்போது கொங்கு வேளாளருங் கொங்கத் திருநீலகண்டரும் 24 னாட்டுகவுண்டர்களும் உடந்தைபோகி சரியென்று சொன்னார்கள். உடந்தை யென்கிறது யென்னவென்றால் 24 னாட்டு கவுண்டர்களும் கலியாணத்துக்கு யெங்கள் சீரு பாதி செய்து கொள்ளுங்கோள், பாதி சீறு யென்னவென்றால் குப்பாரி கொட்டி வாறதும், காமோதிரம் போடறதும், னாட்டுக்கல்லுக்கு பெண் எடுத்துக் கொண்டு போரயிவாறதும், மாப்பிள்ளை குதிரை யேரி பெருந்தாலி கட்டுறது, காலிழங்குறது, பெண் அளைக்கிறதும் இந்த ஆருவகை சீரும் செயிது கொள்ளுங்கோளென்று 24 னாட்டுக் கவுண்டர்களும் சொன்னார்கள். யிதுவுஞ் சரியென்று உங்கள் சாதியில் நடக்குறது சீரெல்லாஞ் செயிது கொள்ளுங்கள். அப்பால் திண்மையான காரியத்துக்கு கொங்கு வேளாளர் சீருஞ் செய்து கொள்ளுங்கள். யிதுவும் நீங்கள் ஊருக்கொருவர் குடியிருக்குற படியினாலே,

கொள்ளி கோடி யிறுவருக்கும் ஒன்னெ ஒன்னு. உங்குறது திங்குறதும் யிறுவருக்கும் ஒன்னு. கொள்குறது குடுக்கிறது பிறதியம்.

யிந்தப் பிறகாரம் 24 நாட்டுக் கவுண்டர்களும் உடந்தையென்றுஞ் சம்மதி சொல்லி மதுக்கரை செல்லாண்டியம்மன் முன்பாக நின்று வலக்கை வாற்த்தை

சொல்லி குடுத்தார்கள்.

அப்பால் யெங்களுக்குச் சீவனத்துக்கு யென்ன விபறமென்று கொங்கத் திருநீலகண்டர் கேள்க்க, அதுக்கு 24 னாட்டு கவுண்டர்களும்,

உங்களுக்குக் கட்டுக் கருதும், களப்போரும், மூரிக்கருதும், படுக்கைக் கருதும், நோம்புக்கு விட்டுக்கு ரெண்டுபடி நெல்லும், அயினார் கோயில், கன்னிமாற் கோயில், மன்னத்துப் பொங்கல், பட்டதலட்சி, கிறாமசாந்தி, முத்தாலம்மன் யிதுவெல்லாம் நீங்கள் பூசை செய்து, செல்வளி உங்களுக்கு சொல் சுவந்திரம் கூலியேருக்கு நாலு வள்ளம் இதுவெல்லாம் நிகுதி செய்து கொடுத்து உங்களையும் ஆதரவு பண்ணிக்கொள்குறோம் மென்று 24 னாட்டுக் கவுண்டர்களுஞ் சொல்லி கொங்கு வேளாளரும் கொங்குத் திருநீலகண்டரென்றும் பேருங்கொடுத்து கொங்கு யிறுபத்தினாலு னாட்டுக்கும் அந்தந்த நாட்டாரை அந்தந்த னாட்டுக் கவுண்டர்கள் அளைத்துக்கொண்டு போகவும் கொங்கத் திருநீலகண்டரை நீங்கள் யெங்கள் கலியாணத்துக்கு யென்ன குடுக்கிறது யென்றும் 24 நாட்டுக் கவுண்டர்கள் கேள்க்க அதுக்கு கொங்கத் திருநீலகண்டர்,

நீங்கள் யென்தப் பிறகாறம் சொன்னீர்களோ, அந்தப் பிறகாறம் கேள்க்குறோமென்றுஞ் சொன்னார்கள்.

எங்கள் கலியாணத்துக்கு ஒரு பணத்து சிறப்பு வைத்தால்,

மிடா 4, பருப்புத்தாளி 2, தன்னீர்ச்சாலு 1, பெரியசாலு 1, தன்னீர்குடம் 4, தாளி 4, (களை) கரிச்சட்டி 4, உரிச்சட்டி 6, நெயிக்கலையம் 2, பெரிய தடச்சட்டி 1, தண்ணீர்க்கலையம் 4, ஆக உருப்படி 33

யிந்தப்பிறகாறம் நீங்கள் கொடுக்கிறது.

யிதுக்கு நாங்கள் கொடுக்கிறது யென்ன வென்றால், ஒரு பணத்துச் சிறப்புக்கு ரெண்டு வள்ள அரிசி, ஒருவள்ளப் பருப்பு, யெட்டு வட்டுக் கருப்பட்டி, நெயிப் படி 1/2, பணம் ஒன்னும் இந்த பிறகாரம் நாங்கள் கொடுக்கிறது. யிதுக்கு ஒரு பணமும், பாக்கு வெத்திலையும் குடுத்தால் சுண்ணாம்பு சாத்தி வாசலிலே கொண்டுபோயி வயிக்கவும். யில்லாதிருந்தால் வாசலில் கொண்டுவந்து வயிக்குறதில்லையென்று சொல்லிப்போடவும்.

இந்தச் சிறப்பு ஒரு பணம் முதல் 5 பணம் வரைக்கும் வாசலில் சீருக்கு,

மிடா 20, பருப்புத்தாளி 10, தன்னீர்சாலு 5, பெருசாலு 5, தன்னீர்குடம் 20, களைச்சட்டி 20, உறிச்சட்டி 30, நெயிக்கலையம் 10, பெரிய தட்டைச்சட்டி 5, தன்னீர் கலையம் 20, ஆக உருப்படி 165.

இந்த மேறைக்கு நீங்கள் வச்சதேயானால் நாங்கள் குடுக்கிறது சீரு

என்னவென்றால்,

அரிசி வள்ளம் 10, பருப்பு வள்ளம் 5, கருப்பட்டி வட்டு 30, நெய் படி 2, பணம் 5.

இந்த செல்வளி சுவந்திரம் மெல்லாம் கலியாண வாசலில் குடுத்து அனுப்புகிறதும் மடைக்கலப்பானை வைத்து கலியாணம் பண்ணினஏல் மாப்பிளைக்கு,

மடைக்கலப்பானை 5, ஆயிறப் பெருந்தாளி 1, கறகம் 1.

இதுக்கு அரிசி படி 5, பருப்பு படி 3, கருப்பட்டி வட்டு 3.

பெண்வீட்டுக்கு மடைக்கலப்பானை 3, ஆயிரப் பெருந்தாளி 1, கறகம் 1,

இதுக்கு சுவந்திரம் அரிசி படி 3, பருப்பு படி 1, கருப்பட்டி வட்டு 3,

இந்தப் பிறகாறம் கயிமேல் குடுக்கிறது.

பலபட்டரைச் சாதியில் கலியாணம் செய்தால் ஆணை அறசாணி வையித்ததே யானால், ஆணைக்கி பணம் 5, அறசாணிசாலு 1, கறகம் 1, வாழைப்பூ 1, கறகக் குடம் 1, சின்னப் பானை 1,

இது எளுதி வையித்தால் கண்ந்திரப்புக்கு, அரிசி வள்ளம் 1, பாக்கு படி 1/2, வெத்திலை கெவுளி 1, பழம் 10, தேங்காய் 1, வெல்ல அச்சு 1,

இதுவெல்லாம் வாசலுக்கு கொண்டு வந்து முன்னே வையித்தால், கண்ந்திறந்து கலியாண வாசலுக்கு கொண்டுபோயி வைக்கவும். இதுக்கு பணம்

பொங்கல் பானை உருப்படி 5, இதுக்குப் படி அரிசி வள்ளம் 1, பருப்பு படி 1

கம்மாற வடுக னாயக்கன் கலியாணத்துக்கு, யெளுத்துப் பானை 12, மடக்கு 12, தண்ணீர்க் கலையம் 5, வாழைப்பூ 5, தீப கெம்பம் 5, விளக்கு 5, ஆக உருப்படி 45.

இதுக்கு சுவந்திரம் அரிசி வள்ளம் 1, பருப்பு (படி) 5, பாக்கு 10, வெத்திலை 25, பழம் 10, தேங்காய் 1, இதுக்கு பணம் 2.

சூரிய குல வம்முஷத்துக்கு கலியாணத்துக்கு எளுத்துப் பானை, பெரிய பானை 4, சின்னப் பானை 4, பெரிய மிடா 4, குடம் 4, புள்ள பானை 4, கறகம் 4, வாழைப்பூ 4, அரசாணிச்சாலு 4, குடம் 1, கறகம் 1, பொங்கப் பானை உருப்படி 5, தீப கம்பம் 12, பாலிகை 7, ஆக உருப்படி 55.

யிதுக்கு அரிசி வள்ளம் 1, பறுப்பு படி 1, பாக்கு 10, வெத்திலை 20, பழம் 10, தேங்காய் 1, யிதுக்கு பணம் 8.

விஸ்வகுலத் தாசாரிகளுக்கு கலியாணத்துக்கு எளுத்துப் பானை சாலுக்குடம் 1, சின்னப் பானை 1, கறகம் 1, குடம் 1, வாழைப்பூ 1, மடக்கு 1, பாலிகை 7, நாகவல்லிக் கலசம் 9, பொங்கப் பானை உறுப்படி 5, ஆக உறுப்படி 27.

யெளுதி வைத்துக்கொண்டு யிதுக்கு ஆசாரிகள் கொண்டு வாறது யென்ன வென்றால், அரிசி வள்ளம் 1, பருப்பு வள்ளம் 1/4, பாக்கு 10, வெத்திலை 20, பழம் 10, தேங்காய் 1,

யிதுவெல்லாம் வாசலுக்கு கொண்டு வந்து யெளுத்து பானை முன்னே வயித்ததானால் பூசை பண்ணி விஸ்வ குலத்தாசாறிகள் அவர்கள் வீட்டுக்கு மேள வாத்தியத்துடன் யெடுத்துக் கொண்டு போகவும், பணம் 3.

சோளிய வேளாளர் கலியாணத்துக்கு, சாலு 1, கறகம் 1, வாழைப்பூ 1, கறக குடம் 1, மேல் மூடி 1, மடக்கு 1, பாலிகை 7, பொங்கப் பானை உருப்படி 5, மஞ்சல்நீற் பானை 1, கலசம் 1, மங்கல்லிய கூறப்பானை 1, சட்டி 1, ஆக உருப்படி 21.

யிதுக்கு அரிசி 1, பருப்பு 10, பாக்கு 10, வெத்திலை 20, பழம் 10, தேங்காய் 1, யிதுவெல்லாம் வைத்துப் பூசை பண்ணி எடுத்துக்கொண்டு போகவும். இதுக்கு பணம் 2.

பாண்டிய வேளாளர் கலியாணத்துக்கு, யெளுத்துச் சாலு 1, கறகம் 1, வாழைப்பூ 1, கறகக் குடம் 1, மடக்கு 1, பாலிகை 7, பொங்கப் பானை உருப்படி 5, மஞ்சல்நீற் பானை 1, கலசம் 1, மங்கிலியக் கூறப்பானை 1, சட்டி 1, ஆக உறுப்படி 22.

இதுக்கு அரிசி 1, பருப்பு 1/2, பாக்கு 10, வெத்திலை 20, பழம் 10, தேங்காய் 1 இதுவெல்லாம் முன்னே வைத்துப் பூசை பண்ணி எடுத்துக் கொண்டு போகவும். யிதுக்கு பணம் 2.

றாஜாக்களுக்கு கலியாணத்துக்கு, யெளுத்துப்பானை 5, வாழைப்பூவு 5, குடம் 2, யெளுத்து மிடா 2, மடக்கு 5, தீப கம்பம் 7, விளக்கு 7, யெளுத்துக் கலசம் 7, ஆக உருப்படி 40.

யிதுக்கு அரிசி வள்ளம் 1, பறுப்பு 1/2, பாக்கு 10, வெத்திலை 20, பழம் 10, தேங்காய் 1, வெல்லம் அச்சு 1. யிதுவெல்லாம் யெழுதிக் கொண்டுபோய் வாசலிலே வைக்கவும். யிதுக்கு பணம் 5.

வடுக ஆசாரிகளுக்கு கல்யாணத்துக்கு எளுத்துப்பானை 12, மடக்கு 12, தண்ணீர்க்களையம் 5, வாழைப்பூவு 5, தீப கம்பம் 5, விளக்கு 5, ஆக உருப்படி 44.

யிதுக்கு அரிசி வள்ளம் 1, பருப்பு 1/2, பாக்கு 10, வெத்திலை 20, பழம் 10, தேங்காய் 1,

யிதுவெல்லாம் எழுதி வைத்துக்கொண்டு அவர்கள் வருசையெல்லாம் கொண்டு வந்து யெழுத்துப் பானைக்கு முன்னே வயித்து பூசை பன்னி அவர்கள் மேல் வாத்தியத்துடன் எடுத்துக் கொண்டு போகவும். யிதுக்கு படியரிசி 5, பருப்பு படி 1, பாக்கு 10, வெத்திலை 20, சக்கறை படி 5, பளம் 3.

மற்ற பலர்பட்டறை சாதியில் கல்யாணத்துக்கு செய்தபேயானால் எந்தப் பிரகாரம் அவரவர்கள் சாதியில் யெந்தப்படி கேள்பார்களோ அந்தப் பிறகாரம் கேட்டு கல்யாணத்துக்கு முஷ்த்தீபுகள் எல்லாம் குடுத்து உனக்கு உண்டான வர்த்தனைகள் ளெல்லாம் கைமேலே வாங்கிக் கொள்கவும்.

ஒரு பணத்துக்கு உருவு விட்டால், ஒரு பணம், ஒரு படி நெல்லும், ஒரு வட்டுக் கருப்பட்டியும், பாக்கு வெத்திலையும், பழமும் வையித்து கண்திறந்து கோவிலுக்குக் கொண்டுபோய் வையித்தாலும் அதுக்கு ஒரு மிடாவும் ஒரு தாளியும் குடுத்து வறவும் இந்தப் பிர்காரம் நிகுதி செயிது யிருக்கிறோம்.

குதிரைகள் பண்ணச் சொன்னால பணமும், பாக்கு வெத்திலையும், பிடிமண்ணும் குடுத்ததேயானால் அஞ்சு பணத்துக்கும் பண்ணச் சொன்னால் குதிரைக்கி அக்கினிமாலை சாத்துகிறபோது பொங்கலுக்கு 5 வள்ள நெல்லும், ஆட்டுகிடாவும், பாக்கு வெத்திலையும், பழ தேங்காயும் குடுத்துப் பொங்கல் வயிக்கவும். குதிரைக்கி வர்ண்ண சிலவுக்கு பணம் 1, பசுவின் பால் வள்ளம் 1, சுன்னாம்பு சால் வள்ளம் 2, கண் திறப்புக்கு பணம் 1, ஒரு வள்ள நெல்லு, ஒரு அச்சு கருப்பட்டி, பாக்கு வெத்திலை, பழ தேங்காய், சாம்பறாணி யிதுவெல்லாம் குடுத்தால் வற்ண்ண மெழுதி கண் திறக்கும்போது ஒரு ஆட்டுக் கிடாய் வெட்டிக் கோயிலுக்குக் கொண்டுபோய் வையிக்கவும்.

களியாட்டக் குதிரைகள் செயிதால் செலவு அஞ்சு வள்ள நெல்லு, ஆறு வள்ள கொட்ட முத்து, பருத்தி ஒரு தூக்கு, கருப்பட்டி ஒரு தூக்கு, ஆட்டுகிடாய் ஒன்று இந்த சுவாதீனமெல்லாம் கொடுக்கிறது.

மூப்பர்களுக்கு, முட்டி ஒரு பணத்துக்கு 60, மிடா ஒரு பணத்துக்கு 8, யிருதாளி 10, மூப்பர்கள் வருமானம் கொடுக்கிறது என்னவென்றால் ஒரு பணத்துக்கு ஒரு மிடா கருப்பட்டி, ஒரு கோட்டை நொங்கு, ஒரு கூடை, சேவாய், ஒரு கூடை கொட்டை.

வீடு கட்டினால் பண்ணையத்துக்கு ஒரு பனையில் விழுகிற ஓலைகளும், சிறைகளும் கொடுத்துவிடுகிறோம். சிறப்பு அஞ்சு பணத்துக்கு மேல் வயிக்கச் சொல்லி சொன்னதேயானால் அரிசி வள்ளம் 10, பருப்பு வள்ளம் 5, கருப்பட்டி தூக்கு 1, நெய்ப் படி 2 1/2 இதுவெல்லாம் கொடுத்து ஒரு மாடு கன்றுந்தாயும் கொடுக்கிறது.

துரைகளுக்கு அமஞ்சி மனைய வேணுமென்றால் படி போட்டால் மனைகிறது. படி போடாமல் போனால் நீங்கள் மனைய வேண்டியதில்லை.

கெடிவாசலில், பட்டணவாசலில், குளாய் மனைய வேணுமென்றால் அறமனைக்கு ஆயிரம் பில்லைக்கு 5 பணம். குடியானபேற்களுக்கு குளாய் மனைய வேணுமென்றால் ஆயிற பில்லைக்கு ஆரு பணம். இந்தப் பிறகாறம் நிகுதி செய்து இறுக்கிறார்கள்.

சன்னதி வாசலில் கிராம சாந்தி செயிகுறது கொங்கு திருநீல கண்டனே அல்லாமல் வேரை ஒருத்தர் செய்யப் போகாது. கிறாம சாந்திக்கு கொடுக்கிற தென்னவென்றால் ஒரு பணம் காணிக்கை, சோமனும், அஞ்சு வள்ள நெல்லு, ஒரு ஆட்டுக்கிடாய், ஒரு விறாகனும், பாக்கு வெத்திலை, தேங்காய் பழம், சாம்பறாணி இதுவெல்லாங் குடுக்கிறது. கிறாமங்களிலே யிறுக்கிற மணியகாறர்களுக்கு சாமானம் 1, உருப்படி 5 குடுக்கவும். இந்த வகை பிறகாறங்களுக்கு யெல்லாம்ங் குடுக்கறது. நாகற பணம் குடுத்து அனுப்புகிறது.

முத்தாலம்மன் செய்ய வேணுமென்றால் அதுக்கு பணம் மூனு. ஒரு பணத்து சித்தாடை, ஒரு சோடு கண்மலரு, ஒரு சோடு பொட்டு காறையும், கண் திறக்கும்போது ஒரு வள்ள நெல்லு, ஒரு அச்சுக் கருப்பட்டியும், பாக்கு வெத்திலையும், பழம் தேங்காயும், ஆட்டுக்கிடாயும் 1. இந்த சுவந்திறமெல்லாம் உண்டு செயிது குடுத்து இருக்கிறோம்.

இந்தப் பிறகாறத்துக்கு கொங்கு 24 னாட்டுக் கவுண்டர்களும், கொங்கத் திருநீலகண்டற் அனவோரையும் கூட்டி வைத்துக் கொண்டு சேறமான் பெருமாள் றாயரு, 24 னாட்டு குடியாணபேற்களும் கவுண்டர்களும், செட்டி வருத்தகர், பலபட்டரையும் கூடி .1நிலைனாட்டுதலை செய்து கல்லும்ங் காவேரியும் புல்லும் பூமாதேவியும் சந்திறாதித்தருள்ள காலத்திலும் இந்த சாசனத்தின் உண்டாகிய படி தவறாமல் செய்துகொள்குறோமென்று மதுக்கரை செல்லாண்டியம்மன் முன்பாகவும், காவேரியம்மன் முன்பாகவும் வலக்கை போட்டுக் கொடுத்து விட்டோம்.

யித்தை யிகருதம் பேசி, யில்லைப் பொய்யென்றும் சொன்னபேர்கள் தங்களுடைய மாதாவையும், தங்களுடைய குருவுக்கும், தங்களுடைய குலதேவதைகளுக்கும் துறோகம் பண்ணினால் யெந்த பலனுண்டோ அந்தப் பலனுண்டாகும்.

அப்படி பாவதோசங்களுக்கு உள்படாமல் புண்ணியத்தை நினைத்தால் காசியில் கெங்கை தீர்த்தத்தில் இபத்தானம் செய்து காசி விஸ்வநாதரையும், விசாலாட்சயம்மனையும் சேவித்த பலன் பெறுவார்களாகவும். ராமேஸ்பரத்தில் தீர்த்தமாடி ராமலிங்கறையும் சேவித்த பலம் பெருவார்களாகவும். மதுறையில் தீர்த்தமாடி சொக்கனாதரையும் மீனாட்சியம்மனை சேவித்த பலன்ம் பெருவாற்களாகவும். மதுக்கறையில் உடைய காவேரியில் தீர்த்தமாடி மதுக்கரை

செல்லாண்டியம்மன் தீர்க்காயுசு புண்ணிய பாக்கியத்தைக் கொடுத்து லச்சிப்பாறாகவும். மதுக்கரை செல்லாண்டியம்மனும் காவேரியம்மனும் லச்சிக்கவும். திருநீலகண்டரும், சிவகாமியம்மனும் லக்ஷிக்க வேணும். மாரியம்மனும் படை வெட்டியம்மனும் லக்ஷிக்க வேணும். சிவமயம்.

# 43. இருபத்திநாலுநாட்டு வேட்கோவர் பட்டயம்

சேலம் மாவட்டம் நாமக்கல்லில் உள்ள வேட்கோவர் குடியில் வாழவந்தி நாட்டுப் பூசாரியார் அவர்களின் கோயில் வீட்டில் இப்பட்டயம் உள்ளது.1

சிவலிங்கம், விநாயகர், முருகன் உருவங்கள் சுவடியில் வரையப்பட்டுள்ளன.

கொங்கு 24 நாட்டு வேட்கோவரும் ஒருநாள் பவானி கூடுதுறையில் சங்கமேசுவரர், வேதநாயகி அம்மன் சன்னதியில் கூடி இந்தப் பட்டயத்தை எழுதி வைத்துக் கொள்ளுகின்றனர். இப்பட்டயத்தில் 24 நாடுகளும், அதில் சேர்ந்த ஊர்கள் சிலவற்றின் பட்டியலும், அந்த நாட்டின் புகழ்மிகு தெய்வங்கள் பெயரும், காப்புரையும் அளிக்கப்பட்டுள்ளன.

இறுதிப் பகுதியில் பவானியில் கூடிய வேட்கோவர் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இந்தப் பட்டயம் வாழவந்தி நாட்டுச் சென்மப் புலவனிடம் ஒப்புவிக்கப் பெற்றதாகக் கூறப்படுகிறது. அவன் வேட்கோவர் குடியைச் சேர்ந்த மாந்திரீகன். அவனைப் பற்றித் தனியாக ஒரு பட்டயம் உள்ளது.

தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச் சுவடித்துறையில் வேறு பட்டயத்திற்கு இருபத்திநாலுநாட்டுப் பட்டயம் என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளது.2

## மூலம்

ஸ்ரீமது சகலகுண சம்பன்னறான சகல தர்ம்ம பிரீதி பாலகறான, பந்து சன சித்திரமணிக்கறான பத வாக்கிய பிறாமாணிக்கறான, அன்னதான விநோதகறான, அகண்டித லச்சிமி அயிசுபரிய சம்பன்னறான, மித்துரு ஜன மநோறஞ்சிதறான, வெகுசென பூசகறான, விபூதி ருத்திறாச்ச மாலிகாபரணறான, அரிபூசை குருபூசை மயேசுபற பூசை மறவாத பெரியோர்களான மகாமேருவுக்கு சரிசமான தீரறான, கேரன்க்குரை வேதியறான, குலால மாமுனிவரான,

1. மதுக்கரைப் பட்டயம். பக். 33-40.

2. தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை, தொகுதி 4, எண் 1545, ப.115.

முப்புரினூலும் தெர்ப்பையு முள்ளவறான, யெக்கிய பவுத்தியறான, தொண்டுக்கு தொளில்குடாதவறான, ஆவிடையார் சம்மந்தறான, வீமனைப் பணிகொண்டவறான, கரிக்கால சோழனை வழத்த பரிபாலகறான, அய்யனார் வறபிறசாதகம் பெத்த பெரியோர்களான, அர்வத்திமூவர் சமூகத்திலிருப்பவறான, தில்லையம்பலத்தில் முதுமை போய் யிழமை பெர்த்த பெரியோர்கலான, கிர்தாயுகத்தில் கண்டறாச்சுதனை வென்ரு கும்பறாசேந்திரறான, திரிதாயுகத்தில் வச்சிறாசூரனை வென்று மன்னுடறாசேந்திரரான, துவாபரியுகத்தில் திருமலயம்காரை வென்ரு குசவர் திருனீலகண்டறான, கலியுகத்தில் பட்டிவிக்கிரமாதித்தனை வென்ரு சாலியவாகனறான யிப்படி சகல யுகத்துக்கும் நன்மை பெயர் பெத்த பெரியோர்களான ஸ்ரீதிருனீலகண்டசுவாமியார் திருவிளத்தினாலும் சிவகாமியம்மனை தெண்டனிட்ட வின்னப்பம்.

யிப்போதும் வூத்தலூர் பட்டகாறர், றாதாபுரத்துப் பட்டகாறர், யீரோட்டு பட்டகாரர் மேல்கரை கீழ்கரை கொங்கு யிருவத்தினாலு னாட்டிலுள்ள திருனீலகண்டர் மூன்ரு புலவரும் அனவெரும் சங்கும தீர்த்தமாகிய அபிசேகம் பெத்து விழங்கிய வவ்வானித் தழத்தில் கனகசபையாக வந்து கூடினார்கள். முன்னே 24 நாட்டு கவுண்டர்கள் நாடு பிரிச்சி காணிகுடுத்து கைவரை பட்டயம் யெளுதி கொடுத்த பிரகாரம் யோசனைபன்னி யிருவத்தி நாளு நாட்டு பட்டயம் வேதநாயகி அம்மன் சன்னதி முன்பாக யெளுதினது.

அப்போ கலியுக சகாப்தம் 4235 மேல் செல்லாநின்ற ஆனந்த வருசம் வைய்யாசி மாதம் 15 தேதியில் யெளுதினது. சிவமயம்.

## தென்கரைநாடு

ஊதியூர்மலை பாலார் கொத்தனூர். வஞ்சியம்மன் றச்சிக்கவும். அப்பரமேசுபறர் ரச்சிக்கவும்.

## காங்கயநாடு

காங்கையம் காடையூர் கன்னபுரம் பாப்பினி வீரசோளபுரம் சிவமலை பட்டாலி கீரனூர் வென்ளெகோவில் தேவத்தானம் வென்முத்தூர் னத்தக்காரை துரவலூர்.

## பூந்துரைநாடு

சங்ககிரி சக்கறவாலனத்தம் சேக்கடினத்தம் மோடமங்கழம் லத்திவாடி கத்தாரி கள்வாவி அகறம் மொளச்சி மண்டபத்தூர் மனலி கோக்களை கன்னம்பூண்டி கோலிக்காள்னத்தம் பூந்துரை வெள்ளோடு நசையனூர் யெழுமாத்தூர் பிடாரியூர் மீங்கியூர் பெருந்துரை திண்டமங்கழம் சாத்தனூர் வீரனூர் ஈஞ்சம்பளி யீரோடு பேரோடு சித்தாடு புதூர் முடுகுரிச்சி குலாநெலை கிழாம்பாடி காழுமங்கழம் பனயம்பளி குழைவிழக்கு சத்தியமங்கழம் சேமூர்

அரைச்சலூர் முருங்கைதுளு. தொண்டீசுபரர் ரச்சிக்கவும். கொங்கலம்மன் ரச்சிக்கவும்.

### வடகரைநாடு

பாழமலை வவ்வானி வேழமலை நெரிஞ்சிபேட்டை மாதூர் அந்தியூர் சம்பை ஆப்புகூடல் மயிலம்பாடி குப்பாண்டபாழயம். வேதநாயகியம்மை ரச்சிக்கவும்.

### சேலம் கீள்கரை பூந்துரைநாடு

சேர்வாமலை செவ்வாய்பேட்டை அய்யோத்திபட்டணம் ஆணந்தகுவை கஞ்சமலை காருமாமலை பெரியூர் புத்தூர் பூலாவரி நெலயாவாரம்பட்டி மல்லூர் சாவாமலை காவேட்டிரங்கன்பாழயம் முடுதுரை கருக்கல்வாடி காமலாபுரம் திருமலைகிரி சூரமங்கலம் சொரியமலை வெனம்ந்தூர் அளவாப்பட்டி சுபறாயர் ஆடயாம்பட்டி கையபரை காடத்தூர் வைரூசி திருவனிமுத்தூர். கிளிமுனிநாதர் ரச்சிக்கவும். சாமுண்டியம்மன் ரச்சிக்கவும்.

## பூவானிநாடு

காவேரிபுரம் வோமலூர் சொரைநகர் வேட்டறாயர் திருபதி பன்னபட்டி துலசம்பட்டி அமரகுனி சாம்பள்ளி நங்கபள்ளி மலியகுணம் சோழவாண்டி பூதப்பாடி சலகண்டீசர் ரச்சிக்கவும்.

## வெங்கலநாடு

கரூர் புன்னம் பௌவுத்திரம் ஆத்தூர் குடையூர் நாகனூர் குடைகானி குரிச்சி. பசுபதியம்மன் ரச்சிக்கவும்.

### மணநாடு

தென்னிலைநகர் அரியூர்பட்டி வேட்டறாயன்பாழயம் கூடலூர் ஆம்பிறாந்தி குடந்தூர் லூத்துப்பட்டி மழயம்பாழயம் துண்டுகானிபாழயம் கீழறாதபுரம். குமரேசர் ரச்சிக்கவும்.

### தலயநாடு

தலையூர் மணைகுகை கந்தமலை.

### பரித்திபள்ளிநாடு

பரித்திபள்ளி மனை பிள்ளையார் நத்தம் குழம்கொன்ரெ கருமனூர்

கொன்னையார் வண்டினத்தம் மின்னாபள்ளி மறப்பேரை வழ்மகுளி வேலடினத்தம் யிருகாலூர் யிரனாபுரம் செம்பகமாதேவி நடுவநேரி கூத்தாடிநத்தம் பழமோடு கண்டகுலமானிகம் பொன்னுனதி. வானீசர் சோலீசர் ரச்சிக்கவும்.

## வாழவந்திநாடு

வாழவந்தி கூடச்சேரி பில்லூர் கீரம்பூர் மனப்பள்ளி பாலம் பிறாந்தகம் நறவலூர் கோதூர் மகவனூர் குமரீசர்பாதம் ஆரியூர் தோலூர் சாத்தம்பூர் பிளைகளத்தூர் கோனூர் வள்ளிபுரம் திண்டமங்கலம் நாமக்கல் நடந்தை மேல்சாத்தம்பூர் அரியூர்நகறம். நாமக்கல் நறசிங்க பெருமாள் றச்சிக்கவும்.

## றாசிபுரநாடு

அலவாமளை றாசீபுரம் சிங்கலாந்தபுரம் வடுகம் புதுபட்டி கன்குரிச்சி சீறாபள்ளி பட்டினம் வொடுவம்குரிச்சி காக்காவரி பாச்சல் பிழ்ரானூர் குருசுவாமிபாழயம் அத்தனூர், கைலாசநாதர் ரச்சிக்கவும். அத்தனூர்றாய் றச்சிக்கவும்.

## ஏழுர் நாடு

யேலூர் புதூர் கலியாநி நமனி கஞ்ச நாட்டாமங்கலம் காதபலி கார்குரிச்சி அல்லாலபுரம் நத்தம் துத்திகுலம் சேந்தமங்கலம் மனவெ மானத்தி வுப்புடகம் முசரி கலங்கானி உடுப்பம் தாலம்பாடி ஆனியார் வேல்குரிச்சி வெங்கலகௌரு வேட்டமடி னைனாமலை. வறதர் ரச்சிக்கவும். பனையம்மாள் லச்சிக்கவும்.

## மேல்கரைஅரயநாடு

கொடுமுடி தலயநல்லூர் வேங்கம்பூர் வுஞ்சிணை அஞ்சியூர் கொல்லகோவில் கொந்தலம் யெளிரூற்று வாசநல்லூர் வன்னிபுரம் துங்கா துக்காச்சி மொஞ்சனூர் வூஞ்சலூர். சிவகிரி வேலாயுதகடவுள் றச்சிக்கவும்.

## கீழ்கரைஅரையநாடு

யிடையார் வெங்கரை பெரும் குரிச்சி திடுமல் பூண்டி சேலூர் மருதூர் சிறாபளி கொத்தமங்கலம் பண்ணமங்கலம் வடகரைஆத்தூர் ஆனங்கூர் மாவிரெட்டி பொத்தனூர் முகிநாலை கொலாயூருக்கூர் கொத்தலம் சோலசிருமணி யெலம்பிளை மாதேவி கவலைகுரிச்சி பறமதி மாணிக்கனத்தம் சொரிக்கிலை கலம்ங்காநி அல்லாலபுரம். பொங்காளியம்மன் வேலர் ரச்சிக்கவும்.

## கிழங்குநாடு

வேட்டமங்கலம் வுலுந்தொடை மண்மங்கலம் வாங்கல் நன்னியூர் மூலிமங்கலம்

புகழியூர் கடம்பை சேனைப்பாடி காவேரி கண்டியம்மன் ரச்சிக்கவும்.

## நட்டயநாடு

உப்புடமங்கலம் வெள்ளியனை புளியூர் கட்டனை வநவாசி புதுகோட்டை கிஷ்ணாவறம் திருமகூடல் ஆம்பிறாந்தி கோயம்பளி சாமநாயகன்யெனை . . . முச்சிலியம்மன் ரச்சிக்கவும்.

## வாரக்கநாடு

குசபளி மங்கலம் நாரநாபுரம் பள்ளிடம் சென்ஞ்சேரி மந்தாகிரி. பொநமலை கொமரேசர் ரச்சிக்கவும்.

## அண்டநாடு

விருபாச்சி பொநநிவாடி யிடயகோட்டை மண்டவாடி குசவபட்டி நின்மநீசர் ரச்சிக்கவும்.

## நல்லுருக்க நாட்டை சேர்ந்த ஆனைமலைநாடு

குடந்தூர் கெருங்கயம் குருலயம் பாலார் சித்தார் கண்டலூர். அமநேசுபரர் ரச்சிக்கவும்.

## காவடிக்கநாடு

சிங்கலநல்லூர் ஊற்றுகுளி தேவம்பாடி றாம பட்டநம் கரைப்பாடி அணியார் திருமத்துரை பாவல பயனூர். அத்தனூர் அம்மன் ரச்சிக்கவும்.

## பொங்கலூர்நாடு

பொங்கலூர் புதூர் சகலகானூர் வீரவாண்டி காட்டூர் மாதுப்பூர் தங்கம்பாடி பல்லாகோவில் மொகவனை சருகனூத்து சேத்தபேளி மாரனூர் பெரியப்பட்டி கண்டியன்கோவில் பத்தூர் மெட்டறாத்தி சோமனூத்து அபங்கயம்மன் கடவுலகொங்கூர் கடத்தூர். அலகுமலை வேலாயுதசுவாமி ரச்சிக்கவும்.

## ஆருனாடு

சேவூரு அன்னியூர் வெள்ளாதி முடுதுரை துடியலூர் பேரூர் அரஙூர் தெக்குலூர் கறவளி அவநாசி கானூர் நல்லூர் யகலைனூர் ஓலைப்பாடி பூண்டி துரவலூர் நம்பியூர் யெலத்தூர் யிருகாலூர் நாகமபாழயம் தோடம்புத்தூர் கூடலூர் சிங்கனநல்லூர் குள்ளன்துரை வாழவந்தி கோட்டை

## குறுப்பநாடு

குறுமந்தூர் கலிங்கயம் அயிலூர் குளப்பலூர் சிவலூர் கோச்சனம் மிதனத்தூர் ஆதியூர் திங்கலூர். செவியூர் ஊற்றுகுளி விசயமங்கலம். விசயாபுரியம்மன் றச்சிக்கவும்.

## காஞ்சியொடுவங்கநாடு

சத்தியமங்கலம் பெருதலூர் தடப்பளி அனுகுளி கொடுவேரி கூவலூர். தவழுமலை கொமரீசர் ரச்சிக்கவும்.

## காஞ்சிகோவில் நாடு

சின்னபிலியூர் கவந்தபாடி சிதேவியம்மன் ரச்சிக்கவும். வெட்டூர் விபறம் கோயமுத்தூர் பேறூர் அரசாம்பலம் காஞ்சிநதி தொடம்புத்தூர் சிங்களநல்லூர் சங்கனூர். வடவலியூர். கோனியம்மன் ரச்சிக்கவும்.

யிது ஆரு நாட்டுக்கு சேந்தது. வாரக்க நாட்டை சேந்த குயிலை பீடம்பளி வளியூர் சூலூர் ஒட்டகாமண்டபம் பொன்னகாளி காரச்சேரி பூளைவாடி கன்னாடிபுத்தூர் பூதபாடி மாதேவி சிலநாயக்கனூர் பழயூர்மலை யிது பொங்கலூர் நாட்டுக்கு சேந்தது.

மோரூர் தகடபாடி ரங்கசமுத்திரம் தட்டாம்குட்டை வேங்கிகவுண்டன் பாழயம் தாசநாயக்கன்பட்டி கட்டாம்பாழயம் ஆத்தூறாம்பாழயம் காரியப்பன்பட்டிக்கும் திருவாண்டிபட்டி யோக்கிலியப்பட்டி குட்டிமேய்க்கன்பட்டி குமாரபாளையம் காவேரிநதி திருசம்கோடு கொமறமங்கலம் கல்லுகாரபட்டி கொரைக்காணிம் பூந்துரை நாட்டில் அர்த்தநாரீசரர் ரச்சிக்கவும். குண்டிடம் துடியலூர் பிறாட்டிம நவகொம்பு பிலிக்கான்பட்டி நல்லூர். வடுகநாத சுவாமி ரச்சிக்கவும்.

புங்கலிக்க நாட்டுக்கு சேந்தது. கொண்டகாணி சாமகுலம் மசகவுண்டன் சிமையெலை அரசூர் நீலம்பூர் காழபட்டி. சவானம்பட்டி வெலிச்சி விரபாண்டி கெம்பநாயக்கன்பாழயம் கோயல்பாழயம் காடம்பட்டி தணத்தூ. கவகாளியம்மன் ரச்சிக்கவும். அன்னியூர் வடக்கனூ காரமடை வெழாதி வண்டிகோட்டை கரியப்புன்பட்டி பொன்முடி வெட்டபாழயம் சிருமுகை அல்லிதுரை கோப்பநேரி. மன்னீசர் ரச்சிக்கவும். பெரியம்மன் ரச்சிக்கவும். வெல்லாரு மேச்செரி அமறம் வெம்ப நேரி தாறாபுரம் சமுத்திரம் பக்கநாடு யிருப்பாளி சித்தூர் அடயூர் பொட்டநேரி காளிபட்டி. மல்லிகேசர் பத்தறகாளி ரச்சிக்கவும்.

வெலாரு புவ்வானி நாட்டுக்குச் சேந்த கொண்டகாளி.

"யிந்த பட்டயம் 24 நாட்டு சென்மப் புலவனிடத்தில் ஒப்பி வைத்துயிருப்பது

அரியவும். யிதுக்கு யாதாமொருவன் வின் விகாதம் பன்னிநால் நிந்தினை பன்னினாலும் கெங்கை கோதாபரியில் சிந்து நதியிலும் சங்கும தீர்தமாகிய இந்த வவானி புனித தலத்தில் யேளு காறாம் பசுவை கொண்ர தோஷத்தி போக்கட்டுவனாகவும். சங்குமேசுபர வேதநாயகியம்மன் ரச்சிக்கவும்.

24 நாட்டு உரைமுறையார் பேர் தெங்கரைநாட்டு வேட்டயன்னன், காங்கய நாட்டு அத்தனாரி, பூந்துரைநாட்டு காளியன்னன், வடகரைநாட்டு செங்கோடன்; சேலம் பூந்துரைநாட்டு அரைச்சாலை, புவ்வாணிநாட்டு பூதபாடி, வெங்கலநாட்டு நல்லன்னன், மறநாட்டு நல்லகாழி, தலயநாட்டு நல்லதம்பி, மேல்கரை அரையநாட்டு வேலப்பன், கிலங்குநாட்டு கண்டியண்ணன், தட்டயநாட்டு ராசியன்னன், வாரக்கநாட்டு காளியன்னன், அண்டநாட்டு கன்னப்பன், ஆனைமலைநாட்டு குப்பனன், காவடிக்கநாட்டு வள்ளியனன், பொங்கலூர்நாட்டு குள்ளப்பன், ஆருநாட்டு றாயப்பன், குருப்புநாடு செம்பனன், காஞ்சிவொடு வங்கநாட்டு வாரணவாசி காசி, பரிதிபள்ளிநாட்டு பெரியன்னன், வாழவந்திநாட்டு திருமலை, றாசிபுரம்நாட்டு அத்தியன்னன், கோய வேலப்பன், குயிவிருமன், புனை குப்பன், மோரு முதலி, திரு வேலப்பன், குன்ரி குப்பன், சாம பெரியன்னன், அன்னி றாசியன்னன்.

# 44. அரையநாட்டுப் பட்டயம்

இப்பட்டயம் சேலம் மாவட்டம் திருச்செங்கோடு மண்பாண்ட உற்பத்தியாளர் கூட்டுறவுச் சங்கத் தலைவர் சண்முகம் அவர்களிடம் உள்ளது.*

திருப்பாண்டிக் கொடுமுடியில் பிறந்து திருச்செங்கோட்டில் இறைபணி புரிந்து வருகிறாள் உமையாயி என்ற தாசிப்பெண். தன் சொந்த ஊரான கொடுமுடியில் குலாலர்குடியைச் சேர்ந்த அநாதைக் குழந்தைகளான வேலப்பன், மலையப்பன் ஆகிய இருவரைத் தன்னுடன் திருச்செங்கோட்டுக்கு அழைத்து வந்தாள். அவர்கள் இருவருக்கும் கல்வியறிவு புகட்டிப் பானை முதலியன வனையும் குலத்தொழிலும் கற்றுக் கொடுத்தாள். காளைப் பருவம் வந்தவுடன் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தாள். உமையாயியின் எல்லா முயற்சிகளுக்கும் மோளூர் மயில் கவுண்டர் ஆதரவு தந்தார்.

ஈரோட்டில் வாழ்ந்த குலாலர் குடும்பத்தாரை வரவழைத்துப் பெண் கேட்கின்றனர். வெள்ளைக் காளியக்காளுக்கும் வேலப்பனுக்கும் திருமணம் நடைபெறுகிறது.

திருச்செங்கோட்டைச் சேர்ந்த ஏழு கிராமங்கள் அவர்களுக்குப் பாண்டம் வனையவும், உருவாரங்கள் செய்யவும் காணி உரிமையுடைய ஊர்களாகக் கிடைக்கின்றன. உமையாயி தேவரடியாராக இருப்பினும் அவள் செய்த சமூக சேவை பாராட்டுதற்குரியது.

### மூலம்

ஹரி ஓம், நன்றாக, குரு வாழ்க, குருவே துணை.

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீரு சிறக்கவே.

---

* தேனோலை, எண் 13, சூலை 77, பக். 7-13
எண் 22, அக்டோபர் 79, பக்.27-32.

அருள் கிருபையால் ஆதிநந்திகேசன் அனுக்கிரகித்து திருவாய் மலர்ந்தருளினபடிக்கு கிரேதா, திரேதா, துவாபர, கலியுக, கிரேத யுகத்தில் பிரம்மா அர்ச்சனை பண்ணுகையில் பிரம்ம கிரியும், பிரம்ம தீர்த்தமும், பிரம்ம ஈசரும், திரேதா யுகத்தில் விஷ்ணு அர்ச்சனை பண்ணுகையில் விஷ்ணு கிரியும், விஷ்ணு தீர்த்தமும், விஷ்ணு ஈசரும், துவாப்ர யுகத்தில் துர்க்கை அர்ச்சனை பண்ணுகையில் துர்க்கா கிரியும், துர்க்கா தீர்த்தமும், துர்க்கா ஈசரும், கலியுகத்தில் நாக அர்ச்சனை பண்ணுகையில் நாக கிரியும், நாக தீர்த்தமும், நாக ஈசரும் ஆக இப்படி அநேக சதுர்யுகம் பூசை கொண்டருளிய தேவதேவன், தேவசிகாமணி, தேவாதிதேவ சொரூபமான பக்திப்பிரியன், பக்தவச்சலன், பார்வதி பிராண நாயகன், முத்திக்குவித்து, முக்கண்ஈஸ்வரன், அழகியநிர்மலன், பஞ்சவர்ணப் பிரகாசன், திருமுகப் பொலிவும் தெண்டாயுத அடித்தண்டும் உடையவர், சம்புத் தீவின் திராவிட தேசத்தில் தொண்டைமண்டலத்தில், காஞ்சிமாநகரில் திருக்கமலாலயத்தில் அர்த்தபாகம் பெறவேண்டி அருந்தபசு பண்ணுகையில் காட்சி கொடுத்தருளிய கொங்கு மண்டலத்தில்,

தட்சிண கைலாசம் என்கின்ற ஸ்ரீநாகபருவதத்தில் அர்த்தநாரி ஈசுபரடைய தம்பிரான் அவருடைய ஸ்ரீமந் குமாரராகிய விப்பிரப்பிரியன், விசுவமூர்த்தி, சிவபாலன், சரவணபவன், குக்குடத்துவசன், குங்குமவண்ணன், கௌரிதிருமகன், கணபதிசகோதரன், சாலோகரட்சகன், தேவர்சிறை மீட்ட தேவசேனாதிபதி, பத்தரைப் பாராட்டர்க்காக பட்டி இடபத்தைக் காக்க வீரு கொக்கரித்து மாக்களித்த குக்குடத் துவசத்தில் சக்தி வட்டம் ஓட்டி இரட்டித் தவிசர் காவடிக்கும் பிரதாபதுங்கன், வள்ளி தெய்வயானை மனோகரன், சிருஷ்டிக்கும் பிருமாவானவரின் அச்சரசருதியில் திண்டர்ட குட்டைக் குடுமியை நெட்டை வாங்கும் கொண்டிராய துட்டச்சமணரை கழுமிசை வைத்த சுப்ரமணிய சுவாமியார் திருவுளப்படிக்கு,

சுபஸ்ரீமந் மகாமண்டலேசர் ஆன ஆரியகண்டன் மூவாரியகண்டன் முதலாரியகண்டன் மேதினி மீசூரிய கண்டன் சமரகோலாகலன் வீரகஞ்சுகன் மேதினிகாவலன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் ஒரு குடைக் கீழ் உலகம் முழுதாண்ட இராசாதிராச பரமேசுரன் இராசமார்த்தாண்டன் இராச புங்கவன் இராசநாராயணந் இராசகேசரி அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாராயணன் பூர்வ தச்சின பச்சிம உத்திர சத்த சமுத்திராதிபதி எம்மண்டலமும் திரைகொண்டருளிய இராசபிரதாபனார் இராசாகள் தம்பிரான் துலுக்கர்தல விபாடன் துலுக்கர்மோகர்ந் தவித்தான் ஓட்டியர்தல விபாடன் ஓட்டியர் மோகர்ந் தவிர்த்தான் ஈழமும் இலங்கையும் யாட்பாணமும் வங்காள தேசமும் கொண்டருளிய தொண்டைமண்டலம் சோழமண்டலம் கொங்குமண்டலப் பிரதிஷ்டாசாரியான் களத் தேவரெடுத்து போர் கலங்கும் இராயகண்டன்.

இரந்தோம் என நடந்தவர்க்கு இல்லை என்பது அறியாகண்டன் எண்திசாமுகமும் பார்க்கும் இந்திரசுதானன் உபகடராய மகுடவிராயன் அஷ்டதிக்கும் மனோபயங்கரன் அஷ்டலட்சுமி பொருந்திய மாராயன் கோட்டத்து மன்னிய கண்டன் நாறினமாலைபாடிய சங்கீதசாகித்திய வித்தியாவினோதன் கெடிமன்னிய சுரதானன் பூலோக தேவேந்திரன் இரணமுக சத்த வீரன்

சொல்தப்பா ஆரிய கண்டன் புண்டரீக புருஷோத்தமன் சகல சாம்ராட்ச லட்சுமி சீனிவாச பூலோக நாயகன் பூமண்டலத்தீசன் சண்டப்பிரசண்டன் கண்டர்க்கு ஒரு கண்டன் சத்ருக்கள் மனவரசன் சமையகம்பீரன் சமையநாராயணன் சமைய துரோகர்கண்டன் அஷ்டாசேபிரிய சம்பன்னன் சத்தியத்துக்கு அரிச்சந்திரன் அறிவுக்கு அகத்தீசுரன் பொறுமைக்கும் தருமன் மல்லுக்கு வீமன் வில்லுக்கு விசையன் பரிக்கு நகுலன் ஞானத்துக்கு சகாதேவன் கரிமேல் உதையன் கொடைக்கு கர்ணன் படைக்கு இராமன் கோபத்துக்கு காலாக்னி குளிர்ச்சிக்கு சந்திரன் அழகுக்கு மன்மதன் உக்கிரத்துக்கு நரசிங்கம் தேசத்துக்கு மார்த்தாண்டன் அபிமானத்துக்கு அத்திரி ஆண்மைக்கு கார்த்திகேயன் ஆயுசுக்கு பிரமன் சிங்காரத்துக்கு திருமால் போகத்துக்கு இந்திரன் பிரதிக்கினைக்கு பரசுராமன் பிரபைக்கு சூரியன் ஆசாரத்துக்கு வசிட்டன் குலத்துக்கு விக்கிரமாதித்தன் தைரியத்துக்கு சகூர்த்தி கம்பீரத்துக்கு சுமந்திரன் சங்கீதத்துக்கு தும்புரு சாத்திரத்துக்கு வான்மீகி காரியத்துக்கு அனுமான் பிரதாபத்துக்கு தசகண்டன் பிரதானிக்கு சுகியிகுரதன் நீதிக்கு சாணக்கியன் காவியத்துக்குக் காளிதாசன் உசிதத்துக்கு போசராசன் பிறசகடகுகேஷன யுக்திக்கு விசுவாமித்திரன் சாந்திக்கு குமரன் சௌந்தரியத்துக்கு வள்ளேந்திரர் சுத்திக்கு பாகவர் புத்திக்கு விபூஷணர் மதிக்கு சரசுவதி சதிக்கு பாஞ்சாலி சிங்காரத்துக்கு நவகோபன் பிரதாபத்துக்கு இலட்சுமணன் உத்திரத்துக்கு குரு புத்திர தீரத்துக்கு இரசத்துவாரகிரிபாலர் பருவதப் பிரவேசர் சப்த சயத்ரத்துக்கு குலதீபகர்,

இத்தனைக்கும் வல்லவராய் சத்தசாகரமும் ஒரு குடைக்கீழ் ஆண்டு ஒரு நீதியாய் சட்ட அரசாளும் விருப்பாட்சிராயர், வீர்யவசந்தராயர், போசர வீரநரசிங்க தேவமகாரயர், தன்மராயர், பூபதிராயர், அகலங்கதேவ மகாராயர், தெய்வராயர், செகபதிராயர், கஜதூபராயர், கம்பாராயர், பிரபுடதேவ மகாராயர், வல்லாளராயர், சம்மட்டிராயர், கொடுபுலிதேவ மகாராயர், உச்சமல்லிதேவ மகாராயர், விசையராயர், வல்லபராயர், பவநந்தி தேவ மகாராயர், சதாசிவ மகாராயர், சொக்கநாதநாயக்க மகாராயர், கிருஷ்ணதேவ மகாராயர், புசபலவேத மகாராயர், சீரங்கராயர், மல்லிகார்ச்சுனராயர், வேங்கடபதிராயர், இராமதேவ மகாராயர், வீரவிக்கிரமதேவ மகாராயர்

பிரிதிவிராச்சியபாரம் பண்ணி அருளாநின்ற விரலட்சுமி விஜயலட்சுமியின் விசுவாச வீரப்பநாயக்கர், அச்சுதப்ப நாயக்கர், முத்துவீரப்ப நாயக்கர், திருமலை நாயக்கர் ஆனவர்களின் நாளில் கலியுக சகாத்தம் 4513 க்கு செல்லாநின்ற ஆனந்த வருஷம் வைகாசி மாதம் 25 தேதி சுக்கிர வாரம் விசாக நட்சத்திரமும் சஷ்டி திதியும் பெற்ற சுபதினத்தில் ஈரோடு பட்டக்காரரும், ஊத்தலூர் பட்டக்காரரும், தாராபுரம் பட்டக்காரரும் ஆக மூன்று பட்டமும் மேல்கரை 24 நாடும் கீழ்கரை எழுகரைநாடும் வந்து கூடி தட்சிண கைலாசமாகிய நாககிரி சூழ்ந்த திருச்செங்கோட்டுத் தலத்தில் வாசமாய் எழுந்தருளிய பரிமளவல்லி ஆதி கைலாசநாதசுவாமி சன்னதி முன்பாக அர்த்தநாரீசர் கிருபையால் கொங்களாயி அம்மன் கிருபையால் கடாக்ஷம் பெற்ற ஈரோட்டில் இருக்கும் திருநீலகண்ட பக்தர் காளியண்ணன், செட்டியண்ணன், பெரியண்ணன் ஆகிய நாங்கள் மூன்று பேரும் அரையநாட்டு அரையநாட்டுக் கொடிமுடி ஊரிலிருந்து திருச்செங்கோட்டிற்கு வந்த திருநீலகண்ட பக்தராகிய

வேலப்பன், மலையப்பன், காளியக்காள் மூன்று பேருக்கு திருமண காணியாக ஊர்காணிக்கும் கிராமகாணிக்கும் தர்ம சாதன பட்டயம் கொடுத்தபடி.

பட்டயத்து விபரமாவது நாடும் பட்டமும் நம் உறவின்முறை அனைவரும் கூடிய உறவின்முறை தெய்வசபையில் இராசாகள் அரண்மனையார் அதிகாரிகள் மேல்படிதர குருக்கள்மார்கள் செட்டிவர்த்தகர் பல பட்டரையார் அனைவரும் அறிய திருநீலகண்ட சுவாமிகள் திருவுளபடிக்கு கொடுமுடி மகுடலிங்க சன்னதியிலிருந்து வந்த திருவம்பலத்தடி தேவரடியாள் உமையாயிக்கு திருச்செங்கோட்டில் கோவில் சேவகமாகி சுவாமிக்கு நாட்டியம் புரிந்து கொண்டு குடியிருக்கும் போது தன் சொந்த ஊரான கொடுமுடிக்கு போகவர இருக்க அந்தவூர் திருநீலகண்ட பக்தர் பொன்காளியண்ணன் தாயார் பெருங்காளியம்மாள் இவர்கள் மக்களாகிய வேலப்பன் மலையப்பன் இவர்கள் இரண்டுபேர் மாத்திரம் இருக்க மற்ற தாயார் தகப்பனார் அண்ணன் தம்பி வளவுச் சனங்களை அனைவரும் இறந்துபோய் ஒருவர் ஆதரவும் இல்லாது இருப்பதனால் அதை இந்த உமையாயி கண்டு தன் வீட்டுக்குப் பக்கத்தில் குடியிருந்த சனமானபடியினாலே அழைத்துக் கொண்டு திருச்செங்கோட்டிற்கு கூட்டி வந்து அந்த பையன்கள் இரண்டு பேரையும் வளர்த்து பள்ளிக்கூடத்தில் வைத்து படிப்பித்து விவேகசாலி ஆக்கியதற்கும் பிற்பாடு,

உங்கள் சாதித்தொழில் வரவேண்டுமே அதற்கு உங்கள் சாதித் தொழில் உயுக்தியினாலே நம்முடைய வீட்டில் இருக்கிற பானை சட்டி குடம் குருது ஆகியவைகளைப் பார்த்தும் கோவில் வேலை குதிரைகள் முதலாகியதும் பார்த்து பண்ணச் சொல்லி அப்படியே அந்த சேவைகள் எல்லாம் செய்து பழகிக் கொண்டு பதினெட்டு வயது வாலக் குமாரராயிருக்க கலியாணம் பண்ண வேண்டும் என்று நியமிக்கும்போது அந்த உமையாயியை வைப்பாக வைத்திருக்கப்பட்ட மோரூர் நாட்டுக் கவுண்டர் அவர்கள் கேட்டு யோசனை பண்ணுமிடத்தில் அந்த கவுண்டரவர்கள் இந்தப் பிள்ளையாண்டான்களை அழைத்து உங்கள் மாமனாகியவர் யாரென்று கேட்க ஈரோட்டிலே இருக்குறவர்கள் என்று சொல்ல அந்த உமையாயி அந்தக் கவுண்டர் அவர்களையும் கூட்டிக்கொண்டுபோய் ஈரோட்டில் இறங்கிக் கொண்டு அவர்களை அழைத்து இந்த விருத்தங்கள் எல்லாம் சொல்லி பெண் கொடுக்கும்படிக் கேட்டார்கள்.

அதற்கு அவர்கள் அப்படியே ஆகட்டுமென்று எங்கள் சாதித்தொழில் அறிந்திருந்தால் பெண் கொடுக்கிறோம் என்று சொல்லி இந்தப் பிள்ளையாண்டான்கள் வேலை செய்கிறதும் குதிரை யானை சுவாமிகள் முதலாகிய வேலைகள் செய்வதையும் பார்த்து அவர்கள் கையினாலே கொங்களாயி அம்மனுக்கு வெகு வெகு உச்சிதமான உருவுகள் செய்வித்ததும் கண்டு சந்தோஷப்பட்டுகொண்டு உரிமைப்பெண் கொடுப்பதற்கு அவர்கள் வீட்டில் ஒரு பெண் வெள்ளை நிறமாய்ப் பிறந்து இருந்தது. அந்தப் பெண்ணை வெகுநாட்களாய் உறவின் முறையார் திருமணம் செய்து கொள்ளாமல் சும்மா இருந்தது. அந்தப்பெண்ணை கொடுக்கிறோம் என்று சம்மந்தப்பட்டதற்கு உமையாயும் மயில் கவுண்டர் அவர்களும் ஆலோசித்து உரிமை ஆனபடியினலே நீங்கள் இந்த பெண்ணை கொடுத்தாலும் உரிமைக்காரன் கொள்ள வேண்டிய ஞாயம் சரி, அப்படியே

கலியாணம் பண்ணிக் கொள்கிறோம்-இந்த பெண்ணும் மாப்பிள்ளையும் பிழைக்கும் பொருட்டாய் நீங்கள் ஒரு சகாயம் பண்ணவேண்டும். பெண்ணும் கொடுத்து ஊரும் கொடுத்து அனைவரும் காணியாக கொடுக்கவேண்டும் என்று கேட்டார்கள்.

அப்படியே அனைவரும் சந்தோஷமாக கலியாணம் நியமித்து உமையாயி மயில் கவுண்டர் அவர்களும் பத்துநாள்வரைக்குமிருந்து சகலமான செலவும் போட்டு பெண்வீட்டுக்காரன் சொன்னபடிக்கு செலவும் செய்து கலியாணம் முடித்துகொண்டு பெண்ணையும் மாப்பிள்ளைகளையும் பல்லக்கின்மேல் ஏற்றிக் கொண்டு திருச்செங்கோட்டிற்கு வந்து வீதிமெரவினை செய்து சகலமான சனங்களும் அறிய கைலாசநாத சுவாமி சன்னதி முன்பாக இருந்துக்கொண்டு பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் சரிபாதி திருச்செங்கோடு குமரமங்கலம் திருமங்கலம் உஞ்சனை சித்தளந்தூர் சிறுமொலசி அனிமூர் ஆகிய ஏழு கிராமமும் ஊரும் காணியாய் கொடுத்து குடிவைத்து காணிக்கு தர்மசாதனப் பட்டயமாய் எழுதிக் கொடுத்து புத்திரகோத்திர பரியந்தம் பிள்ளை பிள்ளை தலைமுறைக்கும் நீங்கள் அனுபவித்துக்கொண்டு சிரஞ்சீவியாய் மகாராசராய் இருங்கள் என்று சொல்லிக் கொடுத்தார்கள். அந்தப்பட்டயத்தை வாங்கிக்கொண்டு இத்த பெண் மாப்பிள்ளை சொல்படி கேட்டு உமையாயி மயில் கவுண்டர் அவர்கள் கூடச் சொல்லி மாப்பிள்ளையுடைய மாமனார் மூன்று பேருக்கும் நாடும் பட்டமும் இருக்கப்பட்ட உறவின் முறையாருக்கும் வெகுமதி சோமன் துப்பட்டியும் உறவின் முறை விருந்தும் நடத்துவித்து இந்த தருமமான கலியாணத்துக்கும் சாசனத்துக்கும்,

அர்த்தநாரீஸ்வரசுவாமி அறிய, ஈரோட்டு கொங்களாயி அம்மன் அறிய, கல்லும் காடும் பொருந்திய ஆகாச பூமி அறிய, சந்திர சூரியர்கள் அறிய, முப்பத்து முக்கோடி தேவர்கள் அறிய, நாற்பது எண்ணாயிர ரிஷிகள் அறிய, நவகோடி சித்தர் அறிய, சத்தேழு கன்னிகள் அறிய, அருந்ததி அறிய, பஞ்சபாண்டவர்கள் அறிய, துரோபதை அம்மன் அறிய, மதுரை மீனாட்சி அறிய, பவானி வேதநாயகி அம்மன் அறிய, கூடுதுறை காசி கங்கை அறிய, திருப்பதி வெங்கடாசலபதி அறிய, தென்பழனி ஆண்டவர் அறிய, காஞ்சீபுரம் காமாட்சி அம்மன் அறிய, பிரம்ம விஷ்ணு ருத்ர மும்மூர்த்திகள் அறிய, திருநீலகண்டசுவாமிகள் திருப்பாதம் அறிய சத்தியமாய் நாங்கள் மூன்று பேரும் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் மண்ணும் காணியாய் கொடுத்து ஊரும் கொடுத்து பெண்ணும் கொடுத்து காணிக்குச் சாதனப் பட்டயமும் எழுதிக் கொடுத்து இதை பரிபாலனம் பண்ணிக்கொண்டு புத்திர கோத்திர பரியந்தம் நீங்களே அனுப்வித்துக் கொண்டு தீர்க்காயுசாய் நீடூழி காலம் சுகமாய் வாழ்ந்து இருக்க வேண்டியது. சுபம். இது மயில் கவுண்டன் கையெழுத்து.

# 45. சென்மப்புலவன் செப்பேடு

சேலம் மாவட்ட நாமக்கல்லில் வாழவந்தி நாட்டு வேட்கோவர்கள் வாழ்ந்து வருகின்றனர். அவர்களின் தலைவர் பூசாரி எனப்படுவார். அவருடைய கோயில் வீட்டில் இச்செப்புப் பட்டயம் உள்ளது. தலைப்பில் சுவாமி உருவங்கள் கீரப்பட்டுள்ளன.

சென்மப்புலவன் என்னும் வேட்கோவர் குல மோடிவித்தைக்காரர் பெருமைகளை இப்பட்டயம் விளக்குகிறது.

சென்மப்புலவன் என்பவன் வாழவந்தி நாட்டைச் சேர்ந்த புகழ்மிகு வேட்கோவன். மோடி வித்தைகள் செய்வதில் வல்லவன். ஒரு நாள் சிதம்பரத்திலிருந்து இரண்டு மோடி வித்தைக்காரர்கள் வாழவந்தி வருகின்றனர். சென்மப்புலவனிடம் தம் கைவரிசையைக் காட்டித் தோற்றுப் போகின்றனர். சென்மப்புலவன் தன் திறமையைக் காட்டுகிறான். ஊரார் அவன் திறமையை மெச்சிப் பரிசுகள் வழங்கி நிலக்கொடையும் அளிக்கின்றனர்.

பின்னொரு காலத்தில் பவானி கூடுதுறையில் கூடிய 24 நாட்டு வேட்கோவரும் சென்மப்புலவன் வழிவந்த வாழவந்தி நாட்டாரைப் போற்றித் தம் திருமணத்தில் புலவோந்திரம் சொல்வதற்கு ஏற்றுக் கொள்கின்றனர். அதற்கான கட்டணங்களையும் நிர்ணயித்துக் கொள்கின்றனர்.

பல வித்தைகள் காட்டிய சென்மப்புலவன் இறுதியாக இரண்டு கைகளிலும் முறங்களைக் கட்டிக் கொண்டு மலை உச்சியிலிருந்து பறந்து ஒரு குளத்தில் இறங்கினான். இன்றும் அக்குளம் சித்தன் குளம் எனப்படுகிறது. அதன் அருகில் சென்மப்புலவன் பற்றிய கல்வெட்டு உள்ளது.

## மூலம்

சுபாரீயீசுபரி அம்மன் மகாமண்டலேசுபறன் அரியறாயதல விபாடன் பாசக்கி தப்புவறாத கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டநாடு குடாத கண்டன் யெம்மண்டலமும் திறைகொண்டருளிய இறாசாதிறாசன் றாசபரமேசுவரன் றாசமாத்தாண்டன் றாசகெம்பீரன் றாசபுயங்கறன் றாசவசிகரன் றாசபிருதாபகந் றாசவல்லவன் பறறாசருமன் பறமண்டலாதீப கண்டர் நிர்க்கிற கன்னியன் றண பத்திகாழி சகாயன் மணின்டன வைறவ காரிய துரந்தரன் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலகன் துண்டரண்ட கண்டன் துலுக்கர்மோகம் தவிழ்த்தான் ஓட்டிய துலுக்கரை ஓடவென்றவன் ஓட்டியதள விபாடன்,

* செந்தமிழ்ச்செல்வி? — 

* தேனோலை, இதழ் 5, ஞலை 75, பக் 28-32.

சினகர் தெலுங்கர் சாவகர் மதகர் மாழுவர் மறாட்டியர் வொட்டியர் அவுணர் சோனகர் ஆரியர் குச்சலர் கூபகர் கலிங்கர் சிங்களர் வங்களர் கன்னடர் கொங்கணர் கௌசலர் துலுவர் துலுகர் பாஞ்சாலர் கெவுடன் கொங்கர் குனுகர் சேரன் சோழன் பாண்டியன் யீழகர் பீமாங்குச கன்னோசியர் யிதுமுதலான தேசத்தின் பதினெண் பூமியிலுள்ள பேர்களும் வந்து அஞ்சலிகொண்டு சேவிக்கும் நர நாராயணமூர்த்தி நரலோககண்டன் நரலோகசூரியன் சேரன் சோழன் பாண்டியன் வல்லாளராயன் யீழமும் கலிங்கமும் திரைகொண்டு வேட்டையாடி கண்டருளியர் பயப்படாத மகுட மந்தாதி பறாக்கிறம தாட்டிகன் சிங்காசன அதிபதியாகி உத்திர தெக்கண பூர்வ பச்சிம சத்த சமுத்திராதிபன் சச்சமைய சார்ந்த சதுருபாயன் அதிபதி திரிமூர்த்திக் குணாசலயதிரி காலபருவகாரிய துரந்தறன் நிபுணனாகிய பார்முழுதாலும் பரிதி கோத்திரன்,

பொறைக்கு தன்மனைப் போலவும், நெரிக்கி அரிச்சந்திரனைப் போலவும், சிலைக்கி விசயனைப் போலவும், வாள்வுக்கு குபேரனைப் போலவும், வடிவுக்கு அனங்கனைப் போலவும், புகழுக்கு விக்கிரமாதித்தனைப் போலவும், போகத்தி மேக வாகனனைப் போலவும், குடைக்கு கர்ணனைப் போலவும், நீதியில் கிருஷ்ட்ண றாயரைப் போலவும், வுத்தம குணத்தன் ஒருசொல் வாசகன் பத்திரக்காதன் பறசுராமன் யிப்படி பூலோக தேவேந்திரனாகிய பிறவுடை தேவராயர், நிகளங்க றாயர், நீலகண்டறாயர், அச்சுதறாயர், றாமறாயர், றகுபதிறாயர், ஆனைகுந்திறாயர், மனுகிஷ்னறாயர், விருப்பாட்சிறாயர், மல்லிகார்ச்சுனராயர், வெங்கடபதிறாயர், சீறங்க றாயர் அய்யனவர்கள் தாயில்லாத பேர்க்குத் தாயாகவும், தந்தை யில்லாத பேர்க்குத் தந்தையாகவும், அல்லவை யகர்த்தி நல்லவை நடத்தி தேவதாயம் பிரம்மதாயம் மடப்புரம் அன்னசத்திரம் யிப்படி நடத்தி ஆறிலொன்று கடமைகொண்டு பூலோக மெங்கும் ஒருகுடை நிழற்கீழ் நிருத்தி திக்கு விசயம் செய்து றாச்சியபாரம் பண்ணி யருளாநின்ற கலியுக சகார்த்தம் 4230க்கு மேல் செல்லர்நின்ற சவும்மிய வருஷம் ஆவனிமாதம் 15 தேதியில் மங்கல வாரமும் சிங்க லக்கினமும் பெத்த நாளில் பிற வுடை தேவராயரவர்களும் திருமலை நாயக்கர் றாசா அய்யறவர்கள் காரியத்துக்குக் கர்த்தரான றாமசெந்தற நாயக்கர் றாச அய்யனவர்கள் நாளில் திருநீலகண்டன் சென்மப் புலவன் வாழவந்தியில் யெழுதின் பூர்வோத்திறத்தின் விபறம்.

யிற்ற னாள் சென்மப்புலவன் கூடவறயா கவுண்டன் பொத்திய சேர்வகாறன் சுவநாதபிள்ளை தனக்குக் குடியானவர்கள் சகலரும் பனிரண்டு கட்டு கல்லணை காசாவர்த்தகரும் யிருக்குர நாளில் சிதம்பரத்திலிருந்து கூத்தாடி மோடி வித்தைக்காரர் வாழவந்திக்கு வித்தையாட வந்தார்கள். செங்கல் சாவடியில் யிரங்கினார்கள். மோடிவித்தை பாருங்கொலென்று கேட்டார்கள். கவுண்டர்களும் குடிப்படை சகலமான பேரும் ஆடுறதுநிருமென்று சொன்னார்கள். நம்மிட வாழவந்தி நாட்டுக்குல்லாக செம்மோடி சித்தன் சென்மப் புலவன் அவனுட அப்பனை கொண்டு ஆடுங்கொலென்று சொன்னார்கள். அவர்கள் என்னத்தாரென்று கேட்டார்கள். அவன் திருநீலகண்டனென்று சொன்னார்கள். அப்படியானால் சமயல் பண்ணுவதர்க்கு நவபாண்டம் வேணுமென்று சொன்னார்கள். அவன் திறானி பார்த்துவரப் போனார்கள். அந்த வேலையில் பானை பண்ணுகுறான் யிந்த மோடி வித்தைகாரர். அவனைப்பாத்து மனையற

கல்லும் அவன் சூத்தும் பொருதப் பார்த்தார்கள். திரும்பிப் பார்த்து ஆங்காரமிட்டு குலவையிட்டான். சிலயும் கல்லும் வொருபொதி கன்முண்டு பழையபடிக்கிப் போய் விழுந்தது. யிந்த மோடி வித்தைகாரர் பந்தகாலோட சார்ந்திருந்தார்.

அவர்களைப் பின்கட்டுமாறி கட்டினார்ப் போலே பொருந்தப் பார்த்தான். அவர்கள் பார்த்து விடுவிக்க முடியாமல் யெங்கள் மேலே தப்பிதம் சரியென்று சொன்னார்கள். அப்படியாகாது விருது வெண்டயம் டால் நிசார் குதிரை கொடை கீழே வச்சதேயானால் நான் விடிவிச்சு விடுகிறேன் யென்று காரியக்காரர் சேர்வைக்காரர் வேர்விவிகார் முன்பாகச் சொன்னான். அப்படியுன்னுடைய சுருபத்தை அறியோம். யெங்கள் மேலே தப்பிதம் சரியென்று பாதம் பணிந்து கொண்டார்கள். நீங்கள் போங்களென்று சொல்லி அனுப்பிவச்சுப்போட்டு திடீரென்று யெளுந்திருந்து கரு வைறவனைப் பிடித்துக் கொண்டு அது மேலே அறுவதுமார் சங்கிலியையெடுத்து முதுவிலை போட்டுக் கொண்டுபோய் சிங்காரப்பாரை மேலிருந்து கொண்டு முசலை தரிவிச்சு சீட்டெளுதி செம்மோடி சித்தன் வித்தை வருகுறதென்று சீட்டெ களுத்திலே கட்டி முசலை யனுப்பி வச்சான். நாகர் சபைக்குக் கொண்டு போயிற்று. அதை வாசித்துப் பாத்து எதிர்கொண்டு வந்தார்கள். சென்மப் புலவன் பராக்குயென்று சொல்லி வைறவன் முன்னே சங்கிலியெடுத்து முலுங்கென்று சொன்னான். அது முளுங்குச்சு. சூத்திலே பிடிங்கிவிட்டான்.

சுவாமி பறாக்குயென்று கடப்பாரையெடுத்து முன்னே போட்டான். ஆக்ருமாயன்று ஆங்காரமிட்டான். முளுங்குச்சி. அதை சூத்திலே பிடிங்கிவிட்டான். சுவாமி பறாக்குயென்று யேல் கலப்பை யேல் கருவைத்தடி யேல் நுகம் யிதுவெல்லாம் வொன்று மேலொன்று நிருத்தி வூசி முனையிலே நிருத்தி நாவின்மேலே வச்சி நாலு வீதியும் சுத்தி ஆடி வந்தான். சுவாமி பறாக்குயென்று றண்டு முரம் கொண்டு வரச் சொல்லி றண்டு தோலுலயும் கட்டி பறவையாகப் பறந்து பறக்கும்போது தெய்வப் பாழியில் வந்து நின்றான். றாசாக்கள் துறைகள் பார்த்து கவுண்டர்கள் மணியகாரர்கள் சந்தோஷப்பட்டு சித்தன் குளமென்று பேருமிட்டுக் கல்வெட்டுப் போட்டு நஞ்சையில் பத்துமாநிலம் புஞ்சையில் பதினஞ்சுவள்ளக் காடும் குடுத்து மூலைக்கு மூலை கல்வெட்டும் போட்டு சகல வெகுமானமும்பன்னி னாலு வீதி வூர் மெறமனையும் வந்து வாழவந்தி நாட்டுக்குச் செம்மோடி சித்தன் சென்மப் புலவனென்று பேருமிட்டு திருமலை நாயக்கன் காரிய துறந்தரான புன்னமுடனாதர்க்கும் சேர்பாத மரிய சீதேவியம்மன் அரிய தேவாதி தேவர்கள் அரிய நடப்பிவச்சுப் போட்டுப் போனார்கள்.

யிப்படியிருக்கும் நாழயிலே திருனீல கண்டர் யிருவத்திநாலு னாட்டு வுரைமுரையாரும் மூன்று பட்டமும் றாயர் றாசாக்களுக்கு சந்திச்சி கொண்டு சென்மப்புலவன் வுங்களுக்கு பிரபலமாயிருக்குறானே யெங்கள் சாதியில் புலவாந்திரம் நடத்தவேணுமென்று கேட்டார்கள். அதன்பின் வுங்கள் சாதி 24 நாட்டு வுறைமுறையும் அழைப்பியென்று சொல்ல னல்லதென்று சொல்லி அனவோரும் வந்து கூடி றாயறவற்களைக் காணும்போது றாயர் வுங்களை நல்லது சொல்லி திய்யது விலக்க அழைத்தோமென்று சொல்ல அப்போ

வுரைவின்முறையார் அனவோருங்கூடி சென்மப் புலவன் வுங்களுக்கு பிரபலமாயிருக்குறானே யெங்களுக்கு புலவாந்திரம் வேனுமென்று கேல்க்க அப்பொ அனைவரும் சம்மதிச்சி புலவாந்திரம் வூட்டுக்கு வருஷம் ஒன்றுக்குக் கெண்டிறாயர் பணம் 1, கலியாணத்துக்கு மாப்பிள்ளை வீட்டுக்குப் பணம் 2, பாக்கு 120, பெண் வீட்டுக்கு பணம் 2, பாக்கு 120 நெட்ட வெலய்யமும் யிந்தப்படிக்குப் பட்டயமும் வாழவந்தியில் யெழுதி கொடுத்து 24 நாட்டு வுரைமுரையாரும் மூன்று பட்டமும் சம்மதிச்சு பட்டயமும் யெழுதிக் கொடுத்த விபரம்.

அப்போ சென்மப் புலவன் 24 நாட்டு வுரைமுறை மூன்று பட்டக்காரருக்கு விருந்திட்டு நாட்டுக்கு ஒரு துப்படியும் குடுத்து பாக்கு வெத்திலையும் கொடுத்து யிருந்தான். யிந்தப் புலவாந்திரம் பிரபல்யம் பண்ணிவந்தால் புத்திர கோத்திரமாய் வாழ்ந்திருந்தார்கள். யிதுக்கு விகாதம் பண்ணினாலும் நிந்தனை பண்ணினாலும் கெங்கா கோதாவிரி சிந்துனதியிலே யேழு காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலே போகக்கடவேனாகவும். றாயர் றாசாக்கள் கவுண்டர்கள் அரிய நரசிங்கப் பெருமாளுக்கும் சிதேவியம்மனுக்கும் புனைமுடை யெல்லாம் அபிஷேக கட்டளை சென்னது. 50 பொன் படிசிலவு விருந்து சிலவு அபிஷேகம் பண்ணினதும் நாட்டுக்கு பச்சடம் செலவும் மூன்று பட்டத்துக்கும் யிதுவெல்லாம் 50 பொன் நாடு அறிய விபரம். செம்மோடி சித்தன் பிள்ளைகள் மூன்று பேருக்கு யாகம் மூத்தவனுக்கு புலவாந்திரம். நடுவலவன் கூடச்சேரியானுக்கு தோலூர் நாச்சியார் கோவில் பூசாரி. தன் யிளையவன் வூர்மனைச்சல் பண்ணுகுறவன். யிந்த மூன்று பேரும் வாழவந்தி நாட்டிலேயிருந்த விபரம் ஒன்றுக்கொன்று தொறாமல் யிருந்தார்கள்.

24 நாட்டு வுறவின்முறையார் பேர் தெங்கரைநாட்டு திருக்கவேலன், காங்கய நாடு சனிப்பெருமாள், ஆறுனாட்டு றாயப்பன், குருப்பநாட்டு செம்மணன், பூந்துரை நாட்டு செட்டியணன், காவலிக்கநாட்டு வல்லியண்ணன், நல்லூர்க்கநாட்டு நல்லணன், வய்யாபுரினாட்டு சுக்கிறமணியன், அண்டநாட்டுக் குமாரன், தலையநாடு சிறை மீட்டான், தட்டயநாட்டு நஞ்சப்பன், மணநாட்டுக் காளியண்ணன், கிழங்கு நாட்டு வேலப்பன், வாரக்கநாட்டுக் காழியப்பன், வடகரைநாட்டு அறச்சாலை, அரைய நாட்டுத்தீத்தான், காஞ்சிக்கோயில்நாட்டு வாரணவாசி, றாசீபுரம்நாட்டு செல்லப்பன், வெங்கல்நாட்டு பழனியப்பன், வாழவந்திநாட்டு வேலப்பன், பருத்திப் பள்ளிநாட்டு நல்லிசெட்டி, பூவாணிநாட்டு குப்பணன், பொங்கலூர்நாட்டு விருமன், வடுவங்க நாட்டு காசியண்ணன், யிதுகுல் அட்ச புள்ளிகார் திருச்செங்கோடு அர்த்த நாரி, மோரூர் மோதரி, அன்னியூர் றச்சி, சாமகுளம் பெரியண்ன், குயிலை நஞ்சண்ணன்,

யெட்டூரும் நம்ம சாதி திருனீலகண்டர் நாட்டார் 32 கோத்திரமறியவும் குடுத்தது. மேற்படி நாமக்கல் நரசிங்கப் பெருமாள் நாமகிரியம்மன் றச்சிக்கவும். சேராகனூர் கொமறீசர் ரச்சிக்கவும். மனைப்பள்ளி சொக்காள் றச்சிக்கவும். விரவத்தறாய பெருமாள் துணை. சிதேவியம்மன் துணை.

வாழவந்திநாட்டு யெல்லை விபரம், வாழவந்தி, கூடச்சேரி, நாமக்கல், கிரம்பூர், மணப்பள்ளி, பிராந்தகம், நருவலூர், கோதூர், மூஙவனூர், ஆரியூர், தோலூர், சாத்தம்பூர், ஆரியூர்நகரம் யிது வாழவந்தி நாட்டுக்குச் சேற்ந்தது.

# 46. தீர்த்தகிரிச் செப்பேடு

தர்மபுரி மாவட்டம் காவேரிப்பட்டணம் குலால சமூகத்தாரிடம் இச்செப்பேடு உள்ளது. படி எடுத்து அனுப்பியவர் புலவர் புது. போ.வேங்கடராமன் அவர்கள்.*

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் தீர்த்தகிரி மலையில் குலாலர் குலப் பெருமக்களால் திருநீலகண்டர் பெயரில் திருமடம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இது 56 தேசத்திலும் உள்ள திருநீலகண்டர்கள் (குலாலர்கள்) பலர் சேர்ந்து ஏற்படுத்திய மடம். மடத்தில் திருநீலகண்டரையும், இராமலிங்க பண்டாரத்தையும் பிரதிட்டை செய்தனர்.

குலாலர்குலப் பெருமக்கள் வீட்டுக்கு ஒரு பணமும், சாதி மகமையும், குற்றங்களுக்கு விதிக்கப்படும் அபராதப் பணத்தையும் மடத்துக்குக் கொடுத்து வந்தனர்.

## மூலம்

ஸ்ரீமன் மகாமேரு பறுவத கயிலாரயிம் கேதார காசி ஸ்ரீசயிலம் காஞ்சி யிது முதலான நூற்றெட்டுத் தலமுமான தீர்த்தகிரி மகத்துவம் வதிட்டர் வால்மீகர் அகத்தியர் பார்வதி சுப்பிரமணியர் ராமபத்திரர் தேவேந்திரன் அக்கினிபகவான் யெமன் வருணன் அனுமந்து யிவர்களுக்கு முத்தி குடுத்த ஸ்தலம். தீர்த்தாசலம் கருது பஞ்ச பூதகிரி சிவசயிலநாதற் கருது சிதிநுந்தாகூடம் விரவு புனல் கமலம்.

சேமசித்தினிவாசம் நிசந்தீர்மேல் வியாதினாசம் துரித்தாந்த பரராம செந்பதாம் ராமேட்டம் சுவாமி சிங்கம் மருவு மிந்த பதிமூனு பேருமந்த மலைத்திமையோர் வகுத்தவாறே.

யிப்பவும் விசேஷ தலத்தில் பூறுவம் ஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரிராய விபாடன் பாஷைக்கு தப்புவராய கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு கொடாதான் துலுக்கர்தள விபாடன் துலுக்கர்மோகந் தவிழ்த்தான் ஓட்டியார் துலுக்கரை ஓட வென்றவன் அஷ்ட்ட திசி முட்ட வாழு மன்னவன் ரெட்டம் பதினெட்டும் கொண்ட கிறுபாகரன் விடமடம் பட்டண மாய வியாகம் செய்தவன்

* தேனோலை 29, சூலை 1981, பக்.10-11.

யீழந்திறை கொண்ட வீர ராசாக்கள் தம்பிரான் வேளந் தனக்குதையன் மெச்சுபரி நகுலன் தவநேயுள்ளவன் சத்தியவாசகன் சிவநெறி தழைக்க திருநீறிட்டவன் மனயா வேட்டையாடு மணவாளன் யினிலந்தன்னில் லெண்ணும் புகழ்கொண்டவன் பகைத்தவர் வேங்கை மிகைத்தவர் சிங்கம் கரிபடை தாங்கும் தான விநோதன். பொருபடை தாங்கும் போரினில் வீரன் குருலிங்க சங்கம மென்கின்ற மூன்று தன்மலுண்மை யறிந்தவன்.

யிராசாதிராச ராசபரமேசுவரன் ராசமார்த்தாண்டன் ராசகேசரி ராசபுசங்கன் ராசவல்லவன் ராசதேவடாசல ராசகோலாகலன் ராசகம்பீர பிறதாபன் அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாறாயனன் மதியாத மன்னர்தம் மகுடஞ் சிதற பரகூரை கைகொள்ளும் பரிமேல் நகுலன் கரிமே லுதையன். ஒருகுடைக்கீ ளுலகமுழுதாண்டு லாரிலொன்று கடமை கொண்டு அல்லவை கடிந்து நல்லவை நாடி மந்திரகிரி பறுவத மெல்லையாகவும் லெஷ்ணதிக்கும் பொதிய மாமலை யெல்லையாகவும்,

பூறுவம் மல்லிகாற்சுனராயர், விருப்பாக்ஷிராயர், பிறபுடதேவ மகாராயர், வீரவசந்தர்ராயர், அச்சுதராயர், கிஷ்ணராயர், ராமதேவராயர், பிறபுடராயர் சகோதரமாந வீரவசந்தராயர், சதாசிவராயர், ராமராயர், எறிதிம்மராயர், வெங்கடபதிராயர், சீரங்கராயர் யிவர்களுக்குச் செல்லாநின்ற கலியுக சகார்த்தம் னாலாயிரத்து அஞ்ஞூற்று தொண்ணூராண்டுக்கு மேல் செல்லாநின்ற விசுவாவசு வருஷம் ஆவணி மாதம் 8 தேதி செவ்வாய்கிழமை னாள் விசேஷமன் தீற்தகிரி யீசுரர் சன்னதியில் திருநீலகண்டர் மடதற்மம் யுள்னாடு செகதேவராயர் சீர்மை முதல் அன்பத்தாறு தேசத்து திருநீலகண்டரும் மடதற்ம முண்டுபண்ணி ராமலிங்க பண்டாரத்தையும் பிறதிஷ்டை பண்ணி மடத்துக்குவற்த்தனை ஆணை பூறுவமாக ஏற்பிறிச்ச விவரம்.

விட்டுக்கு ஒரு பணமும் சாதிமகமை அவதாரமும் குடுத்து நடப்பிச்சு வரவும். இத்தற்மத்தை பரிபாலம் பண்ணினபேர்கள் ரிஷிகள் பெற்ற பேறும் தேவர் சுப்பிரமணியர் பெற்ற பேறும் மாற்க்கண்டனுக்கு யுண்டான ஆயிசும் வுண்டாகவும். தீற்தகிரியீசுவரர் வடிவம்மை துணை.

யிந்த தற்மத்தை யாதாமொருவர் அகிதம் பண்ணின்பேர் கெங்கைக் கரையிலே காராம்பசுவை கொன்ற பாவமும் அசுவத்தி பிறமத்தி கோவத்தி சிசுவத்தி பண்ணின பாவத்திலே போக கடவோராகவும்.

யிந்த தற்மத்தை பரிபாலனம் பண்ணினபேர் நீடூழி காலம் வாழவும். ஆறுமுக துணை.

குடுத்தவன் சாதிக்குள்ளும். குடாதவன் சாதிக்குப் பிறம்பும்.

# 47. மீனாட்சி செப்பேடு

தர்மபுரி மாவட்டம் காவேரிப்பட்டணம் குலாலர் சமூகத்தாரிடம் இப்பட்டயம் உள்ளது. படி எடுத்து அனுப்பியவர் புலவர் புது.போ.வேங்கடராமன் அவர்கள்.*

பிரபுடதேவ மகாராயர் காலத்தில் வேட்கோவர்களுக்குப் பொம்மை செய்யவும், மட்பாண்டங்கள் வனையவும் வரியில்லை என்று அறிவிக்கப்பட்டிருந்தது.

அது தெரியாமல் மயிலாப்பூரிலிருந்து வரி வசூலிக்க வந்த வீரமுட்டி வேட்கோவர் சோலை செட்டி வீட்டில் இரண்டு பணம் மனைவரியும், மூன்று வேளை விருந்தும் கேட்டான். சோலைசெட்டி மறுக்கவே வீரமுட்டி சோலைசெட்டி வீட்டில் ரணபாவாடம் போட்டான். மாடக்கல் சோலைசெட்டியின் மகள் மீனாட்சியின் சேவல் ரணபாவாடத்தைக் கடக்கவே வெட்டப்படுகிறது. சேவலை வெட்டியதற்காக ரணபர்வாடமிட்டு வரிவசூலிப்பவன் மீனாட்சியிடம் கொடுக்க வேண்டிய இரண்டு பணத்தில் ஒருபணத்தைக் கழித்துக் கொள்ளச் சொல்லுகிறான்.

மீனாட்சி சேவலை எழுப்பினால் வரி தந்து விருந்திட்டுப் புதுவரி தருவதாகக் கூறுகிறாள். வீரமுட்டிகளால் சேவலை எழுப்ப முடியவில்லை. மீனாட்சி சேவலை எழுப்பி வரி நீக்கம் பெற்று வீரமுட்டிகளின் பல விருதுகளைப் பெறுகின்றாள்.

சாலிவாகனன் ஆகிய குலாலர்கட்கும், பட்டன், புலவர், கூத்தாடி, 'தொண்டன் ஆகியோருக்கும் வரியில்லை என்று நிர்ணயம் செய்யப்படுகிறது.

## மூலம்

**சிவமயம் உ**

சாயித்திய சாலிவாகன வருஷம் சகாதா 4475 மேல் ஸ்ரீ வீரபிறதாபர் வீரப்பிறதாப மகாதேவறாயர் உத்திர தெக்ஷணம் சதிரம் னாலு சமுத்திரம் அன்பத்தாறு தேசமும் இருபத்து னாலு நாடும் கொங்கு தாராபுர முதலாகிய சாலிவாகனர் திருநீலகண்ட வற்கம்,

---

* தேனோலை 29, சூலை 1981, பக். 12-15.

கிறேதா திறேதா துவாபரா கலியுகம் ஆக னாலு யுகத்திலும் ராச்சியபாரம் பண்ணும் சாலிவாகன வற்கம். யிவர்களிட பிறுதாங்ளி எக்கியத்துக் குள்பட்டவர், முப்புரி நூலுந் தெற்பையு முள்ளவர், வீமனைப் பணிகொண்டவர், தொண்டுக்குத் தொழிளிலது குடாதவர், ஆவுடையப்பர் சம்மந்தவர், தில்லையம்பலத்தில் எளிமை பெற்றவர், அறுபத்திமூவர் சமூகத்திலிருப்பவர், அன்புடன் நவபாண்டம் விளங்குவார்,

கரிகாற்சோழனை வளர்த்த பரிபாலகர் இப்படி னாலு சமுத்திர அன்பத்தாறு தேசமும் இருவத்து னாலு ராச்சியபாரம் பண்ணு மரசர்களுக்கு சொன்ன யூழியம் நவபாண்டம் விளங்கிகொண்டு சாலிவாகன வற்க திருநீலகண்டர் ராசாக்களண்டே யிருக்குறவேளையில் ராசாக்கள் சாலிவாகன வற்கத்தார் னாலு சமுத்திரமும் அன்பத்தாறு தேசமும் யிருவத்து நாலு நாடு மட்டிலும்,

அரமனை வரிவட்டம் சுங்கம் பேரம்மு மனவரி புகவரி பட்டன் புலவர் கூத்தாடி சாலிவாகனர் வங்கிஷத்தில் விரப்பிறபிட மகாதேவராயர் வேளயில் சாலிவாகன வங்கிஷத்தாருக்கு யிந்த வரிகளை வேண்டாமென்று கட்டு பண்ணியிருக்கிற னாளையிலே,

.மயிலாபுரி பட்டணத்திலிருந்து சாலிவாகன வங்கிஷத்து வீரமுட்டிகள் சாலிவாகனத்தார் வீட்டுக்கு ரண்டு பணமும் மூணு னேரத்து விருந்தும் உண்டு என்று கெண்டிக் கோட்டையில் திம்மிசெட்டி, மல்லிசெட்டி, வீரிசெட்டி, ரங்கிசெட்டி, பங்காருசெட்டி, திருமலை, பொக்கிஷம் ஆதிசெட்டி, உக்கிறாணம் ஆகவிப்படி மாடக்கல் சோலைசெட்டி வளவில் வீரமுஷ்டிகள் மயிலாப்புரி பட்டணத்திலிருந்து வந்து சோலைசெட்டி வாசல் முன்னே வரி நீ குடு யெண்ணு வீட்டுக்கு ரண்டு பணமும் மூணு நேரத்து விருந்தும் சோலைசெட்டியை வீரமுஷ்டிகள் டவண்டை மல்லாரி வெள்ளைப் பூச்சக்கிறக்கொடை கண்டை சேகண்ட முழங்க யிப்படி யிருக்குர னாளில்,

சோலைசெட்டிக்காரன் வரி குடுக்கரதில்லை யெண்ணான். நீ குடாமல் போனால் னானுன்னுடைய வாசல்லே ரணபாவாடம் பண்ணுவேன்னென்னு சோலைசெட்டி வாசலிலே ஒரு வீரமுஷ்டியை வாசப்படி மேலே அவனைப் படுக்கவைச்சு ரணபாவாடம் பண்ணுவேநென்று ஆயிதபாணமெடுத்து வயித்து மேலே வைச்சுக் கொண்டிருக்கர வேளையிலே சோலைசெட்டி மகளொருத்தி கல்லியாணமாகாத பொண்ணு வீட்டில் வீரமுட்டிகள் வாசப்படியிலே யிப்படிப் போராடிக்கொண்டு யிருக்கும்போது சோலைசெட்டி வாசல்க் கோளி வெள்ளைக் கோழிச்சாவல் மேஞ்சிகொண்டு வீட்டுக்குப் போகவேணுமெண்ணு போகையிலே வீரமுட்டியாகிரவன் தன்னுடைய ஆயுதத்தாலே எட்டி கோளிச்சாவலை வீசினான். அந்தச்சாவல் இரு துண்டமாகப் போச்சுது.

அதின் பிறகு சோலைசெட்டி மகள் மீனாட்சியம்மா ளாகுரவள் அடா வீரமுஷ்ட்டி என்னை வெட்டமாட்டாமல் என்னுடைய கோளி சாவலை வெட்டினியே யென்று மீனாட்சி அம்மாள் கேள்க்குரபோது நீ குடுக்குர வரிப்பணம்

ரண்டு உண்டு. அதில் ஒரு பணம் சாட்டிக்கோ வென்று வீரமுஷ்ட்டி ஆகுரவன் சொன்னான்.

அதின்பின்பு என்னுடைய சாவலையும் உன்னுடைய கையினாலே கொன்று விலை வாங்கிக்கோவென்று சொன்னாயே வீரமுஷ்ட்டி, ஆனால் என்னுடைய சாவலை பாவாடம் போட்டாயே அந்தப் பாவாடத்தை நீங்கள் எழுப்பினே ஆனால் உங்களுடைய வரியுங்குடுத்து அதிக வரி யுண்டு பண்ணித் தாரோமென்று மீனாட்சிஅம்மாள் ஆக்கரிச்சுக் கேள்க்கும்போது வீரமுஷ்ட்டிகள் ஸ்ரீ பிரவிடைதேவறாயறு பாதமரிய தக்கிதாக வீரமுஷ்ட்டிகள் கோளி பாவாடத்துக்கு வீரமுஷ்ட்டிகள் ரண்டு பாவாடம் எதுப்பாவாடம் போட்டு ஆக்கிரச்சு எளுப்பும்போது பாவாடம் பூமியைக் கடிச்சுக் கொண்டு பாவாடம் எளுப்புறத்துக்கு இல்லாமல் எப்படியென்று வீரமுஷ்ட்டிகள் மனது கலங்கி நிற்கும் போதில் மீனாட்சியம்மனும் யாகுரவள் அகோ வீரமுஷ்ட்டிகளே பாவாடம் எளுப்புறதுக்கு யில்லையென்று கேள்க்கும்போது பாவாடம் திரிம்பியும் வீரமுஷ்ட்டிகள் பாவாடம் எளுப்புறோமென்று பாசை பந்தயங்கள் கூரி ஸ்ரீ பிரபட தேவறாயர் பாதமரிய,

மீனாட்சியம்மனுக்கும் வீரமுஷ்ட்டிக்கும் பாசை பந்தயங்களாகி வீரமுஷ்ட்டி எளுப்புனதேயானால் வரியும் குடுத்து அதிகவரி யுண்டுபண்ணி, ஆணைமேல் மிரவணை பண்ணி சாலிவாகன வங்கிசத்தில் அதிகவரி யுண்டுபண்ணித் தாரோமென்று மீனாட்சியம்மா ளாகுரவள் சொல்ல, வீரமுஷ்ட்டி எளுப்ப மாட்டாமல் போனபடியினாலே மீனாட்சியம்மன் னான் யெளுப்புறேனென்று கேளுக்கும்போது நீ பெண்பிள்ளை எளுப்பினதே யானால் என்னுட பிருதுமு மல்லரி அப்படிய் கொத்த எச்சான பிருதுகள் எல்லாங் குடுத்து சாலிவாகன வங்கிசத்துக்கு வீரமுஷ்ட்டி வரியு விட்டு மூணு நேரத்து விறுந்து எளந்து போக கடவேனாகவும் என்று வீரமுஷ்ட்டிகள் மீனாட்சியம்மனும் பாசை பந்தையங்கள் கூரி மீனாட்சியம்மன் ஆக்கரிச்சி திருநீலகண்டர் பாதமரிய சிவகாமி அம்மன் அனுக்கிரக வுண்டாகவும் சாலிவாகன வங்கிஷத்துக்கு கீர்த்தி யுண்டாகவும் யென்று புலம்பி மீனாட்சியம்மன் ஆக்கரிச்சு தீர்த்தம் பாவாடத்தின் மேல் தீர்ந்தந் தெளிக்க,

எவ்வறன சுரூபமாக எழுந்திருந்தபடியினாலே வீரமுஷ்ட்டிகள் தங்களுடைய விருது முஷ்ட்டிகளெல்லாம் குடுத்து சாலிவாகனன் வங்கிஷத்துக்கு வீரமுஷ்ட்டிகளென நாலு சமுத்திர அன்பத்தாறு தேசமும் யிருவத்தினாலு னாட்டுக்கும் வீரமுஷ்ட்டிகள் வரியில்லையென்று வீரமுஷ்ட்டிகள் தாங்களாக சாலிவாகன வங்கிஷத்தாருக்கு ராதவீரமுஷ்ட்டி, பத்திரவீரமுஷ்ட்டி, லிங்கப்பமுஷ்ட்டி இவர்கள் மூணு பேரும் இனிமேல் சாலிவாகன வங்கிஷத்தாருக்கு வீரமுஷ்ட்டிகளுக்கு வரிவட்டி வேண்டாமென்று தாங்கள் தானே ஸ்ரீ பிறவிடதேவறாயர் பாதமரிய ராமலிங்கசாமி பாதமரிய சஞ்சீவிராயர் பாதமரிய வீரமுஷ்ட்டிகள் எழுதி சாலிவாகன வங்கிஷத்தாருக்கு கோடி காலம் வரிவட்டி இல்லை யென்று எழுதிக் குடுத்த பட்டையம்.

யிதுக்கு சாஷ்சி பெனுகொண்டை பட்டக்கார மல்லிசெட்டி, கோளார் திம்மிசெட்டி, ஓசூரு பட்டக்கார கெத்திசெட்டி, கொங்கு தாராபுரம் சகிதமாக

கொண்டிக்கோட்டை திம்மிசெட்டி, ஆதிவேணி பயிசெட்டி, மோதூரு பயிசெட்டி, முளுவாசல் ராயப்பசெட்டி, றாயதுற்கம் ஒன்னப்பசெட்டி, ரத்னகிரி பயிசெட்டி தேவபுர மதிசெட்டி மத்துமுண்டாகிய கொங்கு தாராபுரம் உறவின்முறையார் சயிதமாக வீரமுஷ்ட்டிகளுக்கு நாலு சமுத்திரம் அன்பத்தாறு தேசத்திலும் யிருவத்து னாலு னாட்டிலும் வீரமுஷ்ட்டிகளுக்கு வரிவட்டி யில்லையென்று ராயர் சமூகமறிய சாலிவாகன வங்கிஷத்தாருக்கு சுங்கம் பேரம்மு வரி வட்டி பட்டன் புலவர்கள் கூத்தாடி தொம்பன் யிவர்கள் முதலாகிய வற்தனைக்காரருக்கும் வரியில்லை யென்று தீர்த்தபடி.

யாதாமொருவன் நம் சாதியில் வரிவட்டமென்று வந்தவர்களுக்கு நவபாண்டம் விளங்கி குடுக்கத் தக்கதாகும். யிப்படி பூமி யாகாச மரிய சந்திர சூரியர் தீத்தபடி. யிதிலே யிப்படி யாதாமொருவன் வரிவட்டங் குடுத்ததேயானால் சாதிக்கு ஆகாமல் நசிச்சுப் போகக் கடவோனாகவும். யிந்தப் பட்டயத்தை யாதாமொருவன் நிந்திச்சவன் காராம்பசுவை கொன்றபாவத்திலே போகக் கடவோனாகவும். திருநீலகண்ட சுவாமியார் லஷ்சிக்கவும். அம்மன் லஷ்சிக்கவும். சிவமயம். குருகடாஷ்சம் வுண்டாகவும். ஸ்ரீ ஸ்ரீ உ.

# 48. பழனி திருநீலகண்டர்மடத்துச் செப்பேடு

இப்பட்டயத்தை மதுரை மாவட்ட நீதிபதி அவர்கள் மூலம் பெற்று மைய அரசின் தொல்பொருள் அளவீட்டுத்துறையின் கல்வெட்டுப் பிரிவினர் படி எடுத்துள்ளனர்.*

6 பட்டம், 56 தேசம், 24 நாட்டுக்குரிய திருநீலகண்டர்கள் ஆகிய வேட்கோவர்கள் ஒன்றாகக் கூடிப் பழனிமலையில் தேர் செல்லும் திருவீதியில் அய்யனார் கோயில் அருகே தங்களுக்கென்று மடமாலயம் ஒன்று கட்டியதை இச்செப்பேடு விளக்குகிறது. கலியுகம் சாலிவாகனம் இரண்டும் பொருந்தி வரவில்லை.

பழனி இடும்ப உடையானுக்கு மடம் ஏற்படுத்தியதற்குச் சாசனம் எழுதித் தருகின்றனர். மடத்தில் அன்னதானம் செய்ய ஏற்பாடு செய்யப் படுகிறது. திருநீலகண்டர்கள் அனைவரும் வீட்டுக்கொரு பணமும், திருமண வரியும் எழுதிங்கள் சீர் வரியும் மடத்திற்குக் கொடுக்க ஒப்புக்கொண்டனர். வேட்கோவர் குலப்பெருமை விரிவாகப் பேசுப்படுகிறது.

பழனியில் உள்ள பாளையக்காரர் சின்னோப நாயக்கர் உட்படப் பல சமூகத்தவர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர்.

காலக்குறிபபுக்கள் பொருந்தி வரவில்லை. திருமலை நாயக்கர் காலத்தில் (1623-1659) இம்மடம் ஏற்படுத்தப்பட்டதென்ச் செப்பேட்டில் கூறப்பட்டுள்ள மதுரை நாயக்கர் வமிசாவளியால் தெரிகிறது.

## மூலம்

வையய நீடுக மாமழை மன்னுக
மெய்வி விரும்பிய அம்பற் விளங்குக
சைய்வ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிரக்கவே

---

* ARE (A) 15 of 1911.

கருணைபொழி திருமுகங்க ளாறும் வாழி
கரகமல பன்னிருகை வேலும் வாழி
யிருசரண மென்தலைமேல் நாளு மோங்க
யிந்திரவிக் கப்பாலு மினிது வாழி
அறும்பரவி யமரர்சிறை மீட்டே யாண்ட
ஆறிரண்டு திருநயனத் தளகும் வாழி
மறுவணியும் கடப்பந்தார் மார்பு வாழி
மயில்பரிசே வல்கொடியும் வாழி வாழி!

அடைந்தவற் துணைவா வாழி
அடையலற்க் கரியாய் வாழி
மடைந்தைதன் மைந்தா வாழி
மாதவன் மருகா வாழி
திடம்புனை வேலா வாழி
தேவார ருயிரே வாழி
படந்தபோ ரசுரற் கூற்றாம்
பரமனே வாழி வாழி!

நன்னெறி முகமும் வாழி
நல்லென முடியும் வாழி
பன்னிறு கறமும் வாழி
பாதபங் கையமும் வாழி
கன்னிமா ரெளுவற் வாழி
கதிர்மதி மன்னி வாழி
என்னிறு வினைய கற்று
மிளையவன் வாழி வாழி!

ஸ்ரீபுன்னத்தன் பரமேசுற குமாரன். அமரற் சிறைமீட்ட தேவர்கள் தேவன். தெய்வலோக நாயக அகிலாண்ட கோடி பிறமாண்ட நாயகன். கோன்தனைச் சரசமாடி குட்டிக் குடியியை நெட்டி போக்கி சொல்லிலும் பதம் கொடுத்த குமார கெம்பீரன். கொக்கறா வறையாளி கோட்ட றாவுத்தன். வக்கிறமிடு அசுரேசுர வட்ட நிரொப்ப உக்கிற மயிலேறிவரும் உத்தண்ட தீரன். பக்கறைப் பகட்டறக்கர் பட்டிடப் படுகளத்தில் கொக்கரித்துடல் கிழித்த குக்குடக்கொடிக் குமாரன். கூளி கொட்டக் கூகை பிசாகுகள் தோற்க ளித்தத் தாளமொத்த சதுரன். மாள்வதற்கு வடவனல் போலவெழுந்த வடிவேலெடுத்த சேவல்த்திரன். அசுறர் குலைகாறன். அமராபதி காவலன். தோடுசெறி காதினன். தோகைமயில் வாகனன். சீதறன் திருமருகன். சிவசுப்பிரமணியன். சண்டப்பிறசண்டன். அண்டற்கொரு கண்டன். வண்டற்கொரு முண்டன். ஆறுவறுநூறு நீறாரெனும்பள்ளி அஷ்டமங்கலம் ஆவினங்குடி யிங்கு பழனி வைகாவூர் நாட்டுக்கதிபன்.

நான்மறை யோங்கும் கோகநாகமரை வெட்டிட்ட தேவர்கள் சேனாபதி. செறயின வெண்மறை பரியை வீசிடும் மயூரக் கலாபன். ளாறதன் வந்து

வேள்வியில்ப் பிறந்து திருபுரில் எட்டில் பிருமதிளுடையோன். அகஷ்த்தியர்க்கு செந்தமிள்ப் பனுவலும் ஆறெழுத் துண்மையும் ஓதிவைத்தவன். வாணிக்கு வாக்கு வரமுங் கொடுத்தவன். மலைமகளுக்கு யின்பமும் வரமுங் கொடுத்தவன். தேனினுக் கின்பமும் சிறப்பா யளித்தவன். சூரியன் பதவி தோன்ற அளித்தவன். பன்றிமலை பூம்பரை பழனிமலைக் கவரன்ன யிடும்ப மலையென மலை யீறாரெனும் பள்ளியிலங்கு வைகாவூர் பழனிமலை வேலாயுத சுவாமியார் திருவிளப்படிக்குத் திருப்பரங்குன்றம், சீரலைவாயி, திருவாவினங்குடி, திருயேறகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகப் பதியாகிய ஆறு தலத்திலும் பிறப்பதியாகிய தில்லை, திருவேங்கடம், திருக்காளஷ்த்தி, திரிகாஞ்சிபுரம் யிப்படி பனிரெண்டு தலத்திலும் எளுந்தருளி மகாபூசை கொண்டருளானின்ற ஸ்ரீவீரபழனி வேலாயுத சுவாமியாருக்கு உகந்த பத்திப் பிரியராகிய,

சுகஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரியதள விபாடன் பாஷைக்கு தப்புவராய கண்டன் மூவராயர் கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் பாண்டிமண்டல பிறதிட்டனாசாரியன் சோழமண்டல பிறதிஷ்ட்டபனாசாரியார் சேறமண்டல பிறதிட்டனாசாரியாற் ஈழமும் கொங்கும் யாப்பாணமும் எம்மண்டலமுந் திரை கொண்டருளிய ராசாதிராசந் ராசமாத்தாண்டன் ராசபறமேசுவரன் வடமன்னர் மகுடாலய ராசதேவேந்திரன் துலுக்கர்தள விபாடன் துலுக்கர்மோகந் தவிள்த்தான் ஒட்டியர்தள விபாடன் ஒட்டியர்மோகந் தவிள்த்தான் தறணி விழங்கு கட்டாரிச் சாளுவன் அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாறாயணன் வங்களர் சிங்களர் சீனகர் சோனகர் பற்பறர் ஒட்டியர் மதங்கர் மளுவர் மறவர் மலையாழர் மலையர் கொங்கர் கலிங்கற் கர்னாடற் துலுக்கர் மிறாட்டியர் எண்ணைப்பட்ட பதினெண்பூமியும் யேளுதீ முடைத்தாகிய நாகலோகம் பெருந்தீவில் நறபதியாகிய பூலோக புறந்தரன் பூறுவ தெட்சிண பச்சிம உத்திர சத்த சமுத்திராபதி,

யெளுவத்தேளு பாளையக்காறறையும் திறைகொண்டு துக்காணியமும் திறைகொண்டு துலையாக் கம்பமும் போட்டு துஷ்ட்ட நிக்கறக சிஷ்ட்டற் பரிபாலினம் செய்து ஸ்ரீவிசையநகரத்தில் பிறதாப யீசுபரனாகிய வீர சிங்காதனத்தில். எழுந்தருளிய ஸ்ரீமகாராயராகிய பிறபுடமகா தேவராயர், புட்க்கற றாயர், அரிசிங்கு சாம்புவராயர், சயிலேசுவராயர், டில்லீசுபர வீரவசந்தராயர், மல்லிகாற்சுனராயற், ஆனகொந்தி வேங்கிடபதிராயர், பிறதாப ருத்திரராயர் யிவர்கள்,

ஓதியுணர்ந்து உலகமுளுது ஒரு குடைக்கீழ் ஆண்டு சந்ததம் நடக்கத் தனிமணிகட்டி பதினெட்டாயுதம் தொழில் திரையேத்தி அல்லவை கடிந்து நல்லவை நாடி ஆறிலொன்று கடமை கொண்டு அரத்துக்கு தற்மரைப் போலவும் பொருமைக்கிப் பூமாதேவியைப் போலவும் மல்லுக்கு விசையனைப் போலவும் சொல்லுக்கு அரிச்சந்திரனைப் போலவும் துஷ்ட்டற் நிக்கிறகம் சிஷ்ட்டற் பரிபாலின செய்து செங்கோல் செலுத்திய னாளில், ராயர் ராணுவ காரியத்துக் கத்தரான உச்சித போசன் கட்சியிலளிபன் கொட்டியம் நாகமநாயக்கர், குமார கிஷ்ணப்ப னாயக்கர். கஸ்தூரி ரெங்கப்பனாயக்கர், ரொங்க கிஷ்ண

முத்துவீரப்பனாயக்கர், விசுவநாதனாயக்கர், கிஷ்ணப்பனாயக்கர், வீரப்பனாயக்கர், திருமலைனாயக்கர் யிவர்கள் நான்மாடக்கூடல் மதுரை மாநகரில் ஒதியுணர்ந்து உலகமுளுதும் ஆளுவதற்கு நீதிசாரம் நெரியது கற்றோன் முத்தமிள் விநோதன் முத்தமிளாகரன் அரிவுக்கு அகஸ்தியன் அளகுக்கு அனங்கன் அறத்துக்குத் தற்மனைப் போல யிப்படி யென்னப்படாநின்ற புகள்பூண்டு யின்சொல்லா லினிதளித்து முன்னூல் மொழியும்படிக்கு,

அருள் பெறுக அன்பு கூர்ந்து ஆகமசாலையும் அந்தணர் வேள்வியும் வேத ஒலியும் விழாவறா வீதியும் செயல் நெரியும் தபோதனர் மடங்களும் தற்மசத்திரமும் யிப்படிக் கொற்ற தற்மங்களுக் குள்ளாயி நடந்து வருகுற கலியுக சகாத்தம் உ 4765 உ சாலியவாகன சகாற்த்தம் உ 1438 மேல் செல்லாநின்ற பிலவங்க வருஷம் தையி மாதம் 9 தேதி சுக்கிரவாரமும் பூச நஷ்செத்திரமும் சுபநாமயோகமும் பெற்ற நாளில் திருநீலகண்டர் பெருமை சிவனருளாலே அரியும் அயனும் அருந்தவோனும் பெரியவனென்னப் பேர்விளங்க எத்தொலி தன்னிலு மினிதினிதென்ன முத்தொழில் தன்னிலும் முதன்மையென் றுரைக்க அத்தனார் தாமும் அருளது பரிய உத்தமியாரும் உண்மையென் றுரைக்க பறாபறம் புரிந்து பாக்கியம் பெறவே திரமதுவாக சேம மிக்க வேண்டி சத்தியலோகம் தன்னிலே தானும் அத்தி முகனை அலங்கரித் தேத்தினால் காரணமாகக் கடவுளர் விரும்பி பூரணமாகப் புகழ்ந்துதா னேத்தி நாறண னான்முகம் நான்மரை முளங்க நாறதர் தாமும் நயம்பெற வுரைத்து பாருல கத்திலும் பங்கய னென்னப் பேர்பெத்த தொழிலை விளங்கச் செய்ய காதலம் புரிந்து கட்டுரை யென்றார். நவகுண்ட மிட்டு நன்று நன்று நன்றென்ன தவமது புரிய தானிது செய்தார். சமித்துடன் தெற்ப்பை தானிது தோன்றா நித்திய கருமம் நிலைபெற செயிது ஆகமப்படியே அறனார் தாமும் பாகசா தனமும் பங்கயத்தோனும் குசையை எடுத்து குண்டந் தன்னில் திகைப்பெறக் காலா லனைவிறும் வீச சென்மியு மென்றார்.

கரகமும் திகிரியும் கன்றோமானும் வறம்பெறு சூலமும் வளர்பிறை யறவமணிந்து குண்டலங் குளையும் குடுமிவெண் ணீறும் தெண்டு சுமண்டல சீர்பெறத் தோன்றி தண்டாமரையும் சந்தனக் குரியும் பண்டு வேதம் பலகையும் காமிக்கா பிறன்ம் மிகவுமன் சாத்தி ஆக்காசவாணி அன்னலை வணங்கி மாயவன் றன்னை வந்தடி பணிந்துத் தாயிநீ யென்னத் தந்தை சங்கரனென வேதியர் குலத்தில் விளக்கம் பெற்றாய். நீதி முரைமை நிலைபெறவாக பாண்டம் சமைக்கப் பாருலகத்தில் தாண்டவம் தாமும் தயவுடன் கூர்ந்து சந்திரவட்டம் சக்கிராயுதம் மந்திரி கிரியும் வாரிமாஇ யிந்த உலகத்தை யிவன்கையி லீந்து பிறிதவினாலே பெருமைபெற்றருளி மறுமொழி வேரில்லை வாற்த்தையீ தென்றார். ஒருவனாலிதுவும் ஒவ்வாதென்றார். கருணை பெறவே கன்னலிய வேண்டி குசையை யெடுத்து கொடுங்கனலிட்டு விசைபெறக் கன்னிலை விளங்கச் செய்தாற். வேத முளங்க விண்ணவர் புகள நாத கீதம் நலம்பெற ஒலிக்க,

முன் கொடுதலைப்பட்டம் 2, ஒகுற்ப்பட்டம் 3, பெறுகொன்றை பட்டம் 4, சவுந்தரி 5, சதியார வெறு கொடிக்கிம் இந்தப் பிரகாரம் வெத்திலை பாக்கு 2 காமாட்சி யருளால் கலியாணமாக தாமாட்சியாக தயவும் பெற்றுயிருந்து மன்னை

யெடுத்து மணிகுலம் சமைக்க அன்னலார் தாமும் அனுக்கிறகித்து முழையுரு பானை முறத்தி யுரைக்கும் பழையநூல் முரையே பலபல கும்பம் சீதள கும்பம் தெட்சின கலசம் போதரவாகிய பூரண கலசம் வேண்டிய பாண்டம் விளக்கமதாக நீண்ட உலகத்தில் நிலையிது வென்றார்.

கோலால் விறுமன் வயத்தில் சாந்தன் பிறந்தான். சாந்தன் வயத்தில் சடாதரன் பிறந்தான். சடாதரன் வயத்தில் வேன்க்கோபன் பிறந்தான். வேன்க்கோபன் வயத்தில் திருநீலகண்டன் பிறந்தான். திருநீலகண்டன் வயத்தில் சக்கிறாயுதன் பிறந்தான். சக்கிறாயுதன் வயத்தில் சாலியவான் பிறந்தான். யிப்படி யெத்தினை யுகத்திலும் யெண்ணப்படாநின்று உத்தம குலத்தில் உண்மையென்றுரைத்தோர். சாலீவாகனமுடையோர். தண்டி வருவார். முண்டன் ஆவிடையார். சம்மந்தரான அம்பிகை மாலை மார்பரான வெத்தியும் வேள்வியு முள்ளவரான பொன்னம்பலப் புனிதருக்கு தொண்டுபட்டு மண்ணோட்டுக்குப் பொன்னோடு கொடுத்தவர். அறுபத்து மூவரிவர் ஒருவர் பேற்பெற்ற பெரியோர்களான யிப்படி பேற்பெற்ற திருநீலகண்டராகிய திரேத யுகத்தில் வச்சிறாதரனை வென்று கும்ப ராசேந்திரனென்று பேறு பெற்றவரான, திரேதா யுகத்தில் கண்டராசதகனை வென்று மன்னுடையா ராசேந்திரனென்று பேற் பெற்றவரான, துவாபர யுகத்தில் திருமலைய்யங்காரை வென்று திருநீலகண்ட ராசேந்திரனென்று பேறு பெற்றவரான, கலியுகத்தில் பட்டியும் விக்கிரமாதித்தனை வென்று சாலியவாகன ராசேந்திர பேறு பெற்றவரான,

யிப்படி பேறு பெற்று நாலு யுகத்திலும் நன்மை பெற்ற பரிபாலகராகிய தொண்டந் தனக்கு தொழிலே கொடாமல் மண்டலந் தன்னில் வாளும் கோமான். பஞ்ச பாண்டவரை பரிவுடன் தடுத்து மிஞ்சிய விமனை எல்லைதான் கொள்வோர். கரிகாள சோழனை கருணை பெறவே அரியவனென்று அன்புடன் வழத்தோர். அன்னக் கொடியும் அழகு முப்புரி நூலும் பன்னக சாலையும் பாக்கியம் பெற்றோர். ஓம குண்டமும் ஓங்கிய நெரியும் வாணியருளால் வாள்வுபெற் றுயர்ந்தோர். பஞ்சாட் சரமும் பலபல நூலும் நெக்க தன்னில் நிலைபெற் றுயின்றோர். அரியு மயனுக்கு அன்பாய் வழற்ந்த உரிய அய்யனை உகந்து தொளுவோர். அய்யன் தன்னை அன்புடன் அணிந்து மெய்யவனென்று விளங்கப் பூசை செய்வோர். தாமரை மாலை தனதெனக்கொண்டு பூமகள் தன்னை புசந்தனி லணிவோர். குளக்கரை வேதியர். குலால மரபுளோர். அந்தர வளியும் அண்ணலுக் கன்பாய் யாவர் தமக்கு அன்புடன் கூர்ந்து வாவெனப் பாண்டம் வளங்கும் பெருமான்.

தில்லை வனத்தில் சிவனருளாலே எல்லைக் கடல்முளுகி யிளமை பெற்று திருநீலகண்டராகிய சோழவேளார் பாண்டியவேளார் சேறவேளாராகிய திருநீலகண்டராகிய செட்டி பட்டனசுவாமி அய்யோத்தியில் கண்டர் ஆதியும் கிரிமாடி கிரிபட்டிண நொடி எல்லாத்துக்கு நெத்திப்பட்டம் வானிக்கு முக்காலிப் பட்டமும் முகவறச்சின் கீழ்ப்பாவாடை மேல்ப்பாவாடை பகல்ப்பஞ்சு பகல்த் தீவெட்டி கடக மானக்க தோறணகட்டி பந்தக்காலுக்கு பவழக்கால் நாட்டி பவழமாலை யெல்லாதேவரும் மெச்சிய எல்லாசந்தமும் முகச்சந்தமும் . . . ந்தமே அஷ்டாச் சந்தமும் யுருமிகள் தவிலுகள் மோழம் மொழங்க பஞ்சவற்ண்ணப்

பர்வாடை வாசப் பல்லக்கு ஆனை பரிவுடன் பெற்றோன். டாலுகள் குடைகள் தனதெனப் பெற்றோன். பஞ்சாச்சர பூமண்டலப் பவிசும் பெற்றோன். ஸ்ரீவிசைய நகரத்தில் ராய சிங்காசனம் பெற்று விழங்கிய ஓகூற்ப் பட்டக்காற், கொடுதலைப் பட்டக்காற், பெனுகொன்றைப் பட்டக்காற் முத்தண்டம் யெறாதொடி சாதியிலும் ஓகூற் அம்மானும் மன்னுவரற்குத்தி நாகியசெட்டி, யீரமஞ்சி சிவசவன்செட்டி, பட்டுசெட்டி, வெய்யஞ்செட்டி, ஓகூற் யெறப்பசெட்டி, கொடதலை அழகிரிசெட்டி, பெனுகொன்றை சோலை அழகிரிசெட்டி, முரவாத்தி கண்ணப்பன் ரெங்குசெட்டி, ரெட்டையம்பாடி வைய்யஞ்செட்டி, வைய்யாலூர் நாட்டில் யெறாவீர சேர்வைகாறன், கந்தசாமி சேர்வைகாறன், பொம்மன்னன் சேற்வைகாறன், கொண்டப்ப சேற்வைகாரன், தண்டுகாம சேற்வைகாரன், நல்லகாம சேற்வைகாரன், பெறகாம சேற்வைகாரன், கொழலை சேற்வைகாரன், பாலமு சேற்வைகாரன்,

ஆறுபட்டம் அன்பத்தாறு தேசத்திலும் யிறுவத்திநாலு நாட்டிலும் திக்கு தெசையிலும் முண்டாகிய திருநீலகண்டற் அனைவோருங் கூடி பழநிமாநகரில் திருத்தேற் யெளுந்தருளி பிறவேஷித்து வறுகுற வீதியில் கிழக்குச் சிரகில் அய்யனாற் சன்னதிக்கு அறுகாண்மையாக மடமாலையம் கட்டிவைத்து முத்துக் குமாரருடையற் குமாரன் பழனியிடும்ப உடையறுக்கு தற்ம்ம சாதனப் பட்டயங் குடுத்து மடத்துக்கு உப்பு உளக்கொலி அன்னதர்னம் யிதுமுதலானதுகள் யெல்லாம் நடக்கும்படிக்கு மடத்துக்கு வருஷத்தில் வீடொன்றுக்கு ஒரு பணமும், கலியாணத்துக்கு மாப்பிள்ளை வீட்டுக்கு ஒரு பணமும் பெண் வீட்டுக்கு ஒரு பணமும், எழுதிங்கிக் கலியாணத்துக்கு ஒரு பணமும் ரெட்டைப் பேற் பாக்கும் குடிப்பாக்கும், சாதியில் குத்தாகுத்தம் தீந்தவிடத்தில் தற்மத்துக்கு மூன்றில் ஒரு பங்கு குடுத்து வருவாறாகவும்.

யிப்படிக்கி சின்னோபனாயக்கர், சரவணைக்குருக்கள், பழனிநம்பியார், குமாரசாமிநம்பியார், பாணிபாத்திரஉடையர், சரவணைக்குமாருபிள்மை, கந்தசாமிபிள்மை, பழனிக்கவுண்டன், திருவாவினங்குடிப்புலவன், பழனிப்புலவன், திருக்கவேல்நட்டுவன், சொக்கநட்டுவன், மேளம் குமாருசாமி சேருவைகாறன் யிவர்கள் மற்றும் உண்டான தலத்தார் முன்பாக யெளுதிக் குடுத்த பட்டையம். திருநீலகண்டன் எல்லாரும் கூடி சந்திராதித்தருள்ள வரைக்கும், கல்லும் காவேரி புல்லும் பூமியும் உள்ள வரைக்கும், பழனித் தலத்தில் திருனீலகண்டர் மடம் தற்மம் மென்மேலும் பரிபாலனம் பன்னி நடத்தி வருவாறாகவும். யிந்த தற்மத்துக்கு யாதாமொருவர் வாக்கு சகாயம் சரீர அர்த்த சகாயம் பன்னி நடத்திவந்த பேருகளுக்கு பலன் காசியிலே தானம் பண்ணி விசுவனாதரையும், விசாலாட்சியம்மனையும், காஞ்சிபுரத்தில் திருக்கம்பை யாத்தில் தீற்த்தமாடி கட்சி யேகாம்பர னாதரையும், காமாட்சியம்மனையும், சிதம்பரத்தில் சிவகங்கையில் தீற்த்தமாடி சிதம்பரேசுவரரையும், சிவகாமியம்மன், தில்லை கோவிந்தரையும், ராமேசுபரத்தில் சேதுவில் தீற்த்தமாடி ரா்மனாத சுவாமியையும், மலைவளர் காதலம்மனையும், மதுரை வயிகையில் தீற்த்தமாடி சொக்கலிங்க சுவாமி, மீனாட்சி அம்மனையும், திருப்பதியில் கோனேரியில் தீற்த்தமாடி திருவெங்கடேசுவரரையும், அலமேலுமங்கை யம்மனையும், ஸ்ரீரெங்கத்தில் காவேரியில் தீற்த்தமாடி ஸ்ரீரெங்கராசரையும், சீதா பரமேசுவரியையும், பழனி ஸ்தலத்தில் சண்முகநதியில் தீர்த்தமாடி பழனியப்பறையும், கயிலாயநாதரையும், பெரியனாகியம்மனையும் யிந்த

பஞ்ச தீற்த்தத்திலும் பஞ்ச சன்னதியிலும் சேவித்த பலனைப் பெறுவாராகவும்.

யிந்த தற்மத்துக்கு யாதாமொருவர் குத்தம் . . . ய குரோதம் பேசி பில்லை . . . மையென்று சொன்ன பேருக்கு மன்ங்கல மொத்திக்கு வெங்கலம் யெடுத்துக் கொள்வாராகவும். சக்கரத்தை ஆணையிட்டுத் தடுத்துக் கொள்வாராகவும். யிந்த தற்மத்துக்கு அகுதம் பேசின பேர்கள்க்கு கெங்கைக் கரையில் காறாம் பசுவைக் கொன்ற தோசத்திலேயும், காசியிலே அயிந்தலை ணாகத்தைக் கொன்ற தோஷத்திலேயும், வேதப் பிராமணரையும் தன்னோட மாதாபிதாவையும் கொன்ற தோஷத்திலேயும், யிப்படிக் கொற்ற பஞ்சமா தோஷத்தில் போவாறாகவும். அப்படிக்குப் போகாமல் தற்ம்மத்துக்கு யுள்ளும் பாவத்துக்குப் புறம்புமாயிம் மடத்து தற்மத்தை விகாதஞ் செய்யாமல் நடத்திவந்த பேற்களுக்கு ஆயிறாறோக்கியம் அயிஸூரியம் தனவஷ்த்து வாகனமும் தெய்வபிறசாதமும் குருப்பிறசாதமும் ராசப் பிறசாதமும் தீற்காயிசும் திருநீலகண்டற் யிமை பெற்றாப் போலே சீவனம் பெற்று செல்வ முண்டாயி நெடுநாள் வாள்ந்துண்டயிறுக்க. சுவாமிகளே தெண்டாயுதபாணி துணை உ. கொத்தமங்கல பெத்திசெட்டி, பேறன் குப்பசெட்டி.

# 49. அனுமன்பள்ளி செங்குந்தர் பட்டயம்

பெரியார் மாவட்டம் ஈரோடு வட்டம் முகாசி அனுமன்பள்ளியில் உள்ள அய்யாவு முதலியார், சருவலிங்க முதலியார் சகோதரர்களிடமிருந்து பெற்ற ஓலைப்பட்டயம்.

கி.பி. 1723-ஆம் ஆண்டு மைசூர் கிருஷ்ணராச உடையார் ஆட்சியில் தாராபுரம் 24 நாட்டுக் கவுண்டர்களுக்கும் அறிவித்துவிட்டுக் கொங்கு 24 நாட்டுச் செங்குந்த முதலியார்களும், அவர்கள் பட்டக்காரர்களும், நாட்டாண்மைக்காரர்களும் தாராபுரத்தில் அகத்தீசுவரர் சன்னதியில் கூடினர்.

தாராபுரம் ராசசேகரராசாவய்யன், வேணாவுடையாக் கவுண்டர், மணியம்பாளையம் நல்லதம்பிக் கவுண்டர், பல்லடம் முத்துவீரப்ப கவுண்டர் ஆகியோர் முன்னிலை வகிக்கின்றனர்.

பூந்துறை நாட்டுச் சங்கோதி சித்தநாதன்-தெய்வயானை ஆகியோர் மகள் முருகநாயகத்தைத் தாராபுரம் அகத்தீசர் சன்னதியில் 'செங்குந்த மாணிக்கி' என்று பெயரிட்டுக் கோயிலுக்குத் தேவரடியார் ஆக்கினர்.

செங்குந்தர்கள் தறிக்குக் கால்பணமும், திருமணத்திற்கு மாப்பிள்ளை வீடும், பெண் வீடும் தலா ஒவ்வொரு பணமும் செங்குந்த மாணிக்கிக்குக் கொடுக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

முருகநாயகத்தின் சகோதரர் வீரப்பனுக்கும் தறிக்குக் கால்பணமும் திருமணத்திற்கு ஆலாத்திக்கு ஒருபணமும் அளிக்கவும் ஏற்பாடு செய்தனர்.

பூந்துறை, வெள்ளோடு உட்படப் பல ஊர்க் கவுண்டர்கள் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். காளியப்ப கவுண்டர் என்பவர் ஓலையை எழுதியுள்ளார்.

## மூலம்

உ ஹரி ஓம். நன்றாக. குரு வாழ்க. குருவே துணை.

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய்விரும்பிய யன்பர் விளங்குக

சைவ நன்னெறி தான்தழைத் தோங்குகத்
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே

கோல நீடிய நிருவரை வாழ்க்கையுங் குறியேன்
மேலை யிந்தரன் அரசையுங் கனவிலும் வேண்டேன்
மாலை யர்பெறும் பதத்தையும் பொருளென மதியேன்
சால வேண்டுவன் தன்மையை வேண்டுவன் தமியேன் உ

திருச்சிற்றம்பலம். மீனாட்சி சொக்கலிங்கம் துணை. சென்னிமலையாண்டவன் துணை.

ஹரி ஓம். நன்றாக. குரு வாழ்க. குருவே துணை.

ஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரியதழ விபாடன் பாஷைக்கு தப்புவராய கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் பாண்டிமண்டலத்து தாபனாசாரியன் இம்மண்டலமுந் திறைகொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன் ராசமார்த்தாண்டன் ராசகெம்பீரன் ராசபரமேசுரன் ராசப்பிறதாபன் ராசாக்கள்தம்பிரான் ரணமுக வீரபத்திரன் அதரசூர வீர விக்கிரமாதித்தன் கட்டாரிச் சாமுவன் நவகண்ட சக்கிறவர்த்தி மலைகலங்கினும் மனங்கலங்காதவன் ஒரு குடைக்கீ ழுலகமுழுதாண்ட ராசகோலாகலன் ராசகோமரி ராசசங்காரன் ராசபுசங்கவன் திருநயப் பிறதிஷ்டாகரன் துஷ்ட்ட நிற்க்கிர சிஷ்ட்ட பரிபாலன் உத்தர தெஷ்ண பூறுவ பஷ்ம சத்த சமுத்திர அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாராயணன் கண்டரில்க் கண்டன் மிண்டரில் மிண்டன் வன்டற்கொரு கண்டன் வண்டறாவுத்தன் உத்தண்ட கோதண்டறாமன் உத்தண்ட மண்டலீகர் கண்டன் உபையகுல சுத்தாங்கசூரன்,

மன்னிய மாற்த்தாண்டன் மதியாத மன்னியர் ருயிர் மதியாத மன்னியர் மணிமகுட மாலையிட்ட வீரவல்லையப் பிறதாபன் வீரகண்டையப் பிறதாபன் தொண்டைமண்டலத்துச் சண்டப் பிறதாபன் சோழமண்டலந் திரைகொண்ட திண்புயாசலன் துலுக்கர்தழ வியபாடர் துலுக்கர்மொகரந் தவிழ்த்தான் ஒட்டியர்தழ விபாடன் ஒட்டியர்மொகரந் தவிழ்த்தான் அண்டினவர் தஞ்சம் மிண்டினவர் கோளரி கலியுகராமன் வரதுங்கப் பிறதாபன் தங்கப் பொன்மாற்பன் மணிமகுட முடிசூடு மனோபயங்கரன் யீழமு யிலங்கையும் திறைகொண்டருளிய ராசாதிராசன் யாட்பான பட்டணமும் வங்காள தேசமு கொண்டருளிய தொண்டமண்டலம் சோழமண்டலமும்க் கொங்குமண்டலமும்ப் பிரதிஷ்டாசாரியன் அஷ்ட்டலட்சுமி பொருந்திய மாற்பன் கோட்டத்து மன்னியர் கண்ட துஷ்ட்ட நிற்க்கிறக சிஷ்ட்ட பரிபாலன் அஷ்ட்டபோக புரந்தரன் துஷ்ட்டர் கோஷ்டந் தவிழ்த்தான் பதினெட்டுக் கோட்டத்து மன்னியர்க் கண்டன் நவரற்றின மாலையாபரணன் சங்கீத சாயித்த வித்தியா வினோதன் கெடி மன்னர் . . . . . . தானன் பூலோக தேவேந்திரன் ரணமுக சுத்தவீரன்,

சொல்லித் தப்புவார் கண்டன் புண்டரீக புருஷோத்தமன் சகல சாம்பிறாணி

லட்சுமி வாசன் பூலோக நாயகன் பூமண்டலாதீசுரன் சண்டப் பிரசண்டன் சத்துருக்கள் மணவாழன் சமையகெம்பீரன் சமையநாறாயணன் சமையத்துரோகர் கண்டன் அஷ்ட்ட ஆசுபரிய சம்பன்னன் சத்த சாகரமும் ஒருகுடைக்கீ ளாண்டு கொண்டருளிய ஸ்ரீநிகட்டாரிச் சாழுவன் ஸ்ரீறி விருப்பாஷிதேவ மகாராயர் வீரவசந்தராயர் போசராயர் விரநரசிங்கதேவ மகாராயர் தேவராயர் கெசபதி ராயர் கஷ்த்தூரிராயர் கதம்பராயர் பிறவுடதேவமகாராயர் வல்லாளராயர் சம்மட்டிராயர் சூடும்புலித்தேவ மகராயர் உச்சிமல்லிதேவ மகராயர் விசையராயர் வில்லவராயர் பவளேந்திறதேவ ராயர் யீசுரப்ப நாயக்க மகாராயர் கிஷ்டணதேவ மகாராயர் அச்சுததேவ மகாராயர் சதாசிவறாயர் புசபெலதேவ மகறாயர் சிரங்கறாயர் மல்லிகாற்சுனறாயர் ஸ்ரீறி வீர அறிநாராயணன் மல்லிகாற்சுனராயர் கிஷ்ட்டணறாயர் றாமறாயர் வெங்கிடபதிராயர்,

அறிவுக்கு அகஸ்த்தியனைப் போலவும் அழகுக்கு அனங்கனைப் போலவும் சொல்லுக்கு அரிச்சந்திரனைப் போலவும் வில்லுக்கு விசையனைப் போலவும் மல்லுக்கு வீமனைப் போலவும் வாழுக்கு அபிமன்னனைப் போலவும் பொறுமைக்குத் தன்மரைப் போலவும் குடைக்குக் கன்னனைப் போலவும் நீதிக்குச் சோளனைப் போலவும் புலியும் புல்வாயும் ஒருதுரையில் நீர்குடித்து வாழவும் எலியும் பூனையும் கூடி வாழவும் கெருடனும் பாம்பும் கூடி வாழவும் யிந்தப்படி நீதி நெறியாக ஒரு குடைக்கீள்ப் பிறிதிவிராச்சியஞ் செய்து அருளாநின்ற கலியுக சகாற்தம் 4824க்கு மேல்ச் செல்லாநின்ற சோபகிறிது வருஷம் சித்திரை மாசம் 14ந் தேதி,

மகாசுவாமி கிஷ்டணராசஉடையாா் பிறிதிவி ராச்சியஞ் செய்தருளாநின்ற காரியத்துக்குக் கற்தறான கொங்கு தாறாபுரம் யிருபத்து னாலு நாட்டுக் கவுண்டரவர்கள் அறிக்கையாக சமையமுதலிமார் அவர்கள் பூமடந்தை பணிகேட்ப ஒருமகுடந் தனிக்குடைக்கீள் உலகனைத்தும் வந்தொதுங்க கற்பகத்தையுஞ் சுரபியையும் கார்முகிலையும் காத்தளித்து நீதியின்கண் நிலைநிறுத்தி நியாயதன்மம் நெறிப்படுத்தி செங்கோல் வருங்கலியை மெலிவித்துச் செழுமணிமுடிச் செங்கோல் வேந்தன் செய்வதையறிந்து சிம்புள் தேவனே தெய்வமாகவும் அறம் வளரப் பகைத்தணிய திசையணைத்துஞ் செவிடுபடாமல் மேகத்தைத் திறைகொண்டும் பூதத்தைப் பணிகொண்டும் புரந்தரராசன் வீற்றிருப்பக் கொம்புஞ் சங்குஞ் காழமும் குலதன்மமாகவும் மாற்றலரை அரணழித்து வந்தடைந்தோர்க் கினிதளித்து ஏற்றவற்கு மிறுநெதியம் மெண்டிசையும் மெழில்பரப்பி வைய்யகத்துப் புகழ்நடத்தி மனம் பெரிதாய் அறம்வளரப் போர்ஆண்மையுஞ் சிலைவீரமும் சொல்வன்மையும் நல்லொழுக்கமுந் தாளாண்மையும் மிகப்பெருகிச் சறுவ சம்பத்து முடையவர்களாய் நாலு வன்னாச்சிரமங்கமும் வழுவாமல் நடக்கப்பட்ட,

சோழசக்கிறவத்திப் பெருமாள் வல்லாளைக் கொன்று படைவீடுகொண்டு தருவாருண்டோ வென்று கேட்டழவில் வல்லான்தன் மாளிகையிலே சென்று புகுந்து வகைவகைதோறும் பத்துப்பேரை பெலியிட்டுப் பிறதாபத்தொடு தாங்கும் வல்லாளைக் கொல்லச் சரிகை வாங்குமழவில் வல்லான் தேவிக்காக வல்லாளைக் கொல்லாத வியசிவன்மை . . . . . . தீர திருமேனி காவலர் காமாட்ஷி வரபுத்திரர் கந்தன் சகோதரர் வீரநாராயணன் வீரவல்லாளை வென்ற பஞ்சவன்ன

தநிஷ்தராகிய அபிமான பூஷணார்கள் சாகச் சோம்பாதார் தன தாம்பூல மிட்டவர் நின்றவற்கு வாணாழ் கொடுத்தார் மேவார் யெழுந்தார் ஆணாய்ப் பிறந்தாற் கேளாய் பிறந்தார் சோழன் அங்கங் காற்க நில்லாவுயிர் கொடுத்து நிற்கும் புகள் கொண்டோன்.

சொன்ன மனமொத்த கைக்கோழர் நம்பெருமாள் திருமக்கள் நீரனென்று மீண்ட பெருமாள் சோழனுக்கு வச்சிரமழித்தோர் சொன்னநாயந் தப்பாதோர் துட்டர்கண்டர் துட்டராதித்தன் துஷ்ட்டபயங்கரர் துஷ்ட்டநெட்டூரர் கொடுமை யிலங்கேசந் மேன்மீசையுடையோர் வல்லான் தேவிக்கு மங்கிலியங் கொடுத்தோர் வீரசிவேலைக்காரர் வாடாமாலையுடையோர் முனையில் சறுக்காதார் முன்னே செங்குந்த முடையோர் வல்லாரில் வல்லோர் மதியாதார் மணவாழன் யிரட்டைச்சங்கு மடைக்கமுமுடையோர் கொம்பு காளமும் கொடிமுரசு முடையோர் கா . . . . . . யுந் தலைப்பிறையுமுடையோர் பூதலம்புகழும் புலிக்கொடியுடையோர் . . . . . . . யைக் கைப்பிடித்துக் காலனுக்கு ஓலை விட்டோர் கொடுக்க முசியாதோர் கொடுத்து வளிகாட்டினோர் கொல்லுங் கையும் வெல்லுங் தோளுமுடையோர் கங்கை மண்டலம் குறும்பறுத்து கலிங்க மண்டலங் கட்டறுத்தோர் கடகமுங் கலியாணமுங் கொண்டோர்,

விருந்துக் காதரர் வென்றன்றி மீளாதார் சென்றதிசை வென்றோர் சிவனடியை மறவாதோர் சீற்பாதசேகரர் செந்தமிளோற் குயிரளித்தோர் சேரலரை வென்றவர்கள் சிலம்புடைய் திரல்வீரர் திக்கெட்டும் புகளுடைய திறலுடைய கைக்கோளர் காரானை முகமுடைய கற்பகத்தி னருளாலுங் கண்மூன்று முகமுடைய கயிலாய ரருளாலும் யீராரு தோளுடைய யிளையவன்ற னருளாலும் யோராடியால் மண்ணழந்த உலகரய ரருளாலும் யிருநாளி நெற்கொண்டு ஏழுலக மினிதளிக்கும் பரமேசுபரி தன்னுடைய பாதபங்கய வருளாலும் எத்திசையும் வெல்லவல்லோர் இடங்கைக்குத் தலையானோர் அமனகண்டந் தெரிந்த கைக்கோளர்குள்,

. . . . . . அமர சேனாபதிகளும் வீரர் செந்திக்கைக்கோளருந் தெற்கு வடக்கு கிழக்கு மேக்குக்குட்பட்ட செங்குந்த முதலிகழும் அருளாலாதினந்தீசுரன் அனுக்கிறகித்துத் திருவாய் மலர்ந்தருளியபடி கிறேதத் திறேதத் துவாபரக் கலியுக கலியுக சகார்த்தம் 4824 க்கு மேல் செல்லாநின்ற சோபகிறிது வருஷம் சித்திரை மாசம் 14 ந் தேதி அனுச நற்செத்திரமும் பஞ்சமியும் சுக்கிரவாரமும் பெற்ற னாளில் கொங்கு தாராபுரம் பாலைக்காட்டுக்குங் கிளக்கு, கோட்டைக்கரைக்கு மேற்கு, பன்றிமலைக்கு வடக்கு, பாலைமலைக்குத் தெற்கு, தென்கரைனாடு, காங்கயநாடு, தட்டையநாடு, வெங்கலனாடு, கிளங்குனாடு, மனனாடு, தலயனாடு, யிடப்பூச்சனாடு, பூந்துரைனாடு, வடகரைனாடு, காஞ்சிக்கோவில்னாடு, ஓடுவங்கனாடு, வண்டிகுள் நாடு, வடவரிசைனாடு, பொன்குலுக்கினாடு, வாரக்கனாடு, ஆனைமலைநாடு, வைய்யாவூர்னாடு, அண்டனாடு யிது முதலான யிருபத்து னாலுனாடு வஞ்சிபுரம் தாறாபுரத்தில் யிருபத்துனால் னாடும் செங்குந்த முதலிமாரும் பட்டக்காரரும் நாட்டாண்மைக்காரரும் குறைவறக் கூடி நிறவற நிறைந்து,

பஞ்சவன்னச் சடையில் தாறாபுரம் ராசசேகர ராசாவய்யனவர்கள் சுப்பய்ய

னவர்களிப்படி வேணாவுடையாக் கவுண்டரவர்கள் மணியம்பாளையம் நல்லதம்பிக் கவுண்டரவர்கள் பல்லட முத்துவீரப்ப கவுண்டரவர்கள் இவர்கள் முன்பாக பஞ்சவன்னமும் வெற்றிகொண்டு செங்குந்த முதலியார் பேருங் கீர்த்தியும் வேணுமென்று,

சந்திராதித்தவரைக்கும் பூந்துறைனாடு சங்கோதி சித்தனாதன்மகள் தாறாபுரம் அகத்தீசுபரசுவாமி சன்னதியிலும், உத்தறாயப் பெருமாள் சன்னதியிலும், தில்லாபுரியம்மன் சன்னதியிலும், பொன்கபால கயிலாசத்துக்குப் பொன்கபாலத்தை கையொத்த அங்களாம்மன் சன்னதியிலும் திறிசந்தி காலம் பணிவிடை பண்ணப்பட்ட தெவியானை மகள் முருகனாயகத்துக்கு கொங்கு தாறாபுரம் யிருபத்துனாலு நாட்டுச் சமைய முதலிமாரும் பட்டக்காரரும் நாட்டாண்மைக் காரரும் அகத்தீசுபரசுவாமி சன்னிதானத்தில் செங்குந்த மாணிக்கியென்று பரிவட்டமுங் கட்டி தறிக்குக் கால்ப்பணம் திருவையாற்று னாகரம் வற்த்தனையும் கட்டளையிட்டு கலியாணத்துக்கு மாப்பிள்ளை வீட்டுக்கு ஒரு பணமும் பெண் வீட்டுக்கு ஒரு பணமும் இந்தப்படிக்கு வற்த்தனை கட்டளையிட்டோம். இந்தவரி சந்திராதித்தவரைக்கும் குடுத்துவரக் கடவேமாகவும். யாதாமொருவர் யிந்த வற்த்தனைக்கு யிடறு செய்தவன் வழவில் மண்ங்கலந் தவிள்த்து வெண்கலம் மெடுத்து யிந்த வற்த்தனை வாங்கிகொள்ளக் கடவேமாகவும். யிப்படி சம்மதித்து யிருபத்துனாலு னாட்டு சமைய முதலிமாரும் பட்டக்காரரும் நாட்டாமைக்காரரும் யிப்படிச் சம்மதித்து பட்டயங்குடுத்து சங்கோதி சித்தனாதன் மகன் வீரப்பனுக்கு தாறாபுரத்தில் யிருபத்துனாலு னாட்டுக்கு திரிவையாற்று னாகரம் தறிக்குக் கால்ப்பணம் வற்த்தனையும் கலியாணத்தில் நமக்கு ஆலாத்திக்கு ஒரு பணமும் சந்திராதித்தவரைக்கும் கட்டளையிட்டோம்.

யிந்த தன்மம் கொடுத்து நடத்தி வந்த பேர்களுக்கு காசியிலேயிருந்து கெங்காபவுனி தீர்த்தங் கொண்டுபோய் ராமீசுரத்துக்கு றாமலிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணின பலன் பெறுவார்கள். பொன்னம்பலத்தில் கனகசபை சேவித்த பலன் பெறுவார்கள். திருவாலூர் தியாகராசருக்கு பங்கினி உத்திரத்தில் காசித் தீற்த்தம் அவிஷேகம் செய்த பலன் பெறுவார்கள். பொன்னரங்கத்தில் மார்களி மாசத்தில் சொக்கவாசல் ஏகாதெசி அனிட்டித்த பலன் பெறுவார்கள். கொங்கு ஏளு சிவாலையமும் சேவித்த பலன் பெறுவார்கள். கொங்கு தாறாபுரம் யிருபத்து னாலு நாட்டுக்குடி கூடிக் குடுத்த பட்டையம். யாதாமொருவர் யிந்தத் தற்மத்துக்கு விகாதம் பண்ணினவனுக்கு அசுபத்தி விறுமத்தி கெங்கை கரையிலே காறாம்பசுவைக் கொண்ண தோசத்திலே போவார்கள். மாதா பிதாவுக்குத் துறோகம் பண்ணின தோசத்திலே போவார்கள். அப்படி வாராதபடிக்கி பூறண கிறுபை . . . . அனுப்பவும்.

யிதுக்குச் சாச்சி வேணுடையாக் கவுண்டர் பா . . . . . . . . சுப்பய்யனவர்கள், பூந்துறைநாடு வாரணவாசிக் கவுண்டர், வெள்ளோட்டுப் பெரியண கவுண்டர், காஞ்சிக்கோவில்னாடு கரிச்சி கவுண்டர், பல்லட முத்துக்கவுண்டர், நிளலிச் சின்னய கவுண்டர், சேவூர் சோளியாண்டாக் கவுண்டர், விசையமங்கலம் வடமலைக் கவுண்டர். யிந்தப் பட்டையம் எளுதின நன்மைக்குச் சின்னக் காளியப்ப கவுண்டன் கைய்யெளுத்து உ. தங்களைப் பளணியாண்டவர் லட்சிப்பார். குருவே துணை உ.

# 50. அலைவாய்மலைச் செப்பேடு

சேலம் மாவட்டம் இராசிபுரம் வட்டம் பழந்தின்னிப்பட்டிக் கிராமத்தில் அலைவாய்கிரி மலை என்ற பெயரில் சிறு குன்று ஒன்று உள்ளது. இம்மலைச்சாரலில் குகைமீசுவரர் மடம் என்ற செங்குந்த முதலியார்களுக்குரிய ஒரு தொன்மையான மடம் உள்ளது. அந்த மடத்தில் இந்தப் பட்டயம் உள்ளது. ஏற்கெனவே பதிப்பிக்கப்பெற்ற பட்டயம்.* மைய அரசு தொல்பொருள் அளவீட்டுத் துறைக் கல்வெட்டுப் பிரிவினர் படி எடுத்துள்ளனர்.#

இப்பட்டயத்தில் செங்குந்த குலத்தாருக்குரிய பெருமைகள் புராணத்துடன் ஒட்டிக் கூறப்படுகின்றன. அவர்கள் வீரம், ஈகை, பக்தி, நேர்மை, தியாகம், சோழமன்னர் போன்றோருக்கு உதவிய தன்மைகள், வல்லாளை வென்றது போன்ற விவரங்கள் சுவையுடன் கவிதை நடையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

24 நாட்டுச் செங்குந்த முதலியார்களும், மதுரைச் சமய முதலிமார்களும் கம்பளிச் சண்டையாகக் காஞ்சிபுரம் போனபோது குகையீசுவர சுவாமியை வணங்கிச் சென்றதால் வெற்றி பெற்றனர் என்ற விபரம் கூறப்படுகிறது.

அதனால் செங்குந்தர்கள் பல வரிகளைக் குகையீசருக்குத் தருகின்றனர். தொழில், திருமணக் காலத்தில் கொடை ஆகியவை கொடுக்கின்றனர்.

மணவாளப் பிள்ளையாருக்கும், கைக்கோளத் தாசிக்கும் பணம் தருகின்றனர். பலர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர்.

## மூலம்

உ ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை. அலகாமலை குகையீஸ்சுவர சுவாமியார் கீழ்கரை ஏழுநாட்டுப் பட்டயம். மேல்கரை 24 நாட்டுப் பட்டயம்.

---

இராசு செ. செங்குந்தர் புகழ்கூறும் ஒரு செப்பேடு, தென்னிந்திய செங்குந்த சமூக, கைத்தறி, மாதர் மாநில மாநாட்டுச் சிறப்பு மலர், ஈரோடு, 1976.

# ARE (A) 1 of 1931

உ ஸ்ரீமன் மகாமண்டலேசுபரன் அரியதள விபாடனபாடன் செங்குந்த பூவறாய கண்டன் மூவறாய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் பூர்வ தட்சிண பச்சிம உத்திர சத்த சமுத்திராதிபதி பாண்டியமண்டலத் தாபனாசாரியன் எம்மண்டலமும் திறைகொண்டருளிய ராசாதிராசன் ராஜபரமேசுவபரன் ராஜமார்த்தாண்டன் ராஜகெம்பீரன் ராஜப்பிரதாபன் ராஜாக்கள்தம்பிரான் ரணமுகவீரபத்ரன் அதரசூர வீரவிக்கிரமாதித்தியன் கட்டாரிச்சாளுவன் நவகண்ட சக்ரவர்த்தி மலைகலங்கினும் மனங்கலங்காதவன் ஒரு குடைக்கீழ் உலகமுழுதாண்டவன்,

ராஜகோலாகலன் ராஜகோளரி ராஜசங்காரன் ராஜபுங்கவன் திருநய்பிறதிஷ்டாசாரியன் துட்டநிக்கிரக சிஷ்டபரிபாலன் அசுவபதி கெஜபதி நரபதி நவகோடி நாராயணன் கண்டர்கண்டன் மிண்டரில்மிண்டன் விண்டர்கொருகண்டன் வண்டராவுத்தன் உத்தண்ட கோதண்டராமன் உத்தண்ட மண்டலீகர்கண்டன் உபயகுல சுத்தாங்கதீரன் மன்னிய மார்த்தாண்டன் மதியாத மன்னியபெருமாள் மதியாத மன்னிய மணிமகுட மாலையிட்ட வீரவல்லயப் பிரதாபன் வீரகண்டப்பிறதாபன் தொண்டமண்டலத்து சண்டபிறதாபன் சோழ மண்டலந் திறைகொண்ட திண்புயாசலன் துலுக்கர்தள விபாடன் துலுக்கர்மோகந் தவிழ்த்தான் ஒட்டியர்தள விபாடன் ஒட்டியர்மோகந் தவிழ்த்தான் அண்டினவர்தஞ்ச மிண்டினவர் கோளரி கலியுகராமன் வரதுங்கபிரதாபன் தங்கப்பொன்மார்பன் மணிமகுட முடிசூடும் மனோபயங்கரன் ஈழமும் இலங்கையும் திறைகொண்டருளிய ராஜாதிராஜன் யாழ்ப்பானப்பட்டணமும் வங்காளதேசமும் கொண்டருளிய தொண்டமண்டலம் சோழமண்டலம் பாண்டியமண்டலம் கொங்குமண்டலப் பிறதிற்டாச்சாரியன் அஷ்டலட்சுமி பொருந்திய மார்பன் கேளப்பமன்னியர் கண்டன் துஷ்ட நிக்ரக சிஷ்டபரிபால அஸ்டபோக புரந்தரன் அதுஷ்ட கோஷ்டந் தவிழ்த்தான் பதினெட்டுக் கோட்டத்து மன்னியர்க்கண்டன் நவரத்தின மாலிகாபரத்தான் சங்கீத சாயூச்சிய வித்யா விநோதன் கெடிமன்னிய சாதாரணன் பூலோக தேவேந்திரன் ரணமுக சுத்தவீரன் சொல்வித்த பூவராயகண்டன் புண்டரீக புருஸோகிம சகல சாம்பிராஜ்ய லட்சுமிவாசன் பூலோகநாயகன் பூமண்டலாதி சூர சண்டப்பிரசண்டன் சத்துருக்கள் மணவாளன் சமய்கெம்பீரன் சமயநாராயணன் சமயரோக கண்டன் அஷ்டைஸ்வரிய சம்பன்னன் சத்த சாகரமும் ஒருகுடைக்கீழ் ஆண்டு கொண்டருளிய,

ஸ்ரீகட்டாரிச் சாளுவன் ஸ்ரீவிருப்பர்ட்சிதேவ மகாராயன் வீரவசந்தராயர் போஜறாயர் வீரநரசிங்க மகாராயர் தன்மராயர் பூபதிராயர் கம்பராயர் அகளங்கதேவ மகாராயர் தெய்வராயர் கெசபதிராயர் கேசரிராயர் சதபராயர் பிறவுடதேவ மகாராயர் சம்மட்டிராயர் சூடும்புலித்தேவராயர் ஈசுரப்பராயர் கம்பராயர் உச்சமல்லிதேவ மகாராயர் விசயராயர் தேவராயர் பவனேந்திர தேவராயர் ஈசுவரப்பனாயக்கம்பராயர் கிருஷ்ணதேவ மகாராயர் அச்சுததேவ மகாராயர் சதாசிவராயர் புஜபலதேவ மகாராயர் ஸ்ரீரங்கராயன் மல்லிகார்ச்சுனராயர் ஸ்ரீவீரஹரிநாராயணன் மல்லிகார்ச்சுனராயர் கிருஷ்ண ராயர் ராமராயர் வெங்கடபதிராயர்,

அறிவுக்கு அகத்தீசன்போலவும் அழகுக்கு அனங்கனைப் போலவும் வில்லுக்கு விசயனைப்போலவும் மல்லுக்குப் பீமனைப் போலவும் வாளுக்கு அபிமனைப் போலவும் பொறைக்குத் தருமனைப்போலவும் கொடைக்குக் கர்ணனைப்போலவும் நீதிக்குச் சோழனைப்போலவும் புலியும் புல்வாயும் ஒரு துறையிலே நீர்குடித்து வாழவும் எலியும் பூனையும் கூடி வாழவும் கருடனும் பாம்பும் கூடி வாழவும் இந்தப்படி நீதிநெறியாக ஒரு குடைக்கீழ் ராஜ்ய பரிபாலனம் செய்து அருளாநின்ற கலியுகசகாப்தம் 4624 மேல் செல்லாநின்ற ஆனந்த வருஷம் வைய்யாசி மாதம் 5 ந் தேதி பூமடந்தை பணி கேட்ப ஒருமகுடந் தனிக்குடைக்கீழ் உலகனைத்தும் காத்து கற்பகத்தையும் சுரபியையும் கார்முகிலையும் காத்தளித்து நீதியின்கண் நிலைநிறுத்தி நியாயத் தன்மம் நெறிப்படுத்தி செங்கோலால் வருகலியை மெலிவித்து செழுமணி முடிசூடி செங்கோல் வேந்தன் செய்வகையறிந்து சிம்புள்தேவனே தெய்வமாகவும் அறம்வளரப் பிணிதணியத் திசாதிசையனைத்தும் செவிடுபடாமல் மேகத்தைத் திறைகொண்டு பூதத்தைப் பணிபுரந்த ராஜன் வீற்றிருப்ப கொம்பும் சங்கும் காளமும் குலதனமாகவும் மாற்றவரை அறநழித்து வந்தடைந்தார்க்கும் இனிதளித்து ஏற்றவர்க்கு மிருநிதியும் எண்டிசையும் எழில்பரப்பி வையத்துப் புகழ் நடத்தி மனம் பெரிதாய் அறம் வளர்ப்போர் ஆண்மையுந் சிலைவீரமும் சொல்வன்மையும் நல்லொழுக்கமும் தாண்டாண்மையும் மிகப்பெருகிச் சர்வ சம்பத்து முடையவர்களாய்,

நாலு வர்ணாசிரமங்களும் வழுவாமல் நடத்தப்பட்ட சோழசக்ரவர்த்திப் பெருமான் வல்லானைக் கொன்று படைவீடு கொண்டு தருபவருண்டோ வென்று கேட்டளவில் வல்லான்தன் மாளிகையிலே சென்று புகுந்து வகைதோறும் பத்துப்பேரைப் பலியிட்டுப் பிறஷ்தபத்தொடுந் தூங்கும் வல்லானைக் கொல்லச் சூரியை வாங்கும் அளவில் வல்லான் தேவிக்காக வல்லானைக் கொல்லாதுவிட்ட சிவன் மைந்தர். திருமேனிக் காவலர். காமாட்சி வரபுத்திரர். கந்தன் சகோதரர். வீரநாராயணர். வீரவல்லானை வென்ற பஞ்சவர்ண தீட்சிதராகிய அபிமான பூஷணர்கள். சாகச் சோம்பாதார். தன்பல மீட்டவர். நின்றவற்கு வாணாழ் கொடுத்தார். மோவாய் எழுந்தார். ஆணாய்ப் பிறந்தார். கேளாய்ப் பிறந்தார். சோழன் அங்கம் காக்க நில்லாஉயிர் கொடுத்து நிற்கும்புகழ் கொண்டோர். சென்னிமான மொத்தக் கைக்கோளர். நம்பெருமாள் திருமக்கள். சோழனுக்கு வச்சிரம் அளித்தோர். சொன்னதாயம் தப்பாதோர். துஷ்டகண்டர். துஷ்டராதித்த துஷ்டபயங்கரர். துஷ்ட நிட்டூரர். கொடுமையிலங்கேசர். மீசை பறித்து விடுமயிர் கட்டினோர். அம்மயிர் செங்குந்தர்க் கடையாளம் புனைந்தோர்கள். கொளைச்சதை யில்லாதோர். தண்டுவார்மிண்டர். அக்ளங்க வல்லோன். சாகச்சறுக்காதார். சாகச்சோம்பாதார். சாகைக்காய் மதன் தம்பலத் தின்னத் தலையரிந்தோர்.

அறநடந்தோர். தாயைப் பகவை வாளுருவி விட்டோர். பலவாயுதத்தில் வல்லோர். போரில் வீரர். போற்கொண்டோர். போர்க்களத்தானைகள். பொன்னாபரணம் பூணாமல் புகழாபரணம் பூண்டோர்கள். பூதலங்கள் ஏழும் புகழ் படைத்து வாழ்வோர்கள். மனமொத்த கைக்கோளர். மலைகலங்கினும் மனங்கலங்காதோர். மணவாள மானதீரர் வீரர். அனகன் அங்கார போர்வல்லான். அபயகரத்தோர். வாசியும் மானமும் வண்மையும் வழுவாதோர். வீரவேளைக்காரர்.

வாடாத மாலையுடையோர். வாழ்வு கண்டு தாழ்வு செய்யாதார். வல்லான் தேவிக்கு மாங்கலியம் கொடுத்தோர். முனையில் சறுக்காதார். முன்னே செங்குந்தம் உடையோர். வல்லாரில் வல்லோர். மதியாதார் மணவாளன். யிரட்டைச் சங்கும் நாதமுடையோர். பூதலம் புகழும் கொம்பும் காளமும் கொடிமுரசுடையோர். கண்படையும் தலைப்பிறையுமுடையோர். பூதலம் புகழும் புலிக்கொடியுமுடையோர். காளியைக் கைப்பிடித்துக் காலனுக்கு ஓலைவிட்டோர்.

கொடுக்க முசியாதோர். கொடுத்து வழிகாட்டினோர். கொல்லுங் கையும் வெல்லுந்தோளும் உடையவர். கங்கைமண்டலம் குறும்புஅறுத்து கலிங்க மண்டலம் கட்டு அறுத்தோர். கடகமும் கலியாணமும் கொண்டோர். விருதுவிளக்கானோர். வென்றன்றி மீளாதோர். சென்றதிசை வென்றோர். சிவனடியை மறவாதோர். ஸ்ரீபாதசேகரர் செந்தமிழோர்க் குயிரளித்தோர். சோழரை வென்றவர்கள். சிலம்புடையதிறல் வீரர். திக்கெட்டும் புகழுடைய கைக்கோள்காரர். னாணமுகமுடையோர். கற்பகத்தின் அருளாலும் கண்மூன்றுடைய கைலாசர் அருளாலும் ஓரடியால் மண்ணளந்த உலகர் அருளாலும் இருநாழி நெற்கொண்டு ஏழுலகும் இனிதளிக்கும் பரமேஸ்வரி தன்னுடைய பாத பங்கைய அருளாலும் எத்திசையும் வெல்ல வல்லோர். இடங்கைக்குத் தலையானோர். அமணகந் தெரிந்தோர். அறிவுடை கைக்கோளரும் அமரசேனாபதிகளும்,

தெற்கு வடக்கு கிழக்கு மேற்கு உள்பட்ட செங்குந்த முதலிகளும் அருளால் ஆதி நந்தீஸ்வரன் அனுக்கிரகித்து திருவாய் மலர்ந்து அருளினபடி கிரேதா திரேத துவாபர கலியுகம் கிரேதாயுகத்துக்கு பிரம்மா அர்ச்சிக்கையில் பிரம்மகிரியும் பிரம்மேசுரமானதும், திரேதாயுகத்துக்கு விஷ்ணு அர்ச்சிக்கையில் விஷ்ணுகிரியும் விஷ்ணுஈஸ்வரமானதும், துவாபர யுகத்துக்கு துர்க்கையரிச்சிக்கையில் துர்க்கைகிரியும், துர்க்கீஸ்வரமானதும், கலியுகத்துக்கு நாகம் அர்ச்சிக்கையில் நாககிரியும் நாகேஸ்வரமானதும் இப்படி யநேகங்கோடி சதுர்யுகம் பூசை கொண்டருளிய தேவதேவன் தெய்வமானதும்,

இப்படி யநேகங்கோடி சதுர்யுகம் பூசைகொண்டருளிய தேவதேவன் தெய்வசிகாமணி . முத்திக்குவித்து முக்கண்ணீசுவரன் பத்திப்பிரியுன் பார்வதிவல்லவன் பத்தவச்சலன் நின்றகோல|மழகிய நிமலன் நேரம் ஒரு பஞ்சவர்ண பிரகாசன் திருமுகவோவன் தெண்டாயுத அஸ்தன் செம்புத்தீவில் தொண்டை மண்டலத்தில் காஞ்சி மாநகரில் திருக்கம்பையாற்றில் ஒற்றைமா மாவடியில் பார்வதிதேவி அர்த்தபாகம் பெறவேண்டி அரிய தவசு பண்ணுகையில் அப்போது காட்சி கொடுத்து ஐந்து தலமுள்ள பொருள்தனையும் கொண்டுவரும் பொன்னிப்புனலாறு புடைசூழ்ந்த கொங்குதன்னில் தெட்சிண கைலாசமென்கின்ற ஸ்ரீநாககிரி பர்வதத்தில் அர்த்தபாகம் கொடுத்தருளிய அர்த்தநாரீஸ்வரருடைய தம்பிரான் அவருடைய ஸ்ரீமத் குமாரராகிய,

விப்பிரப்பிரியன் விசுவமூர்த்தீசுவரபாலன் சரவணபாலன் சண்முகப்பிரதாபன் கெவுரிதிருமகன் கெணபதிசகோதரன் பக்கரைப் பகட்டாகப் பட்டிபடைக்குள் நீடு கொக்கரித்து தார்பரித்த குக்குடக்கொடிக் குகன் சக்கிரவட்டமெட்டிடாபிதா

விசிரகாலடிக்கும் துரகப்பிரதாபன் துரங்கன் சிஷ்டிக்கும் பிரமன் சிரசு திண்டாட குட்டிக் குடுமியை நெட்டவாங்கும் குமார கெம்பீரவன் துட்ட சமணரை வெட்டிக் கழுமிசை வைத்தப் பிரமண்ணியப் பிள்ளையார் பழனி வேலாயுத சுவாமியார் சொல்படிக்கு கந்தன் சகோதரர் ஆகிய வீரபாகுதேவர் மரபுடைய செங்குந்த முதலிமார்கள்,

கீழ்கரை எழுகரை நாட்டில் பூந்துரைநாடு, பூவாணிநாடு, வனவாசிநாடு, சேலநாடு, ராசீபுரநாடு, பருத்திப்பள்ளிநாடு, ஏழூருநாடு, வாழவந்திநாடு, அரையநாடு, ஆக கீழ்கரைநாடு ஏழுநாடும், மேல்கரை நாட்டில் கொங்குதாராபுரம், தென்கரைநாடு, காங்கயநாடு, தட்டயநாடு, வெங்கலநாடு, கிழங்குநாடு, மழவநாடு, தலையநாடு, இடப்பூச்சநாடு, பூந்துறைநாடு, வடகரைநாடு, காஞ்சிக்கோயில்நாடு, ஒடுவங்கநாடு, வண்டிசூழ்நாடு, வடபாரிசநாடு, பேரூர்நாடு, செம்பியநல்லூர்நாடு, சோழபுரிநாடு, குருப்புநாடு, பொன்குலுக்கிநாடு, வாரக்கநாடு, ஆனைமலைநாடு, வைய்யாலூர்நாடு, அண்டநாடு கொங்கு இருபத்து நாலு நாட்டுச் சமையமுதலிமாரும் எழுகரைநாட்டு சமயமுதலிமாரும் மதுரைச் சமையமுதலிமாரும்,

ஆனந்த வருஷம் வைய்யாசி மீ 5 ந் தேதி கம்பிளிச் சண்டையாய்க் காஞ்சிபுரத்துக்குப் போகையில் சேலநாட்டுத் தெட்சிண மேருவென்னும் அலையாகிரி பருவதத்தில் கபாட நிஷ்டை சிவயோகமாகிய குகையீஸ்வர சுவாமியாரவர்களிடத்தில் அனுக்கிறகம் பெற்றுப்போனபடியால் வியாச்சியம் செயிச்சு வந்ததின் பேரில் அர்த்தநாரீசுர சுவாமியார் சொற்படிக்கு எழுகரைநாட்டுப் பட்டக்கார நல்லியண்ணமுதலியாரும், இருபத்துநாலு நாட்டு பட்டக்காரணாகிய கொங்கில் அன்னியூர்குள்ள பட்டக்காரனும், எழுகரைநாட்டுச் சமயமுதலிமார்களும், இருபத்துநாலு நாட்டுச் சமயமுதலிமார்களும், மதுரை அண்ணாமலைமுதலியாரும், கூத்தாடி ஆணாய்ப்பிறந்தானும் இவர்கள் எல்லோரும் கூடி அலையாகிரி குகையீஸ்வர சுவாமியார் அவர்களுக்கு மக்கத்துக்குக் கால்பணமும், மணவாளப்பிள்ளையார்க்குக் கால் ரூபாயும், கைக்குள தாசிக்கு ரூபாய் அரைக்காலும், வன்னியகுல கோத்திரத்தாருக்குத் தலைக்கட்டுக்கு ரூ. 1 1/4 மிந்தபடிக்கு கெந்தகசாத்தி வனபோஜனம் மயேசுர பூஜை தூபதீப நைவேத்தியம் நடந்துவரத் தக்கதாக குகையீசுவரசுவாமியார் மடத்தில் இந்தத் தன்மம் வழுவாமல் நடக்கவேண்டிக் குடுத்ததற்குக் கை எழுத்துக் கொடுத்து எழுகரை நாட்டுப் பட்டக்கார நல்லியணமுதலியாரும், எழுகரை நாட்டு சமயமுதலியாரும், இருபத்துநாலு நாட்டுச் சமயமுதலிமார்களும், தென்கரைநாட்டு வேலப்பமுதலியார், காங்கய நாட்டுச் சுப்பிரமணியமுதலியார், தட்டையநாட்டு அய்யம்பெருமாள் முதலியார், வெங்கலநாட்டுப் பஞ்சமாதேவி பசுபதி முதலியார், வடகரைநாட்டு வேலப்பமுதலியார், காஞ்சிக்கோயில் கந்தமுதலியார், ஒடுவங்கநாட்டுக் குமாரசாமி முதலியார், அருணாநாட்டு பட்டக்காரமுதலியார், அவினாசிலிங்கம்முதலியாரும், தென்கரைக்கறைப் பட்டியப்ப முதலியாரும், குருப்புநாட்டு குமாரசுவாமிமுதலியாரும், மற்று முண்டான நாட்டு முதலியாரும்,

மக்கத்துக்குக் கால்பணமும், மணவாழப் பிள்ளையார்க்குக் கால்ரூபாயும், கைக்குள தாசிக்கு ரூபாய் அரைக்காலும், வன்னிய குலத்தாருக்கு ஒண்ணே காலும்

இந்தப்படிக்கு மேல்கரை இருபத்துநாலு நாடும் கீழ்கரை எழுகரைநாடும் இந்த வர்த்தனை நடக்கத்தக்கதாக அலையாகிரி குகையீஸ்வரசுவாமியாரவர்களுக்கு கையெழுத்துக் குடுத்தது. இந்த வர்த்தனைக்கு வந்த தவசிப் பிள்ளைகளுக்கு சோடச உபசாரமாய் அமுதுங் கொடுத்து தாமசமில்லாமல் இந்த வர்த்தனை குடுத்த பேர்கள் காசியிலேயிருந்து கெங்கா பவானி தீர்த்தம் கொண்டு போய் ராமேஸ்வரத்து ராமலிங்கத்துக்குப் பூசை பண்ணுகிற பலன் பெறுவார்கள். பொன்னம்பலத்துக் கனகசபையைச் சேவித்த பலன் பெறுவார்கள். திருவாரூர் தியாகருக்கு பங்குனி உத்திரத்தில் காசி தீர்த்த அபிஷேகம் செய்த பலன் பெறுவார்கள். பொன்னரங்கத்தில் மார்கழி மாதம் சொர்க்கவாசல் யேகாதசி அனுஷ்டித்த பலன் பெறுவார்கள். கொங்கெழு திருப்படை வாசல் சேவித்த பலன் பெறுவார்கள். இந்தத் தர்மம் நடத்திவரக் கடவேனாகவும்.

இந்தந் தர்மத்துக்கு யாதாமொருவர் இடையூறு பண்ணின பேர்கள் காசி கெங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்றதோஷத்திலெ போகக்கடவது. ராமேஸ்வரத்திலிருந்து காசிக்குப் போகிற பூரண கெர்ப்ப ஸ்திரியைக் கொன்ற தோஷத்திலே போகக்கடவது. மாதா பிதா குரு தெய்வம் மனையாள் இவர்களுக்கு வஞ்சனை பண்ணின தோஷத்திலே போகக்கடவது. யிந்தத் தர்மம் வழுவாமல் நடத்தினபேர்கள் சகல தர்மதராய் இகத்திலே அஷ்டயிசரிய சம்பன்னராய் சிவசாயுச்சியமடைவார்கள். இந்த வரிசை காவேரி சந்திராதித்தர் உள்ளளவும் நடத்திவரக் கடவோமாகவும். தங்களை அத்தநாரீசுர தம்பிரானாரும் பழனி வேலாயுதசுவாமியாரும் லட்சிக்கவும். குகையீஸ்வர சுவாமியார் லட்சிக்கவும். திருச்சிற்றம்பலம். வேலுமயிலுமுன்னடக்க. குமாரசுவாமியார் ரட்சிக்கவும்.

# 51. செங்குந்தர் வெற்றிப் பட்டயம்

ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் இந்த ஓலைப்பட்டயம் உள்ளது.

கொங்கு நாட்டு விசயமங்கலப் பகுதியில் 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் மக்கள் இடங்கை வலங்கைப் பிரிவுகளாக இயங்கி வந்துள்ளனர். செங்குந்த முதலியார், படையாட்சிக் கவுண்டர், ஆசாரிகள் ஆகிய பஞ்சகம்மாளர், நகரத்தார், பள்ளர், மாதாரிகள் ஆகியோர் இடங்கைச் சாதியாகவும், கவரைச்செட்டிகள், தேவாங்கர், சாணார் ஆகியோர் வலங்கைச் சாதியாகவும் தம்மை அழைத்துக் கொண்டனர்.

விசயமங்கலம் மாரியம்மன் திருவிழாவில் இடங்கைக்குரிய சில சிறப்புக்களை வலங்கையார் அணிந்து கொண்டனர். இடங்கையார் ஆட்சேபம் தெரிவிக்க ஒரு வருடம் இந்தத் தகராறு நீடித்தது. அங்கு வந்த அசரத் திப்பு சுல்தானின் அந்தியூர் திவான் கிரிமிரே சாயபு பாட்சாவிடம் முறையிட அவர் 'பூர்வம் தீர்ந்த பட்டயங்கள்' வாங்கிக் கொண்டு ஆதாரங்களுடன் அவர்களைத் திருப்பூருக்கு வரச்சொல்லுகிறார்.

திருப்பூரில் விசாரித்தபின் தவறாக வழக்குத் தொடுத்த வலங்கையார்க்கு 2400 பொன் அபராதம் விதித்து வலங்கை, இடங்கையார்க்குப் பூர்வீகம் முதல் என்னென்ன உரிமைகள் உண்டு என்று நிர்ணயம் செய்கிறார். வெற்றி பெற்ற இடங்கையார் வெற்றிக் காணிக்கையாக 1500 ரூபாய் கொடுக்க வேண்டும் என்றும் உத்தரவிடுகிறார். இந்த விசாரணை 5-2-1797 இல் நடைபெற்றுள்ளது.

திப்புவின் ஆட்சிக் காலத்தில் கொங்கு நாட்டுக் கிராமங்களில் அமுலுதார், சேனபாகம், சிரஸ்தார் ஆகிய மூன்று அதிகாரிகள் இருந்தனர். அமுலுதார் பெரும்பாலும் இசுலாமியராகவே இருந்தனர். மற்றவர் பெரும்பாலும் அந்தணராக இருந்தனர். விசயமங்கலம், அறச்சலூர், துடுப்பதி, ஊத்துக்குளி அதிகாரிகள் பெயர்கள் குறிக்கப் பெறுகின்றன. திப்புவின் நிருவாகம் பற்றி அறிய இப்பட்டயம் மிகவும் உதவுகிறது.

இடங்கையர்க்குச் செங்குந்தர் தலைமை தாங்கியதால் இந்த ஓலைப்பட்டயம் செங்குந்தர் வெற்றிப் பட்டயம் என அழைக்கப்படுகிறது. பல ஊர்க் கவுண்டர்கள்

முன்னிலையில் இவ்வழக்கு தீர்க்கப்பட்டுள்ளது.

## மூலம்

ஸ்ரீ சாலியவாகன சகார்த்தம் 1718 க்கு மேல் கலியுக சகார்த்தம் 4897 க்கு மேல் செல்லாநின்ற நழ வருஷம் தை மாதம் 27 ஆம் தேதி நாயற்றுக்கிளமையும் அவிட்ட நச்சேத்திரம் பரிநாம யோகமும் வாலவாகரணமும் யிப்படியாகக் கொற்ற சுபதினத்தில்,

ஸ்ரீமது றாசாதிராசன் றாசமாத்தாண்டன் றாசகெம்பீரன் பிரவுளுறாயர் பிரதாபறாயர் நறபதிறாயர் நரசிங்கறாயர் தேவப்பறாயர்வுடையார் வீரசமந்தறாயர் சிக்கிந்ததேவருடையர் கிஷ்ட்டினறாயர்வுடையார் இவர்கள் முதலான அநேக றாயர் பட்டங் காணங்கர் மயிசூர்ச்சமஷ்த்தானம் சாமறாயர்வுடையார் உபைய காவேரி மத்தஷ்யமான சீரங்கப்பட்டணத்தில் ரற்றின சிம்மாசனருடராய் பிருதுவிராச்சியம் மத்திசம் பண்ணிக்கொண்டிருக்கும்போது,

யிவர்கள் காரியத்திற்குக் கருத்தராயிய அசுரது நவாப்பு அயிதரலிக்கான் சாயிவு அவர்கள் குமார நவாப் அசறது டீப்புச் சுலுத்தான் பாச்சா சாயபு அவர்கள்கு றாச்சியம் பரிபாலினம் பண்ணுகிறபோது யிவர்கள் காரியத்திற்கு முக்கிஷ்த்தராயியா அசூர் கச்சேரி மகாறாயர் றாயேஷ்த்திரி மீரு சாயவு பாட்சா அவர்கள் விசாரணை பண்ணும்போது,

கொங்குமண்டலத்துக்குச் சேற்ந்தா அந்தியூர்க்கச்சேரி ஸ்ரீ திவான் கிரிமிரே சாயிவு பாட்சா அவர்கள், சிரஷ்த்தார் றாமறாயர் அவர்கள், அமுதலிச்சாயிவு பாட்சா அவர்கள், கொங்கு மண்டலம் குரிப்பு நாட்டில் விசையாபுரத்துக்கு அமுலுதாரர் மம்முதல்லி சாயிவு அவர்கள், சேனபாகன் அன்னயன் அவர்கள் சிரச்த்தார் வெங்கிட்டய்யன் அவர்கள், அரச்சலூர் அமுலுதாரர் சுமானுக்கான் சாயிபு அவர்கள், செனபாக கோபால கிஷ்ட்டினய்யனவர்கள், சிரஷ்த்தார் கல்லய்யன் அவர்கள், துடுப்பூதி அமுலுதார் மீரண்சாயிபு அவர்கள், சேனபாகச் சின்னப்பன் அவர்கள், சிரஷ்த்தார் வீரறாகுவய்யன் அவர்கள், ஊத்துக்குளி அமலுதார் சாலீ சாயிபு அவர்கள், சிரஷ்த்தார் சேசகிரி அய்யர் அவர்கள், சேனபாக சுப்பய்யன் அவர்கள்,

குரிப்பு நாட்டுக் கவுண்டர்களில் அந்தியூர் காழியண கவுண்டன், அனுமந்த கவுண்டன், பொன்னைய கவுண்டன், நெட்டரங்க கவுண்டன், துடுப்பூதி வாரணவாசிக் கவுண்டன், அரசப்ப கவுண்டன், நாகய்ய கவுண்டன், பொன்னய கவுண்டன், றாமய கவுண்டன், சின்னத்தம்பிக் கவுண்டன், றாமய கவுண்டன், ஊத்துக்குளி சறபண கவுண்டன், பெரியதம்பிக் கவுண்டன், முத்துக் கவுண்டன், செல்லப்ப கவுண்டன், திருப்பூரு பொன்னய கவுண்டன், முதலிபாளையம் முத்துக் கவுண்டன், குன்னத்தூரு சீரங்க கவுண்டன், அறியூரு முத்துவேலப்ப கவுண்டன், ஆவுடையாக் கவுண்டன், கருப்ப கவுண்டன், திங்களூரு குள்ள கவுண்டன், முட்டத்து

றாம கவுண்டன், செவியூறு ஈஸ்வரமூர்த்திக் கவுண்டன் மேற்படியார்கள் முதல் இருபத்துநாலு நாட்டுக் கவுண்டர்கள் நாங்களெல்லோருங் கூடி யிடங்கயிலாகிய இருபத்திநாலு நாட்டு யிடங்கய்யாருக்கு நாங்களெல்லாருங்கூடி எளுதிக்கொடுத்த வெற்றிப்பட்டையம்.

பூந்துறைநாடு சபையில் பட்டக்காரர் தேவண கவுண்டர், வய்யாபுரிநாடு முத்துக்காளியப்ப கவுண்டர், காஞ்சி ஓடுபங்கநாடு முதலி பட்டக்கார கவுண்டர் அவர்கள், ஆருநாட்டு முதலி பட்டக்காரக் கவுண்டர் அவர்கள், பொன்குலுக்கி நாடு முதலி பட்டக்காரர் அவர்கள், வாரக்கநாடு சமையப்பட்டக்காரக் கவுண்டரவர்கள், குரிப்புநாடு சமையப்பட்டக்காரக் கவுண்டரவர்கள், காங்கயநாடு சமையப்பட்டக்காரக் கவுண்டரவர்கள், தேன்கரைநாடு சமையப்பட்டக்காரக் கவுண்டரவர்கள், வேங்கலநாடு சமையம்பட்டக்காரக் கவுண்டரவர்கள், ஒடுவங்கம் சமையப்பட்டக்காரக் கவுண்டரவர்கள், அரையநாடு சமையம்பட்டக்காரக் கவுண்டரவர்கள்,

எழுகரைநாடு சமயம்பட்டக்காரக் கவுண்டர், படையாச்சிக் கவுண்டன், சின்னாயிக் கவுண்டன், . . . . . நாடு படையாச்சிக் கவுண்டன், கருப்ப கவுண்டன், காஞ்சி ஓடுவங்கம் சமையம்பட்டக்காரர், பச்சைமுத்தாக் கவுண்டன், பூந்துறைநாடு பச்சா கவுண்டன், வடகரைநாடு படையாச்சிக் கவுண்டன், திருமலை மணியகாரன், சத்திமங்கலம் ஓடுபங்கம் முத்துக் கவுண்டன், ஆசாரிகள் சின்னத்தட்டான், திருவேங்கிடக்கொல்லன், கதித்தமலை ரங்கத்தச்சன், ஆணிமுத்துஆசாரி, பொம்மத்தச்சன், முத்துக்கொல்லன், நகரத்தான் தொப்பைசெட்டி, முத்தஞ்செட்டி, வடமஞ்செட்டி, கோவிந்தசெட்டி, பொக்கிஷக்கொல்லர் வகையில் கரியநாயக்கன், குள்ள சேர்வைக்காரன் முத்துரங்கயன், வெங்கிட்டநாயக்கன், பழ்ழர் வகையில் வீரபத்திரப்பண்ணாடி, குட்டிப்பன்னாடி, யிருளப்பப்பன்னாடி, சோணப்பண்ணாடி, மாதாரி வகைகள் குப்பமாதாரி, ரங்கமாதாரி, சின்னமாதாரி, . . . . . . மாதாரி . . . . . . யிவர்கள் முதலாகிய இருபத்து நாலு நாட்டிலுள்ள யிடங்கையாருக்கு செங்குந்தமுதலிமார் படையாச்சிக்கவுண்டர் அவர்கள் பஞ்சாளத்தார் பழ்ழர் மாதாரிகள் யிடங்கையோருகளும் வெற்றிப்பட்டையம் கொடுத்த விவரம்.

விசயமாநகரத்தில் மாரியம்மன் திருநாளிலே யிடங்கையாருக்கும் வலங்கையாருக்கும் யித்தண்டத்தாருக்கும் தண்டம் வந்து வலங்கைக் கவரைச் செட்டியாகிறவன் இடங்கையாருக்குள்ள சிகப்பு கத்தியும் விருதும் நமக்குச் செல்லுமென்று சொல்லிக்கொண்டு யித்தண்டத்தாரும் வழக்காடி ஆறு மாதம் ஒருவருசக் காலமாய் யித்தண்டத்தாரும் சாதியும் கூட்டிக்கொண்டு வழக்காயிருந்த யிடத்தில் மகாறாயர் றாயஸ்த்திரி திவான் கிரி மீரே சாயபு அவர்கள் சீமை விசாரணைக்கு விசயமங்கலத்திற்கு வந்திருந்தயிடத்தில் வலங்கை கவரை தேசம் பெத்திசெட்டி, சேடச்செட்டி, தேவாங்கச்செட்டி, சாணார் முதலான வலங்கைச்சனமும், யிடங்கைக்குச் சேர்ந்த முதலிமார், படையாச்சிக் கவுண்டரவர்கள், ஆசாரியள் யித்தண்டத்தாரும் வந்து வழக்குச் சொன்னபடியினாலே யித்தண்டத்தாரை பூருவந் தீர்ந்த பட்டையங்கள் வாங்கிக்கொண்டு திருப்பூருக்கு வரச்சொல்லிப்போட்டுப் போனபடியினாலே அதே மேரைக்கு யித்தண்டத்தாரும்

திருப்பூருக்கு வந்து பட்டையங்கள் வாசித்துப் பார்த்தமிடத்தில் யிடங்கையார் பட்டையத்தில் பூருவம் காஞ்சிபுரத்தில் தீர்ந்த பிரகாரத்துக்கு கத்தியும் பஞ்சவர்ண விருதும் அத்தநாரிக் குஞ்சமும் பகல்த் தீவட்டியும் பஞ்சவர்ணப் பாவாடையும் தெருமேல் மிரவணையும் அன்னமேல் மிரவணையும் குதிரைமேல் மிரவணையும் பல்லக்கின்மேல் மிரவணையும் செல்லுமென்று யிருந்தது.

வலங்கைக் கவரைச்செட்டியள் கொண்டுவந்த பட்டையத்தில் வலங்கை சனத்துக்கு வெள்ளைக்குடை வெள்ளை வெண்சாமரம் வெள்ளைவெட்டுப் பாவாடையும் வலங்கைச் சனத்துக்குச் செல்லுமென்று யிருந்தது. வலங்கைய்யர் கொண்டுவந்த பட்டையத்தில் யிடங்கையார்க்குச் செல்லும் விருது பஞ்சவர்ண விருதும் பஞ்சவர்ணக் குடையும் பகல்த்தீவட்டியும் கவரைச்செட்டி கொண்டுவந்த பட்டையத்திலே யிருந்தபடியாகவே பஞ்சாயத்தாரு . . . . . செட்டி வாலிசெட்டி வீரிசெட்டி முதலான பலபட்டறையார் முன்பாகத் தீர்ந்து வலங்கையான் . . . கொண்டுவந்த பட்டையத்திலே யிடங்கையாருக்குச் சகல விருதும் செல்லுமென்று யிருக்கிறபோது நீ யில்லாது குமார்க்கம் சண்டை பண்ணிக்கொண்டு யிருக்கக் காரணமென்னவென்று வலங்கைக் கவரைத் தேசம் பெத்திசெட்டியைப் பிடித்து அங்கை செய்து விலங்குபோட்டு அரமனைக்கு ரண்டாயிரத்து நாலுறு பொன்னு அவுதாரம் வாங்கி வச்சார்கள். யிடங்கையார் கிட்ட வெற்றிக்காணிக்கி ஆயிரத்தி அயினூறு ரூபா வாங்கி வச்சார்கள். வெற்றிப் பட்டையமுங் குடுத்தார்கள். மிரவணையும் பண்ணி வச்சார்கள். இதெ வெற்றிப்பட்டையமாக அனைவரும் கூடி எழுதிக் கொடுத்த வெற்றிப்பட்டையம். இதெ வெற்றிப்பட்டையமாக கட்டிக் கொள்ளவும்.

எழுதினவர் விசயாபுரிக்கெடியில் சிரஷ்த்தார் வெங்கிட்டய்யன் அவர்கள் எழுதினது. காமாச்சியம்மன் துணை. அந்தியூர்க்கச்சேரி ராஜஸ்ரீ திவான் கிரிமிரே சாயிபு அவர்கள், கச்சேரி சிரஷ்த்தார் இராமறாயர் அவர்கள், அமுதல்லிக்கான் சாயிபு அவர்கள், விசயாபுரித் துக்கிடியில் அமலுதாரர் மம்முதல்லி சாயபு அவர்கள், சேணபாக அன்னய்யன் அவர்கள், சிரஷ்த்தார் வெங்கிட்டய்யன் அவர்கள், அரச்சலூரு அமுலுதார் ராயசம் சுபாலு கான் சாயபு அவர்கள், சிரஷ்த்தார் கல்லய்யன் அவர்கள், சேனபாகக் கோபாலகிஷ்ட்டப்பயன் அவர்கள், துடுப்பூதி அமுலுதாரர் மீரான் சாயிபு அவர்கள், சிரஷ்த்தார் வீரராகவய்யன் அவர்கள், சேனபாகச் சின்னப்பன் அவர்கள், ஊத்துக்குளி அமுலுதார் சாலீ சாயேபு அவர்கள், சிரஷ்த்தார் சேஷகிரிஅய்யன் அவர்கள், சேனபாக சுப்பய்யன் அவர்கள், குரிப்புநாட்டுக் கவுண்டர்கள் அனுமந்த கவுண்டன், பொன்னைய கவுண்டன், அரசப்பக் கவுண்டன், குப்பண கவுண்டன், பட்டக்காரக் கவுண்டன், நாகப்பக் கவுண்டன், பொன்னைய கவுண்டன், றாமைய கவுண்டன், துடுப்பூதி வாரணவாசிக் கவுண்டன், சின்னத்தம்பிக் கவுண்டன், ராமைய கவுண்டன், ஊத்துக்குளி சரபண கவுண்டன், பெரியதம்பிக் கவுண்டன், முத்துக் கவுண்டன், செல்லைய கவுண்டன், திருப்பூரு பொன்னைய கவுண்டன், முதலிபாளையம் முத்துக் கவுண்டன், அந்தியூர் காளியண கவுண்டன், குன்னத்தூரு சீரங்கக் கவுண்டன், . . . . கவுண்டன், ஆதியூரு முத்துவேலப்பக் கவுண்டன், ஆவுடையாக் கவுண்டன், கருப்ப கவுண்டன், திங்களூரு குள்ள கவுண்டன், செவியூரு ஈஸ்வரமூர்த்திக் கவுண்டன்

இவர்கள் முதலாய் இருபத்தி நாலு நாட்டுக் கவுண்டர்கள் கையொப்பம். இந்தப் பட்டையத்தை யாதாமொருவர் இல்லைப் பொய்யென்று சொன்னவர்,

கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலே போகவும். தெய்வ தத்துவாராதி திருவிழக்கதையை நிந்தனை பண்ணின தோசத்திலே போகவும். மாதா பிதாவுக்கு வஞ்சகம் பண்ணின தோஷத்திலே போகவும். காமாச்சியம்மன் துணை உ.

# 52. நாட்டு நியாய ஓலை

தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறையின் சென்னை அலுவலகத்தில் இந்த ஓலைப்பட்டயம் உள்ளது.

இந்த ஓலைப்பட்டயம் லிங்கனூர் கருப்பமுதலி என்பவரைப் பற்றிய சாதி வழக்கினை விரிவாக விளக்கிக் கூறுகிறது.

24 நாட்டுச் சமயமுதலிப் பட்டக்காரர். வையாபுரிநாட்டுப் பட்டக்காரர், பொன்குலுக்கிநாட்டுப் பட்டக்காரர், வாரக்கநாட்டுப் பட்டக்காரர், ஆறைநாட்டுப் பட்டக்காரர் போன்ற முதலியார் குலத்தினரும், பழனிக் கவுண்டர், கருப்பண கவுண்டர், செல்லப்ப கவுண்டர், முத்துக் கவுண்டர் போன்றவர்களும் சேர்ந்து சுமார் 75 ஊர்களைச் சேர்ந்த நாட்டார்க்கும், ஊராருக்கும், சமூகத்தாருக்கும், கவுண்டர்களுக்கும், நாட்டாண்மைக்காரர்கட்கும், பெரியதனக்காரர்கட்கும், புள்ளிக்காரர்கட்கும், காரியக்காரர்கட்கும், உறவின்முறையாருக்கும் எழுதிக்கொடுத்த ஓலை. துன்முகி மாசி 14 என்று மட்டும் காலம் குறிக்கப்பட்டுள்ளது.

லிங்கனூர் கருப்பமுதலி என்பவர் முதலியார் சமூகத்தைச் சேர்ந்தவரா அல்லவா என்று வடமுகம் மணியகாரம்பாளையத்தில் வழக்கு நடைபெறுகிறது. கவுண்டர்களும், சமூகத்தார்களும், பட்டக்காரர்களும் ஆலோசனை செய்கின்றனர்.

ராக்கபாளையம் பெரியதனக்காரர் சின்னப்பமுதலி, நாட்டாண்மைக்காரர் மாரப்பமுதலி போன்றவர்கள் அக் கருப்பமுதலி தங்கள் உறவுக்காரர் என்றதால் அவர் முதலியார் சமூகத்தில் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்.

முதலியார்களின் குல குருவாகிய சுவாமியார் அங்கு வந்தபோது அவரும் அதனை விசாரித்து அவரை முதலியார் சமூகத்தவராகவே ஏற்றுக்கொண்டு காணிக்கை பெற்றுத் தீர்த்தமும் பெற்றுச் சிட்டாவிலும் பெயரைப் பதிவு செய்துகொண்டார்.

பின்னர் 4 கிராமத்து முதலியார்கள் சேர்ந்து இதற்கு எதிராகச் சுவாமியாரிடம் புகார் கூறியதால் மேற்படி லிங்கனூர் கருப்பமுதலியை சாதியைவிட்டு நீக்குவதாகச் சுவாமியார் இரண்டாவதாக ஓலை மூலம் அறிவிக்கிறார்.

சுவாமியாரின் இரண்டாவது திருமுகம் செல்லாது என்று லிங்கனூர் கருப்பமுதலிக்கு ஆதரவாகக் கவுண்டர்களும், செங்குந்தர்குலப் பட்டக்காரர்களும் சேர்ந்து பல ஊர்க்காரர்கட்கும் எழுதிக்கொடுத்த ஓலையே இதுவாகும். தாம் முதலியார் சமூகத்தைச் சேர்ந்தவர் என்பதை நிலைநாட்ட லிங்கனூர் கருப்பமுதலி எடுத்துக்கொண்ட முயற்சி இதில் விளக்கப்படுகிறது.

ஒரு சமூகத்தார் கூடி ஒருவரைச் சாதிக்குள் சேர்க்கலாம்; அல்லது நீக்கலாம் என்ற வழக்கம் இருந்ததை இச்செப்பேடு தெரிவிக்கிறது. முதலியார் சமூகத்தைச் சேர்ந்த இப் பட்டயத்தில் கவுண்டர்கட்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. அவர்களே முதலில் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர்.

## மூலம்

ஸ்ரீமத் சகலகுண சம்பந்நரான சகல ப்ரீதிபாலகரான பந்துசன சிந்தாமணிகரான பவுசுபாக்கியப் பிரமாணிக்கரான அன்னதான விநோதரான அஷ்டலட்சுமி ஐஸ்வர்ய சம்பந்நரான மித்துருசன மனோரஞ்சிதரான வெகுசன போஷகரான அரிபூசை குருபூசை மயேசுவரபூசை மறவாத பக்திப் பிரியரான வித்தைக்கு விநாயகரான புத்திக்கு விபீஷணரான பொறுமைக்குத் தருமரான போருக்கு வீமரான வில்லுக்கு விசயரான பரிக்கு நகுலரான சாஸ்திரத்திற்குச் சகாதேவரான சொல்லுக்கு அரிச்சந்திரரான கொடைக்குக் கர்ணரான அழகுக்கு மன்மதரான போகத்திற்குத் தேவேந்திரரான தனத்திற்குக் குபேரரான வடமுகம் ஆண்டிபாளையம், சீரயகவுண்டம்பாளையம், செட்டிபாளையம், இடும்பபாளையம், முருகம்பாளையம், கருப்பையகவுண்டம்பாளையம் இதுகளிலுள்ள மகாமேருவாகிய கவுண்டர்களுக்கும், நாட்டாமைக்காரர், பெரியதனக்காரர், புள்ளிக்காரர், காரியக்காரர் மற்றுமுண்டாகிய நம் உறவின்முறையார்கள் அனைவோர்களுக்கும்,

தொங்கிட்டிப்பாளையம், குமாரபாளையம், அலகுமலை, வேலாயுதம்பாளையம், இராமணம்பாளையம், கட்டூர்வலசு, உகாயனூர், பெத்தாம்பாளையம், மலையப்பாளையம், நல்லூர், சிங்கனூர், புதூர் இதுகளிலுள்ள மகாமேருவாகிய கவுண்டரவர்களுக்கும், நாட்டாமைக்காரர், பெரியதனக்காரர், புள்ளிக்காரர், காரியக்காரர் மற்றுமுண்டாகிய நம் உறவின்முறையார் அனைவோர்களுக்கும்,

கரிசமடை, இலவந்தி, கோட்டாம்பாளையம், மந்திரிபாளையம், சித்தநாயக்கன்பாளையம், வடுகபாளையம், சின்னியகவுண்டம்பாளையம், கள்ளிப்பாளையம், அப்பியாபாளையம், வேலம்பாளையம், சித்தம்பலம், செம்மிபாளையம், அக்கம்பாளையம், கரடிவாவி, போகம்பட்டி, பனம்பட்டி, தொட்டம்பட்டி, சித்தூர், கோதவாடி, பொரயபாளையம் இதுகளிலுள்ள மகாமேருவாகிய கவுண்டர்அவர்களுக்கும், நாட்டாமைக்காரர், பெரியதனக்காரர், புள்ளிக்காரர், காரியக்காரர் மற்றுமுண்டாகிய நம் உறவின்முறையார் அனைவோர்களுக்கும்,

கோவிந்தனூர், நடுப்பூணி, ஓடுகம்பள்ளம், நல்லியப்பள்ளி, சித்தூர், வேங்கோடு,

ராமச்சேரி, கொழுமணம், மேலார்க்கோடு, குனிச்சேரி எருமையூர், பழம்பாலக்கோடு, காரியோடு, கூட்டாலை, நடக்காவு, ஏகாசி இதுகளிலுள்ள மகாமேருவாகிய கவுண்டரவர்களுக்கும், நாட்டாமைக்காரர், பெரியதனக்காரர், புள்ளிக்காரர், காரியக்காரர், மற்றுமுண்டாகிய நம் உறவின்முறையார் அனைவோர்களுக்கும்,

கம்மாளவட்டி, நாகம், கோழிக்குட்டை, சனப்பம்பட்டி இதுகளிலுள்ள மகாமேருவாகிய கவுண்டரவர்களுக்கும் , நாட்டாமைக்காரர், பெரியதனக்காரர், புள்ளிக்காரர், காரியக்காரர் மற்றுமுண்டாகிய நம் உறவின்முறையார் அனைவோர்களுக்கும்,

இராயர்பாளையம், மாணிக்கபுரம், வேலம்பாளையம், மூணுமடை, சினக்காளிபாளையம், இடுவாய், வஞ்சிபாளையம் இதுகளிலுள்ள மகாமேருவாகிய கவுண்டரவர்களுக்கும், நாட்டாமைக்காரர், பெரியதனக்காரர், புள்ளிக்காரர், காரியக்காரர் மற்றுமுண்டாகிய நம் உறவின்முறையார் அனைவோர்களுக்கும்,

தாங்கள் இத்யாதி ஊர் நாட்டுக்கும் மகாமேருவாகிய கவுண்டரவர்களுக்கும், நாடு சமூகத்தார் அனைவோர்களுக்கும்,

கரப்பத்தூரிலெ இருக்கும் மகாமேருவாகிய கவுண்டர்களுக்கும், பழனிக் கவுண்டர், கருப்பய்ய கவுண்டர், முத்துக் கவுண்டர், செல்லப்ப கவுண்டர் மற்றுமுண்டாகிய கவுண்டர்கள் அனைவோருக்கும்,

இருபத்துநாலு நாட்டுச் சமயமுதலிப் பட்டக்காரர் குழந்தைவேலு முதலியாரும், கருமாண்ட வாண்ட வாத்தியாரும், இடும்பபாளையம் வையாபுரி நாட்டுப் பட்டக்காரரும், கரப்பத்தூர் வாரக்கநாட்டுப் பட்டக்காரரும், ஆறைநாட்டுப் பட்டக்காரரும், இடும்பபாளையம் பொன்குலுக்கிநாட்டுப் பட்டக்காரரும், கெணாசாரிநாட்டுப் பட்டக்காரரும், கரப்பத்தூர் நாட்டாமைக்காரர், பெரியதனக்காரர், புள்ளிக்காரர், காரியக்காரர் மற்றுமுண்டாகிய நம் உறவின்முறையார் அனைவர்களும் கூடி நாட்டுக்கு எழுதிய பராபாத்தியம் நாட்டோலை என்னவென்றால்,

துன்முகி வருஷம் மாசி மாதம் 13ஆம் தேதி லிங்கனூர் கருப்பமுதலி என்பவன் இதற்கு முன்னதாக வடமுகம் மணியகாரம்பாளையத்தில் இடும்பன்பாளையத்தானிடத்திலும் தன்பேரில் சில நாயமுண்டு என்கிறதாகச் சொன்னார்கள். சொன்னதைப்பற்றி நாடு சமூகம் கூடி விசாரணை செய்தோம். செய்ததில் ராக்காபாளையம் பெரியதனக்காரர் வகையறா, நாட்டாமைக்காரர் வகையறா இந்த இரண்டு தெருவிலும் லிங்கனூர் கருப்பமுதலியை பெரியதனக்காரன் சின்னியமுதலி என்பவன் என்னுடைய சொந்தப் பெரியப்பன் மகன்தான் என்கிறதாகச் சொல்லி ஒப்புக்கொண்டான்.

மேற்படியூர் நாட்டாமைக்காரர் வகையறாவில் குமாரமுதலி மகன்

மாரப்பமுதலியும், வேப்பமரத்தான் மகன் மாரப்பமுதலியும் இவர்கள் இரண்டு பேரும் லிங்கனூர் கருப்பமுதலி மகன் மூத்த பிள்ளையை என்னுடைய பங்காளி மகனுக்குக் கலியாணம் செய்திருக்கிறோம் என்கிறதாகச் சொன்னார்கள். கருப்பமுதலி பெண்சாதி ரங்காயி என்பவள் மேற்படி மாரப்பமுதலி இவர்கள் இரண்டு பேரும் மேற்படி காரியோட்டிலே இருக்கும் கருப்பமுதலி என்னுடைய பங்காளி அவனுடைய மகள்தான் ரங்காயி என்கிறதாகச் சொன்னார்கள்.

இது காரியங்கள் எல்லாம் மகாமேருவாகிய கவுண்டர்களும், நாடு சமூகத்தார்களும், பட்டக்காரர்களும் ஆலோசனை செய்து பார்த்து லிங்கனூர் கருப்பமுதலி பேரில் யாதொரு சந்தேகமும் இல்லை என்கிறதாக ஒப்புக்கொண்டோம். ஒப்புக்கொண்டு உண்பது தின்பது ஓட்டம் தோச்சல் கொள்ளக் கொடுக்கப் பந்திபோசனம் யாதொன்றும் தடையில்லாமல் புழங்கிக் கொள்ளும்படியாகத் தஸ்தாவேஜியும் கொடுத்தோம். அதன்பேரில் நாட்டில் கொள்ளக் கொடுக்கவும் ரொம்பவும் சிறந்து இருக்கிறது.

அப்படி இருக்கச் சாமியார் அவர்களும் இடும்பபாளையம் சவாரி வந்தபோது லிங்கனூர் நாயத்தைப்பற்றி மணியகாரம்பாளையம் அய்யம்பாளையம் காவிலிபாளையம் கொண்டபாளையம் இன்னம் சில ஊர்க்காரர்களும் நம்மிடத்தில் பிராது சொல்லிக் கொள்கிறதாகச் சுவாமியார் அவர்களும் சொன்னார்கள். அதன்பேரில் லிங்கனூர் நாயத்தை அடிதலை பூர்வமாய் நாங்களும் சாமியாரிடத்தில் சொன்னோம். சாமியார் அவர்களும் கேட்டு அந்த நாயத்தைப்பற்றி யாதொரு சந்தேகமும் இல்லை என்கிறதாக லிங்கனூர் குப்பமுதலி கருப்பமுதலியிடத்தில் காணிக்கையும் வாங்கித் தீர்த்தப் பிரசாதமும் கொடுத்து சிட்டாவில் பேரையும் எழுதிப் பதித்துக் கொண்டார்கள்.

இப்படியிருக்கச் சிலநாள் கழித்து நாலூர்க்காரர் போய்ச் சாமியாரிடத்தில் லிங்கனூர் குப்பமுதலி கருப்பமுதலி பேரில் நாயம் உண்டு என்கிறதாகச் சொல்லிச் சாமியார் அவர்களும் நீக்குதலையாகத் திருமுகம் எழுதித் தெரியப்படுத்தியிருக்கிறார்கள். ஆகையால் எனக்குச் சேரன் சோழன் தெய்வபாண்டியன் மூன்று இராசாக்களும் நவவீரர்வம்சம் என்பதற்கு சாதி நாயத்திற்கும் அதிகாரத்துவம் கொடுத்து நாலாயிரச் சில்வானம் வருவும் ஆகிறது. அப்படி நானும் நாட்டி நடத்தி வந்திருக்க இந்தத் தீர்மானத்தை அல்லவென்று திருமுகம் எழுதியிருக்கிறபடியால் இந்தத் திருமுகத்தைத் தொட்டு யாதொரு பாத்தியமும் இல்லை என்கிறதாக எழுதி நாட்டுக்குத் தெரியப்படுத்தியிருக்கிறோம். நாட்டுக்கும் கவுண்டர்களுக்கும் நாடு சமூகத்தார்களுக்கும் தெரியப்படுத்தியிருக்கிறோம்.

பழனிக் கவுண்டர் ருசு. கருப்பண கவுண்டர் ருசு.
செல்லப்பக் கவுண்டர் ருசு. முத்துக் கவுண்டர் ருசு.

கரப்பனூர் இருபத்துநாலு நாட்டுச் சமயமுதலிப் பட்டக்காரர் குழந்தைவேலுமுதலி ருசு. கருமாண்டவாத்தியார் ராமமுதலி ருசு. இடும்பபாளையம் வையாபுரி நாட்டுப் பட்டக்காரர் முத்தமுதலி ருசு. மேற்படி பொன்

குலிக்கி நாட்டுப் பட்டக்காரர் லிங்கமுதலி ருசு. கரப்பனூர் வாரக்கநாட்டுப் பட்டக்காரர் நஞ்சையமுதலி ருசு. ஆறைநாட்டுப் பட்டக்காரர் ருசு. பெரியதனக்காரர் சின்னைய முதலி ருசு. நாட்டாமைக்காரர் முத்தாமுதலி தற்குறி குழந்தைமுதலி ருசு. காமாட்சியம்மன் துணை.

இந்த நம்ம நாட்டு நாயத்து ஓலை ரொம்பக்காலம் பழகிப் போனபடியால் கொஞ்சம் எழுத்து போயிருந்தபடியால் நாங்கள் அந்த ஓலைக்குப்பதில் புது ஓலை போட்டு யுவ வருஷம் ஐப்பசி மாதம் 15 ஆம் தேதி எழுதியிருக்கிறோம். ஏட்டுக்குற்றம் எழுத்துக்குற்றம் வாசகத்தப்பு வரிமாறாட்டம் இருந்தபோதிலும் நீங்கள். அனைவோரும் பொறுத்துக்க வேண்டியது. கடவுள் துணை.

# 53. சேவூர்ச் செப்பேடு

கோவை மாவட்டம் அவிநாசி வட்டம் சேவூரில் முத்துக்குமாரசுவாமி கோயில் காணியாளர்களான கொளப்பலூர் அருணாசல முதலியாரிடம் இச் செப்பேடு உள்ளது.

1741 ஆம் ஆண்டு கச்சி அண்ணாமலை முதலியார் மகன் முத்துக் குமாரநயினார் திருப்பரண் ஏறிக் கழுத்தலகு பாச்சிச் சிவலோகம் ஏகிய செய்தியைக் கூறுகிறது. இதனை நவகண்டம் என்று பண்டைய கல்வெட்டுக்கள் கூறும்.

முதற்கண் செங்குந்த முதலியார்களின் பெருமைகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. கொங்கு 24 நாட்டுச் சமயமுதலிப் பட்டக்காரர்கள் உள்ளிட்ட சமூகப் பெரியவர்கள் கூடிய கூட்டத்தில் தலைப்பலி செய்து கொண்ட முத்துக்குமாரநயினார் தன் மகன் குப்பமுத்துவுக்கு ராஜாதிபதி மண்டலாதிபதி மடாதிபதி என்று பட்டம் சூட்டினார்.

செங்குந்தர்கள் மடாதிபதிக்குக் கொடுக்கவேண்டிய வரிகள் பல கூறப்படுகின்றன. செங்குந்தர் இடங்கைப் பிரிவினர் என்று கூறப்பட்டுள்ளது.

## மூலம்

பூவுலகத்திலே கலியுக சகாப்தம் 4842 ல் துந்துபி வருஷம் மார்கழி மாசம் 3 தேதி சுக்கிரவாரமும் திரிதிகை புனர்பூச நச்செத்திரத்தில் கச்சி அண்ணாமலை முதலி மகன் முத்துக்குமாரநயினார் திருப்பரணேரிக் கழுத்தலகு பாச்சிச் சிவலோக மேகினார்.

சொற்ஸ்ரீமன் மஹாமலாடலேஸ்வரன் அரிகர விபாடன் பாசைக்குத் தப்புவராத கண்டன் மூவராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் துலுக்கர்தள விபாடன் துலுக்கர்மோகந் தவிர்த்தோன் ஒட்டியர் துலுக்கரை ஓட்டி வென்றவன் அஷ்டகிரி மட்டும் அரசாளுமன்னன் கோஷ்டம் பதினெட்டும் கொண்ட கிருபாகரன் துஷ்டனுக்கிரகன் சிஷ்டபரிபாலன் தன்னுயிர் போல மன்னுயிர்க்கிரங்கும் மகாராஜன் அறிவுக்கு அகத்தியன் பொறுமைக்குப் பூமாதேவி குளிர்ச்சிக்குச் சந்திரன் நிதிக்குக் குபேரன் வில்லுக்கு விசையன் சொல்லுக்குத் தருமன் மல்லுக்கு பீமன் கொடைக்கு கர்ணன் ராஜாதிராஜன்

ராஜபரமேஸ்வரன் ராஜமார்த்தாண்டன் ராஜகெம்பீரன் ராஜரணசூரன் தேசமைம்பத்தாறிலும் ஜெயங்கொண்டவராகிய விசையமாநகரில் ரத்தினச் சிங்காசனத்திற்குக் காரணகர்த்தராகிய நரசிங்கராயர், வீரசந்திரராயர், விருப்பாச்சிராயர், பிரபுடதேவராயர், மகாதேவராயர், மல்லிகார்ச்சுனராயர், கிஷ்ணராயர், அச்சுதராயர், சதாசிவராயர், வெங்கிடபதிராயர், சீரங்கராயர், ஆனை குந்திராயர்,

மனுநீதி விபரமும் ஆறிலொரு கடமை கொண்டு ஒரு குடைக்குகீழ் ராச்சிய பரிபாலனம் பண்ணியருளிய மகாராஜனவர்களின் காரியப் பிரதானராகிய மைசூரில் சாமராசு உடையார் கொண்டி வீரராசு உடையார் நரசராசுடையார் தேவரர்சுடையார் சிக்கு தேவராசுடையார் மகாராஜனவர்கள் கொங்கு தாராபுரம் சீமையைச் செங்கோல் செலுத்துகின்ற சாலிவாகனன் கலியுகம் 4842 ல் துந்துபி வருடம் கனுவாயிக்கிங்கீழ் வகிக்காநின்ற சீமை முகாசி ஆறுநாடு சேவூரில் ஸ்ரீவெங்கராயனார் அரசில் குமார சோழியாண்டாக் கவுண்டர் நீதி செலுத்துகிற நாளில்,

சுப்பிரமணிய மூர்த்திக்குத் துணைவராகிய வீரவாகு, வீரகேசரி, வீரமயேந்திரன், வீரமயேஸ்வரர், வீரபுரந்தரர், வீரராக்கதர், வீரமார்த்தாண்டர், வீரராந்தகர், வீரதீரர் நவவீரராகிய சிவன்மைந்தர், திருமேனி காவலர் என விலங்கிலும் நா விலங்காதவர், பட்டமானம் பழுதறக் காத்தவர், இட்ட பரணேரி யிறங்காதவர், வல்லானை வென்ற வாசி வேளைக்காரர், பொய்த்தலைக்கு மெய்த்தலை கொடுத்தவர், கந்தனுசரர், காமாட்சி வரபுத்திரர், பஞ்சாட்சரம் பஞ்சவர்ன விருது மஞ்சள் பாவாடையுடையவர், ருத்திராட்ச மாலிகாபரணர், அரிபூசை குருபூசை மயேஷ்வர பூசையுள்ளவர், லவண்டை மல்லாரி முதல் 32 வாத்தியம் பெற்றவர், இரத்தப் பாவாடை சந்திராகாந்திப் பாவாடையும் பஞ்சவர்ணக்குடை பகல்வத்தியுடையவர், அர்த்தனாரிக் குஞ்சமும் ஆயுதம் பெற்றவர், ஆவடி சேவடி திருவடிபெற்றவர், காஞ்சிபுரத்தில் கருமாரி நிலை கொண்டவர், சற்சன சுத்த சிவாச்சாரியார், அசுரர்குல காலர், செருமுனை கண்டு பின்னடையாதவர், சென்றதிசை முழுதும் வென்ற தீரர், செங்கை வடிவேலினர், சீர்பாதசேகரர், என்று மனுநீதி கெடாதவர், செம்பியன் மனமெச்சும் செங்குந்த வீரர், தம்பியை மனமொத்த சாதியையொழிப்பர், ஈரேழுலகத்திலும் வீராதிவீரர், துஷ்ட நிக்கிரகர் சிஷ்ட பரிபாலனர்,

பல்லோர் புகழ்ந்திடப் பட்டணங் காத்தவர், சோணாடு கார்த்த சுகுண தீரர், வீணாள் கெடாத மென்மீசை யுள்ளவர், சேவல்க்கொடியுஞ் சிகண்டியுடையவர், வரம்பிலாவமரர் சிறைமீட்டவர், கடம்பமாலை தமழுமார்பினர், மந்தாரமாலை வாகுடன் பூண்டவர், நமச்சிவாயன் தேவியராகிய நவமாதர் ஈன்ற 100009 பதின்மரின்றுணைவர், கைலை காவலர், கைலாயத்தில் பார்வதி பரமேஸ்வரர் ஆடையாபரணமும் கைலாயங்கிரி மகமேரு மலையையும் பார்வதி தேவியார் தனது மகனாகிய வீரவாகு முதல் 100009 வீரரிடத்தில் ஒப்புவித்து இதுகளையெல்லாம் கைக்கொள்ளுங்களென்று திருவாக்கருளித் தமது திருக்கரத்தால் திருநீறிடப்பெற்றது முதல் கைக்கோள முதலிமாரென்று திருநாமம் பெற்றவர், இரவி பரவிட

இல்லசையாதவர், புரவலர் புகழும் போர்முகவீரர், பஞ்சாட்சரப் பரிபூரணர், வீரசிங்காசன மேவி வீற்றிருப்பவர்.

ஒட்டக்கூத்தரின் ஒப்பிலாத் ,தமிழுக்குச் சிரசிங்காசன மீந்தவர், வணங்கா முடியினர், சித்திரப் புலிக்கொடி சீராய்ப் பெற்றவர், வாசியும் விருதும் வன்மையுமுடியத் தேச மதிக்கச் செத்துப் பிறந்தவர், வாகீசையுடனே மகாதேவரைக் கண்டு காஞ்சிபுரத்திற் கருமாரி பாய்ந்தவர், சென்ற நான்முகனைச் சிகையைப் பிடித்தவர், கண்டுவரும் காளிதன் கைத்தாளம் பிடுங்கினோர், இறப்பதற்கென்றும் ஏங்காத தீரர், நாரணன்றனது நம்மருகர் என சீரணி தாரணி செப்பிடப் பெற்றவர், மன்மதனிருந்த மந்திரபுரியை வினவுமுடன் புகுந்து வெட்டியழித்தவர், வாணி குருமொழியை மறவாத செங்குந்தர் கோத்திரம் நீடூழி காலம் வாழி. கருமாரி கண்ட கைக்கோள முதலிமாராகிய கந்தனருள் பெற்றவர், கொங்கு 24 நாட்டுச் சமயமுதலி பட்டக்காரர், நாட்டாண்மைக்காரர், உறவின்முறையார், எழுகரை நாட்டுச் சமயமுதலி பட்டக்காரர், நாட்டாண்மைக்காரர், நம்ம இடங்கையர், மேற்படி கம்பளத்தார் எல்லோருங் கூடி கலியுக சகாப்தம் 4842 ல் துந்துபி வருடம் மார்கழி மாசம் 3 ந்தேதி குருவாரமும் புனர்பூச நச்செத்திரமும் சுபநாம யோகமுங் கூடிய சுபதினத்தில் செம்பியன் கிழா நாட்டுக்குச் சேர்ந்த சேலூர் ஆறு நாட்டில் கூடி முத்துக்குமாரசாமியாரவர்கள் மஞ்சன் நீர் குடித்து வளர்த்தின மகன் குப்பமுத்துமுதலிக்கு முத்துக்குமாரநயினாரவர்கள் தமது சிவபூசை முஸ்தேதியெல்லாம் ஒப்புவித்துக்கொடுத்து தமது மகனாக நாட்டிலே சுத்தி வருகிறபடிக்கு நாடு கூட்டி குப்பமுத்துமுதலிக்கு ராஜாதிபதி மண்டலாதிபதி மடாதிபதியென்று விளங்கிய வைராபதியப் பட்டமும் கொடுத்து நாட்டிலே வரி நடந்து வருகிறபடிக்கு எழுதிக்கொடுத்த சாசனம்.

தேவபூசை நடக்கும்படிக்கு பேரூருக்கும் சித்தூருக்கும் உள்படி வைராபதிவரி பாக்கத்துக்கு 1 1/4 ஒரு பூட்டு நூலும் வந்த ஆள்களுக்குப் பரிசாரகமும் இந்தப்படி சம்மதித்து கொங்கு 24 நாட்டார்களும் எழுகரை நாட்டார்களும் நம்ம இடங்கை வகைராக்களும் கூடி முத்துக் குமார நயினார் முன்பாகத் தீர்த்து சந்திரசூரியருள்ளவரைக்கும் நடந்துவரும்படியாக சேலூர் திருக்கபாலீசுவரர் சன்னதியில் எழுதியது. ஏறுக்கு 1/4, தூக்குக்கு 1/4, பட்டரைக்கு 1/4. இந்த தர்மத்தை சந்திரசூரியருள்ளவரைக்கும் மேலே கண்ட சகலரும் நடத்தி வருவோமாகவும்.

இந்த தர்மத்திற்கு யாதாமொருத்தர் ,விகாதம் பண்ணின பேர்கள் காசிக் கெங்கையிலே கோதாவரியிலே கன்னியாகுமரியிலே பாவநாசத்திலும் திருக்குற்றாலத்திலும் பிராமணரையும் யோகீசுபரரையும் குருக்களையும் தாய் தந்தயரையும் காராம்பசுவையும் கொன்ற தோஷத்துலே போகக்கடவார்கள். இந்தத் தர்மத்தைப் பரிபாலனம் பண்ணின பேர்களுக்கு அஷ்ட ஐஸ்வரியமும் ஆயுராரோக்கியமும் சந்தான சமுரத்தையும் தெய்வப் பிரசாதமும் குரு பிரசாதமும் ராஜப் பிரதாபமும் மென்மேலுண்டாகத் தக்கதாக காமாட்சிதேவியும் சுப்பிரமண்ணியசாமியும் முத்துக்குமாரசுவாமியும் கிருபைசெய்து ரட்சிப்பார். சுபம்.

# 54. மோரூர்க் காங்கேயர் ஏடு

இராசிபுரம் ஊனையாம்பட்டிக் கவிஞர் ந. கந்தசாமி அவர்கள் வழங்கிய காகிதப்படியைக் கொண்டு இப்பட்டயம் பதிப்பிக்கப்படுகிறது.

மோரூரில் கொங்கு வேளாளரில் கன்ன குலத்தைச் சேர்ந்த காங்கேயர் என்பவர் வாழ்ந்து வந்தார். எழுகரை நாட்டுக்கு அவர் தலைவர். அவருக்குக் கன்னிவாடிக் காங்கேயர் என்றும் பெயர் உண்டு. அவருடன் வாழ்ந்து வருபவர் 60 கரண காங்கேயன் என்னும் இடங்கை செங்குந்தர் குலத்தைச் சேர்ந்த நல்லய்யன் மகன் நல்லய்யன் என்பவர்.

தம்முடைய தலைவராகிய காங்கேயருக்குப் பிள்ளையில்லை என்று அந்தணரைக் கொண்டு நடைபெறும் வேள்வியில் செங்குந்த குல நல்லய்யன் மோரூர் நல்லபுள்ளியம்மன் கோயிலில் அம்மன்முன்னிலையில் தன் தலையை இருதுண்டாக வெட்டிக் கொண்டான். அவன் வீரத்தைப் பாராட்டி அவன் வழியினர்க்குக் கன்னிவாடியில் இருக்கும் இடங்கை உரிமைகள் யாவும் மோரூரிலும் வழங்கப்பட்டன.

செங்குந்தர்கட்கு அர்த்தநாரீசுவரன் முன்னிலையில் நியாயம் பேசும்உரிமை வழங்கப்படுகிறது. அவர்கட்குக் கொடுக்கும் கொடைகள் பற்றியும் இறுதியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

எழுகரை நாடுபற்றிய செய்திகட்கு நல்ல குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. எடப்பாடி இராமசாமிப்பத்தர் என்பவர் செப்பேட்டை வெட்டியுள்ளார்.

செங்குந்த நல்லய்யன் தன் தலையை வெட்டிக்கொள்ளும் நிலையில் ஒரு சன்னதி மோரூர் கொங்கு வேளாளரில் கன்னகுலக் காணிக்கோயில் நல்லபுள்ளியம்மன் கோயிலில் உள்ளது. செங்குந்த முதலியார்கள் மட்டுமே அத்தெய்வத்தை வணங்குகின்றனர். முத்துக்குமாரசுவாமி கோயில் என்று அழைக்கப்பெறுகிறது. அக்கோயிலே தன் தலையை வெட்டிக்கொண்ட நல்லய்யனின் பள்ளிப்படைக் கோயிலாகும்.

தமிழ் ஆண்டு துந்துபி ஆவணி 25 ஆம் தேதி திங்கட்கிழமை எழுதப்பட்டது என்ற குறிப்பு உள்ளது.

---

* தேனோலை எண் 23, சனவரி 80, பக். 41-43

## மூலம்

ஸ்ரீமத் நந்திகேசுபரசுவாமியார் அனுக்கிரகத்தாலே திருவாய் மொழிந்த படிக்கு அநேகம் சதுயுகம் பூசை கொண்டருளிய தேவாதிதேவன் தேவுத்தமன் பத்திப்பிரியன் பத்தயசாசனன் பார்வதிமணாளன் திருபொஷ்கரணி முக்கணீசுவரன் நின்றகோல மழகிய நிமலன் நிறமொரு பஞ்சவர்ணப் பிரகாசன் தெண்டாயுத அஸ்தன் செம்புத்தீவில் திராவிடதேசத்தில் தொண்டைமண்டலத்தில் காஞ்சி மாநகரில் திருக்கம்பையாற்றில் பார்வதி தேவியம்மன் அர்த்த பாகம் பெறவேண்டிய அரியதபசி பண்ணுகையில் வாமபாகம் பெத்தருளிய அம்மன் வீரபாகுவைப் பார்த்து நீங்கள் ஆறுபேரும் தேவர் சேனையை மீட்டபடியினாலே உங்களுக்கு அரவகிரியைச் சூழ்ந்த எளுகரை நாட்டுக்கும் கொங்கனனென்றும் பேருமிட்டு பட்டாபிஷேகம் சூட்டுகிறேனென்று அம்மன் கட்டளையிட்டபடிக்கு கொங்குமண்டலத்திலே தெட்சின கைலாசமாகிய அரவகிரியைச் சூழ்ந்த எழுகரை நாடெனும் காவேரி பவானி திருமனிமுத்தாநதி அமுகுமுரிச்சான் தொப்பை ஆம்பிராந்தி நொய்யல் ஆக சத்த நதியாகிய எழுகரை நாட்டிலுள்ள சிவசந்நதிகளும்,

பூந்துறைநாடு, பூவாணிநாடு, வஞ்சிநாடு, சேலநாடு, இராசிபுரநாடு, பருத்திப்பள்ளிநாடு, ஏழூர்நாடு வாழவந்திநாடு, அரையநாடு மற்றுமுண்டான சிவசந்நிதிநாடு உறவின் முறையாரும் குடிபிரிதி சிட்ட பரிபாலனம் பண்ணி அருளா நின்ற திருவளம் வீரலட்சுமி விசயலட்சுமி வாசராகிய களம் வம்முசபரிபாலராகிய ஆதி கன்னிவாடி அறுபது காங்கேயரோட அறுபது கரணகாங்கேயன் என்னு இடங்கை பட்டமுத்து நல்லய்யன் குமாரந் நல்லய்யன் மோரூரு காணி துந்துபி வருஷம் ஆவணி மாதம் இருபத்தைந்தாந்தியதி திங்கட்கிழமை சப்தமி திருவோண நட்சத்திரத்தில் அறுபது காங்கேயனுக்கு வெகுநாளாய் பிள்ளையில்லாமல் அறுபது கருண காங்கயனென்று வந்த நல்லய்யன் குமாரன் நல்லையன் அறுபது காங்கையனுக்குப் பிள்ளை வரம் வேண்டி நல்ல புள்ளியம்மன் சந்நதி முன்பாக பச்சைப் பார்ப்பான் ஹொரிவி செய்து வைராக்கியம் செய்து தன் செரசினை இருதுண்டாக வெட்டி செயங்கொண்ட குமாரன் நல்லய்யன் பேரிலே சந்தோசமாகி பின்பு அறுபது காங்கேயனுக்கு என்ன வேண்டுமென்று கேட்க தேவரீர் நமக்குக் கன்னிவாடியில் இடங்கைக்குட்ப்பட்டது நடந்த மேரைக்கு வடக்கிலேயும் நடப்பிக்க வேணும் தேவரீர் என்று கேட்க,

அப்படியே தருகிறோமென்றுகையில் கீழ்கரைப் பூந்துறை நாட்டில் அரவகிரியில் அறுபது கரண காங்கயரும் செங்குந்த கோத்திர உறவின் முறையாரும் இடங்கை முதலான உறவின் முறையாரும் ருத்ரோத்காரி வருஷம் புரட்டாசி மாதம் சனிக்கிழமை பதினைந்தாந் தியதி சனிக்கிழமை மாளிகைபிச்சம் உத்தரநட்சத்திரம் இந்தச் சுபதினத்தில் கூடி முருகாவுடையார் சந்நிதி இந்திர விமானத்தேர் முன்பாக இருப்புமுக்காலி வைத்து ஆசாரஞ் செய்து பன்னிரண்டு சுமைபோட்டு அக்கினி எரியவிட்டு அறுபது கரண காங்கயனை அதின்மேலே இருத்தி ஆண்டவர் சிட்டந் தரித்து பட்டம் வைத்தும் குருக்கள்மார் ஆறுபேரும் கும்பாபிஷேகம் பண்ணி அட்சதை தாம்பூலம் குடுத்து,

இனிமேல் செங்குந்த கோத்திரத்திற்கு நடக்க வேண்டிய சாதி ஞாயம் அர்த்தபாகம் முன்பாக கட்டளை இட்டோம். சொன்ன விபரமாவது விசாரிக்கும் போது அடிக்கரை பணம் ஆறு வைத்து மேல் ஞாயம் பேசவும். செங்குந்தர் குத்தத்துக்கு அவுதாரம் பணம் பன்னிரண்டு வாங்கக் கட்டளையிட்டார். காரர்ளர் காணிக்கை ஏருக்கு கால் பொன்னும், செங்குந்த சாதிகள் மக்கத்துக்கு வராகன் கால், தேவடியாளுக்கு மூக்குத்திக்குப் பணம் மூன்று, கண்ணாளர் அரசுக்குச் சாதிக்கு தலைக்கட்டுக்குப் பணம் ஒன்று, வன்னியகுலத்தார் மோழிக்குப் பணம் ஒன்று, சிவப் பிராமணர் அரிசிப் படிச்செலவு விசாரிக்கும் விபரம். நகரத்துச் செட்டிக்குக் குடிப்பணம் ஒன்று, பகடை பட்டரைக்குப் பணம் இரண்டு, இந்தப் பிரகாரம் கட்டளையிட்டு ஏழுகரை நாடும் கூடி செப்பேடு சாசனப் பட்டயம் எழுதிக் கொடுத்த பிரகாரம் சகலமான பேரும் தெரியப் பல்லக்கு மேலே வைத்து குதிரை தீவட்டி சூரியப்பானு பதினெட்டு விருது கொடுத்து வீதி மெரவனை பண்ணிவைத்து மேள வாத்தியத்துடனே மண்டபத்திலே வச்சு இந்த அர்த்தபாகம் அறிய ஆறும் பன்னிரண்டும் உன்னுதென்று அனைவரும் திருவாக்குக் கொடுத்து அடிபணிந்தார்கள்.

அர்த்தபாகம் சந்திர சூரியர் நல்லபுள்ளியம்மன் பாதம் அறிய இதுக்கு ஆரொருவன் அனாத்தியம் பண்ணினவர்கள் வம்சமும் அழிந்து அழிஞ்சி போயும் கெங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ன தோஷத்தில் போவானாக. மாதா பிதாவைக் கொன்ன தோஷத்தில் போவானாக. குருவுக்கு ரண்டகம் பண்ணின தோஷத்தில் போகக் கடவாராக. அரிபூசை சிவபூசை குருபூசை மகேசுவரபூசை தடுத்தவர்கள் போற நரகத்தில் போகக்கடவாராக. ஸ்ரீவதை சிசுவதை பண்ணின தோஷத்தில் போகக்கடவாராக. இனிமேல் வரப்பட்ட காலா காலங்களுக்கும் யுகங்களுக்கும் இந்த பட்டயத்துக்கு இரண்டகம் பண்ணப் பட்டவர்கள் வம்சமும் போகக் கடவது.

சிவமயம். அர்த்தபாகம் துணை. நல்லபுள்ளியம்மன் துணை. சுப்ரமணியர் துணை. காமாட்சியம்மன் துணை. காரி விநாயகர் துணையிருந்து ரட்சிப்பார். அனைவர் சொல்படிக்கு எழுதிய எடப்பாடி ராமசாமிப் பத்தன் செய்தது.

# 55. திருமுருகன்பூண்டி நாடார் செப்பேடு

கோவை மாவட்டம் அவனாசி வட்டம் திருமுருகன் பூண்டியில் நாடார் சமூகத்தாரிடம் இச்செப்பேடு உள்ளது. தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறை அலுவலர்கள் இரா. பூங்குன்றன், எஸ். இராசகோபால் ஆகியோர் அளித்த படியைக் கொண்டு இங்கு பதிப்பிக்கப்படுகிறது.

நாடார்களின் தோற்றம் புராண மரபில் முதலில் கூறப்படுகிறது. அவர்களுக்குரிய சிறப்புக்கள், பெருமைகள், அவர்கள் தொழிலின் பெருமை உபயோகிக்கும் பொருள்கள் ஆகியவை பற்றிய செய்திகள் நயமுடன் எடுத்துக் கூறப்படுகின்றன. கன்னியரிடம் முதலில் தோன்றிய ஏழுபேர் பின்னர் பெருகியவுடன் ஏற்பட்ட குலப்பரிவுகள், அவர்கள் குலகுரு, வணங்கும் தெய்வங்கள் ஆகியவை பற்றிய செய்திகள் மிகவும் விரிவாகக் கூறப்படுகின்றன. இறுதியில் பல மூப்பர்கள் கையெழுத்திட்டுள்ளனர் .

தொடக்கத்தில் பனைமரத்தில் மனிதன் ஏறும் காட்சியும், அரிவாள், பானை, கத்தி தீட்டும் கட்டை ஆகியவற்றின் உருவங்களும், இறுதியில் வில், சந்திர சூரியர், வில்அம்பு, காளி, சிங்க ம், நாயக்கர் ஆகியோரின் உருவங்களும் செதுக்கப்பட்டுள்ளன.

அளகாத்திரி நாயக்கர் காலத்தில் நிகழ்ச்சிகள் நடைபெற்றதாகக் கூறப்படுகிறது. காலம் 14. 4. 1670 ஆகலாம்.

## மூலம்

ஸ்வஸ்தஸ்ரீமன் மகாமண்டலீஸ்வரன் அரியதள விபாடன் ஆரியமோகம் தவிழ்த்தான் ஒட்டியதள விபாடன் ஒட்டியமோகம் தவிழ்த்தான் ஆரில் ஒன்று கடமை கொண்டு அருள்பெருகி அன்பு கூர்ந்து ஆதுர சாலையும் அந்தணர் வேள்வியும் வேத ஒலியும் விழாவறா வீதியும் தபோதணர் மடங்களும் தர்ம சாலைகளும் இச்சையில் 32 அறம் விளங்கி யெம்மண்டலம் திரைகொண்டருளிய ராஜாதிராஜன் ராஜபரமேஸ்வரன் ராஜமார்த்தாண்டன் ராஜகெம்பீரன் ராஜமானோபயங்கரன் கடல் கலங்கிலும் காவேரி வத்திலும் மலையலிங்கிலும் மனம் கலங்காத தீரன் கண்டனாடு கொண்டு கொண்டநாடு குடாதவன்.

சொல்லுக்கு அரிச்சந்திரன் அழகுக்கு அனங்கந் அரிவுக்கு அகத்தியன் வில்லுக்கு விஜயன் பரிக்கு நகுலன் நடைக்கு கர்ணன் போருக்கு பீமன் சாஸ்திரத்துக்குச் சகாதேவன் அஸ்வபதி கஜபதி தனபதி நரபதியாகிய மதுரையூரு ரத்தின சிம்மாசனத்துக் குடையவனாகிய அளகாத்திரி னாயக்கன் றாச்சிய பரிபாலனம் செய்கிற னாளையில் ஆதி னாளையிலே கைலயங்கிரிக்கு அதிபராகிய பரமசிவன் எரும்பு கடை யானை முதல் எண்பத்து னான்கு நூறாயிரம் ஜீவாற்றுமாக்களுக்கும் படியளந்து வறுகுரபோது மேரு கிரிக்கும் வடபால் னயம சாரனியத்தில் ஆதிசேஷன் நஞ்சிலுதித்த கன்னிகளை பரமசிவன் அக்கினி ரூபமாயிப் பிறவேசிக்கவும் அந்த 7 கன்னிகள் வயத்தில் செனித்து வனமாளப்பட்ட பத்திரகாளி கிருபையால் வளர்ந்து அடக்கமுடையாராகிய னாடாதிநாடான் நாட்டுவன் மதுரையான் போர்முடயராகிய கோனாடன் சங்கனி கொங்கன் யிவர்களுக்குத் தலைவனாகிய யேனாதியென்றும் யிந்தப் படிக்கு 7 பேருக்கும் பேர் கொடுத்து சகல வித்தையும் கற்பித்து வேண்டிய வரங்களும் பெற்றுக்கொண்டிருக்க,

அப்போது பரமசிவன் யிவாளுடைய சவுரியங்களை அரிந்து மகாவ்ருஷம் வளைத்துக் கள்ளிரக்கி பூணாரம் பூணும்படிக்கி திருப்பாற்கடலில் தேவர்கள் முனிவரும் அமுர்தம் கடைய னாகன் நஞ்சு கக்கவும் தும்பிக்கையுள்ள அய்யன் பிறந்தார். அப்போது கன்னிகளுடைய கற்பு நிலையானது. கயிலையாகிய மத்துளியாக ஒரு வருஷமாக வெளிப்பிரப்படவும் பரமசிவன் கண்டு சிறுநகை கொண்டு கயிலைக்கும் வடபால் வளமையாறுக்கு சொல்லி பின்பு 7 பேரையும் அளைத்து அடக்கமுடையார்க்கு தின சிறிதிக்கி பூங்காவனத்துக்குப் போய் புஷ்பங்களெடுத்துக் கொண்டு கல்பக விருஷத்தை கையால் தட்ட தலைசாய்த்து கொடுக்குமதின் பாலை வாங்கி காவிடி கட்டிக் கொண்டு ஆராதனைக்கு குடுத்து வரும்படி கட்டளையிட்டு போர்முடையாரை பூலோகத்துக்கு போக கட்டளையிட்டார். அடக்கமுடையார் பரமசிவன் கட்டளைப் படிக்கு நடந்துகொண்டு சிலகாலம் பணிவிடை செய்து வருகிறபோது ஒருநாள் பூங்காவனத்தில் புஷ்ப ஜாதிகளெடுத்துக் கொண்டு பாலிறக்கி காவடி கட்டிக்கொண்டு அடக்கமுடையார் வரவும் பத்திரகாளி பணிவிடைப் பெண்களில் பேச்சி அலங்காரி அரசி நீலி யென்று 4 மோகினிப் பேய்ப்பெண்கள் திருமஞ்சனமெடுத்துகொண்டு எதிர்படவும் அடக்கமுடையார் கண்டிச்சு நாலு பெண்களும் யிச்சை வலையிலகப்பட்டாற். அப்படிவே அடக்கமுடையார் கொண்டு வந்த பாலும் தொவைந்து மலரும் அலர்ந்து போகவும் யிந்த பெண்கள் கொண்டுவந்த திருமஞ்சனம் கருத்து மல்ரும் அலரவும் கற்ப்பு அழிந்ததைக் காளிகாதேவி பரமசிவனுக்கு அறிவிக்க ஞானக்கண்வளியால் இவர்களுடைய இச்சையும் ஆசாபாசமும் அறிந்து இனிமேல் யிவ்விடத்துக்கு யோக்கி. யில்லையென்று நயமிசாரணியத்தில் 4 பேய் பெண்களையும் 4 பேர்க்கு பாணிக்ரகணம் செய்து அன்னக்கொடி அனுமக்கொடி கருடக்கொடி சிம்மக்கொடி புலிக்கொடியும் கட்டுச்செயிது விருதும் கட்டாரி கேடயம் யெரியம்பு சூரி பலுசு வில் வளைதடி சக்கரமும் வெள்ளைக்கொடை வெஞ்சாமரமும் மகரதோரணம் பஞ்சாங்கராயன் மேல்கட்டு பகல்தீவட்டியும் கட்டு செயிது 18 வகை மேல் வாத்தியத்துடனே பூலோகத்துக்குப் போகும்படியாயி பரமசிவனுக்கும் காளிகாதேவியும் அப்பனை குடுக்க,

அப்போது அடக்கமுடையாராகிய 4 பேரும் உமையவளாகிய பத்திரகாளியையும் சதாசிவனையும் வலம்பிரியாயி சுத்திவந்து தெண்டனிட்டு கைக்கட்டிக்கொண்டு யெங்களை பூலோகத்துக்கு போகும்படி விடைகுடுத்தது சரி 7 போர்முடயாரை முன் அனுப்பீனீர்களே யினி எங்களுக்கு காணி பூமியும் குருவும் கொலமும் எங்களுக்கு சீவனும் எங்கேயென்று கேள்க்க பரமசிவன் கிருபை கூர்ந்து சரவணையிலுதித்த ஆண்டவரை ப்ரணவத்தால் தமது வாக்குனாலே திருக்கடையூரில் ஸ்ரீவத்ச குலத்தில் யஜுர் வேத ஓவோறாயன சூத்திரத்தில் மார்க்கண்ட கோத்ரம் ஆண்ட சிவசுப்ரமண்ய பண்டிதர்க்கு பரமசிவனாகவும் உபதேசித்து அடக்கமுடையாராகிய 4 பேருக்கும் உபதேசம் செய்வித்து உங்களுடைய வம்முஷத்துக்கு குருவாகிய ஆண்ட சிவசுப்பிரமணிய பண்டிதரென்று விடை குடுக்க,

பரமசிவன் காளிகாதேவி முன்பாக வுட லுயிரு பொருள் மூன்றும் குருவுக்குத் தாரை வார்த்தார்கள். சீவனத்துக்கு கல்பக விருக்ஷத்தை அளைத்து பூலோகத்தில் அய்ம்பத்தாரு தேசமும் விளங்கச் செய்து பத்ரகாளி சாபத்தால் ஏரியெரங்கும் திருமேனியென்றும் பூலோகத்துக்கு கல்ப்பனை மரமென்றும் பேரிட்டு சந்திரனை வாளாகவும் மதுகொடலைக்கு அரைபொட்டியாகவும் வாடாத மாலையாகிய முப்புரி நூலெடக்கயிறாகவும் காளியுடைய பாதச்சிலம்புகள் கயிறாகவும் கைதீண்டு முறுக்கங் கோலாகவும் கமண்டலம் அமுர்த கலசமாகவும் குடுத்து அந்த விருட்சத்தில் அமுர்தம் கலியுகத்தில் கள்ளென்று கூறவும் மானிடர் கொள்ள மௌனம் காணுமென்று அதை ஏரியெறக்கிவந்து பாகம் செய்து கருப்புக்கட்டியாக்கி கோயில் கொளம் பிள்ளைபெற்றவர் அம்மைவிளையாட்டு முதலான தர்மங்களும் ஓங்களைச் சேறுமென்றும் ஓலை சரஷ்வதி விலாசமாகவும் புராணமுதலானதும் விளங்கும்படி வாங்கிக்குடுத்து கொலதெய்வமாகிய புட்டாவாத்தாளாகிய நாடாச்சியம்மையேயும் கொள்ள துரையப்பனும் தும்பிக்கையுள்ள அய்யனையும் பத்திரகாளியையும் குருவாகிய ஆண்டசிவசுப்பிரமணிய பண்டிதரையும் முன் பூலோகத்துக்கு அனுப்பி,

பின்பு இவாளுக்கு மதுரை வளநாடர்களென்றும் சோழவளநாடர்களென்றும் கலிகால சோழநாடாதிபதியென்றும் சீர்கொண்ட மதுரை நாடாரென்றும் பெயர் கொடுத்து மதுரை மாநகரத்துக்குச் சகல விருதுகளுடனேயும் நாட்டதிகாரிகள் திருவிடதேசம் முதலும் கொங்கேழும் தெரிசித்து மீனாட்சி சொக்கநாதரையும் தெரிசித்து காணி பூமி பட்டம் பரிவட்டம் பெற்றுக்கொண்டு யிப்படி யதிகாரம் செலுத்தி வரும் நாளையில்,

கலியுக சகாப்தம் மூவாயிரத்தி முன்னூறு மேல் செல்லாநின்ற சாதாரண வருஷம் சித்திரை மாதம் 17 ந்தேதி சுக்கிரவாரமும் பஞ்சமியும் திருவோண நக்ஷத்திரமும் விஜஊநாமயோகமும் பாலவாகரணமும் கூடிய சுபதினத்தில் மதுரை மாநகரிலுள்ப்பட்ட காணி பூமி பெற்று தமது குருவாகிய சுப்பிரமணியரும் சுகமேயிருக்க நாடானுடைய வயிற்றில் 4 லட்சத்தி எண்பதினாயிரம் பேர் பிள்ளைகள் ஜெனித்து எல்லவரும் ஒருமுகப்பட்டு மார்க்கண்ட குலாதிபனாகிய ஆண்ட சிவசுப்பிரமணியர் பட்டத்தில் தீட்சை திருமுடி செய்வித்துகொண்டு புத்திர

பவுத்திர பரம்பரைக்கும் வுடலு உயிரு பொருள் மூன்றும் குருவுக்குத் தாரைவார்த்துக் குடுத்து குருகாணிக்கை வருஷப் பிரதியும் குடி 1 க்கு திருவால் 5 பணமும் ஒரு தரகு கருப்புக்கட்டியும் குடுத்துக்கொண்டு யெங்கள் குலத்தில் ஞாயம் வாக்கு யெப்பேர்ப்பட்டதும் குருக்கள் முன்பாய் தீர்த்துக் கொள்வோம் என்றும் குருக்கள் யிட்ட தென்டினைகள் அபராதம் குத்த சத்தம் யாவதுக்கும் வுள்ப்பட்டிருப்போமென்று தாமிர சாதனமும் யெளுதிவைத்துக் குடுத்து மீனாச்சி சன்னதியில் கல்வெட்டும் போட்டு கொங்கில் ஸ்கந்தபுரியில் குருக்களுக்கு மானியமும் விட்டுக் கொண்டுயிருந்தபேர்,

மதுரை மாநகரம் பட்டம் பொன்னரங்க நாடான் இலங்கைய நாடாதி வல்லாக்கநாட்டாத்தன் மதுரை வள நாடார்கள் யிப்படி 4 பட்டமும் கொண்டு முகப்புக்கதிகாரி சிலம்பரமுகப்பன் கந்தசாமிமுகப்பன் திருவெளுதிமுகப்பன் அழகமுகப்பன் வேல்முகப்பன் விலங்கமுகப்பன் காளிமுகப்பன் அம்மையடிமுகப்பன் பொதியமுகப்பன் பொங்காளிமுகப்பன் பொன்னரங்கநாடான் சின்னதம்பிநாடான் செங்காளிமுகப்பன் பெரிச்சிமுகப்பன் சொக்கலிங்கநாடான் கொங்கமுகப்பன் பிருவமுகப்பன் மசயமுகப்பன் பள்ளிக்கூடத்தார்முகப்பன் சிவனடிமூப்பன் பச்சைமூப்பன் ராவுத்தமுகப்பன் வெள்ளப்பள்ளிமூப்பன் இப்படி நாங்களெல்லாரும் சம்மதப்படிக்கு,

ராஜஸ்ரீ சேரன் சோழன் பாண்டியன் யிந்த சொக்கலிங்க நாயக்கர் தும்பிச்சி நாயக்கர் முன்பாக எழுதிய தாம்பிர சாசனம். இந்தத் தருமத்துக்கு யாதாமொருத்தர் வேட்டை சொல்லால் விக்கினம் செய்து அழிவுசெய்தபேர்கள் காசி கங்கையில் காராம்பசுவைக் கொன்ற பாவத்தில் போககடவதாகவும். யிந்த தருமம் வழுவாமல் நடத்திவந்த பேருக்கு மீனாட்சி சொக்கநாதரும் மதுராபுரி வேம்படி மூர்த்தி பத்திரகாளி தும்பிக்கையுள்ள ஐயனும் தன கனக வஷ்த்து வாகன சந்தான புத்திரபாக்கியம் கொடுத்து லட்சிப்பார்கள். இதுக்கு சாட்சி பத்திரகாளி தும்பிக்கையுள்ள ஐயனும் மீனாட்சி சொக்கனாத சந்திரசூரியர் சாட்சியாக வைத்தெழுதிய சிலாசாசனம். னாடான் நாட்டு வள நாடாதி மதுரையான் கைஒப்பிதம்.

# 56. கருமாபுரம் செப்பேடு

சேலம் மாவட்டம் திருச்செங்கோடு வட்டம் கருமாபுரத்தில் இருக்கும் நாடார் சமூகக் குரு ஸ்ரீமது ஆண்ட சிவசுப்ரமண்ய பண்டித குருசுவாமியார் அவர்களிடம் இச்செப்பேடு உள்ளது.

இது காஞ்சிபுரத்தில் நாடார் சமூகத்தில் 7 பிரிவு மக்கள் அனைவரும் ஒன்றாகக் கூடி அரசர், வணிகர், வேளாளர் முன்னிலையில் கௌண்டின்ய கோத்திரம் கருணாகர பண்டிதர் அவர்களுக்கு எழுதிக்கொடுத்த செப்பேடு.

குருவிற்கு உடல், பொருள், ஆவி மூன்றும் தத்தம் என்றும், குருபாதம் மறவோம் என்றும் எழுதித் தந்துள்ளனர். அடுத்து நாடார் சமூகத்தின் பரம்பரைச் சிறப்புக்கள் பலவும் கூறப்படுகின்றன. நாடார்கள் பனைமரம் ஏறும் தொழில் சிறப்புக்களுடனும் நயமுடனும் உரைக்கப்படுகின்றன.

நாடார்கள் பத்ரகாளியை வழிபடுபவர்கள், அவர்கள் பரமேசுவரர்-வீரமாகாளி மைந்தர் என்றும் தங்களை அழைத்துக் கொள்கின்றனர்.

இச்செப்பேட்டில் பத்ரகாளி உருவமும், நாடார்கள் தொழில் கருவிகள் உருவங்களும் வரையப்பட்டுள்ளன.

காலக்குறிப்புத் தவறாக உள்ளது. கி. பி. 5 ஆம் நூற்றாண்டில் நடந்ததுபோல எழுதப்பட்டுள்ளது.

## மூலம்

ஹரி ஓம் ஸ்ரீமஹாகணபதி நம.

தார ணிக்கொரு தாயுமை யாள்பரி
பூர ணச்சிவ னேயருள் புத்திரன்
ஆர ணப்பொரு ளான்திருக் காஞ்சியின்
வார ணத்தின் மலர்ப்பதம் போற்றுவாம்.

கடல்சூழ்ந்த நெடிய பூமியின்கண்ணே நீர்வளம் பொருந்திய கழனிகளில்ச் செந்நெல்லும் கன்னலும் வாழை கமுகு தெங்கு மாதளை புன்னை கோங்கு மா பிலா சண்பகம் தேவதாரா் முதலான பல விருட்சங்களும் நந்தவனம்

பூஞ்சோலைகளும் வாவி கூபம் தடாகங்களும் இப்படி யனேகம் சிறப்புப் பொருந்தியிராநின்ற தொண்டமானாட்டில், தாமரை நீலோற்பல முதலானதும் செழித்திராநின்ற கம்பை மாநதியும் சிறப்புப் பொருந்திய அனேக நவரத்திநங்களினாலே விசித்திரமாகச் செய்திராநின்ற மாடமாளிகைக் கூட கோபுரங்கள் முதலான வலங்காரம் பொருந்திய வாலையங்களு மின்னம்பல வினோதமாயுள்ள பள்ளியரைகளிலும் வாசஞ்செய்யப்பட்ட பிரம்ம க்ஷத்திரிய வசிய சூத்திரர்களென்னும் நாலு வருணத்தார்களும் சூழ்ந்திராநின்ற ஸ்ரீ காஞ்சிபுரமென்னும் நகரத்தில்,

தேவர்களும், நவகோடி சித்தர்களும், அஷ்ட்ட வசுக்களும், னாற்பத்தெண்ணாயிரங்கோடி தெய்வ கணங்களும், சந்திர சூரியரும், சப்த கன்னியர்களும், லட்சுமிதேவியும், பனுவலாட்டியும், பார்வதா தேவியும், அஷ்ட்ட திக்குப் பாலகரும், சன்னதித் தலைவர்களும், நந்திகேசுவரரும், மக்களிருவரும், பிரமா விஷ்ணுவும் மற்றும் பல தேவர்களும் ஏவல் பணிவிடை கேள்க்க பேரிகை முதலிய பதினெட்டு மேள வாத்தியங்களும் தொனிக்க கெந்தருவர் புஷ்பமாரி பொழிய,

உமையுங் கலந்த மெய்கர முக்கட் பரமன் மானும் மழுவும் திருக்கரம் பிடித்து, செஞ்சடை தன்னில் சிறுபிறை தோன்ற, நீல கண்டமும் நிறைந்தவெண் ணீரும், சதுர்ப்புஜ மழகும் சர்ப்பா பரணமும், முப்புரி நூலும் முயங்குருத்தி ராக்ஷமும், வெண்குழைச் செவியும் வீரகுமிழ் நாசியும், சங்கந் திகளும் தமிழ்த்திரு வாயும், துங்கஞ் சிறந்த தொப்பைசூழ் வயிரும், பொன்னுரு மருங்கில் பூம்பட் டிலங்க, புலித் தோலுடையும் கரித்தோ லணிந்து கூவிளந் தும்பை கொன்றை மலரும், வெள்ளெருக் கத்தி விதமுடன் சூட்டி, வீரவெண் டயமும் மிகுந்தபொற் பதத்தில், சீருடன் அணிந்தும் சீதக் களப திசையெல்லாம் வித கனக மயமான சித்திரமணி மண்டபத்தில் வீற்றிருக்கப்பட்ட யேகாம்பரனாதரும் காமாக்ஷியம்மனுடைய சன்னியதானத்தில்,

னாக கன்னியர்கள் நாரித்திலகம், நமனாரிகுஞ்சரி, கனகரேகை, மதன சௌந்தரி, கமலகேதனி, கனகேயூரி, கமலலோசனி 7 பேருக்கும் னாயகராகிய பரமேசுபரருக்குப் புத்திரரும் வீரமாகாளிக்குப் பாலகருமாகிய நாரித்திலகன், நமனாரிகுஞ்சரன் கனகரேகன், மதனசௌந்தரன், கமலகேதனன், கனகேயூரன், கமலலோசனனென்று சொல்லி யாதியிலுண்டான நாங்கள் வமுசத்தாரும் சேரன் சோழன் பாண்டியன் மூவராஜாக்கள் வணிகர் வெள்ளாளர் சகலரு முன்பாக யேகாம்பரனாதருக்குப் பூசை செய்யும் குரு பீடாதிபதிகளில் ஆதி சைவாச்சாரியராகிய கௌண்டிந்ய கோத்திரம் ஸ்ரீகருணாகர பண்டிதரவர்களுக்கு எழுதிவைத்துக் கொடுத்த செப்பேடு சாசனமாவது,

சான்றோர் குலத்தில் நாரித்திலகனென்னும் ஏனாதி முதலிய ஏழு பட்டத்தாருக்கு முபதேச கர்த்தாவாய்க் காரண குருவாயிருந்து ரக்ஷிக்க வேணும் சுவாமியென்று வணங்கிக் கேட்டுக்கொண்டு ஆதினா ளுபதேசஞ் செய்ய திருஞான சம்பந்த ரூபமாய் வந்த சுப்பிரமண்ய பீடமும் சுறபாண்டனாதரையும் யெங்கள் தாயாகிய வீர மாகாளியையும் கைக்கொண்டு பூசித்துக்கொண்டு யெங்கள் வம்சம்

உத்தாரமாக வேணுமென்று கலியுக சகாப்தம் 3523 இதின்மேல்ச் செல்லாநின்ற செய வருஷம் தை மாதம் 11 தேதி குருவாரமும் பஞ்சமியும் மூல நட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் யென் சிவபூசையும் கொடுத்து ஆண்ட சிவசுப்ரமண்ய பண்டிதரென்று பேருங்கொடுத்து உடல் பொருள் ஆவி மூன்றும் குருவுக்குத் தத்தமென்றும் ஏழு பட்டத்தாரு தம்பிரான் பாதம் மறவோமென்று பிராணதாரை கொடுத்துத் தக்ஷிணை தாம்பூலங் கொடுத்து வணங்கி,

யெங்கள் வமுசப் பிரதாபங்களாகிய ஸ்ரீமது சகலகுண சம்பன்னரான, வெகுஜன போசகரான, மாந்துளிர் மேனியும் மகாதேவர் புத்திரரான, ஏழு கன்னிகை யீன்ற பரிபாலகரான, பத்திரகாளி

வரபுத்திரரான, தீண்டா வரிசையும் சிவ குருஞானியார் ஆண்ட தம்பிரான் பாதம் அனுதினம் மறவாதவரான, வெள்ளைக் குடையும் வெண்சாமரமும் வெண்பரியும் வெண்சங்கும் வெண்குஞ்சமு முள்ளவரான, இரட்டைச் சங்கும் ரட்டைமனவாரியும் வன்டை வினையுமுள்ளவரான, வாடாத மாலையும் வண்ணத் தடுக்கும் வலம்புரிச் சங்கும் உள்ளவரான, சந்தனங் குங்குமமு மகிழ மாலையுமுள்ளவரான, சிங்கக் கொடியும் சிறந்த மாலையு முள்ளவரான, ஏரொளி யோங்கும் சம்ரோழி கிரியுமுள்ளவரான, ஏனாதி வம்சவரான, யிளவரசு காத்த சாண குல தீரரான, சிங்கத்தை வங்கத்திலேத்தி சிங்கள தேசத்தில்ச் சென்று மும்முலைத் தாடகைக்கும் சிங்கள ராசனுக்கும் மணம்புணர வைத்தவரான, விகடாதி சூரனை செயங்கொண்டு விமலியுட மக்களை மணம் புணர்ந்து விமலி அபிமானங் காத்தவரான, சம்பராசூரனை வென்று தேவர் சிறை மீட்டு தெய்வலோகங் குடியேற்றி தேவேந்திர பட்டம் நிலை நிருத்தி வைத்தவரான, சமர சங்கும் சமைய சங்கு முள்ளவரான உத்திர தேசத்தி லயோத்திமா னகரில் சக்கிரவர்த்தியால் முடியது சூட்டி னாயக்கர்ப் பட்டம் நலம்பெறப் பெற்றவரான, கொங்கு மண்டலம் கொடகு ராச்சியத்தில் சேரமான்றனது சிவனாயகராய் மூப்புப் பட்டம் பெற்றவரான,

திராவிட தேசத்தில்ச் சௌந்தர பாண்டியன் தனது மண்டலத்தில்த் நாடாளுவாரென்றும், னாடாழ்வாரென்றும், சோழ மண்டலத்தில்க் கவண்டப் பட்டந்தனைப் பேர் பெற்றவரான, சான்றோர் குலத்தில் சமைய னாராயணப் பட்டம் பெற்றவரான, அறியதள விபாடன் கெசவேட்டை கண்டருளிய கண்ட னாடு கொண்டு கொண்டனாடு கொடாதவரான, நகர்ப்புறஞ் சென்று னாடான்கோட்டை கட்டிக்குடியிருந்து கோரக்கரருளால் ரசவாதமுங் கற்றுப் பிசகாத னாட்டுக்குள் மாடக்கர் சுவளக்கஞ் செய்த பெரியோரான, ஒரு குடை நிழலின்கீழ் உலகமுழுதும் ஆண்டவரான, ராஜாதிராஜந் ராஜமார்த்தாண்டன் ராஜநாராயணன் னாகக் கொடியும் சிங்கக் கொடியும் மரகத கொடியும் சமைய விசேஷமுமுள்ளவரான, யீழநாடும் இலங்காபுரியு முள்ளவரான, வாளால் வழி திரந்து மேருமை மதியாத மன்னரை மகுடஞ் செகுற்று பதிகூரைக் கொல்லும் பாக்கியப் பிரதாபரான,

மதுராபுரியில் பாண்டியனிடத்தில் வாளது பற்றி மதுரை மண்டலீகர் சோழ மண்டலமும் திராவிட தேசமும் கம்பை மாநதியும் காஞ்சிபுரமும் கல்யாணிபுரியும் காணிபெற்றவரான, சுரபாண்டனாதரைத் தொழுது பணிந்தவரான, வையகம் புகழ மழை பொழிய வைத்தவரான, தெய்வலோகம் போய்க் கருமல்லிகைப் புஷ்ப்பம் கொண்டு வந்து பூவேந்திய சோழனென்றும் பெர் பெற்றவரான, செட்டிகள் தோளேரிய செல்வக்குமாரன் அமந்திகாசூரனையும் சத்திராதிகளையு வெட்டி நிலையிட்டவரான, ஒரு னொடி யுலகம் உண்மையர் ஆண்டவன் வருகிற துன்பமும் வண்மையாய் நீக்கினோன். பத்தரை மாத்துப் பசும்பொன் னுடையயோன். உத்திர தேசத்தி லுயர்ந்த கம்பட்டமுள்ளவரான, கோடைக் காலத்தில் குழுந்த வனத்தில்ச் சிவனுமையும் எழுந்தருள் தாகத்துடனே தயவுகின்ற வேளையில் வேதப் பனையை விறலால் வளைத்துப் போதவே யமிர்தம் பிடி சொம்பாலெரக்கி நாதனுமைக்கும் நன்றாய்க் கொடுக்க மனது மகிழ்ந்து மகிள்கூியா யிருந்து விந்திரனைப் போலே வாழ்ந்துண்டிருப்பீரென்று,

மந்திர வாளும் வரிசையும் கொடுத்துத் துலங்க மகுடமுடி சூட்டி யிலங்காபுரிக்கும் ஈழந் தனக்கும் வணங்காதேயென்று வைத்த வங்கிஷத்தோன். மன்னருக்கு மன்னனாம் சங்கராச்சாரியர்க்கு தயஉடனுபதேசம் தானருளிச் செய்தவன். சாணகுல தீரன். சகலமுமுள்ளவன். பதினெட்டு வாத்தியம் பரிவுடனுள்ளவன். பிறப்பும் வளர்ப்பும் பிரபல முள்ளவன். சுத்த சங்கீதம் சுபமங்கள முள்ளவன். பத்திரகாளி பாங்குட னருளால் கத்தி கட்டாரி வளைதடி சக்கரம் வல்லையம் வில்லும் வாங்குகேடயமும் நெரிசம் சொல்லிய பதினெட்டு வாய்துமெல்லாம் மன்புடன் பெற்றோன்.

வர்டையடித்து மாமழை பொழிந்து ஓடைகளெல்லாம் உடைந்திடச் சோழன் கரையது வுயரக் கட்டிய னாளில், இவன்றலை யதனை ஈடுபடக் கடகரி விட்டிடரும்போது எங்கள் குலம் சாணகுலம் ஏரிவரி சுங்கங்கொடோம். கொத்தெடுத்து மண்வெட்டோம். கொற்றவரைக் கைய்முகையோம். கூடை தொடோம். வெட்டி செய்யோமென்று மிகவிருது பேசி வீரவெண்பாப் பாடிய சாணகுல தீரன். மணி கைதரித்து மகாதேவர் பூசை செய்தவரான நாங்களனைவரும் வருஷாசலம் குடிக்கி பணம் 5 சிவபூசைக்கு படியும் கொடுத்து வருகிறோம். அப்படிக்கி நடவாமல் குரு நிந்தனை ஜாதி நிந்தனை செய்த பேர்கள் செம்பு தீவிலும் கங்கா நதியிலும் பிருமஹத்தி கோஹத்தி செய்த தோஷங்களில் போவோமென்று இந்த சத்திய வாக்கியந் தவராதிருந்தபேர்கள் சந்திராதித்த ருள்ளமட்டும் வீர மாகாளி திருக்கோபுரம் வளர்ந்தாப் போலவும் சுகமாக வாழ்வோமென்று திருவாக்குத் தந்தனர்.

யெங்கள் சாதிப்பிள்ளை கூத்தாடிகளுக்கு ஈழத்துபேரும் யிலங்கைப்பேரும் கொடுத்து விருது யெடுத்து ஆடி வருவதுக்காக குடிக்கி ஒரு பணமும் சாப்பாடும் யெங்களுக்கு அடிமைப்பட்ட பணிசவனுக்கு கட்டின வீட்டுக்குக் கால்பணமும் கலியாணத்துக்கு ஒரு பணமும் சாதி ஞாயத்தில் கட்டுக் காணிக்கை ஒரு பணமும் இப்படிக்கிக் கட்டளை. இந்தபடி யெங்கள் அநவோருடைய சம்மதி சாசனம்.

# 57. கணக்கன் கூட்டத்தார் பட்டயம்

இவ்வோலைப் பட்டயம் ஈரோடு கலைமகள் கல்விநிலைய அருங் காட்சியகத்தில் உள்ளது.*

அகம்படியத் தேவர் சமூகத்தில் வெத்திலைக்காரர் என்று அழைக்கப்பெறும் கணக்கன் கூட்டத்தார் தென்பாண்டி நாட்டிலிருந்து புறப்பட்டுப் பல ஊர்களில் குடியேறி இறுதியில் கொடுமணலில் காணி பெற்ற செய்தியை இப்பட்டயம் மிக விரிவாக விளக்குகிறது.

பாண்டி நாட்டில் தேவமாரில் குருலிங்க ராசா என்பவர் ஆட்சி செய்து மரணமடையவே அவருடைய இளைய மனைவியின் மகன் சிங்கராசா தும்பிச்சி நாயக்கர் துணையால் அரசர் ஆனார். குருலிங்க ராசாவின் மூத்தமகன் சங்கரலிங்க ராசா சிறையில் அவர் தம்பியர் ஐவருடன் அடைக்கப்பட்டார். 13 ஆண்டுகள் சிறையிலிருந்த அவர்களைக் கொல்ல முயற்சிக்கவே சிறையிலிருந்து தப்பி மதுரை, தாராபுரம், காடையூர் வழியாகக் காங்கேயம் வந்து குடியேறி வாழ்ந்தனர். சங்கரலிங்க ராசா இறந்து விடவே அவர் மகன் அழகன் பெருமாள் தலைவரானார்.

பழையகோட்டைப் பட்டக்காரர் நல்லாண்பிள்ளை சர்க்கரை மன்றாடியார் அதிகாரத்தைப் பாப்பாக் கவுண்டர் என்பவர் கைப்பற்றிக் கொண்டார். அகம்படியத் தேவமார் உதவி செய்து போரிட்டு நல்லாண்பிள்ளை சர்க்கரை மன்றாடியாருக்கு உதவினர். அதனால் அவர்கள் தங்கள் காணியாட்சியான கொடுமணலைத் தேவமாருக்குக் காணியாக அளித்தனர்.

இன்றும் கொடுமணலில் உள்ள தங்கம்மன் கோயிலுக்கு கொங்கு வேளாளரில் பாண்டியன், சேரன், பனங்காடை குலத்தாருடன் தேவமாரில் கணக்கர் குலத்தாரும் காணியாளராக உள்ளனர். கொடுமணல் தங்கம்மன் கோயில் திருப்பணியிலும், வழிபாட்டிலும் கலந்துகொள்கின்றனர்.

கி. பி. 1240 இல் இப்பட்டயம் எழுதப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

---

* புலவர் செ. இராசு, கொடுமணல் தங்கம்மன் கோயில் வரலாறு, கொடுமணல் 1982.

மூலம்

செய்ய புகழ்நெறியும் தென்காஞ்சி லிங்கர்தமை
வையம் புகழென்று வாழ்வித்து மெய்யாக
வாதவ நல்லூர் வாழ்கின்ற வேளாளர்
போதநெறி சொல்வேன் புகழ்ந்து.

வாதவநல்லூரில் கோத்திர வர்க்கம் வண்மை குலசேகரர், மாடை குலசேகரர், செண்டுவர், செல்லநகர், குலாக்கண், பூச்சூடிய காடைகுலவர், நண்பான வண்ணக்கர், முத்தாடுவர், வயிரகுல வணிகர், நாடுநாஞ் செம்பர், முதலெட்டும் அம்பலவர், சேகண்டிகுல வேட்டுவர் ஆக 12, செல்வம் 12, சேனை 12, யானை அதிவருசை 12, கொற்றமுடி 12, கொடிவருசை 12, சிகைசய் 12 முத்தி 12 சிறப்பு 12 ஆக வகுப்பு வகை வற்கம் 12 இந்த பனிரண்டு வர்க்கத்தில் முப்பாட்டுக்காரர் கருதுமுனை தீண்டாத காராளர், உலக்கை பிடியாத குலக்கொளுந்து வர்க்கம், ஆடையழகுடைய அகத்திட்டாக்கால் பிறந்திடாப் பெரியோர், வண்மையும் சீறும் ஆண்மையுள்ளார், சங்கும் பாடகமும் எங்குமுடையோர், கைக்கொண்டாரைப் பின்விடாமல் காக்கின்ற பெரியோர், மாலையும் வாழ்த்தும் மங்களமுடையோர், அன்னமும் சொன்னமும் அறம்வளர்த்த சின்னமும் காளமும் சிறப்புடைய பெரியோர், கன்னல் கதலி கமண்டலங் காத்த காராளன், பொன்முடி சித்திரமேழித் தலைவர், வாதவூராரை ஆயிரண்டு தாளுவர், அரசர்கள் போற்றும் வண்ணக்கன் குலத்தை முன்காத்த காராளர், பொன்முடி சித்திர வாதவூராரை வடிவு தென்மண்டலம் களியன் முதலியார், பூமிபாலகர் எனவர் மகுடாசலப் புலவர் ஆகையினால்,

தென்காஞ்சி லிங்கர் திருவரை தீர்ந்து மங்காமல் காக்கும் வாள்கோட்டை மன்னர், பொன்பூட்டும் பூமி பாலகரெனவும் நண்பான வெட்டுமாவலிக்கு நயமணமிருத்தி சம்மந்தமிடுகையால் தாளது திறந்து பொன்னது அளந்து பொதியளவு கண்டு செண்டுகை மல்லாரி சேகண்டி போட்டு துன்பமில்லாமல் வாதவநல்லூரில் தென்காஞ்சி லிங்கருக்குச் சிறப்புடன் நடத்துவர், நண்பான தேர்வடம் நாளெனப் பிடிக்க மகுட சூடாமணி மண்டலத் தேரு வருஷமொரு வீதி வண்மையாய் ஓடும். வருஷமொரு வீதியே நிற்கும். இப்படி நாலு வருஷத்திற்கு ஒருக்கால் நிலை எழுந்தருளாநிற்கும். அதன்பிறகு பாடி வேட்டை காண்பார். நாலு வருஷத்திற்கு ஒருக்கால் பாடிவேட்டையன்றைக்கு 12 வகுப்புக் காணியாளரையும் கூட்டிக் கொண்டு பன்னீராயிரங் காலாலோடே வேட்டைக்குப் போய் வேழம் பன்னி புலி கரடி புல்வாய் புள்ளிமான் முசல் உடும்பு கீரி சிங்கம் கிளி மந்தி தேவாங்கு காட்டுச்சாவல் காட்டெருமை காட்டானை காட்டுக்கிடாய் மலைஅணில் செம்முசல் கருமுசல் வெள்ளைமுசல் அளிங்கி இது முதலான மிருக சாதிகளெல்லாங் கருசக்குளம் சாத்தி மலையில் தீவுகளுமுண்டு.

இந்தத் தீவுகளெல்லாம் மிருக வேட்டையாடி பிடித்து வந்து. தென்காஞ்சி லிங்கருக்கும் திருவேலாங்காட்டு அம்மைக்கும் பாடிவேட்டைப் பலியுங் கொடுத்து வேட்டையாளருக்கு வேட்டையுங் கொடுத்து மஞ்சநீர்த் தீர்த்தமாடின பிறகு சிவலிங்கமும் திருவேலாங்காட்டு அம்மையும் திருச்சபை மண்டபத்தில் நாலு

வருஷத்திற்குப் பிறகு யெழுந்தருளினபடி தேரு நாலு வருஷத்துக் கொருக்கால் நின்ற நிலையில் எழுந்தருளி நின்றபடி தேர் முத்திரி குறைய முழுத் தேராகிலுமுள்ளது. ஆகையினால் தேர்த்தலை யலங்காரமும் மகுட சூடாமணிப் பொற்குட கலசமும் குச்சியும் முத்திரியும் எழுந்தருளிய சிவலிங்கமும் திருவேலாங்காட்டு அம்மைக்கும் தென்காஞ்சி லிங்கருக்கும் வாதவநல்லூருக்கும் அரைக்கட்டளையுண்டு. சுவாமி எழுந்தருளியிருக்கும் மண்டபம் நிறையொன்றுக்கு நூற்றுக்கால் மண்டபம் சிவாலயம் நவரங்கி தென்பாக்கியமும் உள்மேளம் பிறமேளம் நட்டுமெட்டு நாடக சாலையுடன் ஆனையின் பேரில் அலங்காரத் திருமஞ்சனமும் நாள் ஒன்றுக்குப் பூசை ஐந்து. இப்படி நடந்து வருகிற வண்மையாகிலுமுள்ளது. வாதவூரில் பிறவடையில் குற்றாலநாதருக்கு வரும் ஒரு தேர் ஓட்டி வைக்கிறதுமுண்டு. இவர் தேர்வடம் இந்தப் பனிரண்டு முதமைக் காராளரும் வந்து வடமதைத் தொட்டு நடத்த தேர் ஓடிச் சென்று திருவீதி செல்லும். மேல்வீதியில் ஆதி விநாயகன் முன்பாகவும் குத்தால்நாதன் முன்பாகவும் தங்கத்தினால் அழுத்திய திருக்கம்பத்தின் முந் தேர் நிலை நின்றபடி இதுவறிந்து நடப்பித்துக் கொள்ளவும். இவர் குற்றால நாதருக்கும் சிவாலையம் உம்பளிக்கையும் நஞ்சையில் கால்குளமும் புஞ்சையில் வேலன்குடியூர் 500 பொன் கிராமம் ஆண்டுகொள்ளவும்.

இதற்குச் சாட்சி வேலன் குடியில் பாலையாற்றில் அணைத்துறையில் வட்டப்பாறை அணைக்கல்லின் பேரில் கல்வெட்டு உண்டு. சிவாலையம் உம்பளிக்கை குற்றாலநாதர் அறிந்து ஆண்டு கொள்ளக் கடவேனாகவும். இதன்முதல் தென்காஞ்சிநாதருக்குச் சிவாலயமும் நம்பிக்கை திருவடி தேசத்தில் சிவாலயமும் உம்பளிக்கையும் பதினோராயிரம் பொன்னும் வாதவூரில் மூவாயிரம் பொன்னும் உம்பளிக்கையுமுள்ளது. இதுவல்லாமல் மிகுந்த ஊர்களுக்குச் செல்வளி பதினோராயிரம் பொன்னாகவும் முப்பதினாயிரம் பொன்னாகவும் கட்டு. இதுவுமல்லாமல் பிறங்கையில் பாடிகாவல் காக்கும் மன்குதலியழகன் தனிப்புலி காவலாகத் தொளில் யிந்த வகையில் பன்னீராயிரம் பொன்னும் ஆக நாற்பத்திரண்டாயிரம் பொன்னுக்கும் கர்த்தனாகிய காராள வங்குஷமான மகா மேராகிலுமுள்ளது.

இப்படிச் சிமையாண்டுகொண்டு வருகுர நாளையிலே முப்பாட்டுக்காரர் கதிருமுனை தீண்டாத காராளரில் குருலிங்க மகாராசா சீமை ஆண்டுகொண்டு இருப்பான். அவனுக்குப் பன்னீராயிரம் காலாள் தும்பிச்சி படைத் தலைவருமாயிருப்பான்.

இந்தக் குருலிங்க ராசாவுக்கு நற்குடி இரண்டு பொன்னுக்கும் கூற்றுக்குடிப் பெண்ணுக்கு பதிமூன்று பெண்களுமுண்டு. இந்தப் பாக்கியத்துடனே சீமையாண்டு கொண்டிருப்பான். இவனுக்கு மூத்த பெண்ணுக்கு ஆறு ஆண்கள் ஒரு பெண் உண்டு. இளைய பெண்ணுக்கு மூன்று ஆண்கள் நாலு பெண்கள் உள்ளது. இப்படியிருக்குற காலத்தில் ராசா மரித்துவிட்டார். அப்போது தும்பிச்சிநாயக்கன் இளைய பெண்ணிடத்திலே சில ரொக்கத்தை வாங்கிக் கொண்டு இளைய மனைவியின் மகன் சிங்க ராசாவைப் பட்டத்துக்கு வயித்துக் கொள்வதாக எண்ணி நடப்பிச்சான். மூத்த மனைவியின் மக்கள் சங்கரலிங்க ராசருங் கூட ஆறு பேரையுங் கூடப் பிடித்து

சிறைச்சாலையில் அடைத்துக் காவல் பண்ணிக்கொண்டு இளைய மனைவியின் மகன் சிங்கமுக ராசாவைப் பட்டத்துக்கு வயித்துக் கொண்டான். இப்படிப் பதின்மூன்று வருஷம் சிங்க ராசன் சீமையாண்டு கொண்டு யிருப்பான். அப்படி இருக்கப் பட்டக்கார சிங்க ராசா காவல் வைக்கப்பட்டிருக்குற மூத்தகுடி மக்கள் சங்கர ராசா அவன் தம்பிமார் அஞ்சுபேரும் ஆக ஆறு பேரையும் பிடித்துச் சங்கரிக்கத் தக்கதாக தும்பிச்சி கூட ஆலோசனை பேசினான். அப்படிப் பேசின வருத்தமானம் சங்கரலிங்க ராசாவின் ஊழியக்காரர் ராசருக்கு அழகிய சங்கரலிங்க ராசாக்கூட ஆறு பேரையும் சங்கரித்துப் போடத்தக்கதாக ஆலோசனை நன்றாகக் கேட்டார்கள்.

அந்த வர்த்தமானம் சங்கரலிங்க ராசா நன்றாயறிந்து அவர்கள் எட்டு நாளெனப் பேசிய பேச்சு மகா நவமியில் சங்கரலிங்க ராசாவுக்கும் அவன் தம்பிமாருக்கும் ஆகாரத்திலே பச்சை நாவியைக் கலந்து கொடுத்து விருந்து சமைத்துக் கொல்வோமென்று பேசிக் கொண்டார்கள். பேசின சங்கதி சங்கரலிங்க ராசாவின் ஊழியக்காரி அழகியசங்கரி இரகசியமாய்க் கேட்டுக் கொண்டு சங்கரலிங்க ராசாவிடம் தெரிவித்தாள். இந்தச் சேதி சங்கரலிங்க ராசா நன்றாயறிந்தான். இனி நம்மை இவர்கள் எந்தவிதமாகிலும் தும்பிச்சி உள்ள மட்டும் நம்மைக் கொல்லுகிரதுக்குச் சந்தேகம் இல்லை. இனி நமக்குச் சீமை ஆசை இல்லை. நம்ம காவல் கூடத்திலே சும்மா யிருப்போமென்றாலும் நம்மைக் கொல்லவல்லவோ நினைக்கிறார்கள். நமக்கு இனி இங்கே சும்மாஇருந்தால் காரியமில்லையென்று அண்ணன் தம்பிமார் எல்லோருங்கூடிப் பேசிக்கொண்டு எச்சரிக்கையாக மானாமதுரைத் தளவாய் முன் காவல்முதலே வெகு பாசமானபடியினாலே மானாமதுரைத் தளவாய் வல்லாளகண்டனுக்கு ஆள்போகவிட்டார்கள். அந்த ஆளோடு சொல்லிவிட்ட வரலாறுதான் இந்த ஓலை கண்டவுடனே தன் படையுங் கூட்டிக்கொண்டு தென்காஞ்சியே வந்ததானால் நாங்கள் எப்படியென்றாலும் வருவோமென்றும் ஓலையும் ஆளுமாக இரகசியமாக அனுப்பினார்கள். இந்த ஓலையும் ஆளையும் கண்டவுடன் வல்லாளராயன் வெகு ஆலோசனைப்பட்டு எண்ணிக் கோட்டையைக் கன்னமிட நாலு கன்னச் சேவுகரையும் தயாரித்துக் கொண்டு நாலாயிரங் காலாளருடனே தென்காஞ்சியே வந்து இறங்கினார்கள். இந்த வல்லாளன் வருகிறதுக்கு முதல் நாளே சங்கரலிங்க ராசாவோடே பிறந்தவள் புருஷன் அரசம்பல ராசாவையழைத்து நீ போய் நம்மிட பாரிசமாகக் குருவியழகரிடம் அவருடனே எங்கள் மச்சனன்மார் எல்லாரையும் கொல்லத்தக்க காரியம் பேசிக் கொண்டு நவமி நாள் வரட்டுமென்று இருக்குறார்கள். ஆனபடியினாலே படையும் நீயுமாக தென்காஞ்சியே வந்து இரங்கச் சொன்னார்களென்று சொல்லிக் கூட்டிவரச் சொல்லி அனுப்பினார்கள். அவன்போய் வருவதற்குள்ளே இவர்களுக்கு அவதியாச்சுது. அதுக்குள்ளாக மானாமதுரைத் தளவாய் வல்லாளகண்டன் கன்னக்காரர் நாலு பேரையும் அழைத்து நீங்கள் போய் வாதலூர்க் கோட்டையைக் கன்னமிட்டு சங்கரலிங்க ராசா அரமனை புகுந்து இவர்கள் அண்ணன் தம்பி ஆறு பேரையும் வெளியே பிறப்படுத்திக் கூட்டி வாருங்கள் என்று கன்னக்காரரை அனுப்பினான். அப்படியே கன்னக்காரர்கள் போய் வாதலூர்க்கோட்டையைக் கன்னமிட்டார்கள். கன்னமிட்ட பிறகு அரண்மனையில் புகுந்து அசாத்திய நேரம் அறிந்து வல்லாளராயன்

கொடுத்த முத்திரையும் சங்கரலிங்க ராசா கையில் கொடுத்தார்கள்.

இவர்கள் வல்லாளகண்டன் கொடுத்த முத்திரையை வாங்கிக் கொண்டு கன்னக்காரர் பேரில் சந்தோஷப்பட்டு உடனே அந்த வேளையில் கன்னக்காரர்களுக்கு ரொக்கமும் கொடுத்து கன்னக்காரர்களைத் தங்களுடனே கூட்டிக் கொண்டு பட்டமாளுகிறவன் அரண்மனை புகுந்து நித்திரைவேளை அறிந்து பட்டக்காரன் அவன் தம்பிமார் ரண்டு பேரும் இந்த மூன்று பேரையும் உடனே நித்திரை வேளையில் கழுத்தை அறுத்து பிறகு ரத்தினாபரணமும் வெகுரொக்கமும் சிவபூசை பண்ணுகிற திருவேலாங்காட்டு அம்மை சிவலிங்கமும் இது ஒருவனால் மதிக்கப்பட்டதல்லவே, இது தங்கப் பொன்னினால் சமைத்த சிவபூஜைப் பெட்டியும் சீனிச்சரம் கனகவளை தும்பிப்பதக்கம் முன்கைவளை கண்டமாலை வில்லைச்சரம் இப்படியாக எடுக்கவேண்டிய முதலானதையும் தென்காஞ்சி லிங்கர் துறவுகோலும் காணியாட்சி செப்பேடும் பின்னும் சில ரொக்கமும் ஆறுபேர் சுமக்கத்தக்க முதலெடுத்துக்கொண்டு மைத்துனன் சீமையின்மேல் போய் சில உதவியானவர்களைக் கூட்டிக் கொண்டு வருகிறதுக்குள்ளே இவர்களுக்கு அவுதியாச்சுது.

இனி நாம பிரந்தவளைக் கூட்டிப் போக மைத்துனன் தானில்லை என்று இவளை நாமிருத்திப் போட்டுப் போவோமென்று எண்ணிப் பிறந்தவளை அழைத்து ஆலோசனை கேட்டார்கள். அவள் தலைப்பிள்ளை ஆண்பிள்ளை பெற்று இருப்பாள். அந்தப் பிள்ளையு மெடுத்துக்கொண்டு அண்ணமாரோடே இறந்துபோறதேயல்லாமல் நான் இங்கை இருக்க என்னகாரியமென்று அந்தப் பிள்ளையுமெடுத்துக் கொண்டு கூடவே புறப்பட்டாள். அப்போதே பிறந்தவளையும் கூட்டிக் கொண்டு கோட்டை கன்ன வாயில் புகுந்து வெளியே புறப்பட்டு அந்த நேரமே தென்காஞ்சியே விட்டு மானாமதுரை வல்லாளன் கட்டின கோட்டைக்குள் வந்தார்கள். வந்தவருள் ஆறு பேரையும் வல்லாளன் கண்டு தழுவிக்கொண்டு பக்கத்திலிவர்களை இருத்திக் கொண்டு கன்னமிட்டு வந்த வர்த்தமானங் கேட்டான். கன்னக்காரர் கன்னமிட்டு எங்களை சிறைச்சாலை துறந்துவிட்டார்கள். நாங்கள் அந்த வேளையிலே பட்டக்காரன் அரண்மனை புகுந்து அசாத்திய வேளையறிந்து பட்டக்காரனையும் அவன் தம்பிமார் ரண்டு பேர் ஆக மூன்று பேரையும் வதை செய்துபோட்டு வந்தோமென்றார்கள்.

அப்போது வல்லாளன் தன்னிடமிருந்து உங்களை நான் அழைத்து நம்மண்டையில் வயித்துக்கொண்டு நான் அவர்கள் வாய்பார்த்து பிறகு உங்களைப் பட்டத்துக்கு வயிக்க வேணுமென்று கன்னக்காரரை விட்டுக் கோட்டையைக் கன்னமிட்டு உங்களைக் கூட்டிவரச் சொன்னேன். அப்படியிருக்க நீங்களிப்படி பழிசெய்யலாமோவென்று கோபித்து அவர்களோடே இணங்கி நீங்களுங்கூடக் கொலைசெய்யலாமோ வென்று கன்னக்காரர் நாலுபேரையும் ஆக்கினை செய்து போட்டான். பிறகு இவர்களைப் பார்த்து எத்தனை குற்றமிருந்தாலும் பழி செய்யலாமோ வென்று இவர்களைப் புறப்பட விட்டால் இந்தப்பழி நமக்கு வருமேயென்று யெண்ணி இவர்களைப் பதனம் பண்ணிக்கொள்ள எண்ணினான். அந்த வர்த்தமானம் இவர்கள் கேட்டு இப்படி எண்ணினவன் தம்பிச்சி கையில்

பிடித்துக் கொடுப்பதென்று யெண்ணி தென்காஞ்சியைவிட்டு வல்லாளன் கண்ணுக்குத் தெரியாமல் ஒரு ராத்ரியில் புறப்பட்டு மதுரையே வந்தார்கள். மதுரையில் எட்டுநாள் இருந்தார்கள்.

மதுரையில் இருக்கிற சனங்களெல்லாம் வாதலூர் ராசாக்கள் ஒன்றுக்கொன்று பழிபட வெட்டிப்போட்டு வெகுரொக்கமு மெடுத்துக்கொண்டு வந்து இருக்கிறார்களென்று இவர்களைப் பிடிக்கத் தக்க ஆலோசனையாக இருந்தார்கள். அந்தச் சேதி இவர்களறிந்தார்கள். இனி இங்கே இருந்தால் ஆபத்து வருமென்று யெண்ணி துப்பிச்சி யுள்ளமட்டும் நமக்கு ஆதீனமில்லை நம்மிட மண்ணை யார் கொண்டு போகப் போகிறார்கள். ஆகட்டும் பின்னுமொரு காலத்துக்கு ஆகட்டுமென்று எண்ணி நாமளிருக்கக் காரியமல்ல என்று எண்ணி கோரிக்கை நாட்டுக்குப் போவோமென்று தாராபுரஞ் சீமைக்குப் புறப்பட்டார்கள். அப்போது நகையான முதலும் நவமணிக் கோர்வையும் கையில் கொண்டுபோனால் தடம் வழியில் சதிவருமென்று எண்ணி ரத்தினமழுத்திய சிவபூசைப் பெட்டியும் மற்றுமுற்ற முதலானதெல்லாம் பருத்தியூருக்குக் கிழக்கே கொண்டரங்கி மலைச்சாரியில் தென்புறத்திலே வெள்ளை விநாயகன் இருக்கிறது. அந்த விநாயகன் முன்பாக அம்படி நீளமும் அம்படி யாழமும் குழிதோண்டி ஆனைக்கல்முன் விநாயகன் சாட்சியாகப் போட்டது. வெள்ளை விநாயகன் முன் இடப்பாகத்தில் கல்வெட்டுண்டு அறியவும். இதில் என் தாயாதியில் என் தலைமுறையில் ஒருவன் இளைத்து நாளென்று வந்தால் கண்டு எடுத்துக் கொள்ளவும். இதையல்லாமல் வேறொருவன் இந்த முதலை யெடுக்க வந்தால் காணாதே போகவும். கண்டாலும் கரியும் உமியுமாகப் போகவும் என்று வெள்ளை விநாயனுக்குப் பிலிக்கிறகம்கொடுத்து சாஙித்து போனபடி அறியவும்.

இப்பால் அதின் பிறகு தாராபுரமே வந்தார்கள். தாராபுரஞ் சீமையை நாகராசன் ஆண்டு கொண்டிருப்பான் அவனிடம்போய்ச் சேர்ந்தார்கள். நாகராசன் இவர்களைக் கண்டு அறிந்த படியால் வாதவநல்லூர் ராசாவென்று அறிந்து குடி கொள்ள வந்தவர்களை பிளைக்கும்படியாக குளாங்கொண்டானை உம்புளிக்கை விட்டான். அங்கு ஒரு வருஷம் ஆண்டு இருந்து மறுவருஷம் அவ்விடம் அவர்களுக்குப் பிடிபடாதபடியினாலே காங்கைய நாட்டில் காடையூரே வந்தார்கள். காடையூரிலேயும் ஆறுமாதம் இருந்தார்கள். காங்கயமன்றாடி இவர்களை அறியாதபடியினாலே நடக்கை முன் பின்னதாக நடப்பிச்சான். ஆனபடியினாலே காடையூரே விட்டுக் காங்கயமே வந்தார்கள்.

அப்போது காங்கயத்திலேயும் வெட்டுமாவலி அகம்படியர் தென்மண்டலத்தில் வெள்ளாண்மையில்லாமல் மழைமறுத்து சாமகாலமானபடியினாலே காங்கயத்திலே இருபது முப்பது குடி வந்திருப்பார்கள். இவர்களும் பல்லவராயக் கவுண்டர்களைச் சேர்ந்துயிருந்தார்கள். பல்லவராயக் கவுண்டனும் இவர்களுக்கு நன்றாய் வெகுமானமாய் நடப்பிச்சான். அந்த வேளையிலேயே சங்கரலிங்க ராசாவுக்கு சலக்கழிச்சல் வந்து காலம் சென்று போயினார். அந்தச் சங்கையிலே பட்டு மேக்கட்டி மகரதோரணம் வாள்வெட்டியமாலை மஞ்சப்பாவாடை சந்திரகாவிப் பாவாடையுடனே தண்டிகைமேல் வயித்து மயானக் கரைக்குக் கொண்டுபோகும்

வேளையிலே வெட்டு மாவலி அகம்படியர் எல்லாருங்கூடி நம்மிட தேசத்தில் தென்காஞ்சி வாதவூரார் பழிபட்டு ஆதீனம்விட்டுக் கொங்குதேசம் போனார்கள் என்று சகலருமறிவமே அவர்கள்தான் இவர்களென்று யெண்ணிப்பார்க்க வந்தார்கள். அப்போது இவர்கள்தானென்று செத்துக்கிடக்கின்ற சவத்தைப் பார்த்து சங்கரலிங்க ராசாவென்று அறிந்து சகலரும் அகம்படித் தேவமாரெல்லாருங் கூடி நம்மிட தேசத்திலே தென்காஞ்சித் திருநாளுக்கு தேர் பார்க்கப் போவோமல்லவோ அப்போது தேரோட்டி வைக்க வாதவூரிலிருந்து ஆனை குதிரைப்படையோடே யானையின் மேலேறிவந்து தேரோட்டி வைக்கிற ராசா அல்லவோ என்று சகலரும் அறிந்தார்கள்.

அறிந்த பிறகு சங்கரலிங்க ராசாவுட தம்பி அழகன்பெருமாள் அதிகாரி அல்லவோ உள்ளது. அழகன்பெருமாள் அஞ்சுபேர் அல்லவோ என்று அறிந்து இனி நாமள் சும்மா இருந்தால் காரியம் அல்லவென்று அறிந்து யெல்லவரும் கூடித் திம்மை கொண்டாடிச் சவத்தையும் அடக்கம் செய்து பிறகு அண்ணன் அழகன் பெருமாள் தம்பி பெரியலிங்கப்பனல்லவோ உள்ளது என்று எண்ணி இவர்கள் அகம்படியர் சகலருஞ் கூடினபடி சின்னக் காடையூரிலேயும் காங்கயத்திலிருந்து பத்தஞ்சு பேர் அகம்படியார் பெரியவர்கள் குடிபோயிருப்பார்கள். அந்தப் பெரியவருக்குள்ளே கன்னாண்டி அதிக வளமைக்குடி எப்பக் கொண்டான் பிளையார் கள்ளன் குட்டிவீரன் பிச்சமுடையான் இவர்களைக் காங்கயத்திலே இருத்தி யுறவின்முறைத் தேவன்மாரையும் சியார்த்தேவன், வன்னிய வஞ்சித்தேவன், கார்த்தாத்தேவன், வண்டியூர்ப்பிறங்காட்டி பெரியபுலித்தேவன், அச்சன்குளம் பிச்சத்தேவன், கரைக்குளம் பிச்சத்தேவன், நாச்சித்தேவன், கோட்டைப் புலிச்சேரி போத்தையாத் தேவன், வீரைக்குளம் மருவார்த்தேவன், ஆனக்குளம் சுந்தரத்தேவன், சந்திரகுளம் வாளவளத்தாத்தேவன், முடுகுநாடு வண்டித்தேவன், சாத்தன்குடி உப்புக்கொத்தான், முன்னூர் மூவருடையார், ஆனையூர் பாண்டித்தேவன், கம்பிக்குடி வேட்டையாகத் தேவன், காரைக்குளம் நாச்சித் தேவன், சிளங்கோட்டை வேந்தத்தேவன், திருச்சுளி நாச்சிமுடையாத்தேவன் இவருகள் எல்லாருங் கூடி கண்டியார் வடமலைத்தேவன், பிச்சைப் பிறளக்குடி பெரிய குளந்தாத்தேவன் இவர்களெல்லாருங் கூடி காங்கயத்தில் பட்டக்காரன் அமராபதிப் பல்லவராயக் கவுண்டன் முத்துமகாலிங்கம் அகஸ்தியலிங்கம் சன்னதியில் சத்தியமாகச் சொல்லுகிறோம். தென்காஞ்சி வாதவூர்க் காணியாள வேளாளரில் பனிரண்டு முதமையில் பட்டம் பரிவட்டம் பாக்கு வெற்றிலை பச்சைவட்டம் இதுவெல்லாம் இவர்களுக்கே முந்தினது. இவர்கள் ·குலம் கருதுமுனை தீண்டாத காராளனென்றார்கள்.

ஆனால் செந்தலை வேளாளரென்று காராள வேளாளரென்று எங்களுக்குப் புறம்பல்லவே. நாங்கள் இவர்களுக்குப் பெண் கொடுத்து கண்ணபுரச் சீமைக்காணியும் இவர்களுக்கே நாடு கூட்டி காணி முறையாகக் குடுக்கிறேன் இவர்கள் வராத காலம் வந்தாலும் இந்தக் கொங்கு தேசம் அன்பத்தி நாலு நாடும் விட்டுத் தென்மண்டலமும் போகார்களென்று அகஸ்தியலிங்க சாட்சியாக இத்தனை தேவமாருங்கூடி பிணைமுறி எழுதிக் கொடுங்களென்று பட்டக்காரர் வார்த்தைப் பாடு கேட்டார். இதற்கு தேவமார் அறிந்து அந்த வில்லங்கம் எங்களுக்கு எதுக்கு

எங்கள் சீமையும் காணியும் விட்டு இங்கே இருக்குறதில்லை. நீங்கள் வைத்திருந்தால் இருப்போம். இல்லாவிட்டால் எங்கள் மரியாதை தப்பிப் போகும். எங்கள் சீமையே போவோம் என்றார்கள். ஆனால் நீங்கள் பெண் கொடுங்கள் என்றார்கள். அப்போது தேவலித்தேவன், நட்டையார்தேவன், மமக்கொண்டார்தேவன், ஒஞ்சியார்தேவன் இவர்களெல்லாருங்கூடி நாமளே பெண் கொடுப்போமென்று சம்மதித்துக் கொண்டு வாதலூர் ராசா வென்று சகலருமறியலாமென்று பெண் கொடுக்கிறதென்று எல்லாருமொன்றுவிட்டு பாம்பாட்டியப்பனைக் கூட்டி பெரிய சொக்கதேவன் பிறந்தவளை நாடு அறிய ஊர் அறிய இந்தக் கொங்கு நாட்டில் வந்த வெட்டுமாவலி அகம்படியர் சகலருங்கூடி தீர்த்தாத்தேவன் மகளை அளகன்பெருமான் அதிகாரி மூத்தவன் பெரிய லிங்கப்பனுக்கு தீர்த்தான்குட்டிதேவன் மகளை கலியாணம் முடித்தார்கள்.

அவள் பேரு மருதாய் என்பவள். அந்த மற்ற நாள் சருலிங்கப்பனுக்கு பெரிய சொக்கதேவன் பிறந்தவள் பெத்தக்காளைக் கலியாணம் முடித்தார்கள். அந்த மூன்றாம் நாள் பின்னும் சொக்கத்தேவன் பிறந்தவளுக்கு இளையவள் ரங்கம்மாளை சின்னலிங்கப்பனுக்குக் கலியாண முடித்தார்கள். அதன்பிறகு அகம்படி சகலருங் கூடி இவர்களுக்கு அவர்களும் கூடி மாமன் மச்சுனன் என்று சம்மந்தம் கொண்டாடி ஒன்றுபட்டுக் கொண்டார்கள். அதன்பிறகு காங்கயத்திலே ஒரு வருஷம் இருந்தார்கள். அதன்பிறகு சர்க்கரைக் கவுண்டர் காரையூரிலேயிருந்து நல்லாம்பிளைச் சர்க்கரை காங்கயமே போய் பெரிய லிங்கப்பனை அழைத்து நீர் காரையூரிலே வந்து இருக்க வேணுமென்று பச்சைவடம் பாக்கு வெற்றிலை கொடுத்து காரையூரே கூட்டிப் போனார். பிறகு மறுவருஷம் பெரிய லிங்கப்பன் அதிகாரியை காரையூரிலே பார்வைக்கு வயித்துக் கொண்டார்கள். அதன்பிறகு நல்லாம்பிள்ளைச் சர்க்கரையை மீறிப் பாப்பாக் கவுண்டர் பட்டத்துக்கு இருந்து கொண்டார். அப்போது நல்லாம்பிளைச் சர்க்கரை லிங்கப்பன் அதிகாரியை அழைத்து பாப்பாக் கவுண்டனையும், சிவனேசிக் கவுண்டனையும் சேருவை ஆயக்காரக் குப்பனையும் என் கை ஆயுதத்தினாலே இவர்களை வதை செய்து போட்டு என்னைப் பட்டத்துக்கு வைத்ததானால் காரையூரிலே கால்பங்கு காணியுங் கொடுத்து ஆனூரன் என்கிற விருதும் கொடுக்கிறேனென்று ஜெயங்கொண்ட நாதர் பேரிலே ஆணைச் சத்தியம் செய்தார். ஆனபடியினாலே அம்மன் திருநாள் கோயிலில் பாப்பாக் கவுண்டரையும் சிவனேசிக் கவுண்டனையும் ஆயக்காரக் குப்பனையும் கைது செய்து போட்டு ராஜுவமுடனே ஓம சம்மந்தம்பண்ணி அப்படியே முன் சொன்னபடி நல்லாம்பிள்ளைச் சக்கரையைப் பட்டத்துக்கு வைத்துக் கொண்டான்.

பிறகு பாப்பாக் கவுண்டன் அண்ணன் தம்பி வளத்தாக் கவுண்டன் ஆதீனம்விட்டு ஓடிப்போய் இராமச்சந்திரநாயக்கனண்டை போய்ச் சேர்ந்தார்கள். பிறகு இராமச்சந்திரநாயக்கன் இரண்டாயிரம் பேர் படைகூட்டிவந்து காரையூர்க் கோட்டையைக் கன்னமிட்டு இந்த ரண்டு பேரையும் குத்திப்போட்டு பிறகு அரண்மனைவந்து வளைத்தார்கள். இவர்களை அதுக்குள் முதலே அதிகாரியும் மன்றாடியும் கொத்தளத்திலே குதித்து பழையகோட்டையே போய்சேர்ந்தார்கள். கோட்டைக்கு ஆள் கூட்டிப் பெலம் பண்ணிக்கொண்டு பிறகு நாடொப்பந்தம்

பண்ணிக்கொண்டு பிறகு பட்டத்து நாயக்கன் கிட்ட லிங்கப்ப அதிகாரி போய் எனக்கு நாலாயிரம் ஆள்வந்து கர்ரையூர்க் கோட்டையை வாங்கிக் கொடுத்தால் பூந்துறை நாட்டில் எல்லை சேர்ந்த கிராமம் பெருந்துறை வரைக்கும் கட்டிக் குடுக்கிறேன் என்று சத்தியப் பிரமாணம் பண்ணிக் கவுல்கொடுத்து நாலாயிரம் காலாளுடனே வந்தான். பிறகு லிங்கப்ப அதிகாரி வீரசலை பிள்ளைக் கொண்டு தம்பிமார் இறந்த மண்ணில் நானும் இறக்கிறதொன்று இல்லாவிட்டால் வளத்தாக் கவுண்டனையும் வெட்டிக் கோட்டையை வாங்கி நல்லாம்பிள்ளைச் சக்கரையைப் பட்டத்துக்கு வைத்து நத்தக் காணியும் ஆனூரன் என்கின்ற விருதும் பிடிக்கிறதொன்று இந்த இரண்டிலொரு காரியம் விருது முடிப்பேன் என்று சபதங் கூறிக் கொண்டு ஒருவரறியாமல் ஒரு ராத்திரியே வந்து கோட்டையை அண்டிக்கொண்டார்கள்.

அந்த வேளையிலே தலவாசலிலே இருக்கிறபேர் பத்துப்பதினைந்து பேர் மட்டாய் வெடி அதட்டிக் காட்டினார்கள். தலவாசல் விட்டுப் போச்சுது. அந்தக்கையோடே கோட்டை புகுந்தார்கள். கோட்டையிலே இருக்கிறவர்கள் கோட்டை குதித்து ஓடிப்போனார்கள். காவலினாலே இருந்தவர்களும் ஓடிப்போனார்கள். பிறகு தம்பிமார் பட்டபாடெல்லாம் பார்த்து நல்லாம்பிளைச் சக்கரையும் பட்டத்துக்கு வயித்துக் கொண்டார்கள். கோட்டையும் பலம் பண்ணிக் கொண்டு இருந்தார்கள். அதன் பிறகு நமக்காகப் பிரயத்தனப்பட்டான் பழியுமுண்டென்று லிங்கப்ப அதிகாரிக்கு முன் சொன்ன வார்த்தைப்பாடு தப்பினால் தேவன் துணை செய்யானென்று நாட்டாரைக் கூட்டி செயங்கொண்ட நாதர் சன்னதியில் திருவேடு எடுத்து லிங்கப்பன் அவன் கோத்திரமும் உங்கள் தலைமுறை சொல்லென்றார்கள்.

எங்களுக்கு வாதவநல்லூரில் நாற்பத்தொன்பது தலைமுறை சொல்லுகிறேனென்று சொல்லுகிறார்கள். வாதவநல்லூர்க் காணியாளர் சிலபேர் சிவலிங்க ராசா முடிமன்னலிங்கன் ஆண்டிலிங்கன் சொக்கலிங்கன் பட்டியலிங்கன் கருலிங்கன் முடிமன்னர்தோளன் மூவிருமுடையார் திருவம்பலவன் அழகியசொக்கன் பத்திரிராமன் இடிமன்னன் முத்திமுத்துத் தாண்டவன் சங்கரன்பெருமாள் சூடாமணிக் காவலன் காஞ்சியுடையான் சிங்கராசா பிறைதிருவிடை முடையார் நல்ல தம்பிராசா குப்பயராசா முடிபொருத்த ராசா பவளத்தாக் கவுண்டன் தாண்டவமூர்த்திக் கவுண்டன் பொன்னம்பலவன் தென்மண்டல ராசா கங்கை ராசா எரியப்ப முதலிய பவளக்குடை மன்னன் மாணிக்க அம்பலவன் அனந்த மூர்த்தி மந்திரகிரி மூர்த்தி மாலை சூட்டிய லிங்கன் திருநகரம்பிறவுடையார் வள்ளல் பண்டாரம் பொன்முடிக் காவலன் வெட்டும்பெருமாள் ஆண்டிமன்னன் துட்டிமுதலியார் சங்கரன்ராசா வல்லவராயன் அழகன்பெருமாள் அதிகாரி லிங்கப்ப அதிகாரி ஆகத்தலைமுறை நாற்பத்தொன்பது. இதில் ஒருவன் பின்னை வந்தாலும் காரையூரில் கால்பங்கு காணியும் ஆனூரன் என்கின்ற விருதும் கொடுத்தேன். இதுக்குச் சாட்சி செயங்கொண்டநாதர் சன்னதியில் காரையூரில் வலதுபுறத்துப்படியில் கல்வெட்டுக் கண்டு ஆண்டு கொள்ளக் கடவாறாகவும்.

அதன் பிறகு லிகவச்சக்கரை காலத்தில் அவர் பட்டத்தில் லிங்கப்ப

அதிகாரியை அழைத்து எல்லை வாடையில் நீர் பார்க்க வேணுமென்றார்கள். காங்கய மன்றாடிக்கு நீயே பிரீதி. கொடுமணலிலே இருக்கச் சொல்லிக் கட்டளையிட்டார்கள். அப்படியே நல்ல தென்றான். ஆனால் கொடுமணல் அணை உடைந்தல்லவோ இருக்கிறது. நாங்கள் அதை அடைக்க அது நிற்கவில்லை. இந்த அணையை அடைத்து நிலை நின்றால் உனக்குக் கொடுமணல் கவுண்டர்கள் நாலுபேர் அப்பவேயுள்ளது. நாலாம் பேருடனே அஞ்சாம்பேர் காணி குடுக்கிறேன். செயங்கொண்ட நாதரே சாட்சி என்றார்கள். அப்படியே தன் மக்களுக்கு வட சலக்கியங் கேட்டவிடத்திலே தன் தம்பிமார் மக்களில் குப்பிச்சி தலையில் கலலும் பெரியண்ணன் தலையில் மண்ணும் கொண்டுவந்து போட்டால் அணை நிற்கும். தென்கோடியில் நாச்சிமாரும் வைத்து குப்பிச்சி தலையில் கல்லும் பெரியண்ணன் தலையில் மண்ணும் வைத்து ஓம சாஸ்திரம் செய்து முகூர்த்தம் பண்ணி அணை அடைத்தார்கள். அன்று முதலாய் அணை அடைப்பட்டு ஒரு ஆண்டு வெள்ளாண்மை எடுத்தார்கள்.

ஒரு ஆண்டுக்குப் பிறகு விசுவச்சக்கரை வந்து அணைக்குளம் வெள்ளாண்மை பார்த்து வெகு சந்தோஷப்பட்டுக் கொண்டு கொடுமணல் கவுண்டர்களை அழைத்து முன் சொன்ன வார்த்தைப்பாடு தப்பாமல் ஊருப்பங்கு 5 கட்டுக் கல்லணை 5 குளம் 5 கோயில் 5 என்று நிலவரம் பண்ணி லிங்கப்பதிகாரி பங்குக்காடு ஊருக்குக் கிழக்கே சிலை யூஞ்சக்காடு ஆறுபொதி விரைப்பாடு சூரியபாளையத்துக்கு மேற்குக் காடு புறத்தைக்காடு கல்வெட்டு உண்டு, பார்த்துக் கொள்ளவும். நஞ்சையில் குருக்கள் மானியத்தில் கிழக்கோடையிலிருந்து செம்மேடுமட்டும் பனிரண்டு முடா விரைப்பாடு உண்டு. இதுக்குக் கல்வெட்டு மூலத்துறை நாட்டார் சக்கரை மரத்தடியில் கல்வெட்டு உண்டு. மாமரம் 5 தென்னை மரம் 5 இன்று முதலாய் ஆண்டு கொள்ளக் கடவோமாகவும். இந்தப்படிக்குக் காணி முறி கொடுத்தேன். முந்தின பாக்கு வெற்றிலை பச்சைவடம் யெங்கும் செலுத்தவுள்ளவன். இந்தப்படிக்கு நாமன் கொடுத்து இருக்கிறோம்.

இதில் ஒருவன் செல்லாதென்று தடுத்து மறித்ததானால் கெங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற பாவத்தில் வீழ்வார். பின்னும் கற்புடைய பதிவிரதையைக் கற்பழித்த பாவத்தில் போவான். இது அழிவு சொன்னவன் வீடு அகஸ்தியன் மனையடைபட்டாற்போல் இகழ்ந்தார். தகைத்தார் நீண்ட மலருள் வண்டு முறைந்தாப்போல் அவன் இதல்லாமல் எதிர் காணியாளர் உனக்குச் செல்லாதென்றால் இரும்பு முக்காலியை பழுக்கக் காய்ச்சி இந்தக் காணி சாதகம் மடியில் வயித்துக் கொண்டு முக்காலி மேலிருந்து காணியாண்டுகொள்ளக் கடவாராகவும். இப்படி நிர்ணயம் பண்ணுகிறதுக்கு சாட்சி காரையூரிலே செயங்கொண்ட நாதர் சன்னதியில் காணவும். இதன் பிறகு கொடுமணலில் சோழீசுவரன் சன்னதியில் காணவும். இந்தப்படிக்குக் காணிசாதகம் கொடுத்தவரும் காணி கொண்டவரும் சென்மக் காணியுடையோரும் ஆல்போல் தழைத்து அருகதுபோல் வேரூன்றி மூங்கில்போல் கிளை கிளைத்து முசியாமல் வாழவும்.

இந்த சாதகம் கேட்ட நல்லோர் பெரியோர் சிறியோர் சந்திரனும் சூரியனும் தாழ்வற்று வாழ்வதுபோல் எல்லோரும் வாழ்க வாழ்க. வாழி வாழி. தேவர்களும்

வாழி. ரிஷிகளும் வாழி. அரசராகாணி சாதகம் முற்றும். எழுத்துக் குற்றம் சொல்குற்றம் என்ன குற்றமிருந்தபோதிலும் பெரியோர்கள் பொருத்துக் கொள்ளவும். நன்று. சிவநாயநம தென்காஞ்சியை விட்டு வந்தது கலியுகம் 4341 வருஷம் வெகுதானிய வருஷம் வைகாசி மாதம் 22 ஆம் தேதி திங்கள்கிழமை சுக்கில பட்சம் திரயோதசி நட்சத்திரம்.

# 58. ஆசாரிமார் வெற்றிப் பட்டயம்

இப்பட்டயம் ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் உள்ளது.

பட்டயத்தின் தொடக்கத்தில் அகவற்பா வடிவில் ஆசாரிகுலப் பெருமக்கள் வரலாறு கூறப்படுகிறது. அதனை அடுத்துப் புராண மரபில் ஆசாரிகள் குலப்பெருமை விவரிக்கப் பெறுகிறது.

கொங்கு 24 நாட்டு இடங்கை ஆசாரிமார்களும் (திருச்சினாப்பள்ளி, சோழநாடு இவைகளைச் சேர்ந்திருப்பது புதியதாக உள்ளது) கூடி புரவிபாளையம் பாளையக்காரர் கோப்பண கவுண்டர் அவர்களைக் கண்டு வணங்கிக் கணக்கன் மகன் முத்துக்குமாருக்குத் திருமணம் செய்து யானைமேல் ஊர்வலம் வந்தனர்.

அப்போது வலங்கைச் செட்டியார்கள் இடங்கை ஆசாரிகளுக்கு யானைமேல் ஊர்வலம் இல்லை என்று தடுத்தார்கள். இரு சாராரும் வழக்கிட்டுக் கொள்ளவே காஞ்சிபுரம் சென்று காமாட்சியம்மன் சன்னதியில் செப்பேடு பட்டயம் பார்த்தனர். அதில் இடங்கை ஆசாரிகளுக்கு யானைமேல் ஊர்வலம் உண்டு என்று எழுதப்பட்டிருந்தது.

வலங்கையார் பொய் வழக்காடியமைக்காக அவர்கள் ஒப்புக்கொண்டபடி பத்துத் தலையும் பன்னீராயிரம் பொன்னும் அபராதமாகக் கொடுத்தனர். இடங்கையார் ஆசாரிகளும் வெற்றிக் காணிக்கை இரண்டாயிரத்திருனூறு பொன் கொடுத்தனர்.

கோப்பண கவுண்டரும், நர்கம நாயக்கரும் பட்டயத்தில் கையெழுத்திட்டுள்ளனர். இந்நிகழ்ச்சி கி. பி. 1452 ஆம் ஆண்டு நிகழ்ந்ததாகவும், (ஆனி 27 ஆம் தேதி) தை மாதம் முதல் தேதி இப்பட்டயம் எழுதப்பட்டதாகவும் கூறப்பட்டுள்ளது. காலக் குறிப்புக்கள் சரியாகப் பொருந்தி வரவில்லை.

## மூலம்

பறாபறம் மயேசுபறநார் தறாதலம் படைக்கத் தானெளுந்தருளிய தனது பதியான தற்பரையிடத்துள் பாரது புரவட்டத்துள் பாதந் தோன்றி, பாதத்தில் நாதன் தோன்றி, நாதத்தில் யுவைய நடனஞ் செய்யும் பரமேசுபரனார் தோன்றி,

அகில பூருவம் முன் தொளிலும் முரைக்குல மிகவும் மிக வெரு வெளியாய் விளங்கிய காலம் ஆங்காரத்தால் அழித்தவை யிப்பொருளும் ஓங்காரத்தால் ஒடுங்கியகாலம் ஒளித்தனை நினைந்து ஒண்சுடரீசன் விளித்தனை தீர்க்க மெயிப்புடன் நினைந்து நெற்றியில் கண்ணில் நேருடன் னெளுந்து வித்தகம் பொருந்திய விசுவகருமா அஞ்சு முகமும் அய்யிரு கறனும் வேதபன் னூலும் விளங்கிய புசத்தகமும் சாஸ்திரப் பொஸ்த்தகம் தன்கையில் ஏந்திக்கொண்டு அப்போ யீசுபரருடைய அடியினைத் தொழுது மெயிப்பொருளாக மெல்லியே யீசுபரன் செப்பியே லோகத்துக்குள் செகந்தனில் குருவாய் குருந்தெனக் கருளாய் யென்றும் முரைக்கா முப்புரம் எரித்த முக்கண்ணார் மூர்த்தி அப்படி விசுவகரும்மாவை நோக்கி மலர்தனக்கருளிய நீதியா வேதின்ன என்னுட னுதிக்க உந்தியில் லுதித்த உயர்குல வேதினை சிந்தையில் லுதித்து செகந்தனில்க் குருவே அந்தமா வேதினை அளையென்றுஞ் சொல்ல,

தாமறக் கொடியை தரும நினத்தருளும் மெயிப்பொருளாக விளங்கிய வேதனும் முதித்து செப்பியே யீசுபரன் நிற்றடி தொளுது சங்கறுத் தொளிலது தந்தெனக் கருளீரென்று யிங்கித முடனே விசுவகருமாவை நோக்கி யிருவகைப் பொருளாய் ஈரேளு லோகமும் படைத்தெனக் கருளீரென்று பரமேஷ்பரனார் அருளிச் செய்ய விடையது பெற்ற விசுவகரும்மாவும் அடவுடன் வரங்கள் அருள்பெற்றாரே. ஆதி விசுவகரும்மாவும் லோக லோகங்கள் படைக்கும் பெருமை அண்டரண்டங்களும் யீரேளு பதினாலு லோகங்களும் யிருநூற்றி யிருபத்திநாலு புவனங்களும் தட்டுத் தாபரங்களும் சந்திறாதித்தறாகவும் திக்கு பாலகரும் மகாமேரு பருவதங்களும் முப்பத்திமுக்கோடி தேவர்களும் தேவாதி தேவர்களும் நாற்பற்றி யெண்ணாயிரங் கோடி ரிஷிகளையும் கிண்ணர கின்புருடர், கெருட காந்திருபர் துன்புரு நாரதரும் சித்தியர் வித்தியாதரும் யிப்படிக்கொற்ற தேவாதி தேவர்களைப் படைத்த தெய்வ கண்ணாழன் தெய்வ ஆசாரியன் தெய்சவம்மதி ஆதி விசுவகருமாவுக்கு அஞ்சு பிள்ளைகளுண்டு.

அந்த அஞ்சு பேர்களுடபேர் மநு மயன் துஷ்ட்டி சில்பி விசுவாக்கினி. இந்த அஞ்சுபேர்களுக்கு அஞ்சு குமாரத்தியுண்டு. அந்த அஞ்சு பெண்களையும் தேவேந்திரனுக்கு ஒரு பெண், சூரியனுக்கு ஒரு பெண், யிமனுக்கு ஒரு பெண், மன்மதனுக்கு ஒரு பெண், யிறாவணனுக்கு ஒரு பெண் யிப்படி அஞ்சு பேர்களையும் அஞ்சு தேவர்களுக்குக் கலியாணம் பண்ணிக் குடுத்து தெய்வ சம்மதியால் தெய்வ கண்ணாழர் பேர் தன்னை அணைகண்டவர், அகஷ்த்திய மகாமுனியே பொதிகமா மலையில் போர் திருக்காசாவித்தவர், மேருவைப் பிரந்த ரெச்சனம் புரியும் ஒளிவு குன்றாத மேருவும் சூரியனை ஒளிவட்டமாகக் கடைந்தோர், உலகுமரனையும் இலகு சமுக கடவுளை உபைய தூட்டினில் நிருத்தவர், காறாழன் தன்குலம் ஒருகால் பந்தலிட அவமானங் கார்த்தவர், கலிக்குருதாசன் நந்தனுக்கருளை யுரவு கையோர் சீறாமரும் அல்லியது துமார்க்க றாவணனை சமாறம் பண்ணினார்கள்.

பிரவடிவாக புகலமொரு சாதிதன்னை அமிந்துவகையாய்ப் புரந்த பூங்கரத் தொளிலார், தென்னரும் அக்கசாலைத் தலைவர், சொல்ப்பிரதாவர், நிருனர், பன்னக சருனுருவாமாகவென்று அயோற்றியில் பறாகாரியமாக வனம் மலர்ந்து சீதையைப் பரிகுடுத்து தேடுமந்த நாளையில் யிலங்காபுரம் தீயிட்டுச் சென்ற

அஞ்சனி குமாரனைக் கண்டு நிருமித்து விடைகொடுத்து அனுமக்கொடி பெற்றவர், தோறாத சோழன் கழஞ்சி யேந்தவே செகத் குருவாய் பேர்படைத்த தோறா பாறாளும் வேந்தன், தரணியன் தன்னை வெட்டித் தாரணிக் கோலம் படைத்தோர், சாலிவாகனா கலியுக சகார்த்தம் 4553க்கு மேல் செல்லாநின்ற ஆங்கிர வருஷம் ஆனி மாதம் 27 தேதி குரு வாரமும் பவர்ணமி உத்திர நச்செத்திரமும் விருத்திநாம யோகமும் பவகறணமும் திரைகண்டயோகமும்,

றாசாதிறாசா றாசபறம்மேஷ்பற றாசகெம்பீர றாசதயநெற அச்சுத மல்லிக அருச்சுணறாயர், வீரப்பறாயர், பிரவுடைய மகாதேவர்றாயர், நறசிங்கதேவறாயர், சிங்காரத்தேவறாயர், ஆனைகுந்தி மகாதேவர்றாயர் யிப்படிப் பேர்பெற்ற மகாறாசாதிறாசர்கள் றாச்சியம் பரிபாலினம் பண்ணி அருளாகநின்று கலியுக சகார்த்தம் 4553க்கு மேல் செல்லாநின்ற ஆங்கிர வருஷம் ஆனி மாதம் 27 ஆம் தேதியில்,

காளிகாதேவி யம்மன் அருள்பிரசாதமும் பெற்றருளிய திருச்சின்னாப்பழ்ழி, காங்கயநாடு, தாறாபுரநாடு, புங்கிலிக்கிநாடு, வராக்கநாடு, வய்யாவூர்நாடு, தென்கரைநாடு, பூந்துரைநாடு, ஆனைமலைநாடு, கோவைநாடு, அண்டைநாடு, கோட்டைசூழ்ந்த ஆருநாடு, சிவனாபூண்டிநாடு, குரிப்புநாடு, ஒடுபங்கநாடு, வடகரைநாடு, கிளங்குநாடு, மணல்நாடு, றாசிபுரநாடு, சோழநாடு, எளுகரை கீள்கரைபூவானிநாடு, மேல்கரைப்பூவானிநாடு யிந்த யிரவத்திநாலு நாலு நாடு உறவின்முறையாரும் அஞ்சு அஞ்சு சாதியுங் கூட்டிக் கோப்பண கவுண்டன் வாசல் யிண்டு கணக்கன் மகன் முத்துக் குமாருக்கு கலியாணம் பண்ணிக் கொண்டு ஆனைமேல் மாப்பிள்ளையை வைத்துக் கொண்டு கிணத்துக் கடவில் மிரவணை வருகுரபோது வலங்கைக்காரன் தீர்த்தியப்ப செட்டி, தேவி செட்டி, கிஷ்ட்டன செட்டியும், வெங்கட்ட செட்டியும் இவ்வற்கள் வலங்கையார் அனைவரும் கூடிவந்து யிந்த ஆசாரிகள் அனைவருக்கும் ஆனைமேல் மிரவணை செல்லாதென்று தடுத்தபடியினாலே,

யித்தண்டத்தாரும் வெட்டுக் குத்துக்களாகி யித்தண்டத்தாரையும் மகாறாயர் றாயேஷ்த்திரி கோப்பண கவுண்டரவர்களுக்கும், நாகமநாயிக்கருக்கும் அரிக்க பண்ணினார்கள். கோப்பண கவுண்டரும், நாகமநாயக்கரும் வலங்கையாரைப் பார்த்து நீங்கள் தடுத்த பூருவமென்னவென்றுங் கேட்ட போது வலங்கய்யார் சொன்ன விபறம். யிடங்கையறாயிர ஆசாரிகளுக்கும் ஆனைமேல் மிரவணை செல்லாதென்றார்கள். அப்போது யிந்த ஆசாரிகள் சொன்ன விபரம். எங்களுக்கு ஆனைமேல் மிரவணை செல்லாதென்றால் நாங்கள் பத்துத் தலையும் பன்னீராயிரம் பொன்னும் குடுக்கிறோம்மென்றார்கள். அப்போ வலங்கய்யார் சொன்ன விபரம். யிவர்கள் உண்டுபண்ணிக் குடுத்தால் நாங்கள் பத்துத் தலையும் பன்னீறாயிரம் பொன்னும் குடுக்குரோமென்றார்கள். அப்போ யிந்த ஆசாரியளைக் கெட்டிப் படித்தி, யிவ்வர்களைக் கேள்க்கும்போது நாங்கள் காஞ்சிபுரத்திலே காமாச்சியம்மன் சன்னதியில் செப்பேடு பட்டையத்தில் உண்டுபண்ணிக் குடுக்குரோம்மென்றார்கள். அதே மேரைக்குப் பட்டையத்தில் நீங்கள் உண்டுபண்ணிக் குடுத்தால்ச்சரி யில்லாவிட்டால் நீங்கள் பத்துத் தலையும் பன்னீராயிரம் பொன்னும் குடுக்க

உள்ளவர்களென்றும் சொல்லிக் கேட்டபோது அப்படியே தாரோமென்றும் யிந்த ஆசாரியள் கைய்யோலை கட்டோலை எளுதிக் கோப்பண கவுண்டருக்கும் நாகம நாயக்கருக்கும் குடுத்தார்கள். அதின் பிறகு வலங்கய்யாரையும் தருவிச்சு கெட்டிப்பிடித்துக் கேள்க்கும்போது யிடங்கையாருக்கு ஆனைமேல் பிரவனை யில்லை ஒப்புவிச்சுக் குடுக்குரோமென்றும் கைய்யோலை கட்டோலை எளுதிக் குடுத்து பிரவணை யுண்டாகியிருந்தால் அந்த வகையினால் யிந்தப் பத்துத் தலையும் பன்னீராயிரம் பொன்னும் தாரோமென்று வலங்கையார் சம்மதித்துக் கையோலை எளுதிக் குடுத்தார்கள்.

அதின் பிறகு யித்தண்டத்தாருக்கும் கையிக்குச் சங்கிலியும் போட்ட விபரம். நித்தியப்பசெட்டி மகன் செந்தேவிசெட்டி கையிக்கு பொம்மத்தச்சன் கையிக்குச் சங்கிலியும் போட்டுவிச்சு கோப்பண கவுண்டர் அவர்கள் நாகம நாயக்கர் அவர்கள் தங்கள் பேருக்கு உத்திரமும் எளுதி கோப்பண கவுண்டருடைய ஆள் விருந்தாளிக் கவுண்டர் கையில் குடுத்து நாகம நாயக்கருடைய ஆள் யிறாம நாயக்கனையும் கூட்டிக்கொண்டு போகச் சொன்னார்கள். அவர்கள் கூட தித்தியப்பசெட்டி, தேவிசெட்டி, வீரன்செட்டி, வேங்கிடபதிசெட்டி, ஆசாரிகளில் கொக்கத்தட்டான், பொம்மத்தச்சன், பிரமதட்டான், மீண்டு கணக்கன், வேலாயுதத்தச்சன், திருவேங்கிடக் கொல்லன், பெத்தாக்கொல்லன், அரசக்கொல்லன், அழகிரிக் கொல்லன், கண்ணார் அங்குமய்யன், கல்வேலைக்காரர் அரசன் ஆசாரி யிவ்வர்கள் அனைவரும் கூடிக் காஞ்சிபுரத்துக்குப் போயிக் கருத்தராயிய அழகுசெய்ய றாசாவய்யன் அனவர்களையும் கண்டு அரிக்கிபண்ணி கோப்பண கவுண்டரும் நாகம நாயக்கரும் குடுத்த உத்திரத்தைக் குடுத்தார்கள்.

உத்திரத்தையும் அழகியசெய றாசாவய்யன் அனவர்களும் வாசித்துப் பார்த்துக்கொண்டு காமாச்சியம்மன் கோயில் ஒத்தநிகர் வெங்கிடாசலபதி அய்யன் அவர்களை அழைப்பிச்சுச் செப்பேடு பார்க்க வேணுமென்று சொன்னபோது அதற்கு அவர் சொன்னது; அம்மனுக்குப் பாதக் காணிக்கி இருநூறு பொன்னும் அவுசேகம் தீவார்த்திணைக்கு அருபது பொன்னும் குடுத்தால் கோயில் திறக்கப் போகிறேனென்றும் சொன்னார்கள். அது நல்லதென்று இரனூத்தருவது பொன்னும் குடுத்து அவுசேகம் தீவார்த்தனையும் முடிப்புவிச்சு செப்பேட்டையும் வாசித்துப் பார்க்கும்போது சந்திரவர்ரோதைய நாள் விசுவகருமாவுக்கு ஆனைமேல் பிரவணை யுண்டு. பஞ்சவர்ணக் குடையுண்டு. பஞ்சவர்ண விருதுகளுண்டு. கத்தி கட்டாரியுண்டு. அனுமந்த டாலுண்டு. சகல் விருது சகல பிரவணையுண்டு என எளுதியிருந்தது.

யிந்தச் செப்பேட்டில் உண்டான பிரகாரம் எளுதி அழகுசெய்யா றாசாய்யன் அவர்களும் கோப்பண கவுண்டருடைய ஆள் விருந்தாளிக் கவுண்டன் கையில் குடுத்துப் போகச் சொன்னார்கள். கையோலையும் வாங்கிக் கொண்டு யித்தண்டத்தாரும் கூடி வந்து ஈரோட்டில் வந்து கொங்கிலம்மன் கோவில் வாசல் பூச்ச மரத்தடியில் அந்த றாத்திரி அங்கு தங்கியிருந்து வந்து கோப்பண கவுண்டரவர்களையும் கண்டு காஞ்சிபுரத்திலிருந்து அழகியசெய்ய றாசாவய்யனவர்கள் குடுத்த ஓலையை கண்டவர்கள் கையிலே குடுத்தார்கள்.

ஓலையைக் கண்டவர்களும் வாங்கிக் கொண்டு அந்த ஓலையை வாசகம் பண்ணத்தக்கதாக கோப்பண கவுண்டரவர்கள் அனவோர்களையும் கூட்டிவச்சுக் கொண்டு அந்த ஓலையை நாகமநாயக்கர் அவர்கள் கோப்பண கவுண்டர் அவர்கள் யிவ்வர்கள் எல்லோருங் கூடியிருந்துகொண்டு வாசித்துப் பார்த்தபோது சந்திராதித்தர் உள்ளவரையில் விசுவகருமருக்கு ஆனைமேல் மிரவணையுண்டு. பல்லாக்கு மிரவணையுண்டு. தேரு . . . . . . . . மிரவணையுண்டு. பஞ்சவர்ன்னக் குடையுண்டு. பஞ்சவர்ன்ன விருதுண்டு. அனுமந்த டாலுண்டு. கத்தி கட்டாரியுண்டு. சகல விருதுண்டு சகல மிரவணையுண்டு என்று எழுதியிருந்தது.

அந்த ஓலையை வாசகம் பண்ணிக் கொண்டு ஆசாரியனைப் பார்த்து வெப்பட்டுக் கொண்டு வலங்கையாருக்குச் சரியென்று வலங்கய்யார் கையில் தே . . . . . பத்துத் தலையும் பன்னீராயிரம் பொன்னும் வாங்கி ஆசாரியார் கையில் வெற்றிக் காணிக்கி இரண்டாயிரத்திருநூறு பொன் வாங்கிக் குடுத்தார்கள். மேலோலை கையொப்பிதத்தையும் கிளிச்சி ஆனைமேல் மிரவணையும் வரக்கண்டு மேல் பெண்ணையும் வயித்துக் கொண்டு மிரவணையும் வந்து கலியாணத்தையும் நடத்திக்குடுத்து யிந்த அஞ்சு சாதியும் பஞ்சாளத்தாருக்கும் வெற்றிலை பாக்கு . . . . . இது . . . . கட்டிக் கொள்ளவும்.

இவ்வெற்றிப்பட்டயம் கையொப்பிதம் கோப்பணக் கவுண்டர் அவர்கள் நாகமநாயக்கர் கைஒப்பிதம். மசனி லச்சிக்கவும். காளிகாதேவி லச்சிக்கவும். யிது யெளுதினது தை மாதம் 1 தேதி. யிந்தப் பட்டயம் எளுதினது. ஆண்டவர் லச்சிப்பார். குருவே துணை.

# 59. கன்னிவாடிப் பட்டயம்

பெரியார் மாவட்டம் தாராபுரம் வட்டம் கன்னிவாடியில் உள்ள பெருமாள் கோயில் அர்ச்சகரிடம் இந்த ஓலைப்பட்டயம் உள்ளது.

இது கன்னிவாடி ஆதிநாராயணப் பெருமாள் சுவாமி சன்னிதான மடாதிபதியாகிய பெருமாள் கைங்கரியம் வேங்கடசாமி ஐயர் அவர்களுக்குக் குண்டூர் மங்கலகிரி மடத்தைச் சேர்ந்த மண்ஒட்ட நாயக்கர், வண்டிஒட்ட நாயக்கர், சுண்ணாம்பு ஒட்ட நாயக்கர் ஆகியோர் எழுதிக் கொடுத்த ஓலைப்பட்டயம். ஒட்ட ராஜகுல தாண்டவ கோத்திரம் திருமலைராசா காலத்தில் அளிக்கப்பட்டது.

வருடத்திற்குத் தலைக்கட்டுக்கு 1/4 ரூபாய் முன்புபோல எப்பொழுதும் கொடுக்க வேண்டும். வரி கொடுத்துப் பெருமாள் தீர்த்தமும் பெற்றுக் கொள்ள வேண்டும். எல்லாச் சுவாமிகளுக்கும் படித்தரமும் காணிக்கையும் கொடுக்க வேண்டும் என எழுதப்பட்டுள்ளது.

இவர்களுக்குரிய பல பட்டங்கள், உரிமைகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. செப்பேட்டின் இறுதிப் பகுதியில் பல ஊர் நாயக்கர் பெயர்களும் அவர்கள் குலப்பெயர்களும் கூறப்பட்டுள்ளன.

7.1.1569 ஆம் ஆண்டு பட்டயம் எழுதப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

## மூலம்

சென்ற கலியுகாதி வருசம் 4669 விக்கிரக சகம் 1624 சாலியவாகன வருசம் 1490 தமிள் விபவ வருசம் தை மாசம் 11 தேதி குருவாரம் பூசநட்செத்திரம் சுத்த மங்கல சுபதினத்தில் ஸ்ரீமது வேதமார்க்க பிரதிஷ்ட உபய வேதாந்த நித்திய கல்யாண ஸ்ரீரங்கநாத திவ்யாம்ச ஸ்ரீராமானுச தாராபுரம் ஸ்தலத்தைச் சேர்ந்த தலையநாடு கண்ணிநகர் ஆதிநாராயணப் பெருமாள்சாமி சன்னிதான மடத்திற்கு மடாதிபதியாகிய பெருமாள் கைங்கரியம் வேங்கடசாமி ஐயர் அவர்கள் சன்னிதானங்களுக்கு குண்டூர் மங்கலகிரி மடத்தைச் சேர்ந்த சிசியர்கள் ரவிகுலத்தார் மண் ஒட்டனாயக்கர் வண்டி ஒட்டனாயக்கர் சுண்ணாம்பு ஒட்டனாயக்கர் இவர்கள் சகிதம் மூன்று முதன்மை குலகோத்திரக்காரருக்கும் இவை ஒட்ட ராஜகுல தாண்டவ கோத்திரம் திருமலைராஜா அவர்களால் எழுதி

வைத்துக்கொடுத்த தாம்பூர மூல பட்டைய சாசனம்.

அதாவது பெருமை தங்கியிருக்கிற சாமி அவர்களுக்கு எங்கள் குலகோத்திரக்காரர்கள் வலதுபுஜ வம்சத்தார்களுக்கும் பட்டமும் இடதுகை சேர்ந்தவர்களுக்கும் லக்ஷிமி வம்சத்தார்களுக்கும் வலதுகை சேர்ந்தவர்களுக்கும் சாமி அவர்களுக்கு எங்கள் முன்னோர்கள் அடுமைப்பட்டு தீர்த்த தண்டம் சமர்ப்பித்து வருசம் 1 க்கு தலைக்கட்டுக்கு பெருமாள்சாமி காணிக்கை கால் ரூபாயும் எங்கள் முன்னோர்கள் கொடுத்துக்கொண்டு சகல விமரிசையுடன் சமர்ப்பித்து சாமி அவர்களிடத்தில் பெருமாள்சாமி தீத்தப் பிரசாதம் எங்கள் முன்னோர்கள் பெற்றுக்கொண்டு வந்து இருப்பதால் இந்தப் பஞ்சதாகோடி மண்டலங்களில் இருக்கின்ற நம்ப மூன்று முதன்மை குலகோத்திரக்காரர்களும் பரம்பரையாக யாதொரு ஆச்சேபணைகள் செய்யாமல் மேற்படி கட்டளைப்படிக்கு ஆசார உபசாரத்துடன் தீர்த்த தண்டம் சமர்ப்பித்து காணிக்கையும் படித்திரச் சிலவும் நாங்கள் கொடுத்துக்கொண்டு சாமி அவர்களிடத்தில் பெருமாள்சாமி தீர்த்தப்பிரசாதம் பெற்றுக்கொள்வோமாகவும்.

மேற்படி கட்டளைப்படிக்கு எங்கள் குலகோத்திரக்காரர்கள் யாதொருவர் சாமி அவர்களுக்கு விறோதமாக சாமியவர்களுக்கு காணிக்கையும் படித்திரச் செலவும் கொடுக்கிறதில்லையென்று நிச்சயமாய்ச் சொல்லுகிறார்களோ அவர்கள் முக்கியமாய் காறாம்பசுக் கொன்ற பாவங்களை அடைவதன்றி தன்குலாச்சாரம் அற்று குருத்துரோகியாகியும் காசி கங்கை யமுனை துங்கபத்திரியென்ற புண்ணிய க்ஷேத்திரங்களில் சிசுஹத்தி குருஹத்தி பிரமஹத்தி முதலான பாவங்களை செய்தவர்கள் எந்த பாவங்களுக்கு அடைகிறார்களோ அந்தப் பாவத்திற்கு மூவேழு இருபத்தொரு தலைமுறைக்கு உள்ளாவார்கள் என்றும், யாதொரு சந்தேகமும் இல்லை. நம்ம குலகோத்திரக்காரர்கள் குலதெய்வங்களாகிய பெருமாள் ராமமூர்த்தி கிருஷ்ணமூர்த்தி கோவிந்தசாமி பெத்தசாமி பிர்மதேவர் அனுமந்தசாமி நல்லய்யன் சிவலிங்கசாமி மாம்பிடிசாமி கூடலிங்கைசாமி மத்திமாருசாமி காத்தவறாயசாமி மண்ணார்சாமி அண்ணாசாமி பெரியகருப்பணசாமி தாத்தய்யன் தருமர் விரபத்திரன் மினிவீரய்யன் மினியப்பன் முத்தையன் கோடங்கி சீதையம்மன் லட்சுமியம்மன் திருமலையம்மன் பொங்காளியம்மன் பார்வதியம்மன் தங்கையம்மன் விரசின்னம்மன் லக்கம்மன் பொம்மம்மன் திம்மம்மன் மலையம்மன் எலையம்மன் பட்டாலம்மன் சோலையம்மன் பாப்பம்மன் குப்பம்மன் நல்லம்மன் சின்னம்மன் துரோபதையம்மன் சிலேகம்மன் காளாஸ்திரியம்மன் பத்திரகாளியம்மன் ஏவம்மன் எல்லம்மன் சூரம்மன் மீனாட்சியம்மன் காமாட்சியம்மன் அங்காளம்மன் செல்லம்மன் பச்சையம்மன் பேச்சியம்மன் மருதகாளியம்மன் தாசம்மன் கன்னியம்மன் வீரமாத்தி வீரகண்டியம்மன் மல்லாண்டம்மன் மதுரைவீரன் இந்த 44 தெய்வங்கள் முன்பாகவும் பிர்மானமாயும் அக்கினி சாக்ஷியாயும் சூரிய சந்திர சாக்ஷியாயும் ஆகாசதேவி பூமாதேவி சாக்ஷியாயும் நாங்கள் யாதொன்றும் தடங்கல் செய்யாமல் சாமி அவர்களுக்கு பெருமாள்சாமி காணிக்கையும் படித்திரமும் மேற்படி கட்டளைப்படி கொடுத்துக்கொண்டு சாமி அவர்கள் ஆக்கிணைப் பிரகாரம் கட்டுப்பட்டு நடந்துகொண்டு வருவோமாகவும்.

மேற்படி ஆக்கினைக்கு யாதொருவர் கட்டுப்படாவிட்டால் நம் சாதி ஆசாரப்படிக்கு கட்டுதிட்டம் செய்து கொள்ளவும். அவர்களுக்கு ஒண்டிதடிதாசர் வில்லை சேவகம் துத்தாரி வெண்சாமரம் பச்சைக்கொடி வெள்ளைக்குடை விருதுகள் மேனா உடையவர்களல்ல என்றும், நம் சாதி ஆசாரப்படிக்கு சிறுவயதில் புருஷன் இறந்து போனால் மரு விவாகம் செய்து கொள்ளலாம். புருஷன் இருக்க மறு விவாகம் செய்யக்கூடாது. நம் சாதி ஆசாரப்படிக்கு விரோதமாய் யாரொருவர் நடந்துவந்தால் பெரியதனக்காரர் நம் சாதியாருக்கு சாதி ஓலையெழுதி சாதியாரை வரவழைத்து சாதி ஆசாரப்படிக்குக் கூடி பால்பழுது என்று தீர்க்கும்வரை நம் சாதியார் சலம்பன் செய்யக்கூடாது. சாதி ஆசாரப்படிக்கு சாதிகட்டுதிட்டம் செய்து கொள்ள வேண்டியது. சாமி அவர்களிடத்தில் பெரியதனம் பண்டாரி இளந்தாரி நம்சாதி ஆசாரப்படிக்கு நேமனம் வைத்துக்கொண்டு சாதி ஆசாரப்படிக்கு நடந்துகொள்ளவும். நம் கல்யாணத்திற்கு பச்சைக்கொடி வெள்ளைக்குடை விருதுகள் தீவட்டி குதிரைவாகனம் முதலானதும் சாதி ஆசாரப்படிக்கு நடந்துகொள்ளவும். இந்தப்படிக்கு எழுதிவைத்துக் கொடுத்த தாம்பூரப் பட்டய சாசனம்.

ஆலதண்ட கோத்திரம் திருமலைராஜா கையொப்பம். வெங்கிட்டகிரி நாட்டாமை மஞ்சளவாழு திம்ம னாயக்கன், மேற்படியூர் ஒல்லபவாழு இராம னாயக்கன், காலஸ்திரி நாட்டாமை ஓர்சுவாழு ரங்கா நாயக்கன், மேற்படியூர் பெள்ளபவாழு தாச நாயக்கன், காஞ்சிபுரம் வண்டிக்காமனிவாழு அனுமந்த நாயக்கன், மேற்படியூர் ராசுபெத்தவாழு திருமலை நாயக்கன், திருப்பதி பாலதண்டவாழு பட்டக்காரன் அளகிரி நாயக்கன், மேற்படியூர் முத்தகலவாழு பட்டக்காரன் ராமகிருஷ்ண நாயக்கன், மேற்படியூர் சுப்பலக்கல வாழு போடி நாயக்கன், நெல்லூர் வல்லப்பவாழு கருப்ப நாயக்கன், மேற்படியூர் பேரங்கல்வாழு மொட்டைய நாயக்கன், மேற்படியூர் சுப்ப மொரக்கலவாழு திருமலை நாயக்கன், மேற்படியூர் தந்திவாழு கோவிந்த நாயக்கன், மேற்படியூர் பேசிங்கவாழு குட்டிய நாயக்கன், சேலம் கோமாலிவாழு சின்ன நாயக்கன், மேற்படியூர் கேரங்கலவாழு ரங்கா நாயக்கன், கோயமுத்தூர் பீட்டாலவாழு அளகிரி நாயக்கன், காவலப்பட்டி குடிகுட்டிலவாழு கள்ளிய நாயக்கன், மேற்படியூர் தேபற்றிவாழு கோவிந்த நாயக்கன், கொள்ளேகாலம் மல்லவாழு ராம நாயக்கன், மேற்படியூர் ரேகலவாழு கொண்ட நாயக்கன், மேற்படியூர் எல்லலவாழு கிருஷ்ண நாயக்கன், கோபிசெட்டிபாளையம் ஆலகுட்டலவாழு வீர நாயக்கன், மேற்படியூர் தேபலவாழு பழனி நாயக்கன், சத்தியமங்கலம் சாந்தலவாழு ரங்கா நாயக்கன், ஓட்டனூர் பூர்சவாழு வீரநாயக்கன்,

கன்னிவாடி செல்லலவாழு றங்கா நாயக்கன், புதூர் மன்சலவாழு ராம நாயக்கன், அப்பசிமார்மடம் செருக்கலவாழு விஜயமங்கலம் தட்டி கட்டிபூசவாழு அங்கா நாயக்கன், ஏறா நாயக்கன், கருவத்தூருபட்டி செமாறு வாழு நல்லா நாயக்கனூர் பொங்காளி நாயக்கன், மடபலபாளையும் உப்புதெளிவாழு அம்மாசை நாயக்கன், மேற்படியூர் பெரிய குலத்தார் மேற்படி ஆலகொட்டவாழு சுங்கா நாயக்கன், பாலதண்டவாழு அங்கா நாயக்கன், சொக்கனூர் சாந்தலவாழு போடி நாயக்கன், தண்டாம்பாளையம் வேம்புலவாழு நாச்சிமுத்து நாயக்கன், காமாக்ஷிபுரம் பூர்சவாழு காளி நாயக்கன், நாகரசு கரிதண்டலவாழு சின்னா னாயக்கன், பெருந்தொழுவு வல்லபவாழு தாச னாயக்கன், சூலூர் மதுரைகொட்டலவாழு கங்கா

நாயக்கன், திருப்பூர் தண்டிமிமாறுவாழு குருவ நாயக்கன், குங்குமம்பாளையம் தேரங்கலவாழு சீறங்க நாயக்கன், நீலம்பூர் பந்திப்புட்டலவாழு ராம னாயக்கன், ஆலாம்பாளையம் பெரியகுலத்தார் பாலதண்டவாழு பொடிய னாயக்கன், கன்னிவாடி தண்டலவாழு குப்பா நாயக்கன், மேற்படியூர் பூர்சவாழு ராம னாயக்கன்,

முத்தூர் சடிபிலவாழு குப்பா நாயக்கன், வெள்ளகோவில் சேமாறுவாழு வீர நாயக்கன், வேலூர் புந்திப்பட்டுலு பெத்த குண்ணா நாயக்கன், சீரங்க னாயக்கன், பட்டணம் குச்சபவாழு கிஷ்ண னாயக்கன், மேற்படியூர் பிச்சகலவாழு தாச நாயக்கன், மேற்படியூர் மச்சகலவாழு அனுமந்த னாயக்கன், பாலசமுத்திரம் வல்லபவாளு மாதவ னாயக்கன், பழனி வண்டிகாமாறுவாழு அனுமந்த நாயக்கன், மதுரை கொட்டலவாழு கல்ப நாயக்கன், மேற்படியூர் கோமாலிவாழு வீர நாயக்கன், மேற்படியூர் தேபலவாழு சின்னாயக்கன், மேற்படியூர் பல்லபவாளு லக்ஷ்மண நாயக்கன், திருவந்தபுரம் முங்காருவாழு தாச னாயக்கன், மேற்படியூர் ஓலகண்ணவாழு பெருமாள் நாயக்கன், மேற்படியூர் சிப்பகலவாழு திருமலை நாயக்கன், கொடுமுடி செட்டிகண்டலவாழு மலைய நாயக்கன், மேற்படியூர் சூரவாழு திம்மா நாயக்கன், மேற்படியூர் வளத்தவாழு அளகிரி நாயக்கன்.

சாக்ஷிகள். காஞ்சிபுரம் அன்பத்தாரு தேசத்திற்கு தேசாயிக ராமன் செட்டியார் அறிவேன்.

# 60. நாகம்பள்ளி பண்டாரம் ஒப்பந்தம்

இது கரூர் நகரம் ஜெமினி ஃபேபிரிக்ஸ் உரிமையாளர் பி. எம். கருப்பண்ணன் அவர்கள் அளித்த காகிதப் பிரதியாகும்.*

1919 ஆம் ஆண்டு மார்ச்சு 2 ஆம் நாள் நாகம்பள்ளி செல்லாண்டியம்மன் கோயில் தர்மகர்த்தாக்கள், கவுண்டர்கள் முன்பாக மேற்படி கோயில் பூசாரிகள் 15 முறைகாரர் எனப்படும் பண்டாரங்கள் கூடிச் செய்துகொண்ட ஒப்பந்தத்தை இது விளக்குகிறது.

2 பொங்கல் வரை வந்தால் பூசை செய்யும் பூசாரிகளில் அப்போதைய முறைகாரனை மட்டும் சேர்ந்தது. 4 பொங்கல் வந்தால் எல்லா முறைகாரர்களும் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். சிவராத்திரி உற்சவம் 15 முறைகாரர்களைச் சேர்ந்தது. முப்பூசையும் எல்லோருக்கும் பொதுவானது.

ஒப்பந்தத்தின் இறுதியில் 15 பண்டாரங்களும் முன்னிலை வகித்த கவுண்டர்களும் கையெழுத்திட்டுள்ளனர்.

## மூலம்

உ

சிவமயம்

1919 வருஷம் மார்ச்சு மாதம் 2 தேதிக்குத் தமிழ் காளயுத்தி வருஷம் மாசி மாதம் 19-ம் தேதி நாகம்பள்ளிக் கிராமம் செல்லாண்டி அம்மன் கோவில் தர்மகர்த்தாக்கள் முன்பாகவும், மேற்படி கிராமத்திய கவுண்டர்கள் முன்பாகவும், மேற்படி கோவில் பூசாரிகள் ராமாண்டிப் பண்டாரம் 1, மேற்படியான் மகன் பறட்டயன் என்கிற முத்துக்கருப்ப பண்டாரம் 2, லட்சுமாண்டிப் பண்டாரம் 3, மேற்படியான் மகன் கணபதிப் பண்டாரம் 4, முத்துக் கருப்பாண்டி மகன் அணையாண்டிப் பண்டாரம் 5, முத்தாண்டிப் பண்டாரம் 6, மேற்படியான் மகன்

---

* புலவர் செ. இராசு, நாகம்பள்ளி நான்கு முதன்மைக்காரர் வரலாறு, நாகம்பள்ளி கும்பாபிஷேக மலர், 1989.

அணையாண்டிப் பண்டாரம் 7, பெ.வெள்ளயாண்டிப் பண்டாரம் மகன் அணையாண்டிப் பண்டாரம் 8, கருப்பாண்டிப் பண்டாரம் மக்கள் கருப்பாண்டிப் பண்டாரம் 9, பெ.அணையாண்டிப் பண்டாரம் 10, செல்லாண்டிப் பண்டாரம் 11, மருதாண்டிப் பண்டாரம் மக்கள் சின்னாண்டிப் பண்டாரம் 12, முத்தாண்டிப் பண்டாரம் 13, மு.சி. வெள்ளயாண்டிப் பண்டாரம் 14, சி.செல்லாண்டிப் பண்டாரம் 15 ஆக நாங்கள் சம்மதித்து எழுதிக் கொடுத்த முச்சலிக்கா என்னவென்றால்,

மேற்படி கிராமம் கவுண்டர்கள் பைசல்படிக்கு கோவிலுக்கு குடிகள் பொங்கல் கொண்டு வந்தால் இரண்டு பொங்கல் முறைகாரனைச் சேர்ந்தது என்றும், நாலு பொங்கல் வந்தால் 15 முறைகாரரும் வழக்கம்போல் பங்கிக்கொள்ள வேண்டியதென்றும் பைசல்படிக்கு நாங்கள் 15 பேரும் கட்டுப்பட்டு மேற்படி செல்லாண்டியம்மனுக்குப் பொதுவாய் கட்டுப்பட்டு இருக்கிறோம். மேற்படியார்கள் பைசல் மாறி எந்த முறைகாரனாவது நடந்தால் அவனுக்கு மேற்படி கோவிலில் முறையும் இல்லாமல் எங்கள் சாதி மதாசாறப்படிக்கு கட்டுப்பட்டுக் கொள்வோமாகவும். மேற்படி கவுண்டர்கள் பைசலை மீறி நடப்பவர் காரான் பசுக்கொண்டு கூட வழியே போகக் கடவோமாகவும். இந்தப்படிக்கு எழுதிக் கொடுத்த முச்சலிக்கா தவறி வருஷா வருஷம் சிவராத்திரி உற்சவமானது 15 முறைகாரரைச் சேர்ந்தது.

மற்ற காலத்தில் கிராமக்கவுண்டர்கள்ஆவது இன்னும் அசல்க் கிராமத்தாராவது சுவாமி எழுந்தருளப் பண்ணாமல் தனியாய் ஊஞ்சலில் வைக்கக் கூடாதென்றும், நாங்கள் ஒருவரை மீறி நடக்காமல் நடந்து கொள்ளுவோமாகவும். முப்பூசைகள் ஏதாவது வந்தால் அதுவும் மேற்படி 15 முறைக்காரரையும் சேர்ந்தது. அது என்முறையென்றும் உன்முறைஎன்றும் சொல்லவில்லை என்று உறுதியாய் சொல்லுகிறோம். இதில் நிலமையை வருகிற சிவராத்திரிக்குள் மேற்படி எல்லா நிலமையும் தெரிந்து கொள்ள வேண்டியது, இந்தப்படிக்கு நாங்கள் 15 பேரும் சம்மதம். ராமாண்டிப் பண்டாரம், பழுத்துக் கருப்பாண்டி, தற்குறி லட்சுமாண்டிப் பண்டாரம், கணபதி பண்டாரம், தற்குறி அணையாண்டிப் பண்டாரம், தற்குறி முத்தாண்டிப் பண்டாரம், தற்குறி அணையாண்டிப் பண்டாரம், வெ.அணையப்பன், தற்குறி கருப்பாண்டிப் பண்டாரம், தற்குறி அணையாண்டிப் பண்டாரம், செல்லாண்டி, சின்னாண்டிப் பண்டாரம், முத்துக்கருப்பாண்டி, தற்குறி சி.வெள்ளயாண்டிப் பண்டாரம், தற்குறி சி.செல்லாண்டிப் பண்டாரம்.

சாக்ஷி நாகம்பள்ளி மாசிலாமணியய்யர், நல்லண கவுண்டன் மகன் வேல கவுண்டன் மகன் செல்லப்ப கவுண்டன், மேற்படியூர் நசின்னச்சாமிக் கவுண்டன், கேத்தப்பட்டி கொ.நல்லண கவுண்டன், மேற்படியூர். சி. கொ. தற்குறி மருதா கவுண்டன், மூணாட்டுப் பாளையம் தற்குறி நல்லியாக் கவுண்டன், மேற்படியூர் செல்லப்ப கவுண்டன் கைநாட்டு, தர்மகர்த்தா வேலுச்சாமிக் கவுண்டன். எழுதியது மு. மணியம் இராமசாமிக் கவுண்டன்.

# 61. வேலூர்ச் செப்பேடு

சேலம் மாவட்டம் வேலூரில் ஓய்வுபெற்ற தமிழாசிரியர் ஒருவரிடம் இச்செப்பேடு உள்ளது. ஒருபுறம் முழுவதும் மூன்று வரிசையில் புடைப்புச் சிற்பமாகப் பல சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

கீழே ஒரு சித்தர் தன் தலையைத் தானே அரிந்து கொள்ளுவது போன்ற காட்சி அமைக்கப்பட்டுள்ளது. அவருடைய சித்து விளையாட்டுப் பொருள்கள் அருகில் உள்ளன. வாணியச் செட்டியாரின் மரச்செக்கும் இரண்டு எருதுகளும் இறுதியில் காட்டப்பட்டுள்ளன. இரண்டாம் வரிசையில் வில், வேல், வாள், தாங்கிய 12 போர் வீரர்கள் வரிசையாக நிற்கின்றனர். முதல் பகுதியில் சித்தரின் குரு சுவாமியாரும், அவரை வணங்கும் நிலையில் பல்வேறு மகளிர் உருவங்களும் உள்ளன. மறுபுறம் மட்டும் எழுதப்பட்டுள்ளது. செப்பேட்டின் ஓர் ஓரம் சிதைந்துள்ளது.

16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிருஷ்ணதேவராயர் ஆட்சிக்காலத்தில் அவர் அலுவலர் திரியம்பக அய்யன் சங்ககிரிப் பகுதியை ஆட்சி செய்யும்போது செப்பேட்டில் குறித்த நிகழ்ச்சி நடைபெற்றுள்ளது.

எழுகரை நாட்டு முதலிகள் வாழவந்தி நாட்டில் நரலோக சித்தர் மகன் சித்தன் சிற்றம்பலவனுக்கு அயலானை வென்ற நட்டுகட்டுவான் என்று பட்டங்கட்டி இக்கொடையை அளித்துள்ளனர்.

சித்தருக்குப் பல சிறப்புக்கள் அளித்து இடங்கை 98 சாதியினரும் கொடுக்க வேண்டும் என்று வேறுசில வரியும் ஏற்படுத்தித் தந்தனர்.

பலர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். இச் செப்பேட்டை வாழவந்தித் தட்டான் செய்துள்ளார்.

கிருஷ்ண தேவராயர் (1509-1529) ஆட்சியில் ஆங்கிரச ஆண்டு 1512 இல் வருகிறது. செப்பேட்டில் 1503 ஆம் ஆண்டுக்குரிய சாலிவாகன ஆண்டு (1425) குறிக்கப்பட்டுள்ளது தவறாகும்.

## மூலம்

ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரியராய விபாடன் பாஷைக்குத் தப்புவராயர் கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதான் துலுக்கர்தள விபாடன் துலுக்கமோகர்ந் தவிள்தான் எம்மண்டலமுங்

கொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன் அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாராயணன் பூறுவ தெக்ஷண பச்சிம உத்தர சத்த சமுத்திராதிபதி ஸ்ரீ வீரப் பிறதாபராயர் மகாராயர் மல்லிகார்சுனராயர் வசந்தராயர் விருப்பாக்ஷராயர் அண்ணாமலை ராயர் நரசிங்கராயர் நரசணராயர் புசபெலராயர் கிஷ்ட்டணதேவ மகாராயர் காரியத்துக்குக் கடவரான முள்வாயில் தீப்பாலயேன் த்றியம்பக அய்யனுக்குக் குன்றத்தூர் வட்டஞ் செல்லாநின்ற சக்காற்த்தம் 1425 க்கு மேல் செல்லாநின்ற ஆங்கிர வருஷம் ஆவணி மாதம் 16 தேதி வெள்ளிக்கிழமை புணர்பூசத்தில்,

எழுகரை நாட்டு முதலியளும் வாழவந்தி நாட்டில் வாழவந்தியில் நரளோக சித்தர் மகன் சிற்றம்பலவனை அயலானை வென்ற நட்டுகட்டுவானென்று பட்டமுங்கட்டி சமையமுங் குடுத்தபடி . . . . . . குஞ்ச காளஞ்சியுந் தண்டிகையுந் சேநங்குடுத்து ஏறப்பாவாடையும் யிறங்கப்பாவாடையும் விடுதிமேற்கட்டியும் கொறத்திக் கலியாணப்படியும் கட்டிக்கொடுத்து இந்த வரிசைப்படி எல்லாங் கட்டளையிட்டோம். இந்தச் சமையபடிக்கு அன்பத்தாறு தேசத்தில் முதலிகளும் யிடங்கை தொன்னூற்றெட்டுச் சாதியும் பேருக்கு அஞ்சு பணமும் சிற்றாற்க்கு இரண்டு பணமும் ஆடினால் குடிப்பணமும் ஆடாதிருக்கில் படிப்பணமும் யிந்தச் சமையப்படிக்கு நடத்திக் கொடுக்க கடவாராகவும்.

இந்தச் சமையத்துக்கு நடத்திக் கொடாதவன் சாதிக்கு அல்லாதவன் ஆகவும தங்கள் குரு திருவம்பலமுடைய தம்பிரானார் இரக்ஷிக்கவும். எழுகரை நாட்டு கண்டியதேவன் எழுத்து. தீர்த்தராயன் எழுத்து. பண்ணயி . . . . ராசிபுரங் கோவிந்தாடைப்பன் எழுத்து. சேலநாட்டில் சிண்ண எழுத்து. தகடப்பாடியில் சோதிச்சாமணன் எழுத்து. வாழவந்தி . . . . . . ரு சோளி உலகுடையார் எழுத்து. வெள்ளோட்டு முதலியன் எழுத்து. இராசிபுரத்தில் படையாண்டவ நிலசேந்தன் எழுத்து. நகரத்தாரில் நம்பூரன் எழுத்து. கீரந்தை வாணியரில் கண்ணியார் பட்டத்தான் எழுத்து.' இப்படிக்கு வாளவந்தி தட்டான் . . . . . .

# 62. மொடவாண்டி பட்டயம்

ஈரோட்டை அடுத்த சின்னியம்பாளையம் எஸ்.கே. இராமசாமிக் கவுண்டரிடம் கிடைத்த சில உதிரி ஏடுகளில் இப்பட்டயம் கிடைத்தது.*

வெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல் வீட்டில் முடமான ஒரு குழந்தை பிறக்கவே அதனைத் தங்கப் போழையில் வைத்து ஆற்றில் விட்டு விட்டனர்.

அரசர் சரோத்திராயரும், அலுவலர் துளுவ நாயக்கரும் காவிரி வெள்ளப் பெருக்கைப் பார்க்க வந்தவர்கள் போழையைப் பார்த்து எடுத்தனர். போழையை அரசர் எடுத்துக் கொண்டார். உள்ளே இருந்த முடக்குழந்தையைத் துளுவ நாயக்கர் வளர்த்தார்.

முடக்குழந்தைகளின் பராமரிப்புக்குச் சோழனூர் உட்பட 8 ஊர்கள் கொடையாக அளிக்கப்பெற்றன. அவை 8000 பொன் வருவாய் உடையது. அவ்வூர்க்கு வரிகள் நீக்கப் பெற்றன.

காராளர் பட்டிக்கு ஒரு பணம், வீட்டுக்கு 8 வள்ளத் தானியமும் கொடுக்க இசைந்தனர்,

வேட்டுவர், செட்டியார், இடையர், புலவர், காவிலியர், பூவிலியர், சாணார், குயவர், பறையர் போன்றோர் தங்கள் உற்பத்தியில் அல்லது வருமானத்தில் முடவர் காப்பு நிலையத்திற்கு எவ்வளவு அளிக்க வேண்டும் என்று இறுதியில் விரிவாக எழுதப்பட்டுள்ளது.

கலியுகம் 3896 ஆம் ஆண்டு (கி. பி. 795) இந்நிகழ்ச்சி நடைபெற்றதாகக் கூறப்பட்டுள்ளது. காலம் பிழையானதாகும்.

மூலம்

ஹரி ஓம் நன்றாக.

---

* தேனோலை, இதழ் 14, அக்டோபர் 1977, பக். 5-12.

குருவாழ்க குருவே துணை.

காப்பு.

பூந்துறை நாட்டு அம்மைமேல் பாடல்

மார்மேவு பூந்தரசர் வாழுநாடு சத்திமங்கை
வருகோதண்டால்
பூமேவு காராளர் கிளைவாழ்க பெருமைசேர்ப்பார்
பருவநாட்டில்
பார்மேவு ஞானஉமை ஈசுபரர்மேல் செந்தமிழைப்
பரிந்துபாடக்
கா∙ர்மேவு தடவிகட மதமொழுகும் கரிமுகனும்
காப்பதாமே.

பூமண்ட லத்தில் புகழது விளங்க
மாமண்ட லீகர் வந்தடி பணிய
ஆறிரு கரமும் ஆறிரு புயமும்
ஆறிரு விழியும் ஆறிரு பதமும்
சண்முகம் ஆறும் சாற்றிய நீறும்
வண்மையால் வேலும் வளர்தண்டைக் காலும்
சரவண முருகன் சங்கரி குமரன்
அரிவினில் துயிலும் அச்சுதன் மருகன்
அன்புடன் வள்ளி தெவியானையை மணந்தோன்
தென்புட லிருக்கும் சென்னியங் கிரிசூழ்
பூந்துறை தன்னில்ப் புட்பவ நேசன்
பாந்தக மான பாகம் பிரியாக்
காரணிக் கரிய காழிநா யகியும்
தாரணி புகழும் தாமோ திரரும்
அத்தனூ ராயி அங்காள தேவி
கர்த்தனாய் விளங்கும் காசி லிங்கரும்
யாவருந் தேவர் அனுதினங் காக்க.
காவல னான காடை குலேசன்
தாரணி மதிக்குந் தண்டிகைத் துரையாம்
வாரண வாசி மகபதி வாளும்
பூந்துறை சேந்த புகழ்முட வாணர்
வாழ்ந்திடுஞ் சத்தி மங்கையில் மேவும்
கங்கையும் பிறையுங் கடுக்கை யணிந்த
சங்கரி விமலன் சத்தியீசு பரராம்
இன்பமே யுதவும் ஈசுபரி தேவி
அம்பிகை புகழ்தயில் அம்மைநா யகியும்

நேயமா யுலகை ஒபாயமா யளந்த
மாயவர் வரதர் தாயர்தன் னுடனே
பார்பதி பூதப் படைகள்தன் சேனை
சீர்பெறப் படைத்த செல்லாண்டி யம்மன்
ஆழிசூழ் புவியில் அத்தனூ ராயி
சோழநா ரம்மன் துரையண்ண மாரும்
வேட்டைகா ரர்களும் மிகசோழ செட்டி
யாட்டிமை புரியும் அங்கா ளம்மன்
அந்தரி மாரி அழகு நாயகி
செந்தமிழ் பெருகு மேச்சேரி யம்மாள்
பாக்கிய முதவும் படைவெட்டி யாயி
வாக்கது பிசகா மாமுனி யண்ணன்
சத்தகன் னியரும் தாய்பக வதியும்
மெத்தவே வரங்கள் வேணது கொடுக்க
யாவருந் தேவர் மனமது மகிழ்ந்து
தினசரி காக்கச் செயமது படைத்தோர்
தரணியில் கலியுக சக்கரந் தன்னில்
அருமை மூவா யிரத்தியெண் ணூத்தித்
தொண்ணூத் தாரும் துலங்கிய வரையில்
நன்றாய்த் தருமம் நடத்திய நாளில்
வாளி யானந்த வருசம் ஆளிசூழ்
மாசமு அதுகார்த் திகையில் யிதுவுமே
தேதி யிருபத் தாண்டில் உதவும்
உத்திரட் டாதி உயர்வெள்ளி நாளில்
அசுபதி திசுபதி செயபதி
நரபதி யான செங்கோல் நடத்தும்
அந்தநா ளையிலே ஆவுவொரு பொதிபால்
விந்தையா யளக்கும் விதமுள்ள தவசம்
காசொன்று குடுத்தால் கலமது அளக்கும்
நேசமாப் பணத்துக்கு நெல்லுப் பதிங்கலம்
அடவுடன் செம்பொன் அள்ளியே பிச்சை
இடுவதல் லாமல் யேற்பவ ரில்லை
மாதமூன்று மாரி போதவும் பொழிந்து
நீதியாய் நடக்கும் ஆதிநா ளையிலே
எண்ணரி தானம் ஈந்த காரர்ளன்
வெண்ண நல்லூர் சடையன் மனைதனில்
மன்மத வடிவாய் மதியினில் ஒளிவாய்
முன்ன வெழுத்தால் முடவனைப் பெற்றாள்.
ஆன்றதோர் சேதி அடவுட னறிந்து
என்னமோ பாவம் எழுவதறி யாமல்
வந்ததோர் அந்த மதலை யதனை
அந்தமா யொருத்தர் அறிந்தறி யாமல்

பொங்கமாய்த் தங்கப் போழையில் வைத்து
கங்கைபோல் பெருகும் காவேரி யாத்தில்
விட்டமாத் திரத்தில் மிதந்துதான் போழை
சட்டமாய் வருது தனித்தொரு வர்க்கும்
அமடு படாமல் ஆற்றினி லேதான்
குமிடுகள் தாண்டி கொல்லுவாய் கடந்து
நாடு கடந்து நடுக்கான கத்தில்க்
கூடு துறையில் குலாவியே வரையில்
கருணைசேர் மல்லிக் காச்சுந ராயரும்
அருணனை நேரும் அதிவீர ராயர்
மனுநீதி பிரவுடைய மகாதேவ ராயர்
அனுதரை வெல்லும் அச்சுத ராயர்
கோவிந்த ராயர் கொங்கண ராயர்
கோபால ராயர் தேசமே யாளும்
தேசமே யாளும் சரோத்தி ராயர்
மாசில்லாப் புகழ்சேர் மகுடவர்த் தனரும்
ராச்சியத் துள்ள நற்குடி படையும்
உட்துரை ராய ருடன்துரை மக்கள்
சேருவை காரர் சேனை யோர்களும்
பாரினி லுள்ள படைத்தலை வீரர்
பேரணி முழங்கப் பெரிய ரதந்தனில்
ராயர் தான்கொலு விருக்க
மன்னியர் வணங்கி மணிமுடி பணிந்து
சொன்னது வயணஞ் சுவாமிதே வேந்திரர்
மின்னுகா வேரி வெள்ளமே பார்க்க
அப்பனை செய்யும் அய்யனே இன்னமே
இப்புடன் ராயர் மிகமன மகிழ்ந்து
சதுரங்க சேனை தளமது சூழ
விதமுட னெழுந்து வேடிக்கை பார்க்க
துளுவநா யக்கர் துரைமக் களுமாய்
அளவிலாச் சேனை அதிகயோ பழியார்
பெரியகா வேரி பெருகி வெள்ளம்
வருவது பார்க்க மன்னர் மன்னிப்பாக
அலையுட னலையாய் அதுதங்கப் போளை
துலையினில் வாற துலக்கத்தைக் கண்டு
ராயருந் துளுவ நாயக் கருமாய்ப்
பேசிய தங்கப் போழை நம்முழுது
போளையில் வார பெருமுத வெல்லாம்
வாளியா யுங்கள் வசமெனச் சொன்னார்.
சொன்னமாத் திரத்தில் துளுவ நாயக்கரும்
உன்னித மாக ஒருசினந் தன்னில்
இருகரை யதுவும் ஒருகரை யாகப்

பெருகியே வெள்ளம் வருகிற ஆத்தில்
காகமாய்ப் பறந்து கயினீச்சந் தன்னில்
பாகமாய்ப் போளைப் பக்கமே சென்று
தாவிப் பிடித்துத் தணாக்கரை யேற்றி
மேனியே போழை விதமுடன் அவிழ்த்துப்
பார்க்கும் பொழுதில் பகவா னொளிவுபோல்
ஏற்கவே குழந்தை இருகால் முடமாய்
இருந்தது கண்டு இனியதேர் ராயர்
பொருந்திய துங்கள் புண்ணிய மென்று
பரிவுடன் முடப் பயலையு மெடுத்துப்
பிரியமாய்க் கொடுத்துப் பின்னுமே ராயர்
வேண்டிய வரிசை விளங்கவே தருவோம்
ஆண்டுகொண் டிடுவீர் அன்னம்போல் வளர்ந்து
யென்றுதான் ராயர் இம்மொழி யுரைக்க
நன்றெனத் துமுவ நாயக்கர் வளர்த்தார்
அப்படி யிருக்கும் அந்நாளி லேதான்
செப்பமாய் ராயர் சிந்தை மகிழ்ந்து
தன்னுட ஆக்கினைச் சக்கரமே நடத்தி
மின்னிலிருங் காராளர்
நாலாறு நாட்டில் நற்குடி படையை
வாலாய மாக வரவழைத் துடனே
பருவமுஞ் சொல்லிப் பாரினி லுங்கள்
அருமைசேர் குழந்தை அதுகால் முடமாய்
ஆற்றினில் வந்து அதுதனை யெடுத்து
சொந்தமாய் வளர்க்கச் சொன்னசொல் படியே
நன்றெனத் துளுவ நாயக்கர் வளர்த்தார்.
அவர்க்கின்று தன்வரிசை யெல்லாம் வரிக்கல்லுக்
காவேரி காசியும் பூமியாகாசம் அரிய
சந்திர சூரியர்க ளளவுள்ள வரைக்கும்
இந்திர தேவர்கள் யெல்லா மறிய
உற்றொரு கொடிக்கொரு உம்ப முத்தம்
வெற்றிசேர் கின்றமிக செம்பத் துளுவும்
மன்னவர் புகழ்அழுந்த தேவார
புன்னைமேட் டுடன்புகழ் சோழ னூரும்
ஆண்டா வந்தி அதுகோட் டூரும்
தண்டிகைப் பரிக்குள சத்திமங் கையுடன்
ஏழு கிராமம் எண்ணா யிரம்பொன்னுச்
சீமையென்று கல்லுவெட்டு சூழவேபோட்டு
மேதினி யரிய ஆகாசம் பூமி
அதுவுள்ள மகிழ
வாகான சுங்கம் மணவரி யில்லே
எருமைவரி யில்லே

நல்மாடு நச்சேரை யில்லே வெட்டி
பொட்டணமும் இல்லை பேயிற மழைக்கி
யெறைக்கிற வெய்யிலுக்கு பயந்து பிழைக்கவும்
ஏறாரு மயேசுபரர் யேழுல காிய
ஈன்றகா ராளர் வண்மை சேருகின்ற
பட்டிக்கு ஒருபணம் நகரம்
வண்மையாய் இருந்து வாழும் வீட்டுக்குச்
சத்தியாய்த் தவசம் எட்டு வள்ளம்
வர்த்தனை என்று வாச்சாத முகமும்
தந்துதான் ராயர் சமூகந் தனிலே
விந்தையைய் நாலு வெகுமதி யுதவி
பாங்குடன் உண்டு பண்ணும் வர்த்தனையே
இது நாங்களே யென்று நடத்தின பேர்கள்
ஒன்று லட்சமாய் உலகுள்ள மட்டும்
சென்றிட மெல்லாஞ் சிறப்புட விருப்பான்.
இதை
ஆதா மொருவன் அடுகள நினைந்தால்
மாதா பிதாவை வதைத்திட்ட பாவம்
பெறுவான் ; கவுசுடன்
கங்கைக் கரையினில்க் காராம் பசுவைக்
கழுத்தை அறுத்திட்ட பாவம் பெறுவான்.
பெத்த பிள்ளையைப் பெண்டு பிடிச்ச
தோசத்திலே போகக் கடவனே
என்றுதான் ராயர் அனைவரும் மதித்து
நாடது கூடி நடத்தும் வர்த்தனையே
யூரெல்லாந் தேடி உடன்வர வழைத்து
முந்தின பிள்ளைக்கு முதலிவ னென்று
சொந்தமாய்க் கொதிபால்ச் சோறது போட்டு
ஆதரித் திட்டோர் அவங்கள் கோத்திரமும்
பூதல மீதில் புகழது விளங்கி
ஆடு மாடு எருமை முத்தவமும்
தேடியே படைத்துச் செல்வமும் மேலும்
சவுபாக் கியமும்
புவிமேல் படைத்துப் புண்ணிய முண்டாம்
மார்க்கண் டனைப்போல் வயதுதான் வாழ்ந்து
ஏற்கவே இருப்பார் இந்திரன் போல
நற்குடி நாற்பத் தெண்ணாயிரம்
பசுங்குடி பன்னீ ராயிரம்
சக்கிரை விளங்கித் தான்நிலை நாட்டி
வாய்த்திடுஞ் சதமங்கை மயேசுபரர் அறிய
யெத்திசை மதிக்கும் இவர்முட வாண்டார்
காரண குருவே காசினியில் விளங்கும்

பூரண கிருபை புரிந்தடி யார்க்கு
மந்திரம் ஞானம் மகிழ்ந்துப தேசம்
தந்துலச் சற்குரு மூர்த்தி
செழுந்திரு விளக்கத் தேவியார்ச் சனைசெய
குழந்தையா னந்தர் குருபாதம் பணிவோம்.

கொங்கு வெள்ளாளன், கொங்கு வேட்டுவன், கொங்குச் செட்டி, கொங்கு இடையன், கொங்குச் சாணான், கொங்குச் கொசவன், பூவுலவன், காவுலவன், கொங்குப் பறையன், எட்டுஆடு படைச்சவன், இளங்கொடுவாள் பிடிச்சவன், கூனும் குருட்டை அடுச்சவன், கொலைக்க நாயி வச்சிருந்தவன், வாடா போடா யின்னவன், வாசலில் பகல் முப்பது தெகு முப்பது மொண்டிக் காலர் முடக்கால் முண்டிமுடம் முன்னைப் பிறப்பில் கூனும் குருடும் கூட்டில் அடைக்க, ஊமை செவிடு உண்மையாய்ப் பிறக்க, ஆட்டுலே மாட்டுலே கோழியிலே குஞ்சிலே மக்களிலே மருமக்களிலே ஏழு சென்மம் இருபத்து நாலு தலைமுறைக்கு இருந்து பிறக்க, நின்று விரைக்கக், குமுஞ்சு பொருக்க, இப்படி இட்ட சாபம் பலிக்க, ஆத்துத் தண்ணியைத் தாரை வார்த்தால் தண்ணீறு வத்துமென்று தங்கத்து மணலை அள்ளித் தாரை வார்த்தார். அள்ளி வாக்கையிலும் சொல்லி வார்த்தார். யிதை ஆதாமொருத்தர் அறிஞ்சு நடத்தினவன் அவன் பாதம் ஒன்பது ராயர் சிரசுமேலே.

கொங்கு வேட்டுவன் வர்த்தினை, ஒரு ஊட்டுக்கு யெட்டு பணம். போட்ட பட்டிக்கு ஒரு பணம் நகரம். கொங்குச்செட்டி வர்த்தனை, ஒரு ஊட்டுக்கு ஒரு பணம் நகரம். கொங்கு இடையன் வர்த்தினை, ஒரு ஊட்டுக்கு ஒரு பணம் நகரம். போட்ட பட்டிக்குக் கிடாய் ஒன்று. புலவன் வர்த்தினை ஒரு ஊட்டுக்கு பணம் . போட்ட பட்டிக்கு ஒரு பணம் நகரம். காவிலியன் வர்த்தினி ஒரு ஊட்டுக்கு பணம் 4. போட்ட பட்டிக்கு ஒரு பணம் நகரம். பூவுலியன் வர்த்தினை ஊட்டுக்கு பணம் 4 போட்ட பட்டிக்கு ஒரு பணம் நகரம். சாணர் வர்த்தினை ஒரு ஊட்டுக்கு அரை துலாங் கருப்பிட்டி. கொசவன் வர்த்தினை ஒரு ஊட்டுக்குப் பத்தெட்டு உருப்புடி கப்பரை அஞ்சு. பறையன் வர்த்தினை ஒரு ஊட்டுக்கு யெருத்துக்குப் பில்லும் யெரி கரும்பும் நாலு கோழியும்.

மயேசுவரர் வாழி. உத்தோர் வாழி. உறைமுறை முடவாண்டார் வாழி வாழி. காராளர் வங்குசம் வாழி. நின்று இருபத்திநாலு நாட்டாரும் வாழி. தர்மந் தழைத்துத் தரணி செழித்துப் பொன்மழை பொழிந்து போதவே விளையும். சத்திலிங்கர் லட்சிப்பார். மயேசுபரர் துணை. உமையவள் துணையுண்டு. தெண்டபாணி துணையுண்டு. சரஸ்வதி துணை.

# 63. காடையூர்ப் பட்டயம்

*இப்பட்டயம் ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் உள்ளது.*

தென்கரை வீரசோழபுர நாட்டில் வேட்டுவகுலத் தலைவர் கோப்பண கவுண்டர் என்பவர் ஆண்டு வந்தார். அவர் மதுரை நாயக்கருக்குச் செலுத்தவேண்டிய வரி கொடாமல் இருந்ததால் காடையூர் பெத்தான் காங்கய மன்றாடியாரைக் கொண்டு நாயக்க மன்னர் திருப்பூர்க் கோட்டையில் கோப்பண கவுண்டரை வெற்றி கொண்டார். அவ்வெற்றிக்காகப் பெத்தான் காங்கய மன்றாடியாருக்கு மதுரை நாயக்கர் பல பரிசுகளைக் கொடுத்துத் திருப்பூர்க் கோட்டையையும் அளித்தார்.

கடையூர்ப் பட்டக்காரர் ஆட்சியில் காணிபெற்ற வேளாளர்கள் தங்களுக்கு வேட்டுவ நாவிதன் வேண்டாமென்று வெள்ளாள நாவிதனை விலைக்கு வாங்கி ஊத்தலூரில் வீடு அளித்துக் காப்பாற்றினர்.

கோப்பண கவுண்டர் மீண்டும் திருப்பூர்க் கோட்டையை வெற்றி பெற்றுப் பிடிக்கவே வெள்ளாள நாவிதன் குமரன் படையுடன் சென்று கோப்பண கவுண்டரை வென்றான். ஆனால் சதியின் காரணமாகக் வெள்ளாள நாவிதன் குமரன் குத்திக் கொல்லப்பட்டான். 15 நாள் கைக்குழந்தையுடன் குமரன் மனைவி சின்னம்மாள் சாகத் துணிந்தவளை வேளாளர்கள் தடுத்துக் குழந்தையையும் அவளையும் காப்பாற்றுகின்றனர். சின்னம்மாள் மகன் நாவிதக் காங்கன் படித்துக் குலத்தொழிலும் கற்றான்.

திருப்பூர், சுந்தரபாண்டிய நல்லூர், ஊத்தலூர், பெரியபாளையம், அமுக்கயம், கந்தாங்கண்ணி, கொடுமணல் கவண்டர்கள், அய்யர், கணக்குப்பிள்ளை, தட்டான், ஆண்டி, நாயக்கர், தோட்டி இவர்கள் எல்லோரும் கூடி நாவிதக் காங்கனுக்கு நன்செய், புன்செய், வயல் ஆகிய பூமி கொடுத்துச் சாசனமும் எழுதி மானியபூமி அருகே பாறையிலும் கல்வெட்டும் நாவிதர் தொழில் கருவிகளையும் பொறித்தனர்.

இந்நிகழ்ச்சிகள் 14 ஆம் நூற்றாண்டில் நடைபெற்றதாகக் கூறப்படுகிறது. சாலிவாகன ஆண்டும், கலியுக ஆண்டும் பொருந்தி வரவில்லை. காலம் தவறாக இருக்கவேண்டும். திருமலைநாயக்கர் ஆட்சி கூறப்படுகிறது. அப்படியானால் பட்டயம் 17 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கவேண்டும் .

## மூலம்

செங்கோல் முறைமை தவறாமல் நடத்திக்கொண்டு மதுரை தலத்துக்கு அதிபதியாகிய மதுரைய்யர் திருமலை நாயக்கரவர்கள் நாளையில் சாலியவாகன சகார்த்தம் 1325 கலியுக சகார்த்தம் 4422 க்கு மேல் சென்ற தாருண வருஷம் தை மாசம் 22 ந் தேதி சப்த்தமியும் வியாளக்கிழமையும் ரேபதியும் நட்சத்திரமும் பிரிதிநாம யோகமும் பாலவாகரணமும் பெற்ற சுபதினத்தில் கொங்கு மண்டலத்தில் 24 நாட்டில் தென்கரை வீரசோழபுர நாட்டில் சேர்ந்த திருப்பூருக் கோட்டை ஊத்தலூர்க் கோட்டை கோப்பண கவுண்டன் கோட்டை போட்டுக் கொண்டு இருந்த நாளையில்,

அவன் அரமனைக்கிக் காசு பணம் கொடாமல் பாளையப்பட்டு செலுத்திக் கொண்டு யிருந்தபடியினாலே ராசபரமேஷ்வர மதுரைத் திருமலை நாயக்கரவர்கள் காடையூரு பெத்தாங்காங்கய மன்றாடியாரை தருவித்துச் சொன்ன விபரம். இந்தக் கோப்பண கவுண்டனை செயித்து ஊத்தலூர் திருப்பூருக் கோட்டையும் வாங்கி அவனை வெட்டிச் செயங்கொண்டேயானால் அந்தக் கிராமத்தையும் கொடுத்து உமக்குத் தண்டிகையும் உம்பிளிக்கையும் விடுகிறோமென்று நாயர்மானிய நாயர்ஸ்ரீ திருமலை நாயக்கரவர்கள் கட்டளையிட்டு அனுப்பி வய்த்தபடியினாலே அவரும் பனிரண்டு கடகம் யானை கட்டிக் கொண்டு வந்து திருப்பூரு ஊத்தலூருக்கு வந்து பூலுவரையும் வெட்டிச் செயித்து சீமையும் கட்டிக் கொண்டு உம்பிளிக்கையும் அனுபவிக்குனாளையில்,

தலத்துக் காணியாளக் கவுண்டர்களும் குடியானவர்களும் பெத்தாகாங்கய மன்றாடியாரிடத்தில் வந்து சொன்ன விபரம். நம்ம நாட்டுக்கு வேட்டுவ னாவிதன் இருக்குறானேயல்லாமல் நமக்கு வெள்ளாள நாவிதன் இல்லையே. யிப்போது ஒரு வெள்ளாள நாவிதன் தருவித்து வைக்க வேணுமென்று கேட்டுக் கொண்ட படியினாலே, இருப்புலியில் குமரனை விலைக்கு வாங்கிவந்து ஊத்தலூரில் வீடுகட்டி வைத்து இருக்குற நாளையிலே மருபடியும் கோப்பண கவுண்டன் கூட்டம் சேகரப்படுத்தி வைத்துக்கொண்டு திருப்பூரு கோட்டையைச் சுற்றி வளைத்துக் கொண்டான். அப்போது பெத்தாங்காங்கய மன்றாடியார் ரொம்பவும் மனங்கலங்கி யோசனை பண்ணி தலத்துக்காணியாக் கவுண்டர்களைத் தருவித்து ஆலோசனை பண்ணிக்கொண்டு யிருக்குற வேளையில் அப்போது இருப்புலி குமாரனும் கிட்ட இருந்தான்.

அவன் சொன்ன விபரம். சில யோசினை பண்ண வேண்டியதென்ன அடியேனை அனுப்பி வயித்தால் அவர்களை அடித்து முடிக்கிப் போட்டு வாரேனென்று சொன்னான். அப்போது அவனை ரொம்பவும் அதிக சந்தோஷப்பட்டுக்கொண்டு நீ இப்ப இவர்களை ஜெயித்து வந்தயானால் ஏளு கிராமமும் உனக்கு ஆதீனம் கொடுக்குறோமென்று சொல்லி அவனுக்குச் சில பிலமும் கூட்டி அனுப்பி வைத்தார்கள். குமரன் போய் பாளையத்திலே விளுந்து வெட்டி அவர்களையும் துரத்திப்போட்டு வந்தான். பெத்தாங்காங்கய மன்றாடியார், கவுண்டர்கள், குடியானபேர்கள் ரொம்பவும் சந்தோஷப்பட்டு

யிருக்குற நாளையில் வேட்டுவ நாவிதன் ஆதீனத்துக்கு வெள்ளாள நாவிதன் வரக்காரியம் என்னவென்று வேட்டுவ நாவிதன் கோப்பண கவுண்டன்கிட்ட போய் மொரையிட்டபடியினாலே ஊத்தலூரு கோட்டையிலேயிருந்து திருப்பூருக் கோட்டைக்குத் தன் எஜமான் கிட்ட வருகிற குமரனை கோட்டை ஓட்டியிருந்து சதிபண்ணிக் குமரனை வெட்டிப் போட்டான். அவன் சாகையில் அவன் பெண்சாதி கையில் பதினைந்து நாள் குழந்தையிருந்தது. நம்முடையவனுக்குப் பிறகு நம்ம சிவனை வைத்திருந்து பிரையோசனம் யென்னவென்று 15 நாள் குழந்தையை விட்டெறிந்துபோட்டு ஊத்தலூர்க் கோட்டையிலிருந்து திருப்பூரு கோட்டைக்கு வந்து மன்றாடியார் காலிலே விளுந்து நாக்கைப் பிடிங்கிக் கொண்டு சாகிறேனென்று— புதுக்காணி குடுக்குறோமென்று மெத்தநாள் வாழ்ந்தேனே சுவாமியென்று சொன்னாள்.

அதற்கு மன்றாடியாரும் காணியாழன் கவுண்டர்களும் சொன்ன விபரம். நாக்கைப் பிடிங்கிக் கொண்டு சாகவேண்டிய தென்ன மசப் பொட்டி மகளே சாக வேண்டாமென்று வாடி புள்ளாய் சின்னம்மாளென்று செத்துப் போனது குளந்தை. இருக்கிரவன் இருப்புலிக் குமரன் என்று சொல்லி இந்தப் பிள்ளை பிளைத்தால் உனக்குச் சந்திரன் சூரியன் உள்ளவரைக்கும் ஆதீனமாய் தாம்புர சாதனப் பட்டயம் எளுதித் தாறோமென்று ஒரு கரவைப்பசுவும் ஓட்டிக் குடுத்து மாதம் ஒன்னுக்கு ஒரு சலைவத்தவசமும் சேர்த்துக் கொடுத்து காப்பாற்றிக் கொண்டு வந்தார்கள். குழந்தை வளர்ந்து ஐந்து வயது ஆன பிறகு நம்மண்டைக்கி கூட்டி வா. அதே மேரைக்கு சாப்பிடுகிற சாதத்தைக் கொடுத்து வளந்து பத்துப்பிராயம் ஆனதின் பிறகு பள்ளிக்கூடத்தில் வைத்து வித்தையும் வறித்துவைத்து கெரடிக் கூட்டத்தில் வைத்துச் சிலம்பமும் வருத்திவைத்துப் பக்கம் பாடியிலே இருக்குற நாவிதர்களைத் தருவித்து அவன் சாதித் தொழிலும் படித்துத் தகப்பனைப் பாக்கிலும் நாலு பங்கு அதிகமான பராக்கிரமமானான்.

அப்போது மதுரையில் ராசாவாகிய மகாராச ராசஸ்ரீ திருமலை நாயக்கரவர்கள் அறிய திருப்பூரு, சுந்திரபாண்டிய நல்லூரு ஊத்தலூரு, பெரியபாளையம், அமுக்கியம், கத்தாங்கண்ணி, கொடுமணல் இந்த ஏழுகிராமத்துக் கவுண்டர்களில் கொடுமணல் கவுண்டரவர்கள் விபரம். சேரன் குலத்துக்கு வேலாயுதக் கவுண்டன், பனங்காடை குலத்துக்கு நெட்ட ராசாக் கவுண்டன், பாண்டியன் குலத்துக்கு . . . . கொங்குச் செட்டிக்களில் ராமஞ்செட்டிக் கவுண்டன் ஆக முதமை நாலு கத்தாங்காணிக்கு இருப்பிலி சிவந்தி குலத்துக்கு பழனிக் கவுண்டன், புல்லன் குலத்துக்கு நெட்டராசாக் கவுண்டன், வெண்டுவன் குலத்துக்கு பச்சைலிங்கக் கவுண்டன், கன்ன குலத்துக்கு செங்கோட்டுவேலப்ப கவுண்டன் ஆக முதமை நாலும், அமுக்கயம்ங் கிறாமத்துக்கு மச்சமலை றாமய்யர், அக்கிராரத்துக்குப் படிராமனார், ரெங்கய்யர், ஓதாள குலத்துக்கு நவராத்துப் பிடாரப்ப கவுண்டன், கருமாபுரத்துப் பொருள்தந்த குலத்துக்கு மணியகார நல்லிக் கவுண்டன் ஆக முதமை நாலு. திருப்பூருக்குக் கொங்கச் செட்டி பவளத்தாக் கவுண்டன், சுந்தரபாண்டியநல்லூர் பனங்காடை குலத்துக்கு றாக்கியக் கவுண்டன், ஊத்தலூர் கன்ன குலத்தில் வட்டமலைக் கவுண்டன்.

பெரிய பாளையத்திற்கு விசயமங்கலம் ஐந்து பங்காளிக் கவுண்டன், இம்முடி வடமலைக் கவுண்டன். கொடுமணல் அமுக்கயம் கத்தாங்காணி திருப்பூரு இந்தக் கிறாமத்துக்குத் தலத்துக் கணக்குப் பிள்ளை திருமாட கோத்திரத்தில் கைலாசபிள்ளை, திருப்பூரு சொத்துக் கணக்குப் பிள்ளை, வெள்ளக்குமரத் தட்டான், வேதாந்த பண்டிதர், தேவராண்டி மகன் பூதராண்டி, உப்பிலிய கறிச்சிவேட்டை நாயக்கன். கொடுமணல் கத்தாங்காணி அமுக்கயம் இந்த மூன்று கிராமத்துக்கும் கத்தாங்காணி தோட்டி ஆயி. கொடுமணலுக்கு சமணாண்டி செல்லாண்டி சுந்திரபாண்டிய நல்லூருக்கு செல்லராண்டி. ஊத்தலூர் கிராமத்து பழனியாண்டி. இந்த ஏழு கிராமத்திற்கும் பிராமணர் காணியாளக் கவுண்டர்கள் கணக்குப்பிள்ளை ஆண்டி தோட்டி இவர்கள் யெல்லோரும் கூடி இருப்புலி காங்கானுக்கு பெத்தாங்காங்கய மன்றாடியார் முன்பதாக தஷ்த்தாவேசு சாதணப் பட்டையம் எழுதிக் கொடுத்தோம்.

மன்றாடியாரவர்களும் இவனுக்குக் காங்கானென்று பேருங்குடுத்து இவனுக்கு மானியம் திருப்பூரு நஞ்சையில் செல்லாண்டியம்மன் கோவிலுக்கு மேற்கு செல்லாண்டியம்மன் மானியத்துக்கு மேக்கு வாய்க்காலுக்கு வடக்கு ஒருமிடா விரைப்பாடு புஞ்சையில் அனுமந்தராயன்கோவில் காடு மூன்று வள்ளக்காடும் அமுக்கயத்து வயலில் அமுக்கயத்துக்குத் தெற்கு அக்கிரகாரத்து ரங்கய்யர் வயலுக்கு கிழக்கு வாய்க்காலுக்கு வடக்கு ஒரு மிடா விரைப்பாடும் சர்வ மானியம் கொடுத்து திருப்பூரு வாய்க்காலுக்கு வடக்கு அவன் மானியத்தோரம் கல் சாசனம் போட்டுக் கொடுத்து அந்தக் கல்லில் கத்தி கத்திரிக்கை சாணக்கல் முள்ளுவாங்கி கண்ணாடி இவளவும் சாசனக் கல்லில் போட்டு வைத்துக் கொடுத்துச் சந்திர சூரியர் உள்ள வரைக்கும் வம்முச பாரம்பரியந்தமாய் அனுபவித்துக் கொள்ளச் சொல்லி நாங்கள் எல்லாருங் கூடி மன்றாடியாரவர்கள் முன்பதாக யெளுதிக்கொடுத்த சாசனப் பட்டையம்.

இந்தத் தர்மத்தை யாதாமொருவன் பரிபாலனம் பண்ணிக்கொண்டு வருகிறார்களோ அவர்களுக்குச் சந்தான சமாத்தியும் ஆரோக்கியமும் பெற்றவர்கள். இதற்கு விகாதம் பண்ணினவர்கள் கெங்கைக்கரையில் காசியில் காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலே போவார்களாகவும். திருப்பூரு திருசஷ்பரசுவாமியும், திருபுறவல்லியம்மனும், வீரகாளி, செவளாபுரியம்மனும், சுந்திரபாண்டிய நல்லூர் சுந்தரேசுபரரும், சுந்தரவல்லியும், விடுகாளி சோழியம்மன், ஊத்தலூர் வஞ்சியம்மன், அமுக்கயம் மெய்ப்பொருள்நாதர், பச்சமரகதவல்லியம்மன், கரிய காளியம்மன், பெருமாள் கரிய ராகவசுவாமி, கனகவல்லியம்மனும், விடுகாளி மேலூரம்மன், கொடுமணலுக்கு அக்னீசுபரரும், அல்லாளிப்பெருமாள், காளி, அத்தனூரம்மன், பெரியபாளையத்துக்கு சுக்ரீசுபரரும், சுந்தரவல்லியம்மனும் லச்சிக்கவும்.

இந்த ஓலைப்பட்டையம் எழுதினது திருமாட கோத்திரத்தில் கைலாய பிள்ளை கையெழுத்து. செப்பேட்டுச் சாசனம் எழுதியது ஊத்தலூர் கண்ணாமூன் மூக்கஞ் செட்டி கையெழுத்து. திருப்பூரு கொங்கச் செட்டி பவளத்தாக் கவுண்டன், நல்லறாக்கியாக் கவுண்டன், ஊத்தலூர் வட்டமலைக் கவுண்டன், ரங்கய்யன், அமுக்கியம் ராமய்யன், பிடாரப்ப கவுண்டன், மணியகார நல்லிக் கவுண்டன்,

பெரிய பாளையம் அஞ்சு பங்குக் கவுண்டன் இம்முடி வடமலைக் கவுண்டன், கத்தாங்காணி பழனிக் கவுண்டன், பச்சைலிங்கக் கவுண்டன், நெட்டராசாக் கவுண்டன், செங்கோட்டுவேலப்ப கவுண்டன், கொடுமணல் பச்சிராசக் கவுண்டன், நெட்டராசாக் கவுண்டன், வேலாயுதக் கவுண்டன், ராமஞ்செட்டிக் கவுண்டன் கையொப்பம்.

இவை மகா ராராஸ்ரீ காடையூர் எசமானவர்களும் ஏழு கிராமத்துக் காணியாளக் கவுண்டர்களும் சாமியாரும் கூடி இருப்புலி குமர நாவிதனுக்கு எழுதிக் கொடுத்த தாம்பூர சாசினப் பட்டையம்.

# 64. பாசூர்ச் செப்பேடு-3

திருவானைக்காவில் உள்ள பாசூர் மடத்தில் இச்செப்பேடு உள்ளது. இது மைசூர் மன்னர் கிருஷ்ணராஜ உடையார் காலத்தில் மோகனூரிலிருக்கும் ஞான சிவாச்சாரியார் குருசுவாமிகளுக்கு மோகனூர், கரூர், பஞ்சமாதேவி, நெரூர், கோயம்பள்ளி, மயில்ரங்கம் முதலிய பன்னிரண்டு நகரத்துச் செட்டியார்கள் எழுதிக் கொடுத்த செப்புப் பட்டயம்.

செட்டியார்குலப் பெருமக்கள் வாழ்வு செழிக்கவேண்டி மந்திர உபதேசம் ஆகவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்துக் குருசுவாமியாரைத் தாம் வாழும் ஊர்கள்தோறும் யாத்திரை வரவேண்டும் தங்களை ஆசிர்வதிக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டு இச் செப்பேட்டை எழுதித் தந்தனர்.

குருசுவாமியாருக்கு உடல் உயிர் பொருள் மூன்றும் காணிக்கை என்றும், எந்த நாட்டில் அல்லது எந்தப் பேட்டையில் பன்னிரண்டாம் செட்டியார்கள் இருந்தாலும் தலைக்கட்டு ஒன்றுக்கு நாகரம் நான்கு பணம் வருடம்தோறும் கொடுத்துச் சஞ்சாரம் வந்தபோது சஞ்சாரக் காணிக்கையும் கொடுக்கவேண்டும் என்றும் செப்பேட்டில் எழுதித் தந்தனர்.

வாரிசுஇல்லாத சொத்து மடத்துக்குச் சேர்ந்தது என்றும் முடிவு செய்தனர். இறுதியில் பன்னிரண்டு நகரத்துச் செட்டியார்கள் சிலர் கையொப்ப மிட்டுள்ளனர். கரூர் அருணாசல ஆசாரியார் மகன் நாகாசாரி இச் செப்பேட்டு எழுத்துக்களைப் பொறித்துள்ளார்.

கி. பி. 1502 இல் வரும் பிங்கள வருசம் இச்செப்பேடு எழுதப்பட்டுள்ளது. காலம் பொருந்திவரவில்லை.

## மூலம்

ஸ்வஸ்திஸ்ரீ ஸாலீவாஹந ஸகாப்தம் 1424 கலியப்தம் 4603 யிதுமேல் செல்லாநின்ற பிங்கள வருசம் உத்தராயணமும் சிம்ம மாஸமும் ஸுக்ல பக்ஷமும் திரிதியையும் குருவாரமும் ரேவதி நக்ஷத்திரமும் ஸுபநாம யோகமும் பாலவாகறணமும் பெத்த ஸுபதிநத்தில் ஸ்ரீமது ராஜாதிராஜ ராஜபரமேஸ்வர ராஜமாத்தாண்ட ராஜஉத்தண்ட ராஜதேவண்ட ராஜபிரதாப வீரபிரதாப நரபதி

மயிசூரு கிருஷ்ணராஜ உடையாறவர்கள் ஸ்ரீரத்ந ஸிம்மாசந ரூடராய் பிருத்வி ஸாம்ராஜ்யம் அருளாநின்ற காலத்தில்,

மயிசூருக்குச் சேந்த கொங்கு தேசம் மேல்கறை பூந்துறை னாட்டுக்கு குரு சுவாமியாறாகிய மோகனூருலேயிருக்கும் ஸாத்யோஜாத ஞான சிவாசாரியாற் குருசுவாமியாற் சன்னிதானத்துக்கு ரத்நாசலேஸ்வர ஸ்வாமி யனுதினமும் மறவாதவறான விபூதி றுத்திறாட்சத்துக்கு உள்ப்பட்டவறான பனிறெண்டு நகறத்து செட்டிகள் மோகனூரு கறூரு பஞ்சமாதேவி நெறூரு கோயம்பள்ளி மயில்ரெங்கம் முதல் பனிறெண்டு நகறத்து செட்டிமாறுகளும் கூடி சன்னிதானத்துலே மகாமந்திர உபதேசம் ஆகவேணுமென்று னாங்கள் அரிக்கை பண்ணிக்கொண்டு,

யெங்கள் குரு யாத்திரை போமி பெகுனாள் ஆச்சுது. யெங்களுக்கு நல்ல மாற்கம் யில்லாமல் யிறுக்குது யென்று னாங்கள் சன்னிதானத்திலே அரிக்கை பண்ணிக்கொண்டதுக்கு சன்னிதானத்திலே அப்பணையானது. பின்னாலே எங்கள் குரு வந்தால் போகவேண்டியிருக்கும். எங்கள் வகைறா செனங்களெல்லாம் கூடி யோசிச்சு நமக்கு சாசனம் எழுதி தெத்தம் பண்ணினால் னம் அனுகிறகம்ப் பண்ணுகுறதாமி அப்பணையானபடிக்கி னாங்கள் யிப்போ கூடின செனங்கள் றொம்ப ஆனதால் பின்னும் யிறுக்கும் செனங்கள் வேணுமென்று வந்தால் அப்பணைப் படிக்கி நடக்குறார்கள். யிப்போ கூடிய செனங்கள் அப்பணைப்படிக்கி நடக்குறோமென்று அரிக்கைபண்ணிக் கேட்டுக்கொண்டு எழுதிக் குடுத்த தலைகட்டு தாம்பற சாசனம்.

சாசனமாவது. குருசுவாமியாற் பாதத்துக்கு ஒடல் உயிர் பொருள் மூன்றும் தெத்தம்பண்ணி எழுதிக் குடுத்த சாசனம். நாங்கள் யெந்த தேசம் யெந்த னாட்டுலே யெந்த பேட்டையிலே யிருந்தாலும் யெங்கள் வமுசத்தாற் தலைகட்டு ஒன்னுக்கு னாகறம் பணம் னாலு வறுஷம் பிறதி குடுத்து சஞ்சாறம் வந்தபோது சஞ்சாறக் காணிக்கை வகுப்புக்காறன் வாடகை பொதிக்காறன் திறுசு பாத்து பயபக்தியாயி சஞ்சாறக் காணிக்கையும் குடுத்து வறுவோமாகவும். அப்பணைப்படிக்கி உபதேசம் பாதபூசை முதலானதும் பண்ணிக்கொண்டு சுவாமியாரிட தெண்டனை கண்டனை ஆக்கினை அபறாதத்துக்கு உட்பட்டு நடந்துகொள்ளுவோமாகவும். அபுத்திறாத சொத்து மடத்துக்கு சேத்திக் குடுப்போமாகவும். யிப்படிக்கி நடந்துவறுங் காலத்தில் யிதுக்கு விகாதம் சொல்லாமல் பரிபாலனமாயி யெங்கள் வமுசத்தாற் பயபக்தியாயி நடத்தி வைத்தவன் சுகமாயி தனசம்பத்தும் தான்னிய சம்பத்தும் புத்திற சம்பத்தும் அஷ்ட ஐசுவரியமும் ஆயுறாறோக்கியமும் தேவ பிறசாதமும் குரு பிறசாதமும் நவறத்தின வியாபாரமும் மேன்மேலு முண்டாயி கல்லுக் காவேரி புல்லு பூமி சந்திறாதித்தியாள் உள்ளவறைக்கும் ரத்நாசலபதி கடாக்ஷத்துனாலே சுகமாயியிறுப்பாற்கள்.

யிந்த சாசனம் பாத்து படித்தவற்களும் செவியில் கேட்டபேரும் சுகமாயி யிறுப்பாற்கள். யிதுக்கு விகாதம் சொல்லி குருநிந்தனை சொன்னவன் கெங்கக் கறயிலே காறாம் பசுவையும் பிறாமணாளையும் மாதா பிதாவையும் கொண்ண தோஷத்துலே போவாறாகவும். யிந்தப்படிக்கி யெங்கள் கூடிய வமுசத்தாற்

அனைவரும் சம்மதிச்சு ஸஹிரண்யோதக தாராபூறுவமாயி மதுகரவேணி ரத்நாசலேஸ்வர ஸ்வாமி சன்னிதானத்திலே எழுதிக் குடுத்த தலைக்கட்டு தாம்பற சாசனம். மதுகரவேணி ஸமேத ரத்னாசலேஸ்வர ஸ்வாமி ஸஉறாயம். உமாமகேஸ்வரி சமேத ரத்னாசலேஸ்வர ஸ்வாமி ஸஹாயம். மீநாக்ஷி ஸமேத ஸுந்தரேஸ்வர ஸ்வாமி சஹாயம். அகிலாண்டேஸ்வரி ஸமேத ஜம்புநாத ஸ்வாமி ஸஹாயம். வள்ளி தேவயானை சமேத சுப்ரமண்யசுவாமி ஸஹாயம். தாந பாலநயோர் மத்யே தாநாத் ஸ்ரயோநு பாலநம் தாநாத் ஸ்வர்க்க மவாப்நோதி பாலநாத் அச்சுதம் பதம்: சுப்பராயசெட்டி, வைத்தினாதசெட்டி, பெரியறத்தினம்செட்டி, சின்னசெலம்பசெட்டி, முத்துவீறமசெட்டி, முத்திருளஞ்செட்டி, பெரியசெலம்பஞ்செட்டி, சந்திறசேகரஞ்செட்டி, செதம்பறஞ்செட்டி, வைறமசெட்டி, கொழுந்தசெட்டி, சாமிசெட்டி, றத்தினஞ்செட்டி, மோழசெட்டி, தோறணஞ்செட்டி, மாணிக்கஞ்செட்டி, லிங்கசெட்டி யிவற்கள் சம்மதியில் சாசனம் எழுதினது. கரூரு அருணாசலாசாரி மகன் னாகாசாரி கய்யெழுத்து அடிச்சது உ

# 65. பல்லடம் செப்பேடு

இச் செப்பேட்டை மைய அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் படி எடுத்துள்ளனர்.*

வாரக்க நாட்டில் பல்லடம் கிராமம் நாரணபுரத்தில் நாராயணக் கவுண்டர் அதிகாரம் செய்யும் நாளில் 1.2.1798 அன்று இருபத்துநான்கு மனைச்செட்டியார்கள் அனைவரும் ஒன்றாகக் கூடி நாரணபுரம் அங்காள பரமேசுவரிக்குப் பூசை முதலிய காரியங்களுக்காக விட்ட கொடைபற்றி இச்செப்பேடு விளக்குகிறது.

24 மனையாரின் 24 பெயர்கள் கூறப்பட்டுள்ளன. கூடிய 24 மனைச்செட்டியார்கள் பெயர்கள் எழுதப்பட்டுள்ளன. 24 மனைச் செட்டியார்கள் கட்டிய வீட்டுக்கு வருடம் ஒன்றுக்கு ஒருபணம் கோயிலுக்குக் கொடுக்க வேண்டும் என்று நிர்ணயம் செய்யப்பட்டது. இறுதிப்பகுதியில் 24 மனையாரின் பல புகழ்ச்சிச் செய்திகள் கூறப்பட்டுள்ளன.

## மூலம்

அருணாசலம்.

சுவஸ்திஸ்ரீ மகாமண்டலீசுரன் அரியதள வியபாடன் பாசைக்குத் தப்புவராய கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான் துலுக்கர்தள வியபாடன் துலுக்கர்மோகந் தவிள்த்தான் சோழமண்டலத் தாபநாசாரியான் பாண்டிமண்டலத் தாபஞ்சாரியான் சேரமண்டலம் விரப்பிறதாபன் தொண்டமண்டலச் சண்டப்பிறசண்டன் ஈழமும் யாபாணமும் மேல்மண்டலம் திறைகொண்டருழிய ராசாதிராசன் ராசபரமேசுரன் ராசமாத்தாண்டன் ராசகெம்பீரன் ராசபூங்காவனன் ராசகேசரி மறுமன்னியர் குடாலயன் ராசதெய்வேந்திரன் தரணிவழங்கும் விருது கட்டாரிச் சாளுவன் மரைபுக்காவலன் அசுபதி நரபதி கெசபதி நவகோடி நாராயணன்,

வங்கழர் ஆரியர் அப்பர் ஒட்டியர் நாயகர் மாளுவர் மலையாழர் கொங்கர் கலிங்கர் கருனாடர் துலுக்கர் மறாடரென்னப்பட்ட பூமி யெளுதீவிலுமுடைத்தாகிய

ARE (A) 1 of 1910

நாவலம் பெருந்தீவில் எளுபத்தேளு பாழையமுந் திறைகொண்டு நரபதியாகிய பூலோகபுரந்தரன் தெட்ஷண உத்திர சத்த சமுத்திராதிபதியுந் துலுக்காணமும் கொண்டு திசைக்கம்பம் போட்ட துஷ்ட்ட நிக்கிறக சிஷ்ட்ட பரிபாலனஞ் செய்து அருமுர நின்ற காலத்தில் ஸ்ரீ வீர நகரத்தில் பிரிதிவிசுனாகிய வீர சிம்மாசனத்தில் எளுந்தருளிய மகாராய பிறவுடைய தெய்வமகாராயர், கண்டியப்பிறதாபராயர், சாம்பவராயர் மல்லிகாற்சுனராயர், அச்சுதராயர், கிஷ்டணராயர், நரசிங்கராயர், நானந்தராயர், கட்டாரிச் சாளுவமகாராயர், சீரங்கராயர், ஸ்ரீராமதேவமகாராயர் இவர்கள் பிறிதிராச்சிய பரிபாலனம் பண்ணியருளாநின்ற காலத்தில் ராய ராஜுவத்துக்குக் கர்த்தராகிய விசுவனாதனாயக்கர், கிஷ்ட்டணப்பனாயக்கர், வீரப்பனாயக்கர், திருமலை னாயக்கர்அய்யர் கொங்கு மண்டலம் வாரக்க னாட்டில்ச் சேந்த பல்லிடங் கிறாமம் நல்லண கவுண்டர் குமாரர் ஆதி நாராயண கவுண்டர்,

ஓதியுணர்ந்து உலகு முளுது ஆள்வதற்கு நீதி சாகரம் நினைவுடன் கற்று மும்மொழி வினோதன், முத்தமிழ் தெரிந்தோன், அறிவுக் ககத்தியன், அழகுக் கனங்கன், சொல்லுக் கரிச்சந்திரன், வில்லுக்கு விசையன், பெலத்துக்கு வீமன், அறத்துக்குத் தற்மர், மறவுக்கு மன்னியர், மிகுபரி நகுலன், கடகரி யுதையன், கொடைக்குக் கர்ணன், ஒழிவுக் கிரவி, குளுமைக்குச் சந்திரன் இப்படியென்னப்பட்ட புகழ்பூண்டு இஞ்சொல் தணிந்து வள்ளுவர் மறவு காற்று முப்பால் மொழியும்படியே அறிவை யறிந்து அல்லவை கடிந்து நல்லவை நாடி ஞாள மெலியக் குடி தழைக்க ஆறிலொன்று கடமைகொண்டு அருள் பெருகி அன்பு கூர்ந்து ஆகமசாலையும் அந்தணர்வேள்வியும் வேதவொலியும் விழாவரா வீதியும் தபோதனர் மடங்களுந் தற்ம சாலையும் தண்ணீர்ப்பந்தலும் தற்றுசாயுதமும் இப்படிக்கொத்த தற்மத்துக்குள்ளாய் நடந்துவருகிற சாலியவாகன சகாற்த்தம் 1719 கலியுக சகாற்த்தம் 4898க்கு மேல்ச் செல்லாநின்ற பிங்கழ வருஷம் தை மாசம் 22 தேதி பவற்ணமையுங் குருவாரமும் பூச நட்செத்திரமும் சவுபாக்கியநாம யோகமும் சிவயோகமும் சுபகரணமும் கூடின சுபதினத்தில்,

மும்முடியவன், வாச்சியவன், கெந்தவங்கிறவன், கெப்பையவன், பலிபதிவன், தரிசியவன், தவலையவன், மக்கடவன், கோலவன், லக்கவன், கெணத்தவன், பச்சிவன், கப்பவன், சென்னவன், குரகவன், சுரியவன், பில்லிவங்குறவன், ரட்டையவன், மாறட்டையவன், கோட்டையவன், பிக்கிவன், கவலையவன், வலசத்தியவன், பாவையவன் இவர்கள் சாதி இருபத்தினாலுமனையாருங் கூடிப் பட்டையங் குடுத்தபடி, நாரணாபுரத்தி லெளுந்தருழியிருக்கும் அங்காழ பரமேசுபரிக்கு நித்தியப்படி அபிஷேகக் கட்டளை நெய்விழக்குத் திருமாலை திருமஞ்சனம் திருப்பணி திருவலகை பள்ளையம் இதுமுதலாகிய தற்மத்துக்கு குப்பிசெட்டியார் குமாரன் சித்திசெட்டியை விசாரணைபண்ணி வரிவாங்கச் சொல்லி னான்குதிசை யன்பத்தாறு தேசத்திலுள்ள சாதி இருபத்தினாலு மனையாருங் கூடி தற்ம சாதனப் பட்டையங் கட்டளையிட்டோம்.

நாரணாபுரங் கோனஞ்செட்டி, வெங்கிட்டிசெட்டி, சீராம சின்னாஞ்செட்டி, கஸ்தூரி தாசிசெட்டி, குள்ளிசெட்டி, சின்னாசெட்டி, சங்கோதி கோனஞ்செட்டி,

மிணியாரி நீலஞ்செட்டி, கோவிந்தசெட்டி, குமாரன்செட்டி, சுப்பிசெட்டி, காக்கிவாடசெட்டி, பழனிசெட்டி, மலைய்யபாளையம் கிஷ்ணசெட்டி, பூமலூர் பயிண்டிசெட்டி, குப்பகாலஞ்செட்டி, மலைப்பாளையந் தண்டுவாடஞ்செட்டி, புத்தூர் வெங்கட்டராமசெட்டி, வடுகபாளையம் பெரியகுப்பிசெட்டி, சின்னக்குப்பிசெட்டி, சித்தலுசெட்டி, ரங்கசமுத்திரம் நஞ்சிசெட்டி, புதூரு திருமலைசெட்டி, முருகன்பாளையம் செட்டி, கிருஷ்ணாபுரம் சடைவீரப்பசெட்டி, திம்மிசெட்டி, பூசாரி சாமிசெட்டி, குமரான்செட்டி, சுத்திசெட்டி, தாசிசெட்டி, சுப்பிசெட்டி, கஸ்தூரிரங்கன்செட்டி, வாகைத்தொளுவு வானுவசெட்டி, கிஷ்ணசெட்டி, வெங்கட்டறாமசெட்டி, கிஷ்ணசெட்டி, தாசிரயன் கிஷ்ணசெட்டி, குப்பிசெட்டி, அணிகடவு திருமலைசெட்டி, அமுதகடவு குப்பிசெட்டி, பூளைவாடி சொப்பிசெட்டி, சின்னாசெட்டி, குமரஞ்செட்டி, பெத்திசெட்டி, வேடஞ்செட்டி, வரலிசெட்டி, வானுவசெட்டி, அங்கித்தொளுவு பெ... செட்டி, பெத்திசெட்டி, பூச்சிசெட்டி, சுப்பிசெட்டி, போடிசெட்டி, போடிசெட்டி, பொன்னாண்டக்கவுண்டன்பாளையம் சித்திசெட்டி, பொம்மிசெட்டி, நல்லூருக் குழந்தைசெட்டி, முத்தஞ்செட்டி, சிதம்பரகவுண்டன்பாளையம் திம்மிசெட்டி, ரட்டியாரூரு காக்கிவாடசெட்டி, அன்னாரிபாளையம் பெத்திசெட்டி, பருத்தியூரு திருமலைசெட்டி, குமாரனாயக்கனூரு குமாரன்செட்டி, லட்சுமசெட்டி, துரையூரு பெத்திசெட்டி, மஞ்சனாய்க்கன்பட்டி மலையாண்டிசெட்டி, காட்டுப்பாளையம் திம்மிசெட்டி, மாமரத்துப்பட்டி சீரங்கசெட்டி, பழயலூர் கேத்திசெட்டி, செட்டிபாளையம் வெங்கிட்டசெட்டி, கஞ்சம்பட்டி மலையாண்டிசெட்டி, நல்லகுமாரஞ்செட்டி, நாட்டுக்கல்பாளையம் பெத்திசெட்டி, குமாரபாளையம் மலையாண்டிசெட்டி, பொம்மனாயக்கன்பட்டி சீரங்கசெட்டி, ரங்கிசெட்டி,

கூளனாயக்கன்பட்டி தாசிசெட்டி, மாலைப்பட்டி சின்னத்தம்பிசெட்டி, கள்ளிவலசு திருப்பதிசெட்டி, சீரங்கசெட்டி, ஊத்துக்குளி பெரியாஞ்செட்டி, வெங்கிட்டசெட்டி, போடிபாளையம் திருமலைசெட்டி குஞ்சிபாளையம் கெட்டிமல்லசெட்டி, குமாரசாமிசெட்டி, பெத்திசெட்டி, ரங்கசாமிசெட்டி, சின்னாப்பசெட்டி, எருப்பட்டி சின்னிசெட்டி, செல்லாண்டிசெட்டி, செம்மலையாண்டிசெட்டி, பூசாரி அய்யன் பெருமாள்செட்டி, திப்பம்பட்டி பெத்தாஞ்செட்டி, மாக்கனாயக்கன்பட்டி சீரங்கசெட்டி, கொள்ளுப்பாளையம் பெத்திசெட்டி, சொல்பாளையம் திம்மிசெட்டி, பூசாரிபட்டி பொண்டையன்செட்டி, மலையாண்டிப்பட்டணம் குமாரஞ்செட்டி, போமுயகவுண்டன்பாளையங் காக்கி வாடசெட்டி, கோலார்பட்டி, வெங்கிட்டசெட்டி, புதூர் ரங்கிசெட்டி, கோமங்கலம் திருமலைசெட்டி, குள்ளிசெட்டி, கொண்டான்செட்டி, பீக்கல்பட்டி வெங்கஞ்செட்டி, முத்தூருக் கொட்டம்பட்டி பெத்தாஞ்செட்டி, வெங்கிட்டசெட்டி, மலையாண்டிசெட்டி, வெங்கம்பாளையம் லட்சுமிசெட்டி, கொங்கலப்பம்பாளையம் பூசாரி செட்டி, பொன்னாபுரம் மலையாண்டிசெட்டி, புளியம்பட்டி கொண்டிசெட்டி, நெகமம் கிஷ்டணசெட்டி, ஆதியூர் சின்னராமசெட்டி, சந்திராபுர நஞ்சிசெட்டி, சின்னாரெட்டி, இலமாரிபாளையம் முத்தன்செட்டி, தாசிசெட்டி, நகர் களந்தை வெங்கிட்டறாமசெட்டி, அமுண சமுத்திர மந்தஞ் செட்டி, திருமலைசெட்டி, கொரலுசெட்டி, வகுமண்செட்டி, பதிக்காரக் குப்பஞ்செட்டி, பூலாங்கிணறு திம்மிசெட்டி, பெத்தப்பசெட்டி, ராகுலுவாவி சின்னவாடசெட்டி,

திம்மிசெட்டிபாளையம் மல்லிசெட்டி, ரங்கிசெட்டி, அந்தியூர் வெங்கிட்ட செட்டி, சல்லிப்பட்டி சித்துலுவாடசெட்டி, திம்மிசெட்டி, உடுமலைபேட்டை பெரியதாசிரிசெட்டி, குமாரஞ்செட்டி, கோபாலசெட்டி, வெங்கிட்டசெட்டி, குப்பதாசிரிசெட்டி,

குருஞ்சேரி வாவிசெட்டி, பெந்த வீரன்செட்டி, சின்னவீரப்பம்பட்டி, சித்தாண்டிசெட்டி, தாந்தோணி குமாரஞ்செட்டி, புக்களம் சின்னாசெட்டி, குப்பிசெட்டி, பூதிநத்தம் போடிசெட்டி, லட்சுமசெட்டி, ஓயாமாரி நாரசிம்மன், வேங்கிடன், கூத்தாடி, போட்டுப்பட்டி கொண்டன்செட்டி, பள்ளபாளையம் வெங்கிடதாசரி செட்டி, கேகம்பொன்பாளையம் ஆண்டிசெட்டி, பாலாய்க் குப்பிசெட்டி, எரிசின்னப்பம்பட்டி அம்மாசைசெட்டி, நாறாயணசெட்டி, கெக்கால மல்லிசெட்டி, புங்கம்புத்தூர் மலையாண்டிசெட்டி, அண்ணாமலைசெட்டி, செல்லப்பம்பாளையம் திம்மிசெட்டி, வேலூர் குமாரஞ்செட்டி, விளாமரத்துப்பட்டி குமரஞ்செட்டி, ராமஞ்செட்டி, பாப்பலனூத்து திருமலைசெட்டி, மானுப்பட்டி அங்கொணசெட்டி, திண்ணப்பட்டி திருமளைசெட்டி, குமரமங்கலம் திருமலைசெட்டி, சோளமாதேவி தண்டுவாடசெட்டி, காறத்துளு வத்துலுசெட்டி, தளவாய்பேட்டைக் குப்பம் ப்ளனிசெட்டி, அங்கப்பசெட்டி, ஈரோடு பள்ளிபாளையம் நஞ்சிசெட்டி, தாண்டவசெட்டி, லக்கமனாயக்கன்பட்டி கிஷ்ணசெட்டி, தொட்டிபாளையம் நீலஞ்செட்டி, காவிலிபாளையம் சின்னாசெட்டி, இச்சிவலசு திருமணசெட்டி, சின்னம நாயக்கன்பட்டி கிஷ்ணசெட்டி, தூரம்பாடி ரங்கிசெட்டி மகன் திருமலைசெட்டி, கோனேரிசெட்டி, திருப்பதிசெட்டி, மகுருசெட்டி,

வத்தகாளிவலசு வெங்கிட்டசெட்டி, ஏரனசெட்டி, நல்லாம்பாளையம் ரங்கிசெட்டி, வலையபுதுப்பாளையம் ராமிசெட்டி, வேலப்பம்பாளைய பெரியசெட்டி, முத்துறாமசெட்டி, சென்னக்கல்பாளையம் குப்பதாசிசெட்டி, குழந்தைசெட்டி, நாதம்பாளையம் வெங்கிட்டறாமசெட்டி, பாப்பாகுழந். திருமனசெட்டி, அப்பயம்பட்டி நாராயணசெட்டி, அனுமந்தன்கோட்டை வெங்கிட்டசெட்டி, நாசகஞ்செட்டி, செந்தலையன்பாளையம் பெத்திசெட்டி, லிங்கசெட்டி, தாசிசெட்டி, கொத்தமங்கல முத்துமணியகாரசெட்டி, காத்தகாமசெட்டி, நாராயணசெட்டி, வலசமுத்திரம் அங்கஞ்செட்டி, சின்னவாவஞ்செட்டி, முனிவேலயசெட்டி, ஆயிக்குடி கொண்டான்செட்டி, விறுப்பாச்சி எறப்பசெட்டி, கன்னிபாடி மணியகாரசெட்டி, பெரியகுழும் சீரங்கசெட்டி, சேருவைகாரன் பாளையம் புல்லிசெட்டி, கப்பழாங்கரை வெங்கிட்டசெட்டி, தித்தமங்கலம் பட்டணசெட்டி, பாலக்காடு ரங்கிசெட்டி, திருச்சினாப்பழ்ழி சீரங்கசெட்டி, கரியாறு திருமலைசெட்டி, கோயம்புத்தூர் சனிவாரசெட்டி, அங்கணசெட்டி பாளையம் செத்திசெட்டி,

இத்தாதி உறவின்முறையார் சகலருங்கூடி நாரணாபுரம் அங்காளபரமேசுபரிக்கு நித்தியப்படி அவிசேஷகக் கட்டளை நெயிவிளக்கு திருமாலை திருமஞ்சனம் திருப்பணி திருவுலகை பள்ளயம் இது முதலாகிய தர்மத்துக்குக் கட்டின வீட்டுக்கு தலக்கட்டுக்கு வருசம்மொன்றுக்கு ஒரு பணமும் புத்திர பவுத்திர பரம்பரையாகக் கல்லும் காவேரியும் புல்லும் பூமியும் ஆகாசம் பூமி சந்திர சூரியருள்ளவரைக்கும் இந்த தர்மத்தை நடத்திக் குடுத்து வருவராகவும். இந்தத்

தர்மத்துக்கு ஆதாமொருத்தர் அச்சையம் பண்ணினால் கெங்கைக்கரையில் காறாம்பசுவை வதைத்து சகலதிர விருமத்தி வதைசெய்த பாவத்தில் போவாராகவும். மாதா பிதாவுக்கு துரோகம் பண்ணின பாவத்தில் போவார்கள். குருவுக்கு நிந்தினை பண்ணின பாவத்தில் போவார்கள். தேவதா உடைமையை ஆயிச்ச பாவத்தில்ப் போவார்கள். பஞ்சபாதகஞ் செய்தபேர் பாவத்தில் போவார்கள். இந்த தர்மத்துக்கு ஆதாமொருத்தர் கண்டதானாலும் வாக்குச் சகாயம் சரீர சகாய அதுமுதலாகிய அத்த சகாயஞ் செயிதபேர் காசியிலே அனேகம் சிவலிங்க பிரதிட்டையும் விட்டுணு பிரதிட்டையும் பண்ணிவைத்த பலத்தைப் பெருவராகவும்.

ராமேசுபரத்திலே ராமனாத சுவாமிக்கும் அனுமந்தப் பெருமாளுக்கும் காசி கெங்கா சலம் கொண்டு போயி அவிசேகம் பண்ணினாலெந்தப் பலனோ அந்தப் பலன் பெறுவாராகவும். திருவண்ணாமலையிலே காத்திகை யன்றைக்கு துறும்புரக் கட்டியிலேயும் பசுவு நெய்யும் பச்ச வடமும் தீபம் ஏற்றி சோதியைத் தெரிசினம் பண்ணினாலெந்தப் பலனோ அந்தப் பலன் பெறுவாராகவும். திருப்பதியிலே கோனேரி தீர்த்தத்திலே கோடி தீர்த்தத்திலே முளுகி வெங்கிடாசலபதியைத் தெரிசினம் பண்ணி காப்பு முத்திரி செய்தாலெந்தப்பலனோ அந்தப்பலன் பெருவராகவும். பழனியில் தைய்ப்பூசத்தினன்றைக்கு சண்முக நதியிலே முளுகி பழனி ஆண்டவருக்கு சோடச உபசாரத்துடனே அவிசேகம் பண்ணி அருபூசை குருபூசை மயேசுரபூசை பண்ணினாலெந்தப் பலனோ அந்தப்பலன் பெருவராகவும். கணபதியாருக்கு வாளைக்கனி மாங்கனி பிலாக்கனி முந்திரிப்பளம் பேரீச்சம்பழம் அப்பழம் அதிரிசம் எள்ளுருண்டை பணியாரம் கரும்பு யிளநீர் யிதுவெல்லாம் படைத்து பூசையும் அச்சினையும் பண்ணினாலெந்தப் பலனோ அந்தப்பலன் பெருவராகவும்.

கச்சி நகறாதிபன் சமைய நாறாயணன் சிங்கக்கொடியோன் சிரகத்தார்மார்பன் நடமாளிகைகாறன் குஞ்சில் குலகாரன் மாட்டுத் தலையை பிரந்தலை ஆக்கிவைத்தவன் மதுப்பானையைப் பால்ப்பானை ஆக்கிவைத்தவன் சாம்பெத்தான் தண்ட சதுருபாய சாதகன் மச்ச கூர்ம அருட்கெருட சிம்ம சாரதூல கொண்ட பேரண்ட அன்னக்கொடி மேளிக்கொடி விசையக்கொடி செலுத்திய வீர மாத்தண்டன் சமைய கோலாகலன் மோகாலிப் பட்டவத்தனன் வலங்கைப் பிறதாபன் பொன்னாலே பொற்பாவை செய்து பேச நடக்கச் சிரிக்கக் காஞ்சிபுரம் காமாட்சியம்மன் காறணத்துனாலே யுண்டாக்கிச் சோளனுக்குத் திருமணஞ்செய்து மனமோகந் தவுள்த்த அஸ்தான வினோதன் மும்முடியவர் குலம்படைத்து மும்முடி மன்னர் மகிள மூக்கமுடையவர் மேகமே வடங்களாகவும் வெண்ம்பையே பசும்பையாகவும் ஒன்பதுவகை நவரற்றினமும் சீனி சீனாபரமும் பட்டுப் பட்டாவளி யிதுமுதலாகிய சரக்குகளெல்லாம் மகாபரமேசுபரநிட கிறாபா கடாச்சத்தினாலே உண்டாக்கி ஏளு சமுத்திரமென்னப்பட்ட நவரற்றினப் பசும்பைகளினாலே படைத்து பஞ்சவன்னம் பாவாடையும் பகல்த் தீவட்டியும் பிடித்துக்கொண்டு கேசனென்னப்பட்ட எருதுகளில் பொதி ஏற்றி திருக்கொட்டில் விலைகூறி மலையரசன் மகளை மணம் செய்துக்கொண்டு வந்து காஞ்சிப்பட்டணத்திலே குடியாக வாளும்போது,

காஞ்சிபுரம் காமாச்சி அம்மன் வரப்பிரசாதத்தினாலே உப்பித்த சங்கு சிங்கக்கொடிக்கு உடையவன். கலக்கோட்டு மாரிசி வம்முசத்தில்ப் பிறந்த கச்சி நகறாதிபன் யென்னாணை யென்பவர்க்கு இருபத்து நாலு குடிப்பட்டமுள்ளவர் தாமே சோளமண்டலம் சேரமண்டலம் தொண்டமண்டலம் பாண்டிமண்டலம் இந்த நாலு தேசத்திலே உண்டான உறவின்முரையார் அனவோரு வயிஞ்சுக்கொண்டு அங்காளபரமேசுபரிக்கு நித்தியப்படி அவிசேக கட்டளை நெய்விளக்கு திருமாலை திருமஞ்சனம் திருப்பணி திருவுலகை பள்ளயம் இது முதலாகிய தர்மத்தை நடப்பிவிச்சுக்கொண்டு வரவும்.

விளாமரத்துப்பெட்டி கோனேரிசெட்டி மகன் திருமலைசெட்டி மேக்கே சித்தூரு தொட்டு தலச்சேரி வரைக்கும், கிளக்கே தோகமலை தொட்டு சிதம்பரம் வரைக்கும், தெக்கே திண்டுக்கல் தொட்டு ராமேசுரத்து வரைக்கும், வடக்கே காசி வரைக்கும் இந்த நான்கு திசை 56 தேசத்திலேயும் ஊரும் எளுதவில்லை பேரும் எளுதவில்லை யென் குலம் எழுதவில்லை என்றும் பொட்டுக்கட்டி மூக்குத்தி குத்தி கொங்கத் தெலுங்கன் கோணி னெய்யுரவன் சிறு தாலி கட்டி 24 மனை 64 குலம் அங்காள பரமேசுபரி தன்மத்தை நடத்தவும்.

# 66. மல்லிகுந்தம் பட்டயம்

சேலம் மாவட்டம் ஓமலூர்வட்டம் மல்லிகுந்தம் இராமகண்டன் என்பாரிடம் இச் செப்பேடு உள்ளது.* காமாட்சியம்மன் உருவமும் அனுமன், கருடாழ்வார், சூரியன் , சந்திரன், தேர், தலை துண்டிக்கப்பெற்ற பெண், தலைப்பாகையுடன் ஆண், போர் வீரர்கள், கழுதைமேல் மனிதன் ஆகிய சிற்பங்கள் செதுக்கப் பெற்றுள்ளன.

சர்வதாரி வருடம் வைகாசி மாதம் 15 ஆம் தேதி 13.5.1708 அன்று வன்னியர் குலத்தில் பெரிய சோழனார், சின்னச்சோழனார், பெரிய நல்ல பண்டாரத்தார், சின்ன நல்ல பண்டாரத்தார், உடையார்பாளையம் பிச்சிவரத்துப் பண்டாரத்தார் அவர்களைச் சேர்ந்த 9 சாதியார் எல்லோரும் சேர்ந்து காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மனுக்குத் தேரோட்டம் நடத்த முற்பட்டனர்.

தேரோட்டம் நடைபெறும்போது வைணவரில் வலக்கை ஆன சேணிய சிம்மப்புலி ஓடாமல் நிறுத்திவிட்டான். இடக்கையானவர்கள் கொச்சி மலையாளம் இடக்கை சிம்ம அனுமனைக் கொண்டு தேரை ஓட்ட முற்பட்டனர். நரபலி கொடுக்க வேண்டுமென்று கேட்டு யாரும் முன்வராது போகவே சிம்ம அனுமன் தன் மனைவி ஆவல் தீத்தம்மாளைப் பலி கொடுத்துத் தேரைத் தன் மூக்கினால் இழுத்தான். இடக்கையார் மகிழ்ச்சியால் சிம்ம அனுமனுக்குக் கொடை அளித்து இச் செப்பேட்டையும் அளித்தனர்.

வன்னியர், ஆசாரியர், நகரத்தார், செங்குந்தர், தேவேந்திரப் பள்ளர் ஆகிய இடக்கையார் தலைக்கட்டுக்கு முக்குறுணி அரிகொடுக்க ஒப்புக் கொண்டனர். சிம்ம அனுமனைச் சாதிப் பிள்ளையாக்கி 18 விருது கொடுத்தனர்.

உடையார்பாளையம் பண்டாரத்தார் திருமுகம் மூலம் இச்செப்பேடு வெட்டப்பெற்றது.

## மூலம்

உ சோசிய விசய சாலியவாகனம் சகாற்தி 4809 வருஷம் சருவதாரி வருஷம் செல்லாநின்ற வைகாசிமாதம் 15உ சுக்குரவாரம் அவுட்ட நக்ஷத்திரம்

* தேனோலை, இதழ் 6, அக்டோபர் 75, பக். 40_42.

அமிர்தயோகம் சகலகுண சம்பன்னறான. அகண்டித லட்சுமி பிரசன்னறான, அண்டினவறை ஆதரிக்க வல்லவறான, குருபூசை சிவபூசை மரவாதவறான, காமாட்சியம்மன் அருளுடையவரான, வாடாத மாலை யுடையவறான, வெத்திமநசு சிவமநசு வன்னத்தடுக்கு யுடையவறான, பந்துசன போசகறான, வீரகண்டாமணி வீரவெண்டயம் உடையவறான, நகபத்து உடையவறான, சிங்கக்கொடி ஆளிக்கொடி ஆண்புலிக்கொடி அனுமக்கொடி கெருடக்கெடி பூச்சக்கரக்கொடை அக்கினிக் குதிறை வேட்டுப்பாவாடை வெண்சாமறம் உடையவறான,

காஞ்சிபுரதளத்தில் பெரியசோழனார், சின்னசோழனார், பெரியநல்ல பண்டாரத்தார், சின்னநல்ல பண்டாரத்தார், அவர்களைச் சேந்த 9 சாதியார் சேர்ந்து காஞ்சிபுரதளத்தில் அவர்கள் சமூகத்தில் காமாட்சியம்மனுக்கு ரதம் உண்டுபண்ணி நாலு வீதியும் ரதப்பிரதட்சணம் வரும்போது சேணிய சிம்மப்புலி. எங்குரவன் மந்திரத்தினால் அந்தத்தேரை யிழுக்க வொட்டாமல் நிறுத்தினான். யிவன் வலக்கையானவன்.

யிடக்கை பாணத்தார் தேரை நிரித்தினபடியால் யிதற்கு கொச்சி மலையாளத்திலிருக்குர யிடக்கை சிம்ம அனுமந்தனை அழைப்பித்து தேறை ஓட்டவேணுமென்று யோசித்து அவனுக்கு காயிதம் யெழுதி அனுப்பிவித்து அவனை வரவழைத்து இந்த சங்கிதிகளைச் சொன்னார்கள். அவன் அதற்கு அஞ்சனம் போட்டு பார்வையிட்டு சொல்லுகுறேனென்று சொன்னான். அப்படிக்கி செய்யென்று சொன்னார்கள். அவன் பார்வையிட்டு 12000 பூதப் பிசாசுகளை யேவல் செய்து தேரை நிறுத்தியிருக்குறானென்று சொன்னான். அதற்கு யென்ன செய்குரதென்று கேட்டார்கள். அதற்கு நரபலி கொடுத்தால் தேறை யிழுக்கலாமென்று சொன்னான். அதற்கு அவர்கள் ஆனை குதிறை ஓட்ட யிதுகள் காவு குடுக்குறோம். நரபெலி யெப்படி கொடுக்குரதென்று சொன்னார்கள். நீங்கள் யிதற்காக ஆயாசப்படவேண்டாம் யென் பெண்சாதி ஆவல் தீத்தம்மாளை வெட்டி பெலி குடுத்து தேறை யிழுக்குறேனென்று சொல்லி அப்படியே பெலிகுடுத்து 12000 பூதப் பிசாசுகளை விடுதல் செய்து 12000 ஆனை யிழுக்குர தேரை யிருப்பு சங்கிலி போட்டு தானொருவன் தன்னுடைய மூக்குனாலே நாலு வீதியும் யிழுத்து வந்து நிலையிலே விட்டு யிடக்கை பாணத்தாருக்கு சரணாகதி செய்துகொண்டான். அப்போது அவர்களுக்கு சந்தோஷம் வந்து நம்முடைய தலை போகுரத்தை நம்முடைய சாதி பிள்ளை தன்னுட தலையை குடுத்து திருப்பினபடியால் யிவனுக்கு யென்ன குடுத்தாலும் நிலைநிற்காதே சந்திராள் சூரியாள் ஆகாஷவாணி பூமிதேவி கல்லும் காவேரி புல்லும் பூண்டும் உள்ள வறைக்கும் சாதன கற்பனமா செப்புபட்டயம் செய்து கொடுத்தார்கள்.

அதுயென்னமென்றால் யிடங்கை பாணத்தார்கள் வன்னிய சாதியார் தலைக்கட்டு 1_னுலையும் முக்குருணி அரிசியும் குடுக்கவேண்டியது. மனோவிசுவ பிற்மா ஆசாரி நாகா சிந்தாமணி காவேரி கறைகண்டவர், முடக்கு மாணிக்கத்தை முச்சரட்டால் கோத்தவர், காஞ்சிநகர் அயோத்தியா நகர் தெண்ட காவேரிநகர் கெருடக்கொடியுடைய நகரத்தார், செங்குந்தியார், மஞ்சப்பாவாடையுடையவர், தேவேந்திரப்பள்ளன், வெள்ளைகொண்டை வெள்ளை வெண்சாமரமுடையவர்,

விருதுகோசங்கி பூதக் கொடியுடையவர், யிவர்களுக்கெல்லாம் தலைக்கட்டு 1 னுலையும் முக்குருணி அரிசியும் கொடுக்க வேண்டியது. யிதுகள் குடுத்து ஊருக்கொரு ஆடும் பண்ணியும் குடுக்க வேண்டியது.

யிந்தப்பிரகாரம் யிடங்கை பாணத்தார் ஆகாசவாணி பூமிதேவி சாட்சியாக கொடுத்து யிருக்கிறோம். யிந்தப் பட்டயமும் 18 விருதும் கொண்டு வரப்பட்ட சாதிப்பிள்ளைக்கி தடையில்லாமல் குடுக்க வேண்டியது. அப்படிக்கி குடாமல் யாதாமொருவர் தடை செய்தவர்கள் கெங்கைக் கறையிலே காறாம் பசுவை கொன்ன தோஷத்தில் போவார்கள். பிறாமணாளைக் கொன்ன தோஷத்தில் போவார்கள். உடையார் பாளையம் பண்டாரத்தார் திருமுகம் உ பொம்மலனாகான விருது கோசங்கிச்சாளி சாதி 18 அவனுக்கு வரி தலைகட்டு ஒண்ணுக்கு 15 பனம் கொடுத்து 5 நெள்ளு வள்ளம் தடையிள்ளாமள் குடுகிறது. படாய் கலியாணத்துக்கு . . சாவுக்கு 5 . . மாடு. . . 1 குடுக்கவும். ச்சி உறா அரிவள்ளம் குடுக்கவும்.

# 67. பேரூர் அணைகட்டின பட்டயம்

காகிதத்தில் எழுதி வைத்த பட்டய நகலைக் கொண்டு இங்குப் பதிப்பிக்கப்பெறுகிறது.*

1499 ஆம் ஆண்டு கப்பிணி நஞ்சய்யன், பேரூர் கல்அணை கட்டும் போது தொட்டியச் சக்கிலியர், மதுரைச் சக்கிலியர், அனுப்பச் சக்கிலியர், கானக்காட்டுச் சக்கிலியர் ஆகிய நால்வரும் கந்தாயவரி கொடுக்க வேண்டும் என்று அடிபட்டனர்.

சக்கிலியர் கம்பளத்துக் கவுண்டரிடம் முறையிட அரண்மனை வரியை நிறுத்த முடியாது என்கின்றனர். தென்கரைநாடு ஒன்னப்ப கவுண்டரிடம் முறையிடுகின்றனர். அவர் கப்பினி நஞ்சய்யன் கூறியபடி அரசரிடம் முறையிட்டுக் கொள்ளக் கவுண்டர்களைப் புணை வைத்துச் சக்கிலியர்களை அரசரிடம் அழைத்துப் போகிறார். இறுதியில் சக்கிலியர்களின் வரி நீக்கம் செய்யப்படுகிறது.

சக்கிலியர் கோவை கோணியம்மன் கோயிலில் வேலைப்போட்டுத் தாண்டி ஒன்னப்ப கவுண்டருக்குத் தங்கள் மரியாதையையும், அடிமைத் தனத்தையும் தெரிவித்துக் கொள்ளுகின்றனர். தலைக்கட்டுக்கு இவ்வளவு பொன் கொடுக்கிறோம் என்றும் ஒப்புக்கொண்டு இந்தச் செப்புப் பட்டயத்தை வெட்டித் தந்தனர்.

இறுதியில் சக்கிலியர் பலர் கையொப்பமிட்டுள்ளனர்.

## மூலம்

ஸ்ரீமது சாலியவாகனம் சகாற்தம் 1421 மேல் விகவாகிக வருஷம் சித்திரை மாதம் 5 தேதியில் கப்பினி நஞ்சய்யனவர்கள் பேரூர் கல் அணை கட்டிவிக்கிறபோது தொட்டிய சக்கிலியற், மதுரைச் சக்கிலியற், அனுப்பச் சக்கிலியற், கானக்காட்டுச் சக்கிலியர் இந்த னாலுசாதி சக்கிலியற்மேல் கந்தாயவரி தொடுத்துக் கொண்டு சக்கிலியரை ஆதிந்தன் பிடித்துக்கொண்டு அடிக்கிற போது கம்பளத்துக் கவுண்டர்கிட்ட வந்து முரையிட்டார்கள். அப்போது

* இந்நகலை அளித்தவர் தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறை அலுவலர் இரா. பூங்குன்றன் அவர்கள்.

சின்னாக்கவுண்டன், சிந்துறாமகவுண்டன், சோலகவுண்டன், ஒன்னாளகப்ப கவுண்டன், காளப்ப கவுண்டன், தாசேகவுண்டன் இத்தாதி கம்பளத்துக் கவுண்டர்கள் கூடிபேசி அரமனை கந்தாயம் வரி நிறுத்த எங்களால் முடியாது. உங்கள் மனம் வந்தாபோலே பார்த்துக் கொள்ளுங்களென்று சொன்னார்கள்

அதின் பிரகு தென்கரை ஒண்ணப்பகவுண்டர்கிட்டெ வந்து முறையிட்டார்கள். அதின் பிரகு ஒன்னப்பகவுண்டர் பார்த்து மேல்முகத்துக் கவுண்டர்கள் யென்னாசொன்னார்கள் யென்று கேட்டார்கள். அப்போது மாதாறிகள் சொன்னது; சுவாமி மேல்முகத்துக் கவுண்டர்கள் யிந்த அரமனைவரி நிறுத்த எங்களால் முடியாது என்று சொன்னார்கள். இனிமேல் னீங்கள் என்னா புத்தி சொல்கிறீர்களோ அந்தப்புத்தி கேள்க்க உள்ளார்கள். யினிமேல் வொறுத்தர் கிட்டே போவதில்லை என்று சொன்னார்கள். சொன்னதுக்குமேல் ஒன்னப்ப கவுண்டர் இருந்து வீரபாண்டி கம்பளத்து திம்மணகவுண்டர், லச்சுமணகவுண்டர், ராமகோடங்கிகவுண்டர், முத்துசாமிக்கவுண்டர், வீரேகவுண்டர், சூரியப்பகவுண்டர், தொம்பிளி கவுண்டர், தெக்குச்சீற்மை பாச்சி பாலுவந்த கவுண்டர், தொட்டேயகவுண்டர், குரேகவுண்டர், அச்சரமேகவுண்டர், மல்லேகவுண்டர் இந்தச் சகலமான கம்பளத்துக்கு ஓலை எழுதின விபறம்.

தொட்டிய சக்கிலியற், மதுரைச் சக்கிலியற், அனுப்பச் சக்கிலியற், கானக்காட்டுச் சக்கிலியற் யிந்த நாலுசாதி சக்கிலியற் மேலே கந்தாயம் வரி கொடுக்கும்படியாயி கோசிங்கிகளை சர்க்காறர் தெண்டித்த படியினாலே யெங்களிடத்தில் வந்து முறையிடுகிறார்கள். ஆனதினாலே நீங்கள் நாட்டுக்கவுண்டர்கள் அனவோரும் வந்து சேர வேண்டியது யென்னு ஓலை எழுதினதுக்கு நாட்டுக் கவுண்டர்கள் எழுதின விபறம் யென்னவென்றால், யிந்த அறமனை வரி யெங்களால் நிறுத்த முடியாது. எங்களுக்கு அந்த நாலுசாதி சக்கிலியற் வேண்டியதுயில்லை. நீங்கள் யென்ன செய்து கொண்டாலும் சரியே. நாங்கள் வறதில்லையென்று ஓலை யெழுதிவிட்டார்கள். அதின் பிற்பாடு ஒன்னப்ப கவுண்டர் மாதாறிகளே தரிவித்து கவுண்டர்கள் அனவோரும் வாரதில்லை என்று ஓலை எழுதி விட்டார்கள் என்று மாதாறிகளுடனே சொன்னார்கள். அதுக்கு மாதாறிகள் சொன்னது,

சுவாமி ஆசாரத்து கவுண்டர்கள் நீங்களே. குருவு நீங்களே. அல்லாமல் யின்னம் ஒருவருக்குப் பாத்தியமில்லையென்று சொன்னார்கள். அதன்பிறகு ஒன்னப்ப கவுண்டர் மாதாறிகளைக் கூட்டிக் கொண்டு போயி கப்பினி நஞ்சய்யன் அதிகாரி பாதத்திலே விழுக்காட்டினன். யிது என்ன மாதாறிகளே விழுக்காட்டின விவறம் என்னவென்று கேட்டார்கள். அதுக்கு ஒன்னப்ப கவுண்டர் சொன்னது; ஐயா ஒரு காலாகாலத்தில் இல்லாத கந்தாயம் வரி குடுக்கிறதில்லை என்று விழுந்து இருக்கிறாரென்று சொன்னார். அதுக்குக் கப்பினி நஞ்சய்யன்அதிகாரி சொன்னது; யென்னாலே முடியாது சமூகத்துக்குப் போயி கர்த்தரிடத்தில் வுத்தரவு வாங்கி வந்தால் விடுவேன் என்று சொன்னார். அதின் பிறகு ஒன்னப்ப கவுண்டர் கேட்டுக்கொண்டது. னான் சமூகத்துக்குப் போயி பேசி வருகிறேன். பத்துப்பேர் மாதாரிகளை விடுங்கள் யென்று கேட்டுக் கொண்டார். அதுக்குக் கப்பினி

நஞ்சய்யன் பார்த்து அப்படி விடப்போறதில்லை. பத்துப்பேர் கவுண்டர் வந்து இந்த வரி பொன் எட்டு லட்சத்தி ஆறாயிரத்தி 425 பொன்னு பத்துபேர் கவுண்டர்கள் வந்து புணை நின்றால் பத்துப்பேர் மாதாறிகளை விடுவேன் என்று சொன்னார். அதுக்கு ஒன்னப்ப கவுண்டன் பெகடைகளை அழைத்து மாதாறிகளை நாட்டின் பேரில் ஓலை எழுதி விட்டதில் ஒருவரும் வாரதில்லையென்று ஓலை எழுதிவிட்டார்கள். இதுக்கு உத்தாரம் என்ன சொல்லுகிறீர்கள் என்று கேட்டதுக்கு மாதாரிகள் சொன்னது.

சுவாமி பத்துப்பேர் கவுண்டரும் குருவும் நீங்களே. எங்களெ வித்துக் கொண்டாலும் நீங்களே. இன்னம் ஒருவருக்குப் பாத்தியமில்லை. இந்த நாலு சாதி கோசங்கி வம்சத்தில் கொங்கு 24லு னாட்டில் வருஷம் ஒண்ணுக்குத் தலைக்கட்டுக்கு காணிக்கை பொன் ஒன்னு தீர்வைக்கு பன்றண்டு. குத்தம் முதலானது உங்களுக்கே குடுத்து வருகிறோம். இதில் தப்பினால் புளியமாறு 12, புங்கமாறு 12, மணல்கூடை வைத்துத் தெண்டித்துக் கொள்ளுங்கள். இந்தப்படிக்கு எங்க சாதி நடத்திவரப்பட்ட யெசமானும் நீங்களே யெங்களை ஆணை பெண்ணையும் அவகூறையாக வித்துக்கொண்டாலும் னிங்களே அல்லாமல் பின்னை ஒருவருக்குப் பாத்தியமில்லை. இது தப்புகிறதில்லை என்று கோனியம்மாள் சன்னதியில் கப்பினி நஞ்சய்யனவர்கள் பேருரு சிதம்பரத் தாண்டவ முதலியாற், நஞ்சய்யன், றங்கய்யன், வெங்கட்டய்யன், முத்துவேல்புள்ளை சடதார் கொங்கு நாட்டுக் கவுண்டர் இந்த மிட்டாதாரர் முன்பாக தப்புகிறதில்லையென்று கோனியம்மன், பட்டீசுஸ்வரன், பச்சைநாயகி, தொட்டறாயசுவாமி மாதாரி சொன்னான். இந்தத் தேவாதிகள் பேறில் ஆணையிட்டு கொங்கு 24 நாட்டுமாதாரிகள் அனவோரும் கோனியம்மன் கோயில் சூலாயுதத்தைப் போட்டுத் தாண்டினார்கள்.

மேல்படி கண்ட இந்த அதிகாரிகள் முன்பா மகாவொன்னப்ப கவுண்டருக்கு கொங்கு 24 நாட்டு மாதாரிகள் அனவோரும் கூடி அடிப்பித்துக் குடுத்த சாசனச் செப்பேடு பட்டயம். இனிமேல் வுங்களை அல்லா கெங்கைக் கரையில் காராம் பசுவைக் கழுத்தறுத்த பாவத்துக்குப் போவான். பெத்த தாயைப் பெண்டிருந்த பாவத்துக்குப் போவான். இந்தப் பிரகாரம் சாசனம் கண்ட உடனே மாதாரிகளை நம்பி முன் கண்ட பொன் 8 லட்சத்தி 6425 பொன்னு, ஒரு பிடி கொம்பு, சேவு நிறத்துக்கு 300, 300 விதமாயி ஓட்டிக் கொண்டு பத்துப் பேர் மாதாரிகளுக்கு பதிலி 500 கறை மாடு சிதம்பரத் தாண்டவ முதலியார் வசம் புணை வைத்து மாதாரிகளை 10 பேரைக் கூட்டிக் கொண்டு போயி கல்லுச் சாவடி திம்மண்ண ஐயரைக் கூட்டிக் கொண்டு போயி கர்த்தருடைய சமூகம் கண்டார். சுவாமி கல்லுங் காவேரியும் உண்டான நாள் முதல் சந்திர சூரியர் வுள்ள நாள் முதலாயில்லாத கந்தாய வரி மாதாரிகளே குடுங்கள் என்று தெண்டிக்கிற படியினாலே தேவரீர் சமூகத்துக்கு வந்தேன். இனிமேல் இந்த நாலு சாதி கோசங்கி வம்முசம் உள்ளவரைக்கி பட்டரை வரி ரெண்டு பொன் தவிர மற்றவரி சருமாப்பு யென்கிறதாக உத்திரவு கொடுத்து ஒரு புடி கொம்பு, சேவு நிறுத்துக்கு 300, 300 வாங்கிக் கொண்டு இந்தச் சாசனத்துக்கு தங்களுடைய முத்திரை ஆக வேண்டுமென்று கேட்ட உடனே முத்திரை போட்டு பட்டரை வரி ஒண்ணுதவிர மற்ற வரி சருமாப்பு என்கிறதாக மாதாரிகளேயு விடும்படியாக வுத்தரவு கொடுத்தார்.

வுத்தறவு வாங்கிக் கொண்டு வந்து கப்பினி நஞ்சய்யன் கையில் கொடுத்தார். அந்த வுத்தறவு பெத்து கொண்டு மாதாரிகளை விட்டு விட்டார். புணை மாட்டையும்விட்டு விட்டார். ஒன்னப்ப கவுண்டர் கோனியம்மன் கோயிலுக்கு மாதாரிக்ளைக் கூட்டிக் கொண்டு போயி மாதாரிகள் கயியெழுத்து விபறம். யெற்றபகடை, யெண்டபகடை, மயப்பகடை, வீரபகடை, பாழியபகடை, பகடிகத்திப்பகடை, வட்டிகபகடை, மல்லிகபகடை, பூவுலுபகடை, சிந்துரம்பகடை, கள்பகடை, கவுரிபகடை, கருசிபகடை, வன்னகரியபகடை, அண்ணவிபகடை, குலியபகடை, குஞ்சலிபகடை, ஓரைகாறபகடை, தொக்குளிபகடை, சீரங்கபகடை 24 லு நாட்டு மாதாரிகள் அனவோரு ஒன்னப்ப கவுண்டருக்கு அடிப்பித்துக் குடுத்த செம்புபட்டையம்.

தொட்டராயசுவாமி லட்சிக்கவும். சிவமயம். நாடுகள் பொங்கியநாடு, பூங்குதாரைநாடு, பள்ளியரைநாடு, அண்டநாடு, பெள்ளாதிநாடு, வாரக்கநாடு, வையாபுரிநாடு, குளகநாடு, செம்பநாடு, சேரநாடு, கொச்சிநாடு, குடரைநாடு, குரநாடு, தட்டநாடு, தலையநாடு, பெருந்துறைநாடு, குடகுநாடு, நல்லூர்க்காநாடு, புவானிச்சிநாடு, வீரபாண்டிநாடு, தென்கரைநாடு, பெரியநாடு, காவிடிக்கிநாடு, சிந்துநர்டு இப்படிக்கு கொங்கு 24 நாட்டு கோசங்கி மாதாரிகள் அனைவரும் சேர்ந்து ஒன்னப்ப கவுண்டருக்கு அடிப்பித்துக் குடுத்த சாசனச் செப்பேடு பட்டையம்.

# 68. பேரூர்மடத்துச் செப்பேடு

தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறையைச் சேர்ந்த கரூர் அருங்காட்சியகத்தில் இச்செப்பேடு உள்ளது.

சண்டேசுவரன் ஓலை வெண்பாவுடன் தொடங்கும் இச்செப்பேடு 2 ஏடுகள் கொண்டு புத்தக வடிவில் செய்யப்பட்டுள்ளது. 3 பக்கங்களில் எழுதப் பெற்றுள்ளன. பிழை மலிந்து காணப்படும் செப்பேடு. சிறுகுடி வேளாளர் (பிள்ளைகள்) பேரூரில் மடம் கட்டியதை இச்செப்பேடு விளக்குகிறது.

இச்செப்பேட்டின் தொடக்கத்தில் பேரூர் பற்றிய சிறப்புச் செய்திகள் கூறப்படுகின்றன. அடுத்துச் சிறுகுடி வேளாளர் சிறப்பு வர்ணனைகள் தொகுத்தளிக்கப்படுகிறது. 56 தேசத்தில் உள்ள சிறுகுடி வேளாளர் அனைவரும் சேர்ந்து பட்டீசுவரர் கோயிலுக்கும் கிழக்கு ராஜவீதி தெற்குச் சிறகில் மடாலயம் ஒன்றைக் கட்டினர். அடியார்கட்கு உப்பு, திருமஞ்சனம், ஊறுகாய், நீராகாரம் கொடுக்க ஏற்பாடு செய்தனர். பட்டீசுவர சுவாமியாருக்கு மண்டபக் கட்டளையும் நடத்தினர்.

சிறுகுடி வேளாளர் வீட்டில் திருமணம் நடந்தால் மங்கிலியவரி 1/4 பணமும், மாப்பிள்ளை, பெண் வீட்டார் தலா 1/2 ரூபாயும் மடத்துக்குக் கொடுக்கவேண்டும். மடத்துக்கு அடியார்கள் வந்தவுடன் அவருக்குரிய வரியும் உணவும் தாம்பூலமும் கொடுக்க வேண்டும் என்று எழுதப்பெற்றுள்ளது.

செப்பேட்டில் கிருஷ்ணராஜ உடையார் பெயர் குறிப்பிட்டுக் காலம் கி. பி. 1347 குறிப்பிடுவது பொருத்தமாக இல்லை.

## மூலம்

ஸ்ரீமது
தண்டீஸ்பரன் ஓலை சாகரஞ்சூழ் வையகத்தில்
கண்டீஸ் பரன்கரும மாராய்க - பண்டே
அறம்செய்தான் செய்தான் அறங்காத்தார் பாதம்
திறம்பாமல் சென்னிமேல் வைத்து

அருளால் ஆதி சண்டேஸ்வரன் ஆதேஸம் செய்து அருளானின்ற சாலிய வாகனா கலியுக சகார்த்தம் 4448க்கு மேல் செல்லாநின்ற பிரமதூத வருஷம் வைகாசி மாசமும் சுக்கிர வாரமும் பௌர்ணமியும் உத்திர நக்ஷத்திரமும் பெற்ற சுபதினத்தில் ஸ்ரீமன் தேவாதி தேவன் தேவலோக நாயகன் அகிலாண்டகோடி பிர்ம்மாண்ட நாயகன் பக்திப்பிரியன் பக்தவக்ஷலன் பார்வதி பிறாண நாயகன் பஞ்சாக்ஷர பரிபூரண ருத்திராட்ச மாலிகாபரணன் தெள்ளியே சுந்தரர்க்கு தியாகம் பிறவா ஒள்ளியே சென்னெல்களில் புகுந்த பள்ளனும் பள்ளியுமாய் நின்றவறாம் சுந்தரர்க்கு உண்மை சொல்லியே சிவனே சிந்தையிலறிந்த சிறந்த மண்வெட்டியால் நந்திமுகம் அரிந்திட்ட நாயகர். அறிவாரந்தனர் கன்னியர் ஏழு பேருடன் திடமடாச் சோழன் திறமாய் அவர்க்கு பிறவாநெறி கொடுத்தருளிய பெண்மான்.

அரசம்பலத்தில் அனவர தாண்டவம் புருஷனும் காட்டிய திருவாலூர் பட்டிபயாளுடை தம்பிறானார், கிரேதா யுகத்துக்கு மத்திபுரமும் திந்தருணி வனமும் காமதேனுவும் வந்து அர்ச்சிக்க வன்மீக நாதராய் எழுந்தருளிய சாமியார், திரேதா யுகத்துக்கு மேலைச் சிதம்பரமும் தெக்ஷண பிரகையும் பஞ்சவர்ண சித்தேசி வனமும் திருபுவன சக்ரவர்த்தி வந்தர்ச்சிக்க அரசவன நாதறாக எழுந்தருளிய சாமியார், கலியுகத்துக்கு பேரும் காஞ்சிமாநதியும் அரசவனமும் தில்லை மூவாயிரம் பேர் வந்தர்ச்சிக்க பட்டீஸ்வர சாமியாறாய் எழுந்தருளினார். இப்படி அநேகம் சதுர்யுகம் பூசை கொண்டருளிய சாமியார் பிறவாநெறி யென்பதற்கு சாக்ஷி இறவாப் பனையும் பிறவாப் புளியும் பஞ்சவர்ண சித்தேசி விருக்ஷமும்,

வடகையிலே தென்கயிலே அழகிய சிற்றம்பலமும் பிருமகிரி, விஷ்ணுகிரி, ருத்திரகிரி, சூழ விளங்காநின்ற பட்டீஸ்பர சாமியார் சைவாதீக்ஷைகொண்டு திருத்தேரேறி எழுந்தருளிய திருவாலயம் பிறவாதிருக்கல்லியாணம் நடக்கும்படிக்கு மகாஸ்ரீஸ்ரீஸ்ரீ கிருஷ்ண இறாஜருடையர் தாராபுரம் சீமை செங்கோல் செலுத்தாநின்ற மேலைச் சிதம்பர ஸ்தலத்திலே 24 நாடு 56 தேசமும் தென்கடல் வடகடல் கீழ்க்கடல் மேல்கடல் இந்த நான்கு சமன் பூமியிலுள்ள சிறுகுடி வெள்ளாளர் ஈஸன் விழியில் எழில் வேர்வை தன்னில் எடுக்கப்பட்ட வாளும் பருசையும் மகாதேசம் புகழ அரிச்சந்திர மகாமுனி புண்டரீகம் போற்றிப் பணிவோர். திருவாலூரில் சிவாலயம் முகிப்பித்தார். கருணாகரர்க் கிளைஞராதிபன் கலிங்கமும் கொண்டு பரணியும் ஏற்று காராளை ஆயிரம் கண் குற்றி சோணையில் இலங்காமுகம் காட்டிய எடுத்த சிறுவர். எத்தொழிலையும் பக்தி பாண்டியன் சேரன் சோழன் பரிவுடன் மகிழ வேண்டிய நாட்டில் குருவிட இன்னிய வானோர். சிருகுடி நாட்டில் சிறப்புடன் வாழ்க பெருங்குடியாக பிரசண்டம் பெற்றவன்.

கருணையும் கிரியும் கருணையாளுடையோன். காவிரிப்பூம்பட்டினம் தன்னில் வணிகர் இருதயம் மகிழ ஆர்வ ஜெயத்தி இருபிளவாக திராசில் நிருத்தி வைத்தவன். வந்திடும் முன்னமே நிமிசத்தில் வணிகர் தோழெரும் சேவுகன் தோழெரும் மகிந்து செட்டியும் மிவனே சொல்லிய சீறாகுத்தால் மாலை பெற்றவன். சிங்கக்கொடிப் பிரதாபன். ஈழமுந்திரிகொண்டு இலங்காபுரிக் காவலன். ஈழத்துராஜன் மனம் மகிழ ஈழம் தன்னிலே ஆரவ ஜெயித்து இருசிங்கக் கோபேரு பெற்றவன்.

பொன்பாண்டியன் தருங்கா விருதுடையான். தாருளாவிய மீனக்கொடியான். தாரணி மகிழுங் கெருடக் கொடியான். சீருலாவிய வரிப்புலிக் கொடியான். பேருலாவிய குடப்பிரத மணிமாலை மார்பன். பிரபல மேகவர்ணக்குடையோன். உடைசேர் வெள்ளை வட்டக்குடை வேந்தன். உய்த்தளமாகவே வெற்றிகொடுத்த ஒற்றைக் குடையான். திதவர்னக் குடையான். நடை பாவாடை கொண்டு துகமஞ் செரிந்தவன் தன்மையுடையவன். ஆடையாபரணன் அச்சுதன் பச்சை பருகையும் உடையோன், துடைய மதனிலே வெண்சாமரமும் துலங்கிய பச்சைப் பல்லாக்கில் வரும் பலவானாகிய வெண்பரிவேந்தன். மன்மதமுடையோன். கடலில் சொக்கநாதரை சடையாமல் வெட்டி இருபிளவு கண்டவன். தண்டமிழ் பிரசண்டன் மண்டபம் அசைந்திட விடையாமலே கையாயுதத்தால் குத்தி வென்னவன். மகிழ்ந்திடப் பேர் பெற்றவன். திருவாலவாய் சொக்கநாதர் பேதமில்லாமலே உற்றதெனப்பன் என்று இருகையினாலணைத்து வைத்தவர். உள்ளம் பெருக சுகபேரு பெற்றவன், அறுபத்து மூவரில் பேரு பெற்றவன். கற்றையன் குழல்வல்லி ஆனந்தவல்லி கருணையிற் களிகூறவரு புத்திர சோப நித்திய கல்யாணன். மிடலாசப் பட்டணம் நேசமுடன் ஜெயித்தவன்.

தாசப்படை வெட்டி ரெட்டைச்சங்கு பிடித்தவன். சகல விருது மிக விருது குல விருது சோம்மா பிடித்தவன். னெட்டி மாலையும் அம்பாள் புகழவே பஞ்சவர்ண பாவாடையும் ஒற்றை மணி விருதும் உண்டானவன். நன்மையாகிய ராஜா மூப்ப முதலியார் சுரியுநாகிய கன்னிமுதலியார் கண்ணீர் போற்றும் சேர்நாட்டு முதலியார் சேரமலையாளம் பொற மாரீசருடன் கொடுத்த உடுகரையும் பெற்றவன். அஞ்சில்லமும் மூன்று வகுப்பும் ஈழத்து ராஜன் மனமகிழ தன்னையுமாகவே முரசு ரிஷியுடன் மூன்றறை தணப்பாணிக் குடையோன். மும்மாரி பொழிய கொற்கை தொண்டி குத்தி காவலன். முத்து ஜெகத்திலுடையோன். இப்படிக்கு பிறதாப சாலியான மதுரை முதல் 56 தேசத்திலே உள்ளாரும் உறவின்முறை அனைவரும் கூடி ஜாதி கோத்திரம் விளங்கறாப்போலே பேரூர் மேலைச் சிதம்பரம் திருப்பேரூர் ஸ்தலத்திலே நம்முடைய ஜாதி சிறுகுடி வெள்ளாளர் அனைவோரும் கூடி ஜாதி கோத்திரம் விளங்கறாப்போலே பட்டீஸ்வர சாமி கோவிலுக்கும் கிழக்கு, ராஜ வீதிக்கும் தெற்கு சறகில் மடாலயம் கட்டி வந்த பரதேச பரண்களுக்கும் மற்றும் உள்ளவர்களுக்கும் உப்பு திருமஞ்சனம் ஊறுகாய் நீராகாரம் கொடுத்துக்கொண்டு பட்டீஸ்வர சுவாமி மண்டபக் கட்டளை நடக்கும்படி பட்சக் கந்தசாமியாருடைய சீசன் வேலாயுதம் பிள்ளைக்கும் ஆருமுகம் பிள்ளைக்கும் தாம்பூர சாதனப் பட்டையம் கொடுத்தோம்.

இந்தத் தருமம் நடக்கும்படிக்கு ஸ்ரீமங்கிலியத்துக்கு வருஷம் 1க்கு 1/4 ரூபாயும், கலியாணத்திற்கு மாப்பிள்ளை வீட்டில் ரூபாய் அறையும், பெண் வீட்டில் ரூபாய் 1/2யும், இளந்தாரிப் பணம் 1 ம், உள்நாட்டு ஒன்றும் இந்தப்படிக்கும் கற்பனை செய்தோம். மடத்து பக்தர்கள் வந்த உடனே அவர்களுக்கு உண்டான வரியும் கொடுத்து போஜன தாம்பூலமும் கொடுத்து அனுப்பிவைக்கவும். தங்களை பட்டீஸ்வர சுவாமி லக்ஷிக்கவும் பச்சை மரகதாம்பாள் லக்ஷிக்கவும் நடராஜர் ரட்சிக்கவும்.

தருமத்தை வழுவாமல் நடத்தின பேர்களுக்கு கோடி சிவலிங்க பிரதக்ஷணம் செய்த பலனை அடைவார்களாகவும். இந்த தருமத்துக்கு யாதாமொருவன் விகாதம் பண்ணின பேர்களுக்கு கோடி கங்கை கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோசமும் உண்ணும் சோற்றிலே மண்ணைப் போட்ட பாவமும் சிசுபற்றி கோபற்றி இனத்துரோகம் குருத்துரோகம் விசுவாசபாதகம் பிடித்து உழல்வோராகவும். அப்படி இந்தப் பாவங்களெல்லாம் அணுக ஒட்டாமல் நடத்திக் கொள்ளவும். பஞ்சநாட்டோர் வாழி. மருமூட்டில்லம் வாழி. செஞ்சேநாட்டார் வாழி. சிறந்த ஆரணத்தோர் வாழி. மிஞ்சும் சோளியர் வாழி. விருதெல்லாம் தழைக்கும் வாழி. ஐந்து குலத்தோர்கள் எல்லாம் வாழி. அனைவோர்க்கும் மருவுலவு குவளை மலர் மகிழ் மலர்மாலை பூய கமல மலர் மீதணிகுவோர் வண்டிரிசம்பரென வெட்டி ரெட்டைச்சங்கு வாக விருதும் பறித்தோர். வாதிட்ட பேரை திராசில் நிரையாய் வெட்டி வணிகர் தோள்மீதில் வருவோர். மதுரையாளும் பாண்டியன் சேற அரசன் சோழனுக்கு வாட்டொழில் பயற்றுவோன். பொருதிட்ட துஷ்டர்களை வெட்டி ஜெயம் பெரும் புலிகண்டு விருதுமுடையோன். பொன்னடியிலே வீரகண்ட தண்டாமணி புனைந்திட்ட சேமமுடையோர்.

பூச்சக்கர காவிகை உபய வெண்சாமரமும் புரிபேரிகை பல்லையம்புகள் பஞ்சவர்ண பதாகையோ டிவையெல்லாம் புகழ் விருதாக உடையோன். தருணமது அறிந்துமே ஜெயந்தரு வெண்குடை தகமே உறவே அளிப்போர். தாரணிதனில் ஐந்தில்லமே பெற்று நாவலர் கண்ட முதலில் புகழே உய்வோர், தாமணி குன்றவில்லாவில்மொடு திகழ் கொழுந்து தக்கன் யாகம் துலைத்து தக்ஷனுட தடர்யுத அணிந்த சிவசங்கரன் புதல்வனென திருமருவு வீரபத்திரக் கடவுளின் சேவடி தினம் பணிகுவோர். சேரரசன் புகழவே சிலம்பத்தொளில் செய்ய வவ்வு விரைவந்து செய்யுமொரு வரிசை பெற்று உரிய சிம்மக்கொடி தேன்னும் உலாவ ஜெயம் பெற்ற கம்பீர பொன்னடியிலே வீரகண்ட தண்டாமணி புனைந்திட்ட சோமாமுடையோன்.

பூச்சக்கர காவிகை உபய வெண்சாமரமும் பூளி பேரிகை பல்லையம்புகள் பஞ்சவர்ண பதாகையொடு இவை எல்லாம் புகழ்விருது தாக்கை உடையோர். தருணமது அறிந்ததுமே ஐந்தருவேலி குடை தகமை உறவே அளிப்போர்.

தரணிதனில் ஐந்தில்லமே பெற்று நாவலர் கண்டமுகள் புகழ் உய்வோர். தாமணி குன்றவில்லில் இவையெல்லாம் தக்கன் யாகம் துளைத்து தக்கனுட ஆயுத அணிந்த சிவசங்கர புதல்வனான திருமருவு வீரபத்திர கடவுளின் சேவடி தினம் பணிகுவோர். செற்றசன் புகழவே சிலம்பத் தொழில் செய்ய வவ்வு விரைந்து வந்து செய்யும் ஒரு வரிசை பெற்று சிம்மக்கொடிக்கே இங்கின்னும் உலாவ சியம் பெற்ற கம்பீரராம் மகா மேருவை சூழ்ந்து வாழ சிறுகுடி வெள்ளாளரே அன்னை தரு நிகரான அரிச்சந்திர மாமுனிவன் அருள்தரும் கமலபதெம் அன்புடன் தொண்டு செய்கின்ற ஐந்தில்லமும் அன்புவி மீதில் நின்று தென்னவன் பதிவு இசையில் வந்த ஒன்னலரை செயங்கொண்ட வெற்றி விருது செட்டி தோள்மீதேறு கட்டாரிராயரென ஜெயம் பெற்ற கம்பீரராம் பொன்னுலகில் ஈழமது திறைகொண்ட தண்டிகை புகள் இலகுபுரி காவலன் போற்றி

சிங்கப்பதாகை ஒரு சிறுகுடி பூபதி வெள்ளாளராம் மன்னரவர் மூவருக்கும் ஆயுத பரிச்சையும் வளம்பெறக் கொடுத்த நிபுணர் மணிக்கு சவ்வு தேன் புய மாணிக்க நரசிங்கமே வைய குரு பீடம் இகவாரியே.

உறவின்முறை பத்து சேர்ந்த செய்த மடப்பள்ளி ப. ராமநாதபிள்ளை, குமாரசாமி பிள்ளை, ப. தர்மலிங்கம் பிள்ளை, ப. நமச்சிவாய பிள்ளை, ஈசுவரமூர்த்தி பிள்ளை.

செம்புப் பட்டையம் தந்தோம். மேல் காட்டிய வேலாயுதம் பிள்ளைக்கும் ஆறுமுகம் பிள்ளைக்கும்.

(இச் செப்பேட்டில் முன்பு எழுதப்பட்ட சில வரிகள் மீண்டும் எழுதப்பட்டுள்ளன).

# 69. பழனிமலைச் செப்பேடு-1

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையைச் சேர்ந்த இராமநாதபுரம் அருங்காட்சியகத்தில் இச்செப்பேடு உள்ளது.*

முருகப் பெருமானைப் பற்றிய புகழ்ச்சிப் பாடல்களுடன் இச் செப்பேடு தொடங்குகிறது. புராணங்களோடு ஒட்டிய முருகன் புகழும் அடுத்து விரிவாகக் கூறப்படுகிறது.

திருமலை நாயக்கர் ஆட்சிக்காலத்தில் கொங்கு மண்டலம் நரையனூர் நாடு தாராபுரம் சீமையைச் சேர்ந்த வையாபுரி நாட்டுப் பழனிமலை வேலாயுத சுவாமியாருக்குத் திருமலை நாயக்கரின் காரியத்துக்குக் கர்த்தரான பழனி சின்னோப நாயக்கர் நிருவாகத்தில் வீரமுடியாளர் எல்லோரும் கூடிப் பழனியில் ஒரு மடம் ஏற்படுத்தியதை இச்செப்பேடு கூறுகிறது. இச்செப்பேட்டில் காலம் பிழையாக உள்ளது. குறிக்கப்பட்ட காலம் (கி. பி. 1483) திருமலை நாயக்கர் காலம் அல்ல.

சிதம்பர உடையார் சீடன் அலங்கார பண்டாரத்தை மடத்தை நிர்வகிக்க நியமித்தனர். வரும் அடியார்கட்கு உப்பு, ஊறுகாய், நீராகாரம் அளிக்கவும், பல அடியார்களுக்கு உணவிடவும் ஏற்பாடு செய்தனர்.

இறுதியில் வீரமுடியாளர் பெருமைகளும் மடத்துக்குக் கொடுக்கும் வரிகளும் கூறப்பட்டுள்ளன.

---

* 1) *ARE (A) 35 of 1947.*

2) சோமலெ (பதிப்பு), அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில் இராமேசுவரம் கும்பாபிஷேகச் சிறப்பு மலர், இரண்டாம்பகுதி, *c 43-53, 1975.*

(படி எடுத்தவர் அ. அழகிரிசாமி)

மூலம்

ஆறுமுகம் துணை. உ சிவமயம். உ

வைய்ய நீடுக மாமளை மண்ணுக
மெய் விரும்பிய அன்பர் விளங்குக
சைய்வ நன்னெரி தான்தளைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.

கருணைபொழி திருமுகங்க ளாறும் வாழி
கரகமல பன்னிரண்டு கையும் வாழி
இருசரண மெந்தலைமேல் நாழு மோங்க
யிந்திரவிக் கப்பாலு மினிதும் வாழி
அருள்பரவி அமரர்சிறை மீட்டே ஆண்ட
ஆறிரண்டு திருநயனத் தளகும் வாழி
மருவணியும் பைங்கடப்பந் தாரு மார்பும்
மயில்பரிசெஞ் சேவல்க்கொடியும் வாழி வாழி.

அடைந்தவர் துணைவா வாழி அடியவற்க் கெழியாய் வாழி
மடந்தைதன் மைந்தா வாழி மாதவன் மருகா வாழி
திடம்புனை வேலா வாழி தேவரா ருயிரே வாழி
படந்த போரசுரர் கூத்தன் பரமனே வாழி வாழி.

ஸ்ரீ திரிபுவனதகன பரமேசுபர குமாரன். தேவர்கள்தேவன். தெய்வலோக நாயகன். அகிலாண்ட கோடி விறுமாண்டநாயகன். கோகநகனெச் சரசமாடிக் குட்டிக் குடிமியை நெட்டை போக்கி கோல் விறும்மபதங் கொடுத்த குமாரக் கெம்பீரன். கொக்காரவலை கோட்டறாவுத்தன். வக்கிறமிடு அசுரேசர் வட்ட நீர்ரொப்ப உக்கிற மயில்லேறி வரும் உத்தண்டதீரன். பக்கறைப் பகட்டரர்களை பட்டிடர் படைக்க மரத்தில் கொக்கரித் துடல்க் கிளித்த குக்கிடக் கொடிக் குமாரன். கூளி கொட்டக் கூகை பசாசுகள் தொக்க நிறத்த தழமொத்த சூரன் மழவாதறக்கு வடிவேலெடுத்த செங்கதிரன். மகா முரவோங்கும் கொக்குநாகமுரை வெட்டிவிட்ட தேவர்சிரைமீட்ட தேவர் சேணாபதி. சிரகினிலென வரிப்பரிய வீசிடு மரகத கலாபன். மயூரவாகனன். நாதன் வழுத்த வேள்வியில்ப் பிரந்த திருபுரிகோட்டுத்த காவரு மதியோன். அகஷ்த்தியற்குச் செந்தமிள்ப்பணுவலு மாறெளுத்துண்மையும் ஓதிவித்தவன்.

தேனுவுக்கு யின்பம் சிறப்பா வழித்தவன். சூரியனுக்குப் பதவி தோன்றயழித்தவன். வாணிக்கு வாக்கு வரமுங் கொடுத்தவன். மலைமகள்க் கின்பமும் வாள்வுங் கொடுத்தவன். அசுரர் குலைகாரன். அமராபதி காவலன். தோடுசேரி காதினன். தோகை மயில்வாகனன். சீதரன் திருமருகன். சிவ சுப்பிரமன்னியன். சண்டப் பிரசண்டன். வண்டக்கொருமிண்டன். உத்தண்டகுமார யாறாறுநூறு யஷ்டமங்கலம் யாவினங்குடி பழனிக்கதிவன். பத்திப்பிறியன். பற்த்தவற்த்தி நாசலன். பார்பதி புத்திரன். சிவசுத கணபதி விக்கின விணாயகன் தெய்வசகோதரன்.

யெல்லா தேவர்களும் வல்லா பிதாவாகிய பழனி வேல் வேலாயுதசுவாமியார் திருவிளப்படிக்கு வீரவாகுதேவர் யருளிப் பாடல் யீத்திரிவீர பழனிமலை வேலாயுத சுவாமியார் திருப்பரம்குன்றம் சீர்அலவாய் ஆவினங்குடி ஏரகம் பழமுதிர்சோலை குன்றுதோராடலும் யாகபதியாகிய ஆரு திருப்பதியிலும் எளுந்து யருளி தில்லை தி ருவணாமலை திருக்காளத்திரித் திருத்தணித் திருவேங்கிடம் திருப்பதியிலும் எளுந்து அருளி மகாபூசை கொண்டருளிய நிற்த்திய சுப்பிறமணிய சுவாமிக்கு யுகந்தப் பத்தராகிய மகாமண்டலேசுரன் அரியதழ விபாடன்ப் பாசைக்குத் தப்புவராய கண்டன் மூவராய கண்டன் முத்தமிள்ராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்ட நாடு கொடாதவன் மண்டலீகர் கண்டன் துலுக்க தளவிப்படன் துலுக்கமோகம் தவிள்த்தவன் சோழமண்டல பிறாதிட்டானசாரி பாண்டிமண்டலத் தாபனாசாரி சேரமண்டலத் திசைய்வுதாரன் தொண்ட மண்டல சண்டப் பிறசண்டன் எம்மண்டலமும் திரைகொண்டருளி ராசாதிராச பரமேசுரன் ராசமாத்தாண்டன் ராசகெம்பீரன் ராசகுமாரன் ராசபிரதாபன் என்னப்பட்ட புகள்பூன்று யின்சொல்லி யினிதுதளித்து வள்ளுவர் மரவு காத்து முப்பால் மொளியும்படியிக்கு அல்லவைகடிந்து நல்லவைநாடி கால் மெலியக் குடிதளைக்க ஆறிலொன்று கடமைகொண்டு அசையா மணிக்கட்டி யரசா யாளுநாளில்,

அறத்துக்கு தற்ம்மரைப் போலவும் பொறுமைக்கு பூமாதேவியைப் போலவுங் குடைக்குக் கர்ணனைப் போலவும் படைக்கு றாமனைப் போலவும் வில்லுக்கு விசைஅனைப் போலவுஞ் சொல்லுக்கு அரிச்சந்திரனைப் போலவும் கரிக்குத் தேவேந்திரனைப் போலவும் யளிக்கு சந்திரனைப் போலவும் ஆக்கினைக்குச் சுக்கிறீபனைப் போலவும் துஷ்ட்டநிக்கிறக சிஷ்ட்ட பரிபாளினஞ் செய்து அறுபத்திநாலு பலகிரி துர்க்கத்துக்கு மந்பத்தாறு வனதுற்க்கத்துக்கும் முப்பத்தாறு சலத்துற்க்கத்துக்கு யிரனூத்திப் பதினாலு கணவாய்க்கும் பதிநெட்டு மன்னியருக்கு எளுபத்தேளு பாளையகாரருக்குந் தெஷ்ணப்பிறவேன்ன அதிபதியாகி நாவலோகம் பெருந்தீவில் விசையநகரத்தில் வீரப்பிறதாபேசுரனாகிய வீரசிங்காசனத்தில் எளுந்தருளி மகராயர் அரியராயர் பிறதாபருத்திராய திறாயம் புகராய வீரவசந்தராயர் யச்சுதராயர் கிருஷ்ணராயர் யெறதிம்மராயர் வேங்கிடபதிராயர் விருப்பாட்சிராயர் முசுகுந்தராயர் குமாரர் நரசிங்கராய சித்தராயர் சீரங்கராயர் ஓதியுணர்ந்து யுலக முளுதும் ஒரு குடைக்கீழாண்டு வேதவொலியும் விழாவராவீதியும் அந்தஉடமும் யாகசாலையு சைவநெறியுந் தபோதண விளக்கமு மாடமாளிகையும் கூடாகோபுரமுந் தண்ணீர்ப்பந்தலுந் தபன சத்திரமும் யிவைமுதலான பலவித நம்மையும் சந்ததம் நடக்கத் தனிமணி கட்டிப் பதினெட்டாயுதந் தோளில் பெறவேத்தி அல்லவை கடிந்து நல்லவை நாடி காலமெலிய குடிதளைக்கு மகுட மன்மதன் சுகுட சுத்தன் மகுட விருது துஷ்ட நெட்டூரன் கொட்ட கோலாகலன் விகடமிடு மருவலர்கள் மகுடமுடி திருகி விருது கங்காணம் கட்டும் வீரப்பிறாதவன் மும்முறசறையு முத்தமிழ் விநோதன் தவநெறியுள்ளவன் சத்தியவாசகன் சிவநெரி தழைக்கத் திருநீறு மிட்டவன் சொக்கநாதருக்கு முக்கியகுணவான் உச்சிதபோசனன் யச்சுத நாராயணன் மெச்சியபாலன்,

கச்சியிலதிபன் விசுவனாதநாயக்கர், கிஷ்ட்டணப்ப னாயக்கர்,

கஷ்த்தூரிரங்கப்பனாயக்கர், குமாரகிஷ்ட்டணனாயக்கர், வெங்கிடாபதினாயக்கர், முத்துவீரப்பனாயக்கர், திருமலைனாயக்கர் நான் மாடக் கூடலில் மதுரை மானகரில் உரைஊரில் சிராப்பள்ளியில் வீத்திருந்து திக்குவிசையம் பண்ணிச் செங்கோல் செலுத்துனாள்.

தனது ராட்சியமாகிய கொங்கு மண்டலம் நரையநூர் நாடு வஞ்சி லாடபுர சீர்மையிலே வைய்யகாபுரி நாட்டியில்ப் பழனிமலை வேலாயுத சுவாமியார் அதல விதல சுதல நிதல தராதல மகாதல பாதாள லோகமும் பூலோக புவலோகம் 'தவலோக சனலோக சத்தியலோக மகாலோக தெய்வலோக ஆகப் பதினாலு லோகத்துக்கும் சாலோக சாமிபச் சாரூப சாயுட்சிய பதமுஞ் சரிதை கிங்கையோக ஞானமுள்ள சத்தியவாசகன் அசுபதி கெஷபதி நரபதி தனபதி நவகோடி நாராயணன் வங்களர் சிங்களர் சீனகர் ஆரியர் பப்பரர் நெட்டியர் மதங்கர் மாளுவர் மறவர் மலையாளர் கொங்கர் கலிங்கர் கந்ன்னடர் துலுக்கர் துளுவர் மறாடர் குதர் குச்சிலியர் குறவர் மிப்படியகொத்த பேற்களும் ரென்னப்பட்ட பதினெண் பூமியும் ஏளுதீவும் சூள்ந்த நாவல் பெரும்தீவில் நரபதியாகி பூலோகர் புரந்தரன் பூறுவ தெக்ஷணன் வைய்காவூர் நாட்டில் பழனி சீர்மைக்கு அதிபன் திருமலை னாயக்கர் காரியத்துக்குகற்த்தரான சின்னோபனாயக்கர், கோசவ சின்னோபனாயக்கர், கடுப்பலி சின்னோபனாயக்கர், காக்கிவட சின்னோபனாயக்கர், யிம்முடிப் பட்டத்து வேலாயுத சின்னோபனாயக்கர் குமரர் சின்னோபனாயக்கர் பிருதிவிராட்சியம் செய்யிர னாளயில்,

அன்பத்தாறு தேசர்த்தில் யுள்ள வீரமுடிவாளர் அனைவொரும் கூடி பழனி தலத்தில் மடாசிவலையம் உண்டுபண்ண வேணுமென்று பழனி சின்னோபனாயக்கர் தேவராச பண்டியித கயிலாசர் நம்பியார் கண்டிப்பட்டர் நம்பியார் நம்பியார் நல்ல குருக்கள் பாணிபத்திர உடையார் பெரிய விறுமையண்ணபிள்ளை பழனிகவுண்டன் முத்துகவுண்டர் தானம் பரிகலாமமும் பத்தர் வீர முடியாமூர் மடசிவாலையத்துக்கு தாம்புர சாதனபட்டையம் குடுத்தபடி.

கலியுக சகாத்தம் 4584 க்கு மேல் சிலாநின்ற விகாரி வருஷம் தையிமாதம் 15 தேதி சோமவாரமும் பூசநட்செத்திரமும் பெத்த சுவத்தினத்தில் சட்சன்ன சுத்த சிவாசார சம்பன்னரான அகோர வீர மயேசுர வகையில் சிதம்பர உடையார் சிஷ்சன் அலங்கார பண்டாரத்துக்கு மடசிவாலையம் வாயுவுமூலையில் வயிரவன் சன்னதிக்கு தெற்கு மடசிவாலையத்தில் யாதம்மொரு வந்தபேருக்கு உப்பு ஊருகாய் நீரகாரம் சுக்குறவாரக் கட்டளை பணிரெண்டு பேருக்கு சோமவார கட்டளை 12 பேற் அம்மவசிக் கட்டளை 6 பேற் யிந்த படிக்கு அய்யர் நம்மிடா தற்மத்தில் நடத்தி வரும்படிக்கு வீரமுடிவளர் தம்மா சாதன பட்டைய கட்டளை யிட்டோம்.

யிந்தபடிக்கு சேறமண்டலம் சோழமண்டலம் பாண்டிமண்டலம் தொண்டமண்டலம் யின்னாங்கு தேசத்தில் யிருக்கப்பட்ட வீரமுடிவளற் வீர பத்திரசுவாமி வலதுதுடையில் பெறந்த நித்தமல்லிகை ராயன் அஞ்சுமனிக்கு அசையாத கண்டன் தும்பிலும்தூயன் துரையில் திக்கிவளர் ரங்க மன்ன காலிட்டெரி கரை கட்டு யமுக்கி வேட்டுவரை வெட்டும் கன்ன சேமானை செயம்

கொண்டவன் கலிங்கந் திரைகொண்டவன் மங்கையர் மணவாளன் வெள்ளை யானையும் வெள்ளைக் கொடையும் வெட்டு பாவாடையும் உபைய வெஞ்சாமரமும் யிப்படி மகாவிருது பெத்து விக்கள்ளய்னெயும் பிடித்த அவனை உலை தளியும் காலும் தலையும் வீரசஞ்சியாகவு கண்ணமுளி நீலமும் உதிரம் சந்திர காவியும் துடைப் பலகையும் முளங்கால் கொட்டாபிடியாகவும் கைய்யிகாத்து கொம்பும் விரல் நகம் முன்ளு யிடிக்கியும் பாதம் கொம்பும் யிந்த படிக்கு மகாவிருது பெத்த வீரமுடிவாளர் அனைவோரும் அந்தலை நாகமானது அஞ்சுதலையிலு யெரையெடுத்து ஒரு மிடாரில் யெரைக்கினாப் போல நான் யிவன் யென்று சொல்லாமல் குடிக்கு ரெண்டு பணமும் கலியாண வீட்டுக்கு மாப்புளைக்கு ஒரு பணமும் பெண் வீட்டுக்கு ஒரு பணமும் பிள்ளையார் பூசைக்கு அரைப் பணமும் யிந்த மேரைக்கு மண்டலத்தி உள்ளா சாதி உராவின் முரை நம்மிடா சாதி தற்ம்மத்து வற்த்தினை தவராமல் குடுத்து வருவராகவும்.

யிந்த தற்ம்மத்துக்கு யாதமொருத்தர் வாக்கு சகயம் சாரீர சகயம் அற்த்த சகய செய்த பேருகள் பழனியில் சத்த நதியில் தீற்த்தமாடி கயிலாசனாதரை, பெரியனாயகியும், பளனியப்பரையும், வள்ளி தெய்வானையும் சேவித்த பலன் பெருவராகவும். யித்தற்மத்துக்கு எடம் கேடு செய்தவன் கெங்கரையில் கராம் பசுவைக் கொன்ற தோசத்தில் போககடவேராகவும். சிவமயம் உ

# 70. பழனிமலைச் செப்பேடு - 2

இந்தச் செப்பேடு பழனி தேவஸ்தானத்தில் இருக்கிறது. இதன் அச்சிட்ட நகலைக்கொண்டு இங்கே பதிப்பிக்கப்படுகிறது.

பழனிமலை முருகப் பெருமான் உருவம் போகரால் முன்பு ஏற்படுத்தப்பட்டுப் புலிப்பாணி பாத்திர சுவாமியாரால் பூசை செய்யப்பட்டு வந்தது. மதுரை நாயக்கர் தளபதி இராமப்பய்யர் பிராமணர் அல்லாத இவருடைய கையினால் தீர்த்தப் பிரசாதம் வாங்கக் கூடாதென்றெண்ணிக் கொங்கு நாட்டிலுள்ள தலங்கள் ஐந்திலிருந்து 5 குருக்களைக் கொண்டு வந்து பழனியில் பூசை செய்ய ஏற்பாடு செய்தார்.

கொடுமுடி, மருதூர், நாட்டாரப்பன் கோயில், கரூர், கடம்பர் கோயில் (குளித்தலை) ஆகிய இடங்களிலிருந்து சிவாச்சாரியார்கள் வரவழைக்கப்பட்டனர். கொடுமுடி சரஸ்வதி அய்யரைத் தலைமைக் குருக்களாகவும், மற்றவர்களை நம்பிமார்களாகவும் நியமித்தனர். மருதூர் மருதுறையாக இருக்கலாம்.

புலிப்பாணி பாத்திர சுவாமியாருக்கும், பண்டாரங்களுக்கும் ஏற்ற பிற கோயில் பூசைக்குரிய பணிகள் அளிக்கப்பட்டன. புலிப்பாணி பாத்திர சுவாமியாருக்குச் சில கொடைகள் அளிக்கப்பட்டன. இறுதியில் தளவாய் இராமப்பய்யர் முகர் (சீல்) உள்ளது. செப்பேட்டில் குறிக்கப்பெற்ற காலம் (கி. பி. 1477) இராமப்பையர் காலத்திற்கும் முற்பட்ட காலமாகும்.

## மூலம்

ஸ்வஸ்தி ஸ்ரீ ராஜாதிராஜன் ராஜபரமேஸ்வரன் ராஜமார்த்தாண்டன் ராஜகாண்டீபன் ராஜகேசரி ராஜராமகேசரி மன்னர் மண்டலேஸ்வரன் துஷ்ட நிக்ரக சிஷ்டபரிபாலனம் செய்யும் மகுட மன்மத சகுட சுத்த விருதுஷ்ட நிஷ்ட்டூர கோஷ்ட்ட கோலாகலன் விகுடமிடு மருவலர்கள் மகுடமுடி திருகிவிழ விருதுகங்கணம் கட்டும் வீரப்ரதாபன் மும்முறசரையும் முத்தமிழ் வினோதன் தவநெறியுள்ளவன் சத்தியவாசகன் சிவநெறிதனைக்க திருநீறுமிட்டவன் சொக்கநாதருக்கு முக்கியகுணவான் கச்சியிலதிபதியன் உச்சிதபோஜன் அச்சுதஅரியின் மெச்சியபாலன் வங்கிநாராயணன் மருவலர்கள்கண்டன்.

ஸ்ரீமது கச்சி திருமலைநாயக்கரவர்கள் தளவாயாகிய மகாஸ்ரீ ராமப்ப அய்யர் அவர்கள் சாலியவாகன சகாப்தம் 1399 கலியுக சகாப்தம் 4578க்கு மேல் செல்லாநின்ற ஸ்ரீமுக வருஷம் தை மாதம் 16 தேதி பூர்வபக்ஷம் சப்தமியும் ரோகணி நக்ஷத்திரமும் சோமவாரமும் சுபநாமயோகமும் பத்திரவாகரணமும் பெற்ற சுபதினத்தில் தாம்பூரசாசனப் பட்டயம் பிரப்பிவைத்தபடி, தாம்பூர சாசனமாவது ஸ்ரீதெண்டாயுதக் கடவுளாருக்கு அஷ்டபந்தனம் செய்துவைக்கும் முன்னிலைக்கி இந்த ஸ்தலம் போகர் வாடையாய் புலிப்பாணி பாத்திரசுவாமியார் பூஜை செய்து வந்தபடியினாலே இப்போது ராமப்ப அய்யர் அவர்கள் அவர் கையினாலே தீர்த்தப்பிரசாதம் வாங்கக் கூடாதென்று நினைத்து பாளையகாரரும் ராமப்ப அய்யர் அவர்களும் புலிப்பாணி பாத்திர சுவாமிகள் மனது சம்மதப்படுத்தி,

அவருடைய பூஜை மிறாசுக்கு குமாஸ்தாவாக பூசை பரிசாரகத்திற்கும் கொங்கு தேசத்திலிருந்து கொடுமுடி சரஸ்வதி அய்யன் 1, மருதூர் தம்பாவைய்யன் 1, நாட்டாரப்பன் கோவில் சுப்பய்யன் 1, கரூர் முத்தய்யன் 1, கடம்பர் கோவில் அகிலாண்டய்யன் 1 இவர்களை பாளையகாரர் அவர்கள் வரவழைத்து கொடுமுடி சரஸ்வதி அய்யனை குருக்களாகவும், மைத்த நால்வரை பூசை பரிசாரகம் நம்பிமார்களாகவும் நியமித்து பூர்வாபூர்வமாய் தெண்டாயுதக் கடவுளாருக்கு பூஜைகள் செய்து கொண்டு வந்த புலிப்பாணி பாத்திர உடையாருக்கு தெண்டாயுதக் கடவுளாருக்கு அபிஷேகமாகி நம்பிமார்களுக்கு வரப்பட்ட நிர்மால்யம் சொர்ணபுஷ்பங்களில் கால்ப்பங்கு கொடுத்து வரும்படியாயும் மூலஸ்தானமாகிய துர்க்கையம்மன் மரகதலிங்கம் வலம்புரிச்சங்கு முதலாகிய வாலைபுவனை திரிபுரைக்கும் பூசனை செய்துகொண்டு நவராத்திரி பூசையும் செய்து பிரதமை முதல் தசமி வரையில் மூனு பட்டுப்பரிவட்டமும் கட்டிக் கொண்டு தேவதா மரியாதைகளுடன் அம்பு போட்டுகொண்டு வருகிறதும்,

பண்டாரங்கள் இருபத்திநாலு பேர்களும் மாமூல் வழக்கப்படிக்கி திருமஞ்சனம் மாலை சந்தனம் வில்வம் வகையறா பள்ளியறை கட்டியம் ஓதுவார் கந்தப்புராணம் திருப்புகழ் திருவலகு சட்டக்கால் தூபக்கால் பரிவட்டம் துவைக்கிறது கொல்லைச்சேவகம் உபயதிருமஞ்சனம் வகையறா கட்டளை இது முதலானதெல்லாம் என்னென்னைக்கும் மாமூலாய் பண்டாரங்களைப் பணிவிடை செய்துகொண்டு வரும்படியாய் கட்டளை யிட்டிருக்கிறோம். பூர்வாபூர்வமாய் இந்தஸ்தலம் புலிப்பாணி பாத்திர உடையாரைச் சார்ந்தது. சிவபிராமணாள் ஐந்து பேர்களுக்கும் இது காரணஸ்தலமானபடியால் வாலநம்பி, விருமநம்பி, விசயநம்பி, கோசலநம்பி என்று நாமகரணமிட்டு கொடுமுடி சரஸ்வதி அய்யனை கலஸ்தாபிதம் ஸ்தவறாஜ பண்டிதர் என்றும் காரணப் பெயரிட்டு காயாசம் பஞ்சகொத்து தாவடமும் கொடுத்து நன்மை தின்மைகளில் புலிப்பாணி பாத்திரஉடையார் ஆதீனத்துக்கு நடக்கிற ஆறுகால்பீடம் அபிஷேக மரியாதைகளில் சில மரியாதையும் கொடுமுடிக் குருக்களுக்குக் கொடுத்து,

சுவாமி காரியங்களில் யாதொரு விச்சின்னம் வராதபடிக்கு புலிப்பாணி பாத்திர உடையாருக்கு முன்பாக பண்டாரங்களையும் நம்பிமார்களையும் வரவளைத்து நம்பிக்கை வாங்கிக்கொடுத்து இவர்களுக்கும் கோவில்

வேலைக்காரர்களுக்கும் புலிப்பாணி பாத்திரஉடையாரை மேல் விசாரணை செய்து கொண்டு வரும் படிக்கும் சுவாமி நிவேதனம் புண்யாவாசனம் பிறாமணாளைக்கொண்டு செய்துவரும் படியாயும் நவறாத்திரி பூஜைக்காக புலிப்பாணி பாத்திரஉடையாருக்கு இருபத்திநாலு பொன்னும் பனிரண்டு சலகை நெல்லும் அதற்கு வேண்டிய ஜாமான்களும் கோவிலில் இருந்து கொடுத்து வரும்படியும் திட்டம் செய்திருக்கிறோம். மலைக்கோவிலில் அம்மனுக்கு சாத்துப்படிக்கு பரிவட்டமும், ஊர்க்கோவிலில் அம்மனுக்கு சாத்துப்படிக்கு பாவாடை பட்டுகள் அஸ்மானகிரி குத்துவிளக்கு சரவிளக்கு மணி தட்டம் தீபமுஸ்திதிகள் கொடுத்து அம்புபோட்ட பிறகு வாங்கிக்கொள்ளுகிறது. இந்தப்பிரகாரம் எண்ணெண்ணைக்கும் சந்திராள் சூரியாள் கல்லுங்காவேரி புல்லும் பூமியும் உள்ள வரைக்கும் நடந்து வரும்படியாய் கட்டளையிட்டிருக்கிறோம்.

இந்த தர்மத்திற்கு யாதாமொருவர் வாக்குச் சகாயம் மனச்சகாயம் சரீர சகாயம் அர்த்த சகாயம் பண்ணின பேர்களுக்கு காசியில் கெங்கைக்கரையிலே கோடி சிவலிங்க பிரதிஷ்டை பண்ணின பூசாபலத்தைப் பெருவார்களாகவும். இதற்கு விகாதம் பண்ணின பேர்கள் கெங்கைக்கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்தில் போவார்களாகவும். இந்தப்படிக்கு எழுதின நண்மை பழனியில் கந்தசாமி ஆசாரி. இந்தப்படிக்கு மகாஸ்ரீ தளவாய் ராமப்ப அய்யர் அவர்கள் முகர்.

# 71. பழனிமலைச் செப்பேடு - 3

இச் செப்பேட்டை மைய அரசுத் தொல்பொருள் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் படி எடுத்துள்ளனர்.*

புதுக்கோட்டையை ஆட்சிபுரிந்த விஜய ரகுநாதத் தொண்டைமான் பழனியில் ஒருமடம் கட்டி அதில் பல்வேறு அறச்செயல்கள் நடைபெற அளித்த கொடைகளை இச்செப்பேடு விளக்குகிறது.

முதற்கண் கவிதையில் தொடங்கும் இச் செப்பேடு முருகன் புகழ், உலகத் தோற்றம், அரசர் பெருமை இவைகளை உயர்வு நவிற்சியுடன் கூறுகிறது.

1766 ஆம் ஆண்டு சனவரி மாதம் பழனியில் உள்ள பாளையக்காரர், உயர் அலுவலர்கள், கோயில் நிர்வாகிகள் முன்னிலையில் மல்லிகார்ச்சுன உடையார் மகன் சுப்பிரமணிய உடையார் என்பவருக்குச் செப்பேடு அளிக்கப்படுகிறது. பல்வேறு திருவிழாக்களில் மடத்தில் செய்ய வேண்டிய பணிகள் விவரிக்கப்படுகின்றன. வையாபுரி ஏந்தல் என்னும் ஊர் மடத்திற்குக் கொடையாக அளிக்கப்படுகிறது.

மகேசுவர பூசை அளிப்பதுடன், தண்ணீர்ப்பந்தல் ஏற்படுத்தி உப்பு, ஊறுகாய், நீராகாரம் அளிக்கப்படுகிறது. பிள்ளைக்குப்பால், தலைக்கு எண்ணெய் இலவசமாக அளிக்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டது. டபீர் வெங்கட்டராயருக்கு இவைகளைக் குறைவற நிறைவேற்ற ஆணை வழங்கப்பட்டது.

## மூலம்

**கணபதி துணை.**

வையக நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய வன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்றழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே,

---

* *ARE (A) 22 of 1918.*

கருணைபொழி திருமுகங்க ளாறும் வாழி
கரகமல பன்னிருகை வேலும் வாழி
இருசரண மென்றலைமே னாளு மோங்க
விந்துரவிக் கப்பாலு மினிது வாழி
அருள்பரவி அமரர்சிறை மீட்டே யாண்ட
வாறிரண்டு திருநயனத் தழகும் வாழி
மருவணிபைங் கடப்பந்தார் மார்பும் வாழி
மயில்பரிசே வற்கொடியும் வாழி வாழி.

அடைந்தவர் துணைவா வாழி அடியவர்க் கெளியாய் வாழி
மடந்தைதன் மைந்தா வாழி மாதவன் மருகா வாழி
திடம்புனை வேலா வாழி தேவரா ருயிரே வாழி
படந்தபோ ரசுரர் கூற்றம் பரமனே வாழி வாழி.

ஸ்ரீபுவனதகன் பரமேசுவர குமாரன். அமரர் சிறை மீட்ட தேவாதி தேவன். தெய்வலோக நாயகன். கோன்தனைச் சரசமாடி குட்டிக் குடிமியை நெட்டைப் போக்கிகோல் பிரமபதங் கொடுத்த குமார கம்பீரன். கொக்காரவறையாளி. கொற்ற றாவுத்தன். வக்கிரமிடும் அசுரேசர் வட்ட நீரொப்ப உக்கிர மயிலேறி வரு முத்தண்ட தீரன். பக்கரைப் பகட்டரக்கர் பட்டிடக் களத்தில் கொக்கரித் துடல் கிழித்த குக்குடக் கொடிக் குமரன். கூளி கொட்டக் கூகை பசாசுகள் தொக்க நிறத்த தளமொற்ற சூரன் மாளுவதற்கு வடவனல் போலெழுந்த வடிவேலெடுத்த செங்க திரன். அசுர கொலைகாரன். அமராபதி காவலன். தோடு செறி காதினன். தோகை மயில்வாகனன். சீதரன் திருமருகன்.

சிவசுப்பிரமணியன். சண்டப் பிரசண்டன். வண்டர்க்கொரு மிண்டன். ஆறாறு நூறு அஸ்ட்டமங்கல யாவினங்குடி பழனிக் கதிபன். பன்றிமலை பூம்பறை பழநிமலை காவலன். இடும்பமலை யென்குற பளனியிலங்கும் வைகாவூர் நாட்டுக் கதிபன். பத்திப்பிரியன். பக்தவற்சலன். பன்றிமலை முதற் பல பூதரத்துமும் தேன்பொழி சோலை சிவகிரியி லுறைவோன். பார்வதி புத்திர சுவசுத கண கணபதி விக்கின வினாயக தேவசகோதரன். எல்லாத் தேவர்க்கு வல்லவன். ஸ்ரீபழநிமலை வேலாயுத சுவாமியார் திருவுளப்படிக்கி வீரவாகுதேவர் குனிப்பாடல் அகிலண்டமுஞ் செலவழிந்து மற்றண்டமுஞ் சண்டவங்கிகொண் டுலகினும் பரும்பத மிறந்துபோ யொருவன் னறியேயொழியம்ந்த நாள் மிலரயன் சீரங்கர் கயாலமாய மாலவன் சடஞ்சூலமீது கொண்டிலகு சிங்கவாள் தலைவனென கையால் இடமதாகவே நடமதாடினார். அனந்தன் அற்புதன் தமந்தன் தரிசன தண்டியன் பின்னியன் பின்னாகன் ஐதன் மைதன் மணியன் மணியாரணன் விசுவாசன் வுசுக்கிராஜன் அலங்கிருதன் கிரேதன் திரேதன் துவாபுரன் கலியுகன் ஆக யுகம் பதினெட்டுக்கு மேல் ஆகாயமே சம்புவாகி ஆகாயமே பொருளாகிநின்றபடியினாலே,

பராபரமாகிய பரமேஸ்வரன் தார்நலம் படைத்தாளிணைந்தருளி அனந்தனென்னும் யுகத்திலே ஆகாயத்திலே வாயு பிறந்து, வாயுவில் அக்கினி பிறந்து, அக்கினியில் அப்புப் பிறந்து, அப்புவில் பிர்திவி பிறந்து, பிர்திவியாகிய

பூலோகத்திலே ஸ்வர்க்காதி லோகமாகியி மகாமேரு தோன்றி, மகாமேருவின்மேல் பரமாகாயம் தோன்றி, பரமாகாயத்தினால் பஞ்சமுகந் தோன்றியது. இதற்க்கு வேதஞ் சாட்சி. சத்தியோசாத முகமாவது பிரதிவி. இதற்கு தெய்வம் பிரமதேவன். வாமதேவ முகமாவது அப்பு. இதற்கு தெய்வம் விஷ்ணு. அகோர முகமாவது தேயு. இதற்கு தெய்வம் உருத்திரன். தற்புருட முகமாவது ஆகாயம். இதற்கு தெய்வம் மயேஸ்வரன். ஈஸ்வர முகமாவது ஆகாயம். இதற்கு தெய்வம் சதாசிவம்.

இனி பஞ்சவருணமாவது பிரமா சிவப்பு வருணம், விஷ்ணு பச்சைநீல வருணம், உருத்திரன் மாணிக்க வருணம்,மயேஸ்வரன் புகை வருணம், சதாசிவன் பவழ வருணம். இதற்கு சாட்சி திருமந்திர மாலிகையென்றறியவும், அனந்தனென்னும் யுகத்திலே ஆதி நாராயணன் பிறந்தான். அற்புதனென்னும் யுகத்திலே ஆதிநாராயணனாலே பிரமா பிறந்தான். பிரமாவினாலே வேதங்கள் பிறந்தன தாரிசனென்னும் யுகத்திலே தமந்தனென்னும் யுகத்திலே வேதங்களாலே தேவேந்திரன் பிறந்தான். தன்மயனென்னும் யுகத்திலே தேவேந்திரனாலே சந்திரா சூரியர்கள் பிறந்தார்கள். பின்னியனென்னும் யுகத்திலே சந்திரர் சூரியர்களாலே நவக்கிரகாதிகள் பிறந்தார்கள். பின்னாயனென்னும் யுகத்திலே நவக்கிரகாதிகளாலே சப்த்த மேகங்கள் பிறந்தன. ஐதனென்னும் யுகத்திலே சப்த்த மேகங்களாலே நவமேகங்கள் பிறந்தன. நவ மேகங்களாலே மழை பிறந்தது. மைதனெனும் யுகத்திலே மழையினாலே பதினெட்டுவகைத் தானியங்களும் பிறந்தன. பதினெட்டுவகைத் தானியங்களாலே யா்னை முதல் எறும்பீறாக எண்பத்துநான்கு ஜீவ ஜந்துக்கள் பிறந்தன. மணியனென்னும் யுகத்திலே பிரம்ம க்ஷத்திரிய வைஸ்ய சூத்திரரென்னும் நான்கு சாதிகளும் பிறந்தன. ஆதிருத்திரனே பிராமணன் விஷ்ணுவே க்ஷத்திரியன் பிரமாவே வசியன் தேவேந்திரனே சூத்திரன் மணியாரணனென்னும் யுகத்திலே பதினெட்டு வகைத் தானியங்களாலே பதினெட்டுச் சாதிமுகம் பிறந்தது.

ஆகையினாலே இவைகளுக்குப் போக போக்கியங்களை அறிவிக்க ஆறு தரிசனம் உற்பவித்து இந்த ஆறு தரிசனமும் எப்படியெனில், சுப்பிரமணியசுவாமி ஆறு முகங்களுக்குந் திருமேனியொன்றாய் நின்ற தமைபோல் இந்த ஆறு தரிசனங்களாலே தீர்த்தங்கள் பிறந்தன. விசுவாசனென்னும் யுகத்திலே தீர்த்தங்களி னாலே தர்க்கங்கள் பிறந்தன வசுக்கிறாதனென்னும் யுகத்திலே புண்ணிய பாவங் களினாலே தானதருமங்கள் பிறந்தன. திரேதனென்னும் யுகத்திலே போக போக்கியங் களினாலே சுக துக்கங்கள் பிறந்தன. துவாபுரனென்னும் யுகத்திலே சுக துக்கங் களினாலே ஜனன மரணமுண்டாயிற்று. கலியுகனென்னும் யுகத்திலே ஜனன மரணங் களினாலே சத்தியாசத்திய முண்டாயிற்று. சத்தியாசத்திய முண்டாகிய பூலோகத்துக கதிபதியாகிய ராஜாதிராஜன் ராஜபரமேஸ்வரன் ராஜமாத்தண்டன் ராஜ கெம்பீரன ராஜகுலோத்துங்கன் ராஜராஜேந்திரனாகிய தரணி விளங்குவன் விருது கட்டாரிச் சாளுவராயன் மரவு காவலன் அசுபதி கெஜபதி நரபதி நவகோடி நாராயணன் வங்களர் சிங்களர் சீனகர் சோனகர் ஆரியர்ப் பப்பரர் ஓட்டியர் மதங்கர் மாளுவர் மறவர் மலையாளர் கொங்கர் கலிங்கர் கர்நாடர் துலுக்கர் மராட்டியர் மராடர் என்னபட்ட பதினெந் பூமியும் ஏழு தீவும் சூழ்ந்த நரலோகப் பெருந்தீவின் நரபதியாகிய பூலோகபுரந்தரன் பூருவ பக்ஷிம தக்ஷண உத்தர சப்த்த சமுத்திர உத்தம நிலத்தில்,

ஸ்ரீவீர சிம்மாசனத்தில் எழுபத்தேழு பாளையமுங் கொண்டு துலுக்காணியமுங் கொண்டு தொலையாத கம்பம் போட்டு துவ்ஷ்ட நிக்கிரக சிட்ட பரிபாலனமுஞ் செய்து ஸ்ரீவிஜைய நகரத்தில் பிராதாபேஸ்வரனாகிய வீரசிம்மாசனத்திலெழுந்தருளி மகாராசஸ்ரீ புக்காராயர், பிரபுடதேவமகாராயர், ஹரிசிங்கு சாம்புவராயர், கபுலேஸ்வரராயர், டில்லீஸ்வரராயர், ராமபாணராயர், நரசிங்கராயர், வீரவசந்தராயர், புருஷோத்தமராயர், மல்லிகார்ஜுனராயர், மகாதேவராயர், ஸ்ரீரெங்கதேவராயர், ஆனைகொந்தி வேங்கிடபதிராயர், ஸ்ரீராமராயர், எறதிம்மராயர், சிக்கராயர் இவர்கள் பிர்திவிராச்சிய பரிபாலனம் பண்ணி அருளா நின்று ஓதியுணர்ந்து உலகமுழுதுமோர் குடைக்கீழாண்டு வேதவொலியும் விழாபுர வீதியும் அந்தணர் கூட்டமும் ஆகம சாலையும் சைவ நெறியும் தபோதனர் விலாசமும் அமைத்து இது முதலான பலவித நன்மையும் அசையா மணிகட்டி பதினெண் ஆயுதத் தொழில் நிறைவேற்றி அல்லவை கடிந்து நல்லவை நாட்டி அறிவையறிந்து காவலன் மெலியக் குடிகள் தழைப்ப செங்கோல் செலுத்தி அறத்திற்கு தர்மரைப் போலவும், தளத்தில் இராமரைப் போவும், வில்லுக்கு விசையனைப் போலவும், மல்லுக்கு பீமனைப் போலவும், பரிக்கு நகுலனைப் போலவும், கரிக்கு தேவேந்திரனைப் போலவும், கொடைக்குக் கர்ணனைப் போலவும், சாஸ்திரத்திற்கு சகாதேவனைப் போலவும், அழகில் அனங்கனைப் போலவும், பொருமைக்குப் பூமாதேவியைப் போலவும்,

இப்படிக்கு துஸ்ட்ட நிக்கரகம் சிஸ்ட்ட பரிபாலினஞ்செய்து அருபத்திநாலு கிரி துருக்கத்திற்கும், அன்பத்தாரு வன துருக்கத்திற்கும், முப்பத்தாறு ஜல துருக்கத்திற்கும், இருநூற்றிருபத்து நான்கு கணவாய்க்கும், முப்பத்திரண்டு மன்னியருக்கும், எழுபத்திரண்டு பாளையக்காரருக்கும் அதிபதியாகி பிரதிவிராச்சியபரிபாலினஞ் செய்து அருளாநின்ற காலத்தில் ராய ராணுவ காரியத்திற்கு கத்தராகிய மகுட மன்மத சுகுட சுத்தரன் வீர துஸ்ட்ட நெட்டூர கோலாலே விகடமிடு மறுவலர்கள் மகுடமுடி நிறுகுரண வீர தீர வகோரமும் மூந் சொல்லிய முத்தமிழ் வினோதன் தவநெறியுள்ளவன் சத்திய வாசகன் சிவநெறி தழைப்ப திருநீறுமிட்டவன் உச்சித போஜன் கச்சியிலதிபன் நாயக்கர், விசுவப்ப நாயக்கர், குமார கிருஷ்ணப்ப நாயக்கர், முத்துக் கிருஷ்ணம நாயக்கர், கஸ்தூரி றெங்கப்ப நாயக்கர், முத்துரெகு நாயக்கர், திருநாம கிஷ்ணப்ப நாயக்கர், முத்துக் கிருஷ்ன நாயக்கர், முத்துவீரகிருஷ்ணம நாயக்கர், முத்து ரெகு நாத கிருஷ்ணப்ப நாயக்கர், வீர கிருஷ்ணப்ப நாயக்கர், திருமலை நாயக்கர் நான்மாடக் கூடலில் வீற்றிருந்தருளி விஜய செங்கோல் செலுத்து நாளில்,

ஆறிலொன்று கடமைக்கொண்டு அருள் பெருக வன்பு கூர்ந்து முப்பத்திரண்டறங்களும் வழுவாது நடாத்தி வராநின்ற சுபஸ்ரீமன் விஜயாப்புத சாலிவாகன சகாப்த்தம் 1687 கலியுக சகாப்த்தம் 4866ல் நிகழாநின்ற பார்த்திப வருசம் தை மாதம் 4 தேதி சுக்கிர வாரமுஞ் சுக்கில பக்ஷ பஞ்சமியும் உத்தர நக்ஷத்திரமு அமுர்தயோகமு பாலவாகரணமு கூடிய சுபதினத்தில் வைகாவூர் நாட்டு ஷன்முக நதி தீரவாசமாகிய பழநிமலைமீதாறுகாலமும் பூசை கொண்டருளிய சொருப் பரிபூரணச் சச்சிதாநந்த பரப்பிரம மூர்த்தியாகிய பாலசுப்பிரமணிய சுவாமியின் சன்னதி முன்பதாய் ஸ்தானீகம் சின்னோப நாயக்கர், வேலத் தவராஜ

பண்டிதர், பழநியப்ப நம்பியார், அறம் வளர்த்த நம்பிள்ளை, புலிப்பாணிப் பாத்திரவுடையந், பழநிவேல்க் கவுண்டர், ஸ்தலத்துக் கணக்கு பிருமையண்ண பிள்ளை மற்று முண்டாகிய ஸ்தானம் பரிகலத்தார் முன்னிலையில் ராஜாதிராஜன் ராஜபரமேஸ்வரன் ராஜமாத்தாண்டன் ராஜகோடரி ராஜகுலாதித்தன் ராஜகெம்பீரன் ராஜராஜேந்திர விந்திரகுல திலகன் ஐராவதாரோகணப் பிரதாப கேசரி வாகைமாலிகைப் புயாசலன் புலிப் பதாகைக் கராம்புயன் பூலோக வீராக்ஷசன் மறுமன்னிய கண்டன் சோளவளநாடு வராகாரண்ய வளநாடு வடவனங்காட்டதிபன். அன்பு நாடாள்வான் என்னுங் கனவிருது கட்டாரிச் சாளுவராயன். விருதரசர் வீரகண்டாமணி காழவோன் ஆயிரங் கோத்திரவாண்மைகள் மிகுந்த புஜபல துரங்கன் மதுர நாடாளும்,

ஸ்ரீராய விஜய ரெகுநாத தொண்டைமானாரவர்கள் பழநிச் சேத்திரவாசியான புலித்தோல் மல்லிகாச்சன உடையார் குமாரன் சுப்பிரமணிய உடையாருக்கு எழுதுவித்துக் கொடுத்த தாம்பிரசாசன மியாதெனில் வீரபழனிமலை வேலாயுதசுவாமி சந்நிதானத்தில் இகபர சாதகள்த்தமா யனுஷ்டித்துவரும் விசேஷ திருவிழா 3 துரோஜண முதல் 10 நாளைக்கும் நாடோறும் 12 பேர் விழுக்காடு நாள் 10ந்திருவிழா 340 பேர்களுக்கு மஹேஸ்வர பூசை நடப்பிவிப்பதற்கு அமுதுபடி விலை ராஜகோபாலி பணம் 10, காருஷ்மற செலவு ராஜகோபாலி பொன் 4 தண்ணீர்ப்பந்தல் நீர்மோர் உப்பு ஊறுகாய் 32 பிள்ளைப்பால் தலைக்கெண்ணெய் ராஜகோபாலி பொன் 4, ஆடை 2 க்கு நம்மிட ஆஸ்தானத்திலிருந்து கொடுப்புவித்து நடப்பிவித்துக்கொள்வதற்கு சிவகிரிக் கெழுந்துவருகிற கீழ்வீதியில் உத்தர பாரிசத்தில் உண்டாக்கிய மடவாலய தர்மத்துக்கு நீர் இடங்கொடுத்ததற்கும் மேற்படி தர்மபரிபாலன நிருவாகத்திற்குமாக பிரதி பிரயோஜனமாய் நமது சமஸ்தானத்திலுள்ள நீர்ப் பழனிவடம் உபக்கிராமம் காரைப்பட்டியைச் சாந்த வைகாபுரியேந்தல் மூலம் நன்செயில் செய் 14 வதுக்கு அடுத்த அமரபத்துப் புதுவயலில் குழி 1000 செய் 2 க்கு தனிச்சீரான் கொல்லையில் அறுகல விதைப்பாடும் டபீர் வெங்கட்ட ராயருக்கு சமூகத்திலிருந்து நிஜ உத்தரவு கொடுத்து உமக்கு மானியமாக ஜாரி செய்திருப்பதால்,

இது முதல் சந்திராதித்தான் உள்ளபரியந்தம் மேற்படி தர்மபரிபாலினையைப் பார்த்து மேல்கண்ட மான்ய நன்செய் புன்செய் நிலங்களை நீரும் உம்மிட புத்திர பௌத்திராளும் பாரம்பரையாய் ஆண்டனுபவித்துக்கொண்டு வருவீர் களாகவுமென்று இந்த தாம்புர சாசனப் பட்டயம் உண்டுசெய்து குடுத்தோம். இந்த தர்மத்துக்கு யாதாமொருவன் இடங்கேடு செய்தால் கெங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலும் மாதா பிதா குருவைக்கொன்ற தோஷத்திலும் மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை மூன்றையும் இழந்த யோகீஸ்வரரைக் கொன்ற தோஷத்திலும் போவாராகவும். இந்தப் பாதகங்களுக்குட் படாமலவர்க்கு வாக்கு சகாயம் அர்த்த சகாயம் சரீர சகாயம் செய்த பேர்கள் தன கன வஸ்து வாகனங்களும் புத்திர பௌத்திர களத்திராதிகளும் அஷ்டைஸ்வரியங்களையும் பெற்று இகபர சாதகத்தை யடையும்படி ஸ்ரீ வேலாயுத சுவாமி அனுக்கிரகிப்பார். சிவமயம் உ.

# 72. கிணத்துக்கடவுச் செப்பேடு - 1

கோவைகிழார் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களால் அளிக்கப்பெற்று மைய அரசு தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் இச்செப்பேட்டைப் படி எடுத்துள்ளனர்.*

மைசூர் அரசர் கிருஷ்ணராச உடையாரய்யன் அவர்கள் காலத்தில் காரியத்துக்குக் கர்த்தராக விளங்கிக் கோயமுத்தூர் அட்டவணை, கந்தாசாரம் சுங்கம், பேரம் இவைகளைக் கவனித்து வந்த குறிக்கார மாதய்யன் அவர்கள் கிணத்துக்கடவு பொன்மலை வேலாயுத சுவாமியார் படித்தரத்திற்கு விட்ட கொடையை இச்செப்பேடு விளக்குகிறது.

பெரிய களந்தை கிராமத்தைச் சேர்ந்த காட்டம்பட்டியில் திருத்திய நிலத்தில் 50 வள்ளம் கொடையாகக் கொடுக்கப்பட்டது (200 ஏக்கர்). நிலத்தில் எந்தப் பயிர் விளைந்தாலும் கோயில் தீபாராதனைக்கும் படித்தரத்திற்கும் கொடுக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டது.

அதிகாரிகளும் பொதுமக்களும் கையெழுத்திட்டுள்ளனர். இச்செப்பேட்டின் காலம் 3. 12. 1761.

## மூலம்

சுபமஸ்து சொஸ்திஸ்ரீமன் சாலிவாகன சகாப்தம் 1683 கலியுக சகாப்தம் 4890க்கு மேல் செல்லாநின்ற விஷு வருஷம் கார்த்திக மாதம் 22 தேதி குரு வாரமும் சத்தமியும் அவிட்டா நட்செத்திரமும் வுருழணனாம யோகமும் மகா சைவாகரணமும் பெற்ற சுபதினத்தில் ஸ்ரீமன் மகாமண்டலீசுரன் ஸ்ரீமன் ராசாதிராச ராசபரமேசுர ராசமார்த்தாண்ட ராசகெம்பீர பிறவுட பிறதாப அப்பிறதி மையிசூர் விரநரபதி ஆழிதமகா சுவாமி கிழ்ட்டண ராசுடையரைய்யநவர்கழ் ஸ்ரீரங்க பட்டணத்தில் ரற்றின சிம்மாசன ரூடராகி சுகத்தில் பிறிதிவி சாம்பிராச்சியம் யிவர்கழ் காரியத்துக்கு கற்த்தாவான கோயம்முத்தூரு அட்டவணை கந்தாசாரம் சுங்கம் பேரம் தேவஸ்தான முதலான

---

* ARE (A) 16 of 1925. பின்னர் இதே செப்பேட்டைப் பொள்ளாச்சி தாசில்தார் மூலமாகவும் பெற்றுப் படி எடுத்து அறிக்கையிலும் வெளியிட்டுள்ளனர். ARE (A) 12 of 1937.

சகல அதிகாரமும் செய்கின்ற குறிக்கார மாதையரவர்கழ்

புருகை பூமியில் கிணத்துக்கடவு பொன்மலை வேலாயுத சுவாமியார் படித்தரந் திருவாராதனை நடந்து வருகிறபடிக்கு தாம்பர சாசனப் பட்டயம் எழுதிக் குடுத்த விவரம். கோயமுத்தூருக்கே சேந்த கிணத்துக்கடவு சீமையில் பெரிய கழந்தைக்கு சேந்த காட்டம்பட்டி கிறாமத்தில் ஊருக்கு கிழக்கு, தென்சேரி எல்லைக்கு மேற்கு, வாகத்தொழு எல்லைக்கு வடக்கு, விடத்தோர் தொக்கடவுக்கும் நகர கழந்தைக்கும் தெற்கு அனாதித் தரு சிய செடி வெட்டி பயிர் செய்த காட்டுக்கு பயிர் வள்ளம் 1க்கு பணம் 1, புலவள்ளம் 4க்கு பணம் 2, இந்த மேரைக்கு விட்ட காடு வள்ளம் 50.

இந்த 50 வள்ள காட்டுக்கும் உண்டான கந்தாயம் கிணத்துக்கடவு அட்டவணை அரைத்தரத்துக்கு தேவதானத்தார் கந்தாயம் செலுத்திவிச்சு குடுத்துக்கொண்டு இந்த அன்பது வள்ளப் பூமியில் எந்த பயிர் செய்தாலும் அந்த பலபத்தாயமெல்லாம் பொன்மலை வேலாயுத சுவாமியாருக்கு படித்தர தீபராதனை நடந்துவருகிற படிக்கும் மதிச்சு எழுதிக் குடுத்த பட்டயம். இந்த அன்பது வள்ள பூமிக்கும் எச்சிகை கால்வாசி ரூபாய் பரிவட்டம் ஒன்றுக்குங் காரணமில்லை.

இந்த தற்மத்துக்கு எந்த காலத்தில் யாதாமொருத்தனாகிலும் விகாதம் பண்ணினதேயானால் அவன் காசியில் கோஅத்தி விறுமத்தி ஸ்ரீஅத்தி சிசுஅத்தி சுராபாண சொன்னயானெயம் குருநிந்தனை குபனம் முதலான பஞ்சமா பாதகங்களை செய்தவன் பாவத்துக்கு போக. இந்த தற்மத்தை பரிபாலினம் செய்த பேர்கழ் காசியில் சிவபிரதிட்டை அன்னதானம் கோதானம் பூதானம் வஸ்திரதானம் கன்னிகாதானம் முதலான சோடச மகா தானங்கழ் செய்தவன் புண்ணியத்தை அடைந்து புத்திர பவித்திர பரம்பரியாகத் திவிருக்க வுள்ளவர்கழென்று,

இந்தப்படிக்கு சம்மதிச்சு பராபத்தியம் திருப்பணி சேனபாக வய்யனையன் சொக்கலிங்கம் மகன் . . . . . . . சவுந்தரபாண்டி சிவக்கொழுந்து, குடியானபேரில் . . சின்னக் கவுண்டன், மல்லப்ப கவுண்டன், பழனிமலைக் கவுண்டன், பெரியதம்பிக் கவுண்டன், நல்லிட்டிக்கவுண்டன், . . . பொன்மலைக் கவுண்டன். எழுதினபடி சவுந்திர பண்டிதன். கநகாசலமூர்த்தி துணை.

# 73. கிணத்துக்கடவுச் செப்பேடு - 2

கோவைகிழார் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களால் அளிக்கப்பெற்று மைய அரசு தொல்லியல் அளவைத் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் இச்செப்பேட்டைப் படி எடுத்துள்ளனர்.*

மைசூர் அரசர் சாமராஜ உடையார் காலத்தில் விசாரணை அதிகாரியாக விளங்கியவர் சிக்கயராசாவய்யன். அவர் காலத்தில் கோயமுத்தூரில் மைசூர் அரசரின் காரியத்துக்குக் கர்த்தாவாக விளங்கியவர் குமார தேவப்பய்யர் என்பவர்.

அவர்காலத்தில் வாரக்க நாட்டுக் கிணத்துக்கடவு பொன்மலை வேலாயுத சுவாமியாருக்கு நான்கு திசை ஐம்பத்தாறு தேசத்துப் பலராகிய வணிகர்களும் பட்டக்காரர்களும் மகமை நிர்ணயம் செய்து வேலாயுத சுவாமிக்குக் கொடை கொடுத்தனர். இதன் காலம் 22. 6. 1733 ஆகும்.

சவுளி, புகையிலை, பாக்கு, மிளகு, சந்தனம் போன்ற பொருள்களின் விற்பனையில் குறிப்பிட்ட பகுதியைக் கோயிலுக்கு அளிக்க ஒப்புக்கொண்டு இச்செப்பேட்டை வெட்டித் தந்துள்ளனர்.

பரதேசி முத்திரை பெற்ற திருவாவடுதுறை ஆதீனம் பண்டார சன்னதி அவர்கள் இதனை மேற்பார்வை செய்து விசாரணை செய்து கவனித்து வர ஏற்பாடு செய்யப்பட்டது. அக்காலத்தில் பேரூர்க் கோயில் திருவாவடுதுறை ஆதீன நிர்வாகத்தில் * இருந்ததால் கிணத்துக்கடவு மானியமும் அவர்கள் மேற்பார்வையின்கீழ் வந்தது.

மூலம்

ஆறுமுகந் துணை.

சொஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுரன் ஆரியர்தள விபாடன் ஆரியர் மோகந்

---

* 1) *ARE 17 (A) of 1925.* பின்னர் இதே செப்பேட்டைப் பொள்ளாச்சி தாசில்தார் மூலமாகவும் பெற்றுப் படி எடுத்து அறிக்கையிலும் வெளியிட்டுள்ளனர். *ARE (A) 13 of 1937.*

தவிள்த்தான் ஆறிலொன்று கடமை கொண்டு அருள் பெருகி அன்புகூர்ந்து ஆதுலர் சாலையும் அந்தணர் வேள்வியும் வேதவொலியும் விழாவறா வீதியுந் தபோதனர் மடங்களுந் தரும சாலையு மிச்சயில் முப்பத்திரண்டறம் விழங்கி யெம்மண்டலமுந் திறைகொண்டருளிய ராசாதிராசன் கடல் கலங்கினுங் காவேரி வற்றினும் மலை குலிங்கினும் மனங்கலங்காத கண்டன் நரபதி அசுபதி கெசபதி தனபதியாகிய சீரங்கராயர் பிறவிடதேவராயரான கெண்டி வீரநரசராசஉடையார் மைசூர் சிம்மாசனபதியாகிய சாமராச உடையாரய்யனவர்கள் காரியத்துக்கு விசாறணை கர்த்தராகிய சிக்கயராசாவையனவர்கள் காரியத்துக்குக் கர்த்தராகிய குமார தேவப்பய்யனவர்கள் கோயம்புத்தூர்ச் சீர்மை ராச்சிய பரிபாலனஞ் செய்கின்ற னாளையில்,

சாலிவாகன கலியுக சகார்த்தம் 4834 யிதில் சாலிவாகன சகார்த்தம் 1655 க்கு மேல் செல்லாநின்ற பிறமாதீச வருஷம் ஆனி மாதம் 23ம் தேதி சுக்கிர வாரமும் சத்தமியும் உத்திரட்டாதி நட்ச்செத்திரமும் பெற்ற சுபதினத்தில் வாரக்க னாட்டில் கிணத்துக்கடவு பொன்மலை வேலாயுதசுவாமியாருக்கு மகமை உண்டுசெய்து தற்மம் நடக்க வேண்டிய கோயம்புத்தூரில் கூடிய நான்கு திசை அன்பத்தாறு தேசத்துப் பலரும் பட்டக்காறரும் கூடி மகமை தாம்பிற சாதனபட்டயம் எழுதி குடுத்த விபரம்.

சவளி னூல் புகயிலை பாக்கு மிளகு சந்தனகட்டை யிந்த பொதியள் நிச பொதியளுக்கு பொதி 1க்கு பணம் 1/4, மற்ற பல சரக்கு சிலவன பொதியமுக்கு பட்டியார் மகமை தீருகிற மேரைக்கு தீர்வை தீர்ந்துகொள்ள சொல்லி நாங்கள் நான்கு திசை அன்பத்தாறு தேசத்துப் பலருங் கூடி மகமை பட்டயம் எழுதிக்கொடுத்தோம். இந்த தற்மம் சந்திராதித்தர் உள்ளவரைக்கும் பரிபாலனஞ் செய்துகொண்டு யிந்த பொன்மலை வேலாயுத சுவாமியாருக்கு நித்திய கட்டளை அபிஷேக நெய்வேத்தியம் அலங்காரம் சிறப்பு மென்மேலும் சிரேயசாய் நடத்திவிச்சுக் கொண்டு வரவும். யிந்த தர்மத்துக்கு யாதாமொருத்தர் விகாதம் பண்ணின பேர்கள் கெங்கைக் கரையிலே காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலே போகக் கடவராகவும். யிந்த தற்மத்தை பரிபாலினம் பண்ணின பேர்கள் அஷ்ட அயிசுவரியமும் ராச பிறசாதமும் தெய்வப் பிறசாதமும் மென்மேலும் உண்டாயிருக்க கடவாராகவும். யிந்த தற்மத்தை பரதேசி முத்திரையாயிருந்து திருவாவடுதுறை பண்டாரசன்னதி யிந்த பொன்மலை வேலாயுத சுவாமியார் மகமை பணத்தில் அபிஷேக நெய்வேத்தியம் தீபாராதனை அலங்காரமும் சகல சம்பிறமத்துடனே விசாரித்துக்கொண்டுவரச் சொல்லி நிலவரம் செய்தோம். யிந்தப்படிக்கு யிந்த தற்மத்தை பரிபாலினமாய் நடப்பிச்சுக்கொண்டுவரக் கடவதாகவும் உ. வேலு மயிலும் துணை உ.

இந்தப்படிக்கு சம்மதிச்சு நான்கு திசை அன்பத்தாறு தேசத்து எட்டுவகைப் பலரும் இந்த மகமைக்கு சம்மதிச்சு எழுதிக் குடுத்த கை ஒப்பம் உ.

# 74. கோயமுத்தூர்ச் செப்பேடு

இச் செப்பேடு தஞ்சை மாவட்டம் திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ளது. கோயமுத்தூரை அடுத்துள்ள பேரூர்த் திருக்கோயில் சிலகாலம் திருவாவடுதுறை ஆதீனத்துக்கு உட்பட்டு முன்பு இருந்ததால் இச் செப்பேடு திருவாவடுதுறைக்குச் செல்ல நேர்ந்தது.

மைசூர் மன்னர் கிருஷ்ணராஜ உடையார் அவர்கள் ஆட்சிக் காலத்தில் 14-12-1765ஆம் ஆண்டு வீரராசையன் என்பவர் தளபதியாகவும், குறிக்கார மாதையன் என்பவர் கோயமுத்தூர் ஊர் நிருவாகியாகவும் இருந்தனர்.

அப்போது கோவையைச் சேர்ந்த சங்கரையன் என்பவரின் மனைவி லிங்கம்மன் அவர்கள் காசியில் மடம் ஒன்றை ஏற்படுத்தி அன்னதானம் செய்தாள். காசியில் அவர் கட்டிய மடத்திற்குக் கோவை கிருஷ்ணராசப் பேட்டையில் கூடிய வணிகர்களாகிய எட்டுவகைப் பலரும், பட்டக்காரர், செட்டிக்காரர் ஆகியோரும் மகமைக் கொடை அளிக்க ஒப்புக்கொண்டதை இச்செப்பேடு விளக்குகிறது.

நெரிசம்பேட்டை, கொல்லங்கோடு, கொடுப்பேட்டை, பாலைக் காட்டுப் பேட்டை, விலாப்பத்து, வண்ணார்க்காடு, மேல்நாடு போன்ற பல பேட்டை வணிகர் ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்களுக்கு மகமை நிர்ணயம் செய்து அளித்தனர்.

இன்றும் காசியில் இந்த மடம் திருவாவடுதுறை ஆதீனத்தின் நிர்வாகத்தில் உள்ளது.

## மூலம்

ஸ்ரீ காசி விசுவேசரர் துணை.

சுபமஸ்த்து சொஸ்த்திஸ்ரீமன் மகாமண்டலேசுரன் ஆரியதள விபாடன் ஆரியர் மோகந் தவுள்த்தான் ஒட்டியர்தள விபாடன் ஒட்டியர்மோகந் தவுள்த்தான் கற்றோமென்றுங் கலைபல மிகழான் பெற்றோமென்று பிறர்பொருள் வெளவான் ஆறிலொன்று கடமைகொண்டு அருள் பெருக அன்புகூர்ந்து,

ஆதுலர்சாலையும் அந்தணர்வேள்வியும் வேதவொலியும் விழாவறா வீதியும்

சைவநெறியுந் தபோதனர் மடங்களும் யிச்சையில் முப்பத்திரண்டறமும் விழங்கி எம்மண்டலமுந் திறைகொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுவரன் ராசமார்த்தாண்டன் ராசாகம்பீரன் ராசகுலதிலதன் ராசமனோபயங்கரன் கடல் கலங்கினும் காவேரி வற்றினு மலை குலுங்கினும் மனங்கலங்காத கண்டன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு கொடாதான் பொருமைக்குத் தருமன் பெலத்துக்கு வீமன் வில்லுக்கு விசையன் சொல்லுக்கு அரிச்சந்திரன் அழகுக்கு மன்மதன் அசுபதி கெசபதி நரபதி தனபதியாகிய,

ஆனை கொந்திராயர், மல்லிகார்சுனராயர், சீரங்கராயர், பிறவுடதேவமகாராயர், அப்பிறதம மைசூர்ச் சமஸ்தானம் ஆளித மகாசுவாமி கிஷ்ட்டினராச உடையரைய்யனவர்கள் உபைய காவேரி மத்தியாகிய ஸ்ரீரங்கபட்டணத்தில் ரத்தின சிம்மாசனாரூடராய்ப் பிறிதிவி சாம்பிராச்சியம் செய்கின்ற னாளையில் யிவர்கள் காரியத்துக்குக் கர்த்தாவாகிய தளவாய் வீரராசையனவர்கள் னாளையில் சாலிவாகன சகார்த்தம் 1687 கலியுகம் 4866 ந் மேல் செல்லாநின்ற பார்த்திப வருஷம் மார்களி மாதம் 3ந் தேதி சனிக்கிளமை உத்திராட நட்செத்திரம் பிரதினாமயோகமும் கவுலவாகரணமும் பெற்ற சுபதினத்தில் கோயம்புத்தூர் அட்டவணை கந்தாசாரம் சுங்கம் பேரம்மு மகமை தேவஸ்த்தானம் முதலாகிய சகல அதிகாரமும் செய்கின்ற ராசஸ்ரீ குறிக்கார மாதையனவர்கள் னாளையில்,

ராசஸ்ரீ சங்கரைய்யனவர்கள் தற்மபத்தினி யாகிய லிங்கம்மனவர்கள் காசி க்ஷேத்திரத்தில் செய்விக்கிற அன்னதான சத்திரத்துத் தற்மத்துக்குக் கிஷ்ணராசப் பேட்டையில் கூடிய எட்டுவகைப் பலர் பட்டக்காறர் செட்டிக்காறரும் எளுதிவிச்சுக் கொடுத்த மகமைத் தற்ம சாசனம். நெரிசம்பேட்டை கொல்லங்கோடு கொடுப்பேட்டை பாலைக்காட்டு பேட்டை பிலாப்பத்து வண்ணார்க்காடு மேல்னாடு யிந்த மார்க்கம் உணிசெலக் கண்டி மாற்க்கம் மேல்காட்டுப் பேட்டை யிந்தப் பேட்டையளுக்கு ஏறுசாத்து யிறங்குசாத்து பாக்கு மிளகு மஞ்சள் கல் அரக்கு நீலம் பூவத்து பலசரக்கு புகையிலை சவழி நூல் நெய் சீரகம் சந்தணப்பொதி கோதும்பை முதலான நிச பொதி 1க்குக் கெண்டிராயன் பணம் அரைக்கால், நவதாநியம் வெற்றிலை வெல்லம் லவணம் சேவு ஒன்று முதலான கால்நடை 1க்குக் கெண்டிராயன் பணம் மாகாணி, யிந்தப் படிக்கி நிச பொதி ஒண்ணுக்குக் கெண்டி ராயன் அரைக்கால் பணமும், மூலைப் பொதி ஒண்ணுக்கு மாகாணிப் பணமும் யிந்த மகமை தீர்ந்த திரவியத்தில் ராசஸ்ரீ சங்கரையநவர்கள் தற்ம பத்தினியாகிய லிங்கம்மனவர்கள் காசி ஷ்சேத்திரத்தில் செய்த அன்ன சத்திரத்துக்கு தற்ம ஆர்ச்சந்திரார்க்கஸ்த்தாகிய தற்மம் சாரோத்தாரமாக நடத்திக்கொண்டு வருவேராகவும் என்று,

எட்டுவகைப் பலரும் எளுதிவிச்சுக்கொடுத்த மகமையும் இந்த தற்மசாசனப் பட்டையம் யிந்த தற்மத்துக்கு யாதாமொருதர் விகாதஞ் செய்த பேர்கள் கெங்கைக் கரையிலே கோவத்தி பண்ணின பாவத்தையடைவாராகவும். யிந்தத் தற்மத்தைப் பரிபலஞ் செய்த பேர்கள் காசி ஷேத்திரத்தில் கோதானம் பூதானம் அன்னதானம்

சொற்னதானம் சோடச மகாதாநம் செய்த புண்ணியத்தையடைவாராகவும்.

சுதத்தாதி குணம் புண்ணியம் பரத்தானு பாலனம் பரதத்தாப காரேணா சுதத்தம் நிஷ்பலம் பவேத்து. யிந்தத் தற்ம சாசனம் திராவிட அட்சரத்தில் தாம்பர சாசனத்தில் எழுதினவன் தானப்ப முதலியார் குமாரன் நீலகண்டம். யிந்த அட்சரம் கொத்தினவன் கோயம்புத்தூருலிருக்கும் விசுவகற்ம வங்கிஷத்தில் வீரப்ப ஆசாரி மகன் ஆனந்தா ஆசாரி.

அஞ்னூறு குடிப் பாட்டத்துப் பலர் பட்டக்காரர் ஒப்பிதம். யிருவத்து னாலுமனைத் தெலுங்கச் செட்டியள் ஒப்பிதம். பனிரெண்டு நகரத்துப் பலர் ஒப்பிதம். வேடசெந்தூர் ராவுத்தமார் ஒப்பிதம். கோமுட்டியளில் குப்பிசெட்டி ஒப்பிதம். அல்லித்துறை வர்த்தகர் ஒப்பிதம். தேவாங்கு செட்டியள் ஒப்பிதம். சங்கராசப் பேட்டை வற்த்தகர் ஒப்பிதம். உ சிவமயம் உஉ.

# 75. கபிலமலைச் செப்பேடு

கபிலக்குறிச்சியில் ஒரு வீட்டிலிருந்து நாமக்கல் தாசில்தார் மூலம் பெற்று மைய அரசு தொல்பொருள் அளவீட்டுத்துறையின் கல்வெட்டுப் பிரிவினர் இச்செப்பேட்டைப் படி எடுத்துள்ளனர்.*

கபிலமலையில் உள்ள திருவள்ளுவர்குலப் பெருமாள் தம்புரானுக்குக் கபிலமலை, திருச்செங்கோடு, பழனி மடங்களை எழுதித் தந்து பல கொடைகளை விட்டதை இச்செப்பேடு கூறுகிறது.

கபிலமலையில் மலைக்கோயில், உச்சிப்பிள்ளையார் கோயில், பால்வாவி கட்டப்பட்ட விவரமும், தைப்பூச விழா விவரமும், விழாவின்போது திருமஞ்சன நீரினை அந்தணர் கொண்டுவர ஏற்பாடு செய்ததும், நடைக்கு 1/8 ரூபாய் கொடுத்த விவரமும், கபிலமலைக் கோயிலுக்கும் திருமடத்திற்கும் வரி நிர்ணயம் செய்த விவரங்களும் விரிவாகக் கூறப்படுகின்றன.

வேட்டுவர் சமூகத்தைச் சேர்ந்த அல்லாள இளையா நாயக்கன் திப்புவின் காலத்தில் செய்த பல கொடைகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. வரி கொடுக்காவிட்டால் தண்ணிக்கிணற்று மறியல், தலைவாசல் மறியல், வீடு மறியல் என்பது இச்செப்பேட்டில் அறியப்படும் புதிய செய்தியாகும்.

1604 ஆம் ஆண்டு இச்செப்பேடு எழுதப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. திப்பு சுல்தானும் கூறப்படுகிறார். காலம் பொருந்திவரவில்லை. இச்செப்பேடு முற்றுப்பெறாமல் உள்ளது.

## மூலம்

ஹரி ஓம் நன்றாக.

வைய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தானதழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

---

* 1) ARE (A) 18 of 1929.

மகாமண்டலீசுறன் அரியதள விபாடன் பாஷைக்கு தப்புவறாயர் கண்டன் மூவறாய கண்டனாடு கொண்டு கொண்டநாடு குடாத பெருமாள் எம்மண்டலமும் முத்திரி கொண்டருளிய றாசாதிறாசன் றாசபரமேசுபரன் றாசமாத்தாண்டன் புங்கவன் றாசகேசரி வங்களர் சிங்களர் மறாட ரொட்டியர் சோனகர் சீனகர் பரிசாரர் குச்சரர் அரிலையாளர் மஷ்தகொடாரி பூலோகம் புறந்த னாளில் அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாறாயணன் உத்திர தெஷ்சன பூறுவ பச்சிம சமுத்திறாதிபதி சேறன் சோழன் பாண்டியன் வல்லாள றாய பயங்கறன் யீள முதலாய லங்காபுறியும் வாழால் வழிதிறந்த பெருமாள் மதியாத மன்னர் மகுடஞ் சிறந்த பதி சூறரைக் கொள்ளும் பறசுறாமன் அஷ்டதிக்கு மனோகர பயங்கரன் மொகங்கண்டு முறிபட்டோடுவார் கண்டன் நறலோக கண்டன் நாகசக்கிறவறுத்தி நறலோக சூரியன் துலுக்கதழ விபாடன் கெசத்தழ விபாடன் துலுக்கற்மோகந் தவிள்ர்த்த ஒட்டியதள விபாடன் ஒட்டிய மோகந்தன் கெசகதள விபாடன் கெசபட்டறாயன் வேண்டியருளிய,

நரசிங்கறாயர், வசந்தறாயர், விருப்பாச்சிறாயர், பிறவிடதேவறாயர், மகாதேவறாயர், ஆனகுந்திறறாயர், சீறங்கறாயர், கரிமேலுதையன் பரிமேல் நகுலன் வில்லில் விசையன் சொல்லில் தறும்மன் சாத்திரத்துக்குச் சகாதேவன் தோளுக்கு வீமன் பிறப்புக்குப் பூமாதேவி அறிவுக்கு அகஷ்தியன் தவசுக்கு வசிட்டன் நிலைக்குச் சந்திரன் பிறுமா விட்டுனு குத்திறன் விளங்கும் பூறுவபூறுவமென்று சொல்லப்படாநின்ற பூதலம் யீறேளு லோகமும், அதல விதல சுதல நிராதல தராதல மகாதல பாதாள பூலோகமென்று கீளேழுலோகமும், மேலேழு லோகமும், பூலோகம் புவலோகம் செனலோகம் தவலோகம் சத்தியாலோகம் காலோகம் சிவலோகமென்று சொல்லப்படாநின்ற பதினாலு லோகமும், யிறுனூத்தி யிறுபத்தினாலு புவனமும், ஆயிறத்தித் தொன்னூற்று ஒன்பது நியப்படைவீடும் சக்கிரவாழகிரியும் சமுத்திரமு தீயும் பூமியைத் தாங்கப்படாநின்ற அஷ்டகெசங் களும் ஆயிரமிதழ்பூண்ட புண்டரிகம் வாம் . . . முற்தனம் அஞ்சனம் பொடியும் செந்தம சாறுபய சுப்பிறதீபம் அஷ்டகெசங்களும் அஷ்டதிக்குப் பாலகறும் அஷ்ட நாகமும் வேறு முதலாய அறியப்படாநின்ற பதிநெட்டு யுகமாவது,

முதலாகி ஆனந்தநெம்பது அறையில் தோன்றியது. இரண்டாவது அற்புதனென்னு முகத்தில் ஆகாச நச்செத்திறா தோன்றியது. மூன்றாவது தயாறதனென்னும் முகத்தில் சந்திற சூரியன் தோன்றியது. னாலாவது தறாமுகத்தில் காற்று தோன்றியது. அஞ்சாவது தண்டகனெனு முகத்தில் நெறுப்பு தோன்றியது. ஆறாவது விண்ணவரென்னு முகத்தில் மலை தோன்றியது. ஏளாவது வினாயகனெனு முகத்தில் . . . . . . . . தோன்றியது. எட்டாவது மையுகனெனு முகத்தில் மநு தோன்றியது. ஒன்பதாவது மையூகனெனு முகத்தில் வேதம் தோன்றியது. பத்தாவது மகாவிதன, பதினோராவது விசுவாசனெனு முகத்தில் சந்திராதித்தன், பனிரண்டாவது மணியநெனு முகத்தில் சோதிநிஷி, பதிமூன்றாவது ஆங்கிற தண்டகன் விமான், பதினாலாவது அரவிந்தன் யுகத்தில் தற்மம், பதினஞ்சாவது கிரேதா யுகத்தில் தேவசூறன், பதினாறாவது திரேதா யுகத்தில் மொறசு றாவணந், பதினேழாவது துவபற யுகத்தில் தற்மபுத்திரந் திரியோதனன், 18 வது கலியுகத்தில் கலியந்,

னாலா வகையிலும் நாலு வேத ஆறு சாஸ்திரம் பதினெண் புராணம் இருபத்தெட்டு தெய்வாசாரம் முப்பத்திரெண்டு அறமும் அறுபத்து னாலு கலக்யானமும் அகசமயம் பிரசமயம் ஆறு பஞ்ச பூதங்களும் அஞ்சு மண்டலமும் மூன்று அறதநம் சாலோக சாமீப சாறூப சாயிச்சியமெனு நாலு பதமும் தேவரிஷி பிரமரிஷி விஷ்ணரிஷி முனியேசுபரன் பரமலோக மாமுனி துற்வாசமாமுனி கமண்டக மாமுனி கசமாமுநி நாரதமகாமுனி விட்டிண மாமுனி கவுதமமுனி கவுணியமாமுனி திவ்வியமாமுனி அகஸ்தியமாமுனி பிறசமாமுனி அறவாசமாமுனி பிறஞ்சோதிமாமுனி யுக . . . . . . இப்படி நாற்பத்தெண்ணாயிரம் ரிஷியும் அறுபத்தாறாயிர முனியேஷ்பரரும் யிறுபத்தி நாலாயிரத் தென்பதுகோடி ருத்திரரும் ஆயிரம் கெறுடகாந்தருவரும் முப்பத்தி முக்கோடி தேவர்களும் முகம்முள்ளவர் கோடி பேறுகள் கோடிபெருங் கோளுக்கு சமாநமாகிய சதிரர்கோடி யிப்படியாகொத்த பதிநொறு கோடி பேற் பிறந்திருக்கிறபொளுது,

செற்றுர் கொடி நெநம் அப்படி யெளுந்திறுக்கப்படாநின்ற யீஷ்பரன் வேத சாஸ்திர புறாணங்களும் ஆதிதேவனாகிய விரையில்லாத வித்தாகிய ஞானரூபமாகிய நிர்குணனாய் முப்பிறகாசநாய் நிர்ஞான பிறதனனாய் நிர்மயனாய் நிர்மலமாய் துரியசிதனாய் சச்சிதாநந்தனாய் அணுவுக்கணுவாய் அறுளுக்கு யெட்டாதவனுமாய் அளித்தவிடத்தில் அமுற்தந் தரித்தவருமாகிய அணுவுக்கணுவாய் நடுவில் விறுத்தில்லாதவருமாய் ஆகம சாஸ்திர புறாணத்தாலே பிறுமா விட்டுணுவாலே காண்டற்கரியும் எறும்புகடை ஆனைத்தலை என்பத்து நாங்கு உயிர்க்கும் கோடி செந்துகளில் சறுவாயறுமாக்கள் செய்கிற மந்திரங்களுக்குத் தக்க மரங்களுண்டாக்கிவிக்கவும் கற்த்தாவாயெழுந்தருளிய கயிலாச மாயேந்திராதி பாகமும் மும்மூற்த்தி பார்வதி யிறுதரானாகிய அகிலாண்டகோடி விறுமாண்டநாயக நேரமொரு பஞ்சப் பிரகாச பத்திப்பிறியாத கோலமாகிய மகாதேவர் புத்திறனாகிய சரவணபவ சண்முகப் பிறதாபன் குமரி திருமகன் கெணபதி சகோதரன் குக்குடதுவசன் தேவதேவன் தெய்வலோக நாயகன் தேவகண்ட கோகனகச் சிறமாகுட்டி குடிமையை நெட்டைப் போக்கி கோல் சிலும்பதம் கொடுத்த குமாற கண்ட சூரன் பக்கரைப் பதட்டிய படைக்களத்தில் கொக்கரித்த குக்கிடங்கொடிக் குமாரன் கூளி கொட்கை பசாசுகள் கொக்கரித்தாள மொதத்துசன் சூரமாறத்தக்குபாறிய நிளிய கச்சை கட்டிப் பாற்வேலெடுத்து சேவுகன்,

தென்ம்பளணிமலைப் பன்றிமலை காவலன் ஆறிலங்கு வய்யாபுரிநாடன் உத்தண்ட குமாறன் உத்தண்ட தெவியானை மிண்டன் கிறுவித குமாற சூரன் சூரனைக் காய்ந்த சூரகாலாந்தகன் தெவியானை மனோகரன் வள்ளிமணவாளந் மயில்வாகனந் குங்கும வண்ணந் பன்னிரு புயத்தோளன் கடல் சூர வேல்தனை விடுத்தோன் யெண்ணாயிரம் சமணரைக் கழுவில் லேற்றிவைத்தோன் ஆண்பனையை பெண்பனையாக்கி வைத்தவன் அடல்சூரரை நீருள் அடித்தவன் சண்டப் பிறசண்டன் வண்டற்கொரு மிண்டன் சிவசமய பரிபாலகன் ஏடெளுதி வைத்தவன் எதிரிலை யேற விட்டவன் திருமயிலுறு சிவனேச செட்டியார் மகட்குத் திருமணஞ் செயிது வைத்தவன் ஆறிலொன்று கடமைகொண்டு பிறிதிவிராச்சியம் பண்ணாநின்ற காலத்திலே,

கலியுக சகாற்த்தம் 4705க்கு மேல்ச் செல்லாநின்ற காலையுத்தி வருசம் கொங்கு மண்டலத்துச் சேந்த குன்றத்தூர் வட்டத்தில் கீழ்கரை அரைய னாட்டுத் தராதிபதியான கவிலமலையில் குமர குருபரன் குக்குடத் துவசன் தேவசேனாபதி செந்திகந்தன் செட்டி திருமால் மருகன் யேளு வறுதி சுவற வேல்விட்டவன் சமண குலைகாரன் சமந்த னாயகன் சூரசங்கார சுப்பிரமண்ணியன் அன்னக்கொடியு வானோர் பறங்குன்றும் திருவேறகமும் திருத்தணிக்குன்றும் சீறலைவாயும். திருச்செந்தூறும் மற்றுமுண்டான குன்றுதோறாடி குளந்த வேலாயுதர் எளுந்தருளியிருக்கிற கபிலமலையில் குளுந்த நிளலும் கவுந்த மாரிசியும் அடையும் வடபாரிசத்தில் காசி கோத்திரத்தில் உத்தம பரிபாலகர் தெய்வீகமான பால்வாவியும் கட்டுவித்து சுனையும் காணாத சுனை நாகம் தபசு பண்ணினதும் பசவு மோச்சம் பண்ணினது யிப்படி தேவதன்மையாயிறுக்கப்பட்ட குளந்த வேலாயுதருடைய கிறுபா கடாச்சத்தினாலே கபிலை மலையில் தைப்பூசம் திறுவிழாவில் பெறும் தம்புறா அறுமுக கடவுள்க்கு முதல்ப் பூறாதனம் கவிலமலையும் முதல் புறாதனம் குளந்தை வேலாயுதசாமிக்கு பூசை நடத்தி வந்தது.

ஆயிரமாலை குளந்தை வேலு பண்டாரம் பிறமாதி வருசம் வய்யாசி மாதம் 10 தேதி யிதுற் கிராமம் மேற்படி மலைக்கோவில்க் கட்டினது விபறம். கலியுகம் பிறந்த வருசம் காலெ . . . . . . திறி செல்லாநின்ற காலத்திலே பெருமாள் தம்புறான் 100000 விறாகன் செலவளித்து திறுப்பணிவேலை கட்டிவைய்த்து நூறுக் கொத்தற்களைவிட்டு தெய்வமன பால்வாவியும் வெட்டிவயித்து உச்சிப் பிள்ளையார் கோவில் கட்டிவச்சது. காவேரி கறயில் விபுதி பிட்டிது ரெண்டு செப்புகுடம் உண்டு பண்ணி பூசைக்கி பிறாமணப்பிள்ளை அழைப்பிவைத்து பூசை பண்ணும்படி செயிது தீற்த்தம் பிறசாதத்துக்கு விட்டகாடு செய்ப்பூமி விபறம். உள் சோதித்துத் தாறிக்காரன் காடு, தெய்வமான பால்வாவி வெட்டிவித்து அகபோ . . . ளைகாடு விட்டது. யிந்தப்படிக்கு பெருமாள் தம்புறானுக்கு டிபு சுல்தான் னாழையிலே பறமுத்தி அள்ளாழ யிளையா நாயக்கர் மானிபம் செயிது வயித்தார்கள். பெருமாள் தம்புறான் குளந்த வேலாயுத சாமிக்கி திருமஞ்சனகொடம் செலம் யெடுக்கிறது. 3 பிறாமணப் பிள்ளை அளைப்பிவச்சி அள்ளாழ யிளையா நாயனாறுக்கு தெரியப்பண்ணி பிறாமணப் பிள்ளை வசம் திருமஞ்சனம் கொடம் கொண்டுவரும்படி பண்ணி வைச்சாற்கள்.

யிதுக்கு தைப்பூசத்துக்கு சுவாமி ரத உச்சிதமாகிறபோது பெறுமாள் தம்புறானுக்கு நடையொன்றுக்கு அரைக்கால் ரூபாயி வீதம் சேந்தது. யிவற்களுக்கு குடுக்கும்படி மூவேளுயிறபத்தொறு தலைமுரையில் வைத்தாற்கள். பூமியாகாசம் சந்திற சூரியன் உள்ளவரையில் நடத்திவரும்படி செய்து யிந்த தற்மம் யாறாவது அபகடம் செய்த பேற்கள் மகாவிஷ்ட்ணுவுட ராமபானத்துக்கு ராவணேஷ்பரன் பட்டபடியாவார்கள். சுப்பிறமன்னியற் சூலாயுதத்துக்கு சூறாதிகள் பட்டபடி ஆவார்கள். தறுமறுடனே யெதுத்த திறியோதனந் பட்டபடி யாவாற்கள் யென்று பட்டம் பெறுத்த அள்ளாழ யிழய நாயக்கற் முன்பாக பத்தும்பறியும் யெளுதி வயித்தார்கள். தீற்த்த தெரிசினை பிறற்சாதமுங் கொடுத்து மலையில் கெறட கம்பத்தில் முன்பாக யிறுந்துகொண்டு திறுநீறு குடுக்கும்படி செய்து வய்த்தார்கள். சகலரையும் றச்சிக்கும் பெரிய யாக சாதிக்கி செயமடம் கட்டிவச்சு

அவறவற் நடத்தும்படியாய் தைப் பூசம் திருவிளாவில் மணிமண்டபதியிலுங் அள்ளழ யிளைய னாயக்கற் முன்பாக ஆனந்தனாத சந்தான கொங்கு சமுந்தமூற்த்தி சிஷ்யனாகிய வள்ளுவரில் பெருமாள்தம்புறானுக்கு மலையில் மடவாலையுண்டுபண்ணி குடுத்தபடியினாலே,

நீதிக்கிலாபமாகிய விருதுபெற்ற பெரியோர் சங்கத்தை வெண்ணவர் வெள்ளானை மேலேறி அந்தி முற்சறிந்த பெரியோறாகிய அண்டரண்ட பகிரண்ட முப்புரமெரிக்கையில் காலகாலனை கபாலறுத்திரனை கயிதொளுத பெரியோராகிய காவேரி வளநாடு மிகவாள வேதநாறதனைக் கண்டு உபதேசம் செய்த பேரியோர் . . . . . . . . தொல்காசு வப்பபுடன் ராசசேரிகண்ட பெரியோர்கள் . . . . . . . . . . . . . . . . . . . . கல்ச்சாஷனம் கொண்ட பெரியோர் கச்சிதனில் மெச்சவே காவி புணர்ந்த பெரியோர் பாடிஅறு மாம்பரைக் கனகமுடிச் சோழனை கனகவிதங்கொண்ட பெரியோர் வங்காழ தேசம் யிறுந்து வாதவாறன காஞ்சி விறுதாசலத்தில் யிறுந்து வந்தவர் பறமுத்திக் கோட்டை அள்ளாழ யிழய நாயநார் அதிகாரத்துக்கு வந்தப்போது ஆனைக்கு குதிரைக்கு கடுப்பு யெடுத்து கொண்டு யிருகுறபோது அந்த கடுப்பு நிறுத்திறதுக்கு மறுந்துனால் தீறாமல் பெருமாள் தம்புறானை அளைபிவயிது யிந்த ஆனை குதிரை உபத்ரியம் நிறுத்திவைக்க வேணுமென்று குதிரை பிடிக்கப்பட்ட சாம்பான் கறுதுவே யென்று பெறுமாள் தம்புறானார் அருமை சாதினம் எளுதி குடுத்துவந்து கேள்க்க அப்பெருமாள் தம்புறான் சுப்பிறமணிய சுவாமியாறிடத்தில் வந்து வாக்குவறம் வாங்கி விபுதிபோட ஆனை குதிரை கால்நடை யுள்ளதெல்லாம் தாம் பெத்த மேனிபோலே யெளுந்திரிந்தது.

அதற்காக முப்பதிமுக்கோடி தேவர்கள் தேவர்கள் அரிய கிம்புறு கின்னற விதியா விதியாதற அரிய அப்பர் சுந்தற மாணிக்கவாசகற் அரிய பதிநெட்டு விறுது உள்ளவர் ஆயிர சி . . . . . . . வெள்ளைகுடை விஞ்சாமற வெங்கலப் பெறணி யிறவது பொன் காறு கச்சி காவி புனந்த வெள்ள குதிரை துத்தி யிறுவதுபொன் மொளுகு கூடாரம் யிந்த சூரியபானும் விறுது உள்ளவற் நாலு மூலைக்கும் நாலுயுறுக்கு தடி பூவு திரப்பிஞ்சி தீர்க்காயுதிர பழமுதிர் யென்று முற்சந்த பெரியோர் சீரங்கறாயர் திறுப்பதி ஆழ்வாராயிநின்ற பெரியோர்கு மேகரெ பூந்துரை நாடு, காங்கயநாடு, பொங்கலூற் நாடு, வாறக்கனாடு, வய்யபுரிநாடு, மனநாடு, தலையநாடு, தட்டயநாடு, பூவானிநாடு, அறய் நாடு, வொடுவங்கநாடு, கிழங்குநாடு, நல்லுறக்கநாடு, வடகரெநாடு, வாழவந்திநாடு, சொக்கவபாறநாடு, றாசிபுறம்நாடு, குறுப்பநாடு, கொங்கநாடு, கீல்கரெ பூந்துரைநாடு, . . . . . . சேலம் நாடு, பாப்பினிநாடு, வேளுமநாடு, வழுவரிநாடு, கீழ்கரெஅறயநாடுதனில் யுள்ள யிறுபதுநாலுநாடே முப்பத்திரண்டு ஊறு கபில குரிச்சி கிறாம பெறுமாள் தம்புறாநுக்கு தாரையேந்தி விட்டதுயென்று அரியுமிடத்து,

சிலவுக்கு வருசம் ரெண்டு விறாகன் குடுப்பது கவலமலை மடம் திருச்செங்கோடு மடம் பெறுமாள் தம்புறான் பெரியூறு பத்து பொன் சின்ன ஊறு அஞ்சிபொன்னு க. கம்பு யெட்டு வள்ளம், கொட்டமுத்து வள்ள றண்டு, மாப்பளை வீட்டு மூனு பணம், பெண் வீட்டு றண்டு பணம், அரிசி வள்ளம் ஒன்று,

அதுவுள்ளசமாநம் குடுக்கவும். மேல் மிறாசு குருவு வெத்திலை நடத்தவும், அதின்வோற் முறபிவெத்திலை சுப்பிரமணியசுவாமி சொல்படிக்கி யுண்டான பட்டயம் யிவாரவரி குடுக்கபட்டது. கொங்க சம்பா செளிய சம்பா அனெமுக சம்பா குதிரெமுக சம்பா புலிமுக சம்பா தெலுங்க சம்பா. நம் சம்பா யிந்தபடிக்கி வறமானம் குடுக்காமல் போனால் தன்னிகிணறு மரியல் தலவாசல் மரியல் வீடு மரியல் யிந்தபடிக்கி சாதாறா செயிது வச்சது வேறம். . . . மூணு வள்ள அரிசியு பருப்பு தகுந்த சமரம் குடுக்கவும். பட்டயம் நலிக்கி குதிரைக்கி கொல்லு யெறுது பில்லு சீக்கிரம் அள்ளாள யிளயா நாயக்க அரிவார், அயிறமலை படைராம அரிவார், குழந்தவேல் பண்டார்ம் அரிவார், பள்ளயிடும் பண்டார அரிவார், கபிலைமலையிலே யிநூர் பெறும் தம்புறானார் யெளுதி குடுத்த திறுவாசகம்.

பறமுத்தி அள்ளமு யிளய நாயக்கன் யெளுதி குடுத்தான். கபிலமலை ஆண்டவர் துணை. கயிலாசபதிதுணை. அறுணாசல யீசுபரர் துணை. சந்திற சூரியர் றுள்ளவரைக்கு யிந்த தற்ம நடத்தி வறவும். யிந்த தற்மத்துக்கு அகித செய்தால் காறாம்பசுவு கொன்ன தோஷத்தில் போவர். காசியில் பட்டயம் பொய்யென்று சொல்லப்பட்ட பேற்கள் பாவத்தில் போவர். யிந்த பட்டயம் காதினால் கேட்ட பேற்கள் கீள் கோத்திரம் வளந்து யிறுப்பார். குருபாதம் துணை.

நாடு-மலநாடு, மனனாடு, யிடைப்பளிநாடு, நல்லுறுக்கநாடு, தலையநாடு, தட்டயநாடு, ஆறுநாடு, பன்னீர் கிளங்குநாடு, வெங்கலநாடு, மேல்கரை அரையநாடு, கீள்கரை பூந்துரை நாடு, பூவாணி நாடு, பரித்திபுளிநாடு, சேலநாடு, றாசிபுறநாடு, வாளவந்திநாடு, அரயநாடு, மேகரை பூந்துரைநாடு, தென்கரைநாடு, காங்கயநாடு, வடகரநாடு, வாரக்கநாடு, காஞ்சிஓடுவங்கநாடு, குறுப்பநாடு, மின்னசுத்தி ஆறுநாடு, சோளவந்தாநாடு, சேர்காவடிக்காநாடு, அண்டநாடு, வய்யாபுரிநாடு 32 கிறாமத்து வுரமுரயாக கூடி கபிலுகுரிச்சி கிறாமம் தாரை விட்டது. சற்காறவன் பெருமாள் தம்புறானுக்கு மடதது சிலவு வருஷத்தில் விராகன் 2 பெரிய வூறுக்கு பணம் 10, சின்ன வூறுக்கு பணம் 5, 8 வள்ளகம்பு, 3 வள்ள அரிசி, முத்து வள்ள 2, பட்டயம் கண்ட நாளில் குரிதக்கி கொள், எறுதுக்கு பில்லு, கலியாணத்து வற்தனை மாப்பிள்ளை வற்தனை பணம் 3, பொன் விட்டுக்கு பணம் 2, அதுகுள் மிராசான 8 வள்ள அரிசி, குறுவெத்திலை, மடத்து வெத்திலை, பண்டாரி வெத்திலை மடத்து பண்டாரத்துக்கு குடுக்குரது.

திரிச்சங்கோடு மடம், கவலைமலைமடம், பளனி மடம் யிது மூணும் கவிலைமலையிலிருக்கும் திறுவள்ளுவருக்கு யெளுதிக் குடுத்தாற்கள். கொங்க சாம்பான், சோளிய சாம்பான், கட்டிகாற சாம்பான், வடக்கத்தி சாம்பான், கிளக்கத்தி சாம்பான், புலிமுகசாம்பான். ஆறுனூறு பெரிய பேரிவரயில் கொங்கன் காணி, தன்னிதுரை மரியல், தலைவாசல், மரியல் வீடு மரியல் . . . . . . . . . .
. . . . . . .

# 76. போதமலைச் செப்பேடு

சேலம் மாவட்டம் இராசிபுரம் வட்டம் போதமலை மேலூர் சிரக்காளி அண்ணாமலைக் கவுண்டர் என்பவரிடம் இச்செப்பேடு உள்ளது. ஒரு தீவிபத்தில் செப்பேட்டின் ஒருபகுதி எரிந்து விட்டது.

1782 குரோதி தை மாதம் 25ஆம் நாள் இச்செப்பேடு எழுதப்பெற்றது. சக ஆண்டாகக் கொண்டால் 1860 ஆகிறது. உரிமையாளர் அண்ணாமலைக் கவுண்டரின் தாத்தா காலத்தில் இச்செப்பேடு வெட்டப்பட்டிருக்க வேண்டும் என்று இதைக் கண்டுபிடித்த ஆய்வாளர் கருதுகிறார்.*

போதமலை, மேலூர் சிரக்காளி அண்ணாமலைக் கவுண்டருக்கும், அதே மலையைச் சேர்ந்த கீழூர் மசிய காத்தாக் கவுண்டருக்கும் இவர்கள் ஊருக்கு இடையில் உள்ள மலைச்சிகரத்தில் இருக்கும் பெருமாள் கோயில் நடைமுறைகளை ஒட்டியே இவ்வழக்கு ஏற்பட்டது.

வழக்குத் தீர்க்க பட்டக்காரர், நாட்டாண்மைக்காரர் உள்ளிட்ட மக்கள் கூடுகின்றனர். இதனை மகாநாடு என்கின்றனர். சிரக்காளி அண்ணாமலைக் கவுண்டர் வெற்றி பெறுகிறார். வழக்கில் தோற்றவருக்கும் அவர் நெருங்கிய உறவினருக்கும் சில சமூக உரிமைகள் மறுக்கப்படுகின்றன.

அண்ணாமலைக் கவுண்டருக்குச் சித்தன் கோயிலில் உரிமைகளும் தந்து, மாரியம்மன் கோயிலிலும் விழாவில் சில உரிமைகளையும் அறிவிக்கின்றனர்.

'அறப்பள்ளி' என்று மக்கள் பலர் பெயர் வைத்துக் கொண்டுள்ளமை செப்பேட்டின் மூலம் தெரியவருகிறது.

## மூலம்

1782 வருஷம் தை மாதம் 25 தேதிக்கு (குரோதி வருஷம்) சேலம் ஜில்லா ஆத்தூர் தாலூக்காவை சேர்ந்த கொல்லிமலை பையில்நாடு பட்டக்கார உய்ய பெரிய நாச்சிக்கவுண்டன் வகைரா உய்ய கரும கவுண்டன் மகன் உய்ய குள்ள

* சேலம், நாமகிரிப்பேட்டை புலவர் வெ. இரா. துரைசாமி அவர்கள்.

கவுண்டன் 1, மேற்படியூர் சண்டா அரப்பிளி கவுண்டன் 2, செருக்காளி மணிய குப்பாக் கவுண்டன் 3, எருமய சின்னலயாக் கவுண்டன் 4, தர்மகருத்தா கொழுவ குப்பாக் கவுண்டன் 5, தும்மினிய பெரிய எலயாக் கவுண்டன் 6, மேனடைய அரப்பிளி கவுண்டன்7, சிருக்காளி கரைக்காரன் 8, மேற்படி தாலூக்கா மேற்படியூர் நெவக்காட்டு அலுங்க வடமாக்கவுண்டன் 9 நாங்களும் மற்ற 18 கரைகாரர்களும் மேற்படியூர் பிரக்கரை கொழுவ கொளந்தாக் கவுண்டன் ஆயில பெரியாக்கவுண்டன் மற்ற எழுகரைகாரரும் மேற்படியூர் கூர்கோம்பை பிலியே கருமாக்கவுண்டனும் சேர்ந்து,

நாங்கள் பஞ்சாயத்துத் தீர்மானம் சொல்லும் போது உங்கள் பஞ்சாயம் வேண்டியதில்லை என்று மகாநாட்டையும் மேலூர் சிறக்காளி அண்ணாமலைக் கவுண்டனையும் மகாநாட்டோட ஒன்றாய் சேர்த்து நாமக்கல் கோர்ட்டில் மசியகாத்தாக் கவுண்டன் பிராது செய்தும் மகாநாட்டை அகுமானம் செய்தான். அந்த கோர்ட்டு வியாச்சியத்தை 516. 40 ரூபாய் சிலவு செய்து மேலூர் சிறக்காளி அண்ணாமலைக் கவுண்டன் அந்த வேச்சியத்தை கெலிச்சி மேற்படி கீழூர் வந்து இப்படிப்பட்ட குருத்ரோகம் செய்தவனுக்கு 3 மலை 14 பட்டி 5 நாடு ஆயிரம் கோம்பை நாடு 18 கரைகாரரும் அறிய இந்த மசியகாத்தாகவுண்டன் 18 வீட்டு கசக்காளி 2 சடக்க பெரியா கவுண்டன் 3 இந்த மூவருக்கும் எப்போதும் சாந்து சந்தனம் விருதுபட்டம் எப்போதும் கிடையாது.

இன்னும் இந்த விருதுகளை பிடுங்கி மகாநாடும் பயில்நாடும் போகும் போது மேலூர் சிறக்காளி அண்ணாமலைக் கவுண்டன் 1 கோசமணியை அரப்பளிக்கவுண்டன் 2 இரண்டு பேரும் வெள்ளக்கல்பட்டி எல்ல பெருமாள் கோவிலிடத்தில் இவர் இரண்டு பேரும் நாட்டார்களை நிறுத்தி எங்களுக்கு ஏதொரு ஆதரவு மில்லாமலும் சொல்லாமலும் போரீர்களே என்று நிறுத்தி போன நாட்டுகளை திருப்பி மேற்படி கீழூர் கிராமம் வந்து சகல பஞ்சாயங்களை பேசி மேலூர் அண்ணாமலைக்கு ஒரு விருதை கொடுத்தோம்.

அண்ணாமலை கவுண்டனுக்கு அரப்பிலி கவுண்டன் மந்திரியாக மகாநாடும் நேமிச்சியிருக்கிறோம். மருபடியும் கசக்காழி கருமாக் கவுண்டன் நாடு, கூட்டி சடக்க பாலாண்டி கவுண்டன், மேலூர் அண்ணாமலைக் கவுண்டன் இந்த மூனுபேரும் இந்தக் குருஞ்சிலை பாய்பட்டம் போடுவோம் அரப்பிலிச் கவுண்டனுக்கு லேகம் பலிபோடுவோம். இவர்களை வைத்து இப்படி சமதி மாரியம்மன் திருவிழா நடத்துவோம்.

சிறக்காளி அண்ணாமலைக்கவுண்டன் குறிஞ்சில் முதல் சீலை கட்டவும். தான் போதமலை சித்தன் கோவில் அண்ணாமலைக் கவுண்டனுக்கு முதல் சாந்தும் பாதிபத்தியமும் ஒண்டி வீட்டு கசக்காழி கருமாக் கவுண்டனுக்கு பிந்தின சாந்தும் மற்ற கரைக்காரருக்கு சகல சாந்தும். குறிஞ்சி பூரா பாத்தியமும் அண்ணாமலைக் கவுண்டனுக்கு மூனு மலை பதினாலு பட்டியும் மூணில் ஒரு பாத்தியமும் கொல்லிமலை மகாநாட்டுக்கு ஒருபாகமும் மூனு கரைகாரருக்கு ஒருபாகமும் இதில் தவறினால் கொல்லிமலை மூலைக்கட்டி கருப்பு கேக்கும். பெரியசாமி கேக்கும்.

ஆண்டியப்பன் கேக்கும். போதமலை சித்தனும் பெரிய சடையனும் கேக்கும். இந்த அத்தை கெடுத்தவன் தந்த பிள்ளை அத்துப்போகும். காணிக்கு கருவில்லாமல் போகும். கட்டி உழ மாடு பாலில்லாமல் போகும். மூங்க முளையில்லாமல் போகும், முத்திமி பிள்ளை அத்திப்போகும்.

மகாநாடும் சகல குடியும்வைத்த சாபம் இப்படிக்கு ஒப்பந்த பட்டா, இப்படிக்கு எங்கள் கையொப்பம், வெள்விரித்தான், தொட்டரையன், மசிய குப்பன், தலக்காட்டு சப்பாணி எளையான், போக்க மலையாக் கவுண்டன், பிலிய ஆண்டிக் கவுண்டன், சடைய செல்லாக் கவுண்டன், கொழுவ ஆண்டிக் கவுண்டன், தமுக்காட்டி ஆண்டிக் கவுண்டன், கோம்பக்கவுண்டன், ஜடமாலை சீராக் கவுண்டன், தமுக்காட்டு அண்ணாமலைக் கவுண்டன், கல்லாங்குழத்து காரிய பெரியான், மேக்கினி காட்டு எலுமிச்சக் கவுண்டன், புதுமளவு மாணிக்க குழவன், எரும பெரியளயாக் கவுண்டன், வாழ தொப்பாட்டன், மேனடை அரப்பிளி, மேக்கினிகாட்டு பெரியனப்பய்யன், ஆண்டியப்பன் கோவில் பூசாரி.

# 77. சுப்பத்தாசன் திருமுகப் பட்டயம்

இது தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையில் உள்ளது.* பெரியார் மாவட்டம் தாராபுரம் வட்டம் புதுப்பைப் புலவரிடமிருந்து பெற்ற ஏட்டுச் சுவடிகளுள் இதுவும் ஒன்றாகும்.

திருவரங்கம் திருமலைப் பெருமாள் கோயில் திருமலை தாத்தாச்சாரிய குரு சுவாமியாரவர்கள் தாராபுரம் தாலூக்கா முளையாம்பூண்டி கிராமம் கொமாரபாளையம் சுப்பத்தாசனுக்கு எழுதிக் கொடுத்த விருது சமயப் பட்டயம். அவர் அனுபவிக்க வேண்டிய உரிமைகள் இதில் கூறப்பட்டுள்ளன.

சுப்பத்தாசன் அனுபவிக்க வேண்டிய உரிமைகள் பற்றியும் தாராபுரம், காங்கயம், கரூர், ஈரோடு, பழனி, கோயமுத்தூர், பொள்ளாச்சி, பல்லடம், கொள்ளேகாலம், சத்தியமங்கலம், உடுமலைப்பேட்டை, சேலம், நாமக்கல், தர்மபுரி போன்ற பல ஊர் அடியவர்கள் சுப்பத்தாசனுக்கு அளிக்க வேண்டிய வரிகள் பற்றிய விரிவான விளக்கம் இச்செப்பேட்டின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது.

## மூலம்

ஹரிஓம் நன்றாக குரு வாள்க குருவே துணை.

ஸ்ரீமது வேதமார்க்க பிரிதிஷ்டாபநாசாரிய உபய வேதாந்தா சாரியறாக கோவில் திருமலைப் பெருமாள்கோவில் றாயகுரு கோடி கன்னிகாதானம் ஸ்ரீரங்க ஸ்தலம் பூதலம் படைத்த குரு பட்டம் . . . கஸ்தாயிபட்டியில் யிருக்கும் . . . திருமலை தாத்தாச்சாரி சுவாமியாரவர்கள் தாராபுரந் தாலூகா முளையாம் பூண்டிக் கிறாமம் கொமறபாளையத்திலேயிருக்கும் சுப்பத்தாசனுக்கு எழுதிக்குடுத்த விருதுசமய பட்டயம்.

என்னவென்றால் அளிறி மஞ்சப்பாவாடை உக்கிரக்கொடி வீரசடை கண்டி மணிதமான அங்கறாக்கு பிரப்பங்கோல் சங்கு சேமக்கலம் தோஸ்தானம் கொண்டத்தடி பிடிசொம்பு கொருடகம்பம் தப்புசேர்வை பந்துசேர்வை தாம்பாணம்

---

* தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை, தொகுதி 4, எண் 1552, ப. 61.

கால்ச்சிலம்பு துளசிமணி தம்பட்டம்சேர்வை கெருடக்கம்பம் இந்த விருதுகள் குடுத்து மேற்படி தாசனுக்கு சக்கிறாங்கிதம் உபயதேசம் செய்துயிருக்குரபடியினாலே, தாராபுரங்கெடி சமையக்காரன் கொண்டக்காரன் கோவில்த் திருநாமதாரி திக்குத் தேசபோகத்தார், காங்கயங்கெடி சமையக்காரன் கொண்டக்காரன் கோவில்த் திருநாமதாரி திக்கு தேசபோகத்தார், கரூர்க்கெடி சமையக்காரன் கொண்டிக்காரன் கோவில்த் திருநாமதாரி திக்கு தேசபோகத்தார், ஈரோடு கெடி சமையக்காரன் கோகண்டிக்காரன் கோவில்த் திருநாமதாரி திக்கு தேச போகத்தார், பழனிகெடி சமையக்கார கோகண்டிக்காரன் கோவில்த் திருநாமதாரி திக்கு தேசபோகத்தார்,

கோயமுத்தூர்க்கெடி, பொள்ளாச்சிக்கெடி, பல்லடம்கெடி, கொல்லே காலம்கெடி, சத்திமங்கலங்கெடி, உடுமலைப்பேட்டைக்கெடி, சேலங்கெடி, நாமக்கல்க்கெடி, தர்மபுரிகெடி, திருப்புத்தூர்க்கெடி, திருச்செங்கோடுகெடி, திண்டுக்கல்க்கெடி, மதுரைக்கெடி, மானாமதுரைக்கெடி, பெரியகுளம்கெடி, வேலூர்க்கெடி, ராமேஷ்பரம்ங்கெடி, புதுக்கோட்டைக்கெடி, தஞ்சாவூர்க்கெடி, கும்பகோணம்கெடி, திருவாலூர்க்கெடி, தொரயூர்கெடி, ஸ்ரீரங்கம்கெடி, வேலூர்கெடி, பாலக்காடுகெடி, மலயாளம்கெடி, நெல்லூர்க்கெடி, குண்டூர்கெடி, சித்தூர் கெடி, திருப்பதிகெடி, சமையகாரன் கோகண்டிக்காரன் கோவில் திருநாமதாரி திக்கு தேச போகத்தார், காஞ்சிபுரம்கெடி, சமையகாரன் கோகண்டிக்காரன் கோவில் திருநாமதாரி திக்கு தேசபோகத்தார், கோயமுத்தூர் ஜில்லாக்களிலும் உள்ள கிராமங்கழிலும் மற்ற சில்லாக்கழிலும் உள்ள கிறாமங்கழில் இருக்குற சமையகாரன் கோகண்டிக்காரன் கோவில் திருநாமதாரி திக்கு தேச போகத்தாரும், குடித்தனக்காரர்கழும், தேர்த்திருநாழும் கூட்டங்கழும் நாட்டங்கழும் பத்தி பாவாடறியும் சேர்வை குருசேர்வை எப்பேர்க்கொத்த காரியங்களிலும் இந்த சுப்பத்தாசனை மரியாதையாய் நடத்தி வருவீர்களாகவும்.

இந்தப்படி நடந்துவரும் ஸகல ஜநங்களேயும் திருப்பதி வெங்கிடாசலபதி லட்சுமீகர கடாட்சத்துடன் நீடூழி வாழும்படி கிருபை செய்து லட்சிப்பார் ஸ்ரீரங்கநாத சுவாமி அருளிநாலே இந்தச் சுப்பத்தாசனுக்கு திருமலைஆ தாதாச்சாரியசுவாமியாரவர்கள் எழுதி குடுத்த திருமுகப்பட்டையம்; என்னவென்றால் இந்த சுப்பத்தாசனுக்கு நட்ட கல்லும் இட்ட கட்டளையும் விகாதம்ஞ் செய்தவர்கள், இதை அளிவுபண்ண யோசினை பண்ணினவர், வுந்த வார்த்தைக்கு சம்மதமாய் அவர்களுடனே கூடினபேர் அவர்கள் வங்கசமெல்லாம் அடியற்று பஞ்சமாபாதகம்ஞ் சூள்ந்து கெங்கைக் கரையிலே பசுவைக் கொன்ற தோசத்திலே போவார்கள். இந்த சுப்பத்தாசனுக்கு அரிவோடும் குச்சித்திரம் நினையாமல் பயபற்றியாய் உபசாரத்தோடு நடத்திக்கொண்ட பேர்க்கு அஷ்டாசுபரியமும் பொருந்தி அஷ்டபோகமுண்டாகி அஷ்டலெட்சுமிகரத்தோடு அநேகங் கோடி காலம் ரங்கநாயகரை அர்ச்சுனைபண்ணிய தபோதல முண்டாகி சாயுச்சிபதம் அடைந்திருப்பார்களென்று ஸ்ரீரங்கர் நதியிலே திருமலைத் தாதாசாரிய சுபாமியாரவர்கள் யெளிதிக்குடுத்த திருமுகப் பட்டயம்.

ஸ்ரீநமோ நாறாயண மூர்த்தி கிருபகடாச்சத்திநாலே பதிநாரும் பெற்றுச் சுகமாயிருப்பார்கள். யிந்தப்படிக்கி திருமலை தாதாச்சாரிய சுபாமியாரவர்கள் ஸ்ரீரங்கநாதசுவாமி கோவில் முன்னே எளிதிக் குடுத்த திருமுகப் பட்டயம. ரங்கநாதசுபாமி துணையிருந்து லச்சிக்கவும். வேணுந் தெண்டாயுதபாணி லச்சிக்கவும். ஸ்ரீகிஷ்ட்டண மூர்த்தி லச்சிக்கவும். குருவே துணை உ

# 78. நாரணபுரம் செப்பேடு

கோயமுத்தூர் மாவட்ட ஆட்சித் தலைவர் மூலமாகப் பெறப்பட்டு இச்செப்பேடு மைய அரசு தொல்பொருள் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினரால் படி எடுக்கப்பட்டுள்ளது.*

வாரக்கநாடு பல்லடம் கஸ்பா நாரணபுரம் அங்காளபரமேசுவரிக்கு ஏற்கெனவே நடந்துவந்த பல கொடைகளுடன் புதிய கொடைகள் அளிக்கப் பெற்றதை இச்செப்பேடு குறிக்கிறது.

26-9-1800 அன்று இச்செப்பேடு வெட்டப்பட்டது. மைசூர் அரசர், திப்பு இவர்களைப் பற்றிய குறிப்புகளுடன் கிழக்கிந்தியக் கம்பெனி அலுவலர் ஆர்டீசு பற்றிய குறிப்பும் இச்செப்பேட்டில் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

குப்பபூசாரி மகன் சித்தபூசாரி என்பவர் கோயிலுக்குப் பூசாரியாக நியமிக்கப் பெற்றதைக் காணுகிறோம். கொங்கு மண்டலத்துப் பல ஊர்க் கவுண்டர்கள், முதலியார், நாயக்கர், வன்னியர், செட்டியார் போன்ற பலர் சேர்ந்து வருட உற்சவம், திருக்கலியாணம் இவைகள் நடத்தக் கொடைகள் விட்டு விழாவிற்கும் தக்க ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றனர்.

## மூலம்

அங்காழஅம்மன் துணை.

உ சுகாஷ்றி மகாமண்டலீசுரர் ஆரியதள வியபாடன் ஈளமும் யாபாணமும் மேல்மண்டலமும் திரைகொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன் ராசகேசரி மருமன்னிய மகுடாலயறாகிய மகாறாயப் பிறவுடைய தெய்வ மகாறாயர் கிஷ்ணறாயர் இஷ்றீ மகாதேவறாயர் இவர்கள் பிறிதி றாச்சிய பரிபாலனம் பண்ணி அருளாநின்ற காலத்தில் ராய றாணுவத்துக்கு கற்த்தறாகிய விசுவனாதநாயக்கர், திருமலைநாயக்கர் அருளாநின்ற காலத்தில் மசூரு சமஷ்த்தானம் கர்த்தர் தளவாய் அயிதலு பாதரு நபாபு, டிப்பு சுலுத்தான் பாஷ்சா அருளாநின்ற காலத்தில் மகாமண்டலீசுபரராகிய குப்பினி துரையவர்கள் ராச்சிய பரிபாலனம் பண்ண,

* ARE (A) 2 of 1910

மகாறாயஷ்திரி ஆற்டீசு துரையவர்கள் புளப்பில், கிஷ்ணறாயர் சபையில் வாரக்க நாட்டுக்குச் சேந்த பல்லடம் கசப்பை நாரணாபுரம் குருகுல வம்முசம் நல்லண கவுண்டர் குமரர் ஆதி நாறாயண கவுண்டர் ஆதீனத்தில் அவர் கவுண்டிக்கையில் சாலிவாகன சகாத்தம் 1722 ம் வருஷம் கலியுக சகாத்தம் 4899 க்கு மேல் செல்லாநின்ற ரவுத்திரி வருஷம் ஆவிணி மாஷம் 16 தேதி சுக்கிரவாரமும் திசமியும் மூல நட்செத்திரமும் பிறிதிநாமஓகமும் வாணிகா வாகரணமும் பெற்ற சுபதினத்தில்.

நாறணாபுரம் அங்காளபரமேசுபரி ஒரு ஊரை ஏளுரு பண்ணிந போது முன் பூருவீகத்திலுள்ள கவுண்டர் குடிகள் கணக்கப்பிள்ளை துரையள் கூடிப் படித்தரத்துக்கு மானிபம் விட்டு வீடு மானிபம் பச்சை குளகம் கட்டுக் கருது நடந்து வந்துது. இப்ப குப்பபூசாரி மகன் சித்தபூசாரி நிலைநாட்டுச் செய்து குருகுல வம்முஷம் நல்லண கவுண்டர் குமாரர் ஆதிநாராயண கவுண்டர், தெய்வசிகாமணி, கணக்கப்பிள்ளை நாகப்ப கணக்கப்பிள்ளை, குடியானபோர்களுங் கூடி நாரணாபுரம் அங்காள பரமேசுபரிக்கு நித்தியப்படி அவிஷேகக் கட்டளை நெய் விளக்கு திருமாலை திருமஞ்சனம் திருப்பணி திருப்பலகை பள்ளையம் கொண்டம் யிதுமுதலாகிய தா்மம் நடந்து வருகிற தா்மத்தை உண்டுபண்ணி வச்சு தா்மம் சாதனப் பட்டையம் கட்டளை இட்டது.

குருகுல வம்முஷம் நல்லண கவுண்டர் குமாரர் ஆதிநாறாயணகவுண்டர், வேலம்பாளையம் கொடுமளனுச் சேரகுலம் அவினாசிக் கவுண்டர், கொத்தனூர் பெரிய குலம் முத்துப் பழனிக் கவுண்டன், சின்னத்தம்பிக் கவுண்டன், காடையூர் முளுக்காது குலம் முத்துக் கவுண்டன், வள்ளியறச்சல் ஆந்தைகுலம் மாரப்ப கவுண்டன், சின்னணன் காளமங்கலம் கண்ணந்த குலம் ராசாக் கவுண்டன், அனுமன்பள்ளி செல்லகுலம் சின்னத்தம்பிக் கவுண்டன், முருங்கத்துளு பெரிய குலம் வடிவேலப்ப கவுண்டன், குப்பாண்டாக் கவுண்டன் தலையநல்லூர் கூரைகுலம் வேட்டையாக் கவுண்டன், ரங்கயக் கவுண்டன், பூந்துறை காடைகுலம் பொன்னாக் கவுண்டன், நசையநூரு கண்ணந்தை குலம் நஞ்சைய கவுண்டன், வேளராசி குளாயகுலம் கோவிந்த கவுண்டர், றாமய கவுண்டர், பட்டக்காரர் சுக்கிரமணிய செட்டியார், ஆறுமுகமுதலியார், சண்முக முதலியார், திண்டல் இடும்ப கவுண்டன், ஆண்டிநாயக்கன், வன்னியகுலம் குட்டியணன், கறுப்பணன், சேடபாளையம் கருமாபுரம் காடையூர் பிரளந்தை கோத்திரம் கந்தப்பகவுண்டன், அமராபதிக்கவுண்டன், செங்காளியப்பகவுண்டன், வடமலைக் கவுண்டன், சின்னியகவுண்டன், வட்டமலைக்கவுண்டன், சின்னியகவுண்டன், செங்காளியப்பகவுண்டன், முக்திராயர் காளியப்பகவுண்டன் ,

பரஞ்சேர்வளி ஓதாளகுலம் கூளைக்கவுண்டன், ஆறுமுகத்தாக்கவுண்டன், காளிப்பகவுண்டன், குளந்த கவுண்டன், பரஞ்சர்வளி ஆவகுலம் பளனிக்கவுண்டன், பரஞ்சேர்வளி ஆடைகுலம் குமார வேலப்பகவுண்டன், முத்தூர் முத்தகுலம் குளந்தக் கவுண்ட, மளுவறாய நயினாக்கவுண்டன், தேவாங்க பலனா செட்டி, குப்பிசெட்டி, சிவமலைசெட்டி, ஓடத்துறை முத்தூர் முத்தகுலம் சின்னாரு கவுண்டன், குளந்த கவுண்டன், சின்னப்ப கவுண்டன், பெருந்துளு ஓதாளகுலம் ராமையகவுண்டன்,

நாறாயண கவுண்டன், அத்தப்ப கவுண்டன், கருமாபுரம் காடையூர் பிரளந்தை கோத்திரம் ராக்கியாக் கவுண்டன், கருமாண்டைக் கவுண்டன், பரஞ்சேர்வளி ஆவ்குலம் சுக்கிரமணியக் கவுண்டன், சமய முதலிப் பட்டக்காரத் தேவண முதலி, அம்மபாளையம் வெள்ளோடு சாத்தந்தை குலம் பெரியண கவுண்டன், ராசாக்கவுண்டன் பாளையம் நாநிக் கவுண்டன், மாணிக்காபுரம் வெள்ளைகுவல் ஆந்தைகுலம் செல்லப்பகவுண்டன், நத்தக்காடையூர் பழையகோட்டை பயிரகுலம் கரிச்சிக்கவுண்டன், வேலம்பாளையம் வெள்ளைகோயில் ஆந்தைகுலம் சுக்கிரமணிய கவுண்டன், மூனும் ஆடை குலம் உத்தண்டிக் கவுண்டன் சகலமான பேரும்,

நாறணாபுரம் அங்காள பரமேசுபரிக்கு நித்தியப்படி அபிஷேகக் கட்டளை நெய்விளக்குத் திருமாலை திருமஞ்சனம் திருப்பணி திருவுலகை பள்ளையம் கொண்டம் நடந்துவருகிறபடியினாலே பூசாரியை நிலைநாட்டுச் செய்து முன் பூருவீகத்திலுள்ள காடு மானியம் வீடு மானியம் பண்ணையம்தோறும் கட்டுக்கருது குளகம் யிடைப்பிச்சை யிதுவெல்லாம் முன்பூருவீகம் நடந்தது ஆதிநாறாயணக் கவுண்டரவர்கள் குடியானவர்கள் வந்த்தகரும் வருஷாபாதி கொண்டம் திருக்கல்யாணம் நடந்து வருகிறபடிக்கு குடிக்கி ஒரு பணம் கல்யாணமாலை ஒரு பணம் கொண்டத்துக்கு குடிக்கி நாலு சுமை கரும்பும் புத்திரா பவுத்திர பரம்பரையாகக் கல்லுங் காவேரியும் புல்லும் பூமியும் சந்திர சூரியர் உள்ளவரைக்கும் இந்த தற்மம் நடத்திக் கொடுத்து வருவாராகவும்.

இந்த தர்மத்துக்கு யாதாமொருவர் ஆற்ச்சயம் பண்ணின பேர் காசிக்கங்கையிலே காராம்பசுவை வதைத்த சகஷ்ற விர்மத்தியை வதை செய்த பாவத்திலே போவாராகவும். தர்ம்மம் நடத்தின பேர்கள் காசியிலே சதா கோடி லிங்கம் பிரதிஷ்டை பண்ணின பலன் பெறுவாராகவும். அம்மன் துணை.

# 79. அலைவாய்மலைப் பட்டயம்

ஒரு வழக்கின்பொருட்டு நீதிமன்றத்திற்கு இச்செப்பேடு சென்றுள்ளமையால் கிடைத்த காகித நகலைப் பெற்று இங்கு வெளியிடப்பெறுகிறது.* சேலம் மாவட்டத்திலுள்ள மின்னாம்பள்ளி, கொமரசாமிபட்டி, கண்ணங்குறிச்சி, பாலப்பட்டி, அயோத்தியாபட்டணம் போன்ற பல்வேறு ஊர்களில் உள்ள கவுண்டர், உடையார், மூப்பர், ஆண்டி, செட்டியார், சாலியர், சேடன், பட்டுநூல்காரர், கைக்கோளர், அகம்படியர், கம்பளத்து நாயக்கர், பிள்ளை, ஆசாரிகள் முதலிய பல தரப்பட்ட மக்களும் அத்தனூர் அம்மன் சந்நிதியில் மகாநாடாகக் கூடினர். எல்லா ஊர்க் கணக்கர்களும் அம்மாநாட்டில் கலந்து கொண்டுள்ளனர்.

அலைவாய்கிரி சுப்பிரமணியருக்கு ஏர் பிடித்து உழுதவர்கள் ஏர் ஒன்றுக்குக் கால் பணமும், பலபட்டடைகளும் செட்டியாரும், வர்த்தகர்களும் தலைக்கட்டுக்குக் கால்பணமும், பெரிய கெடிக்கு 5 பணமும், சின்னக் கெடிக்கு 3 பணமும் மகமையாகச் செலுத்த வேண்டும் என்று ஒப்புக் கொண்டு எழுதிக் கொடுத்த செப்பேடு. பலருடைய கையொப்பமும் இறுதியில் பெறப்பட்டுள்ளது. 27.2.1787 இல் மைசூர் கிருஷ்ணராச உடையார் காலத்தில் இச்செப்பேடு எழுதப்பட்டதாகக் கூறப்படுகிறது.

வையாபுரி ஆசாரி, சிதம்பர ஆசாரி ஆகியோர் இச் செப்பேட்டை எழுதியுள்ளனர்.

## மூலம்

ஸ்வஸ்தி ஸ்ரீ விஜயாத்புதய சாலியவாகன சகாப்த்தம் 1708 கலியாப்தம் 4887 இதின்மேல்ச் செல்லாநின்ற பராபவ வருஷம் மாசி மாதம் 19 மங்கள வாரமும் உத்திராயணமும் கெதியு புணர்பூச நட்செத்திரமும் ஆயுட்டு ஜானநாம யோகமும் கெரிசை வாகரணமும் யிந்த சுபதினத்தில் ஸ்ரீமத்தி ராசாதிராச ராசபரமேசுவர ராசமார்த்தாண்ட ஸ்ரீவீரப்ரதாப பூர்வ தெட்சண பச்சிம உத்தர சமுத்திராதீசுரனான பிருதிநதிம் பிற கொட காணி வாங்க பிறிதிம்பி சேமப்

---

* இந்நகலை அளித்தவர் நாமகிரிப்பேட்டை புலவர் வெ.இரா.துரைசாமி அவர்கள்.

பிறதாப மயிசூர்கிஷ்ணராசஉடையாரய்யனவர்கள் ஸ்ரீரங்கப் பட்டனத்தில் ரத்நினசிம்மாசனருடராய் பிரிதிவி சாம்றாச்சியம் பண்ணுகையில்,

சேலம் நாட்டுக்கு சேர்ந்த தெட்சணத்தியிலிருக்கும் அலையாகிரி பறுவதத்தில் சுப்பிரமணிய சுவாமியாருக்கு திருத்தேர் திருவிழாப் படிக்கு சேலம் மின்னாம்பள்ளி முதலிக் கவுண்டர், பிறமிச்சீ கவுண்டர், பெரியாக் கவுண்டர், கொமற சாமிபட்டி கொமறசாமிக் கவுண்டர், கணக்கு சுப்ரமணியமுதலி, புதூர் கொமற கவுண்டர், பெரியேரி ஆலாக் கவுண்டர், கண்ணங்குறிச்சி லெட்சும கவுண்டர், சின்னாபிள்ளை, கணக்கு றாமனாதமுதலி, பாலப்பட்டி வடிவேல் கவுண்டர், கணக்கு கொமறசாமி முதலி, அம்மா பேட்டை சின்னாருடையார், வரிசைப்புடையார், கணக்கு வீரப்ப முதலியார், எரமாபாளையம் திருமலை மூப்பன், தனஞ்சையா கவுண்டர், கணக்கு சுப்பையன், அண்ணதாரிபட்டி செயப்பறுவத கவுண்டர், தாச கவுண்டர், கணக்கு முத்தைய முதலி, அழகாபுரம் மெய்போக செய கவுண்டர், அத்தம்பட்டி குள்ளப்புடையார், அயோத்திப் பட்டணம் கருப்ப கவுண்டர், பிச்சத்தாத கவுண்டர், உடையாபட்டி விணைதீத்தா கவுண்டர், அதியாரிபட்டி, குமரப்புடையார், கணக்கு வெங்கிடகிரி, பள்ளியப்பட்டி திருமலை கவுண்டர், வேலப்பம்பட்டி பச்சய கவுண்டர், கணக்கு விணைதீத்தா முதலி, மின்னாம்பள்ளி சின்னாருடையார், காரிபட்டி மலைய கவுண்டர், குள்ளம்பட்டி வயித்தி உடையார், பெரிய கவுண்டாபுரம் சீரங்கனாயக்கர், கணக்கு ராமசாமி,

சேலநாடு சேருவாமலை, கருத்தாண்டி கவுண்டர், முட்டநாடு மலைய கவுண்டர், கரியாண்டி கவுண்டர், முகநாடு சொக்காண்டி கவுண்டர், வற்த்தகரில் கோமுட்டி ராமி செட்டி, றெங்கி செட்டி, அம்மாபேட்டை வேலாயுத செட்டியார், றாமசாமி செட்டியார், செவ்வாய்ப்பேட்டை சுப்பி செட்டியார், குமறசாமி செட்டியார், குட்டி செட்டியார், எழுத்துக்கார செல்வராய செட்டியார், சாலிய வெங்கிடபதி செட்டியார், சேட திருவேங்கிட செட்டியார், பட்டுநூல் நாகி, பொன்னம்மா பேட்டை சேட சின்னா செட்டியார், குப்பி செட்டி, சுங்கம் நாலுக் குமரேச பிள்ளை, அய்யன் வாரக்கள தெட்சன ஓபளி ஆட்டையாம்பட்டி றாய கவுண்டன், திருமலை கவுண்டர், பெருந்தலை கவுண்டர், கணக்கு வெங்கிடாசல முதலி, வெண்ணந்தூரு நல்லய கவுண்டர், கணக்கு யீசுரய்யன், தெவீரிசெட்டி, கய்க்கள சின்ன கண்ணி, உத்தம சோழபுரம் தீராவினை தீத்தானவர்கள், நெல்லவநாப்பட்டி பச்சைய கவுண்டர், வீரபாண்டி பெரியா கவுண்டர், கந்தப்ப கவுண்டர், சின்னாசெட்டி, கணக்கு உத்தண்டி முதலியார், மல்லூரு காத்தி கவுண்டன், கூத்த கவுண்டர், கணக்கு தீத்தகிரி அய்யன், கீரனூரு முத்துக் கவுண்டர், முத்தன கவுண்டர்,

கொமாரபாளையம் கய்க்கள எழுகரை நாட்டு பட்டக்கார முதலி, கணக்கு வேங்கடலிங்கையன், பனமரத்துப்பட்டி கம்பள ராம நாய்க்கர், கணக்கு பெரியதம்பி, கோரனத்தம் வடமலை கவுண்டர், பெருமா கவுண்டர், சிவசங்கர முதலியார், அலவாய்ப்பட்டி பழனி கவுண்டர், செங்கோட கவுண்டர், மொழுக்கன் சொங்கோட கவுண்டர், திருவளத்தான் செங்கோட கவுண்டர், கணக்கு சுப்பையன் குப்ப பிள்ளை, தயிலா முதலி, மல்லப்ப முதலி, அக்கரைப்பட்டி ராசாக் கவுண்டர், முத்துநல்லாக்

கவுண்டர், முத்து கவுண்டர், பெருமா முதலி, சிவமலை, கணக்கு ரெங்கயன், சென்னகிரி சின்னா கவுண்டர், நல்லய கவுண்டர், அண்ணாமலை கவுண்டர், சீரங்காண்டி செட்டியார், பழனி செட்டியார், தயிலக்கார முதலியார், சங்கோதி முதலி, கணக்கு பழனியப்ப முதலியார்,

வேம்படிதாளம் நயினா கவுண்டன், பெரியராசா கவுண்டர், நல்லாக் கவுண்டர், கணக்கு கணபதி முதலி, தயிலா முதலி, தம்பா செட்டியார், கயிலாசம், இளம்பிள்ளை பெரியாக் கவுண்டர், திருமலை செட்டியார், சித்தம்பல செட்டியார், தொட்ட செட்டியார், கணக்கு அருணகிரி முதலியார், வாணியம்பாடி குட்டிய கவுண்டர், குப்பி நாய்க்கன், கணக்கு சுப்பையன், போதமலை காளி, மோவன வீரபாண்டி சுங்கம் சாமய்யன், வெண்ணந்தூர் சுங்கம் பெரியண்ண கவுண்டர், மல்லூரு சுங்கம் கயிலாச முதலி, மேல்மாகானம் திருமலைகிரி, தம்மன்ன கவுண்டர், சின்னா கவுண்டர், கணக்கு நாகப்ப முதலியார், மூடிதுறை நாச்சி மூப்பன், முருங்கப்பட்டி ரங்க கவுண்டர், பிரமிச்ச முதலியார், கருக்கல்வாடி திம்மண்ண கவுண்டர், லிங்கய்யனவர்கள், கணக்கு கொமறசாமி முதலி, செல்லப் பிள்ளை, குட்டை தாவாக் கவுண்டர், கட்டைய படையாச்சி, கணக்கு சுப்ரமணிய முதலியார், தளவாய்பட்டி அடைக்கல கவுண்டர், முத்துமாங்குப்பனாயி, பெருமா கவுண்டர், வெள்ளைய கவுண்டர், கணக்கு ஆறுமுகம், தொறாசி நத்த கவுண்டர், சோளி கவுண்டர், கணக்கு ராமனாதன்,

செவதாபுரம் வடமலை கவுண்டர், மாரா கவுண்டர், கணக்கு வெங்கிட சுப்பையன், தாத்தக்கார பட்டி சென்னராய செட்டியார், சுங்கம் சாமிநாத முதலி, வெளியுருபள்ளி வீரப்பனாய்க்கர், கணக்கு அறுணாசல பிள்ளை, அரியான்செட்டி, சிங்கிபுரம் பச்சமுத்து கவுண்டர், கணக்கு குட்டியப்ப முதலி, வாழப்பாடி பழனிக் கவுண்டர், வெங்கிடாசல செட்டி, கணக்கு நயினா முதலி, அனுப்புரம் பிச்ச கவுண்டர், கணக்கு முத்து முதலியார், வெள்ளைய செட்டியார், நரசிங்கபுரம் ஏகாம்பர மூப்பன், ராம செட்டியார், கணக்கு சுப்பையன், பாரிதேசி பெத்தனாய்க்கன், மாந்தியம் வேல கவுண்டன், ஆரிக் கவுண்டன், கணக்கு கொமறசாமி, திருவேங்கிட செட்டியார், மூக்கி செட்டியார், குறிச்சி முத்துக் கவுண்டர், மும்முடி செட்டியார், கணக்கு சிவகுருநாத முதலி, பனமடல் வெங்கிட னாயக்கர், முருக கவுண்டர், கணக்கு கற்பக முதலியார், புத்திர கவுண்டன் பாளையம் நல்லகட்டியாபிள்ளை, கவுண்ட முத்தாபுள்ளை, கல்லியாணகிரி ரெங்கமநாய்க்கர், வேப்பிலைப்பட்டி அறணாமலை கவுண்டர், அண்ணாமலை கவுண்டர், வல்லாளகுண்டம் பெருமா மூப்பன், மசைய மூப்பன், மோட்டுப்பட்டி சின்னயிளையா கவுண்டர், சிந்தாமணி கவுண்டர், கம்மாளபட்டி திருமலை கவுண்டர், பொன்னுமலை கவுண்டர், சாமிநாத முதலி, குப்பையனவர்கள், கணக்கு சுப்ப முதலியார், னாட்டமங்களம் சின்னாருடையார், முருகப்புடையார் வெள்ளையகவுண்டர், சேலம் ஆவண ஆசாரி, காளி ஆசாரி, பச்சை ஆசாரி, ராமநாதசாரி, கன்னார அளகிரிபத்தன்,

சீர்மை முதலியனவும் கொல்லு தச்சு உள்பட நாங்கள் நாலு மாகாணத்து கவுண்டர்கள் குடியான பேர்கள் கணக்கப்புள்ளை மணியக்காரர் பலபட்டடை

செட்டி வர்த்தகர் எப்பேர்பட்ட வர்த்தகரும் மகாநாடு கூட்டம் அத்தனூர் அம்மன் சந்நதியில் சகல சனங்களும் கூடியிருக்கையில் லோகாதி லோகத்துக்கு கர்த்தரான பரமேசுவரர் குமாரராகிய அலையாகிரி சுப்பிரமணிய சுவாமியாருக்கு திருத்தேர் திருவிழாப்படிக்கு எப்பேர்பட்ட சகலமான சாதிக்கும்,

மேழி பிடிச்சு உழுத பேருக்கெல்லாம் வருஷம் 1க்கு ஏரு 1க்கு பணம் 1/4 மேரைக்கும், பல பட்டடை செட்டி வர்த்தகர்கள் எப்பேர்பட்ட சாதிக்கும் தலைகட்டுக்கு பணம் 1/4 மேரைக்கும், சுங்கம் 1க்கு பெரியகெடி 5 பணம், சின்னகெடி பணம் 3 யிந்த மேரைக்கு சகல சனங்களும் னாங்களாக சம்மதிச்சு சந்திராதித்தியர் உள்ளவரைக்கும் யிந்த தர்ம நடப்பிச்சுக் குடுக்குரோம்மென்று எழுதிக்கொடுத்த தாம்பர ஸாஸநம். யிந்த தர்மத்தை பரிபாலனம் பண்ணின பேருக்கு புத்திர பவுத்திராதியளோடே சுகமாயிருந்து கெங்காஸ்நானம் பண்ணின பலன் சித்தமாயுண்டு. இந்த தர்மத்துக்கு விக்கினம் பண்ணின பேருக்கு கங்கை கரையில் காராம்பசுவை கொன்ற தோசத்தில் போகக் கடவனாகவும். பஞ்சமாபாதகம் செய்த தோசத்தில் போகக் கடவோனாகவும். சுப்பிரமணிய சாமியார் ரெட்சிப்பார்.

இதுக்கு சாட்சி ஆகாசவாணி பூமிதேவி அத்தனூர் அம்மன் அக்கரைப்பட்டி முனியப்பன். யிந்த மேனிக்கு சம்மதிச்சு கையெழுத்து போட்டது. அனைவர் சம்மதியில் தெட்டனாபள்ளி தீராவினை தீத்தான், நல்லைய கவுண்டர், மேல் மாகானம் நாச்சி மூப்பன், பச்சையா கவுண்டர், குமற கவுண்டர், சின்னபுள்ளை, பச்சை முத்து கவுண்டர், எழுதினவன் வையாபுரி ஆசாரி, சிதம்பர ஆசாரி, அண்ணாமலையார் துணை. வினாயகர் துணை.

# 80. வனவாசிச் செப்பேடு

தாரமங்கலம் பெரியசாமி அய்யரிடமிருந்த செப்பேட்டை ஓமலூர் தாசில்தார் மூலம் பெற்று மைய அரசுத் தொல்பொருள் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் படி எடுத்த செப்பேடு.* சீவெல் பட்டியலிலும் இச்செப்பேடு இடம் பெற்றுள்ளது.

குன்னத்தூர் வடசாவடி (சங்ககிரி) வஞ்சிநாடு காவேரிபுரச் சீமையைச் சேர்ந்தது வனவாசி. அங்குள்ள சோமேசுவரர் கோயிலுக்குப் படித்தரம், தீபாராதனைக்கு முன்பு நிலம் கொடையாக விடப்பட்டிருந்தது. கோயில் சீர்ணமாகப் போய்விட்டதனால் நிலமும் அரண்மனையாரைச் சேர்ந்து விட்டது. அப்பொழுது மைசூர் மன்னர்கள் ஆண்டுவந்தனர்.

பலபட்டடையார்களில் செட்டியார்களில் செட்டியப்பன் என்பவர் சோமீசுவரர்கோயிலைத் திருப்பணி செய்தார். அதனால் அக்கோயில் நிலம் மீண்டும் கோயிலுக்கு அளிக்கப்படவேண்டும் என்ற வேண்டுகோளை ஏற்று மணியம், கணக்கு, சேனபோகம், சுபேதார் அவர்கள் ஆணைப்படிக்கு ஊர் மக்கள் விருப்பப்படிக்கு நிலம் மீண்டும் கோயிலுக்கு அளிக்கப்பட்டது. இதற்குரிய இச் செப்பேடும் சோமீசுவரர் சந்நிதியில் எழுதப்பட்டுள்ளது. இச்செப்பேடு எழுதப்பெற்ற ஆண்டு 1-8-1775 ஆகும். (காலக்குறிப்பு முழுவதும் சரியாக இல்லை).

இதே செப்பேட்டில் மேலும் ஒரு கொடைச் செய்தி 27-5-1776 அன்று எழுதப்பட்டுள்ளது. நங்கவள்ளி தேவஸ்தானம் பாரபத்தியம் வேலாயுத பிள்ளை, வெங்கிட சுப்பய்யன், வெங்கடாத்திரிக் கவுண்டன், பூமாலை செட்டி, வெங்கிட்டி ஆசாரி மற்றுமுண்டான பலபட்டடையார், பலசாதியார்கள் அனைவரும் கூடிச் சூரப்பள்ளி என்னுமிடத்தில் வனவாசிச் சோமீசுவரர் கோயிலுக்குக் கொடைநிலம் அளித்துள்ளனர்.

## மூலம்

சுவஸ்த்திரி விசயாபித்தர் சாலியவாகன சகார்த்தம் 1698 கலியுக சகாத்தம் 4876 யிதின்மேல் செல்லாநின்ற மன்மத நாம வருஷமும் தெஷ்ணாயனமும் வருஷ

* ARE (A) of 1943; Sewell's list C.P.No., 195.

ரிதுவும் சிறாவண மாசமும் சுக்குல பட்சமும் பஞ்சமியும் சுக்குற வாரமும் புஷ்ய நட்சத்திரமும் சுபயோக சுபகறணமும் பெத்த சுபதினத்தில்,

சீமது றாசாதிராச ராசபரமேசுவர றாசமாற்த்தாண்ட பிறவுடப் பிறதாபந் பிரிதிம் பூறுவ தெட்சிண பச்சிம உத்திரச் சதுச்சாகர மத்திய விற்தி மயிசூர் சமஸ்த்தானம் ஆளுகின்ற இம்முடி வீரறாசருடையாரவர்கள் மயிசூர் ஸ்தா ரத்திந சிம்ஹாஸநாரூடராயி பிறதிவி சாம்பிராச்சியம் பண்ணி அருளாநின்ற காலத்தில் மயிசூர் சீர்மைக்கு சேந்த குன்னத்தூர் வடசாவடிக்கு செல்லாநின்ற வஞ்சிநாட்டில் காவேரிபுரம் சீமைக்கு சேந்த வனவாசி சோமேசபரர் சாமியாறுக்கு ராசஸ்ரீரிசு பட்டைய்யனவர்கள், சேனபோகிய் அப்பாச்சி அய்யன் அவர்கள், அனந்தனாரண அய்யன், வெங்கிட்டராமய்யன், வேலாயுதஅய்யன், அழகுசிங்கிரிஅய்யன், சேஷஅய்யன், அஸ்த்தத்துக் குப்பய்யன், அரிக்கார லச்சுமகாந்தய்யன் அப்பணைப் பிரகாரத்துக்கு வனவாசி சோமீசுவர சுவாமியார் படித்திர தீபாராதினைக்கு பூர்வமானியம் விட்டு சாசன எழுதிக் குடுத்த விபரம்.

யிந்த வனவாசி கிராமத்து மணியம் முத்தய்யனவர்கள், கணக்கு ஆறுமுகத்தா பிள்ளை, சேனபோக தென்பழனி மாதைக்கவுண்டன், ராசாக் கவுண்டன், ராமிரெட்டியார், அனுராமூப்பன், தேவராடி பாவாடைமூப்பன், தேவாங்க வேங்கடசெட்டி, சித்தம்பலமுதலி, சடையசெட்டி, பெரியராவுத்தன், சாத்தான், வனவாசியன், காளியாண்டி, னாங்களித்தண்டத்தாரும் ராயஸ்ரீரி சுபாதாரய்யனவர்கள் அப்பணைப்படிக்கும் சம்மதிச்சு சாசன எழுதி குடுத்த தற்மம்.

என்னென்றால் பூர்வம் சோமீசுவர சுவாமியாருக்கு படித்திரா தீபாராதினைக்கு நடந்த கொல்லை யிந்த சாமியார் சன்னதி சீர்ணமாயி போயிருந்தபடியினாலே யிந்த கொல்லை அரமனைக்கு சேந்து யிருந்தது. யிப்பரம் யிந்த சோமேசுவர சுவாமியார் அனுக்கிரகத்துனாலே பலப்பட்டடையார் தர்மத்தினாலே வனவாசியில் யிருக்கும் செட்டிகளில் பெரியாசெட்டி மகன் செட்டியப்பன் யிந்த சன்னிதானத்தை சீர்ண உத்தாரம் பண்ணிவச்ச தம்ம சாசுவதமாயி நடக்கிராப்போலே சருவ மானியமாக சகலமான பேரும்ங் கூடி அரமனைஆரை அப்பணை கேட்டுகொண்டபடியினாலே யித்தண்டத்தாரும் கூடி சம்மதிச்சு சோமீசுரசுவாமியாருக்கு படித்திற தீபாராதினை நடக்குராப்போலே ஆச்சந்தறார்க்கமாயி நடந்துவரத்தக்கதாக கொல்லையள்ளை சறுவமானியமாக சாமியாருக்கு சம்பளம் பண்ணிவிட்டோம்.

அந்த கொல்லை விபரம் கோட்டை மேட்டுத் தாறுக்கு னகரம் ரேகை பணம் கால் பணம், பாறைத்துண்டுக்கு ரேகை பணம் 7, ஆலாமரத்துத் தாறுக்கு ரேகை பணம் 1, புங்கைத்தாறு 2 துண்டு 1 உள்பட ரேகை பணம் 4 பணம் யிந்த நாப்பது காடும் சாமியார் படித்திர தீபாராதினைக்கு ஆச்சந்திறார்க்கமாயி நடந்தபடிக்கி சாசனம் எளுதி வய்ப்பதாக சுப்பய்ய குருக்கள் கய்யிலே தானபூறுவமாக குடுத்தோம்.

யிந்த கொல்லையிலே மேல்நோக்கிய மரமும் கீழ்னோக்கிய கிணறும் எப்பேரான பலனும் சாமியாருடைய படித்திர தீபாராதினைக்கு நடந்துவாறபடிக்கு

சகல பேருக்கும் சம்மதிச்சு சாசன எழுதிக்குடுத்தோம். யிதுக்கு சாச்சி எந்தியாக் கவுண்டன், எக்கிபூச்சிரெட்டியார், நங்கபளி ராமலிங்கயன், சீரங்க சேருவகார முத்தப்பன், அஞ்சினாயக்கன், சோளபாண்டி வீரண்ணன், கரித்திம்மனாயக்கன், மாங்காய்த் தாச மகன் ஆதிமூலம் கவுண்டன், வீரகல்லு கணக்க நஞ்சயன், வெங்கிட்ட மூப்பன், நல்லாகவுண்டம்பட்டி பெத்திரட்டி, சிட்டயபிள்ளை, கெம்பண கவுண்டன் யித்தண்டத்தார் சாச்சியாயி சன்னதியில் எழுதின சாசனம்.

யிந்த தர்ம்மத்தை பரிபால்லியம் பண்ணிக்கொண்டு வந்தவாள் காசியிலே கோடிலிங்கம் பிறதிஷ்டை பண்ணின பலனை, கோடி கோதானம் பண்ணின பலன், கோடி பிரம பிறதிஷ்டை பண்ணின பலன், கோடி கன்னிகாதானம் பண்ணின பலன் அடைவார்கள். யிந்த தற்மத்துக்கு விகாதம் யாதாமொருத்தன் பண்ணினால கெங்கைக் கரையிலே கராம்பசுவைக் கொண்ண தோசமும் ஸ்ரீஅத்தி பிறமஅத்தி சிசுவத்தி பஞ்சமா பாதகம் வந்து வங்குசம் நஷ்ட்டமாயி போவார்கள். அப்படி வராமல் சோமீசுர சாமியாருக்கு ஆச்சந்திரார்க்கமாயி நடத்திவச்சுக் குடுத்து சிவபூசா பலனை அடையவும். சோமீசுர சாமியார் லட்சிப்பார்.

துன்மிகி வரிசம் வய்யாசி மீ 18 உ காவேரிபுர சீர்மைக்கு சேந்த வனவாசி கிராமத்தில்யிருக்கும் சோமீசுரசாமியார் அவர்களுக்கு படித்திர தீபாராதனைக்கு நங்கபளி தேவஸ்த்தான பாரபத்தியம் வேலாயுத பிள்ளையவுகள், சின்ன பாறவத்தியம் செல்லப்பபிள்ளையவர்கள், சேனபோக வெங்கிட சுப்பய்யனவர்கள், தாசய்யனவர்கள், பெரியணபிள்ளையவர்கள், மணியாரி கவுண்டன், திருமலைய்யன், வெங்கிடாத்திரி கவுண்டன், அம்பலவ கவுண்டன், அஞ்சக்கார மாரிசெட்டி, எரப்பிரட்டி, பூமாலைசெட்டி, குமரிசெட்டி, தேவாங்க ரங்கிசெட்டி, பொம்மிசெட்டி, லோகிதாசசெட்டி, னாகிசெட்டி, நாட்டாமைக்கார சித்தம்பலமுதலி, செக்கார் நஞ்சயன், வெங்கிட்டிஆசாரி, மாரிஆசாரி, மத்துமுண்டான பலபட்டடையாரும் சம்மதிச்சு வுட்ட மானியம். சூரப்பள்ளி துண்டு மானியத்தில் கலியன்ந்தாறு ஆதிமூலசேருவ கார ஹுளவிடை கெளக்கு மேர்க்கு ஆலாமரத்துத்தாறுக்கு பணம் 20. யிந்த யிருபது பணத்து தாறும் சொமீசுபர சாமியார் படித்திர தீபாராதனை கட்டளைக்கு விட்டது.

யிந்த தர்ம்மத்தை பரிபாலியம் பண்ணிக்கொண்டு வந்தவர்கள் காசியிலே கோடிலிங்கப் பிறதிஷ்டை பண்ணின பலன், கோடி கோடி தானம் பண்ணினபலன், கோடி பிறம்ம பிறதிஷ்ட்டை பண்ணின பலன், கோடி கண்ணிகாதானம் பண்ணின பலன் அடைவார்கள். யிந்த தர்மத்துக்கு விகாதமா யாதாம்மொருத்தன் பண்ணினால் கெங்கைக் கரையிலே காராம்பசுவை கொண்ண தோசமும் ஸ்ரீ அத்தி பிருமத்தி சிசுவத்தி பஞ்சமாபாதகம் வந்து வங்கிசம் நட்டமாயி போவார்கள். அப்படி வராமல் சோமீசுபர சுவாமியாருக்கு ஆச்சந்திரவர்க்கமாயி நடத்திவிச்சு குடுத்து சிவபூசா பலனை அடையவும். சொமீசுபரசாமியார் லச்சிப்பார்.

# சொல்லடைவு

(எண்கள் பக்க எண்கள்)

(ஒரே சொல் எழுத்துவேறுபாட்டால் பல வடிவங்களைப் பெற்றிருப்பினும் இங்கு ஒன்று மட்டுமே எடுத்தாளப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டு அவிநாசி, அவநாசி, அவினாசி, அவனாசி = அவிநாசி)

## அ

ஆ

## இ



## ஈ



## உ

## ஊ



## எ

ஏ



ஒ



ஓ



க

## கா

## கி

## கூ



## கெ

## கே



## கை



## கொ

## கோ

### சா

## சி

## சு

## சூ



## செ

## சே

## சை



## சொ


சொட்டக்கவுண்டர் பாளையம் 51
சொத்துக் கணக்கப்பிள்ளை 29, 267
சொப்பி சட்டி 274
சொரிக்கிலை 171
சொரியமலை 170
சொன்ன வேட்டுவன் 139

## சோ

## சௌ



## ஞா



## டி



## டீ



## த

## தா

## தி

## தே

## தொ



## தோ



## ந

நா

நி



நீ



நெ

## நொ



## நோ



## ப

## பா



## பி

## பீ



## பு

புட்டாவாத்தாள் 226
புடாரமங்கலம் 114
புத்திரகவுண்டன் பாளையம் 327
புத்தூர் 170, 274
புதுகோட்டை 172, 320
புதுப்பாளையம் 31, 52, 53
புதுபட்டி 171
புதுவளவு 53
புதூர் 169
புந்திப்பட்டுலுவாழு 252
புரக்கிலக் கவுண்டன் 139, 140, 141, 142
புரமுடிய நாடு 7
புரியூர் 115
புரவி ஐயன் 141
புரளந்தை குலம் 15, 38, 42
புருஷோத்தம ராயர் 301
புல்லயன் 81, 134
புல்லன் குலம் 29, 266
புல்லா மேடு 80
புல்லி செட்டி 275

## பூ

## பெ

## பே

## பை



## பொ

## போ



## பௌ



## ம

மா

## மூ



## மெ

## மே



## மை



## மொ



## மோ



## ய



## யா

## யி



## யீ



## யெ



## யே



## யோ



## ர

## ரா



## ரெ

## ரே



## ரோ



## ல



## லா



## லி



## லெ



## லோ



## வ

வா

## வி

## வு





## வெ

## வே

## வை



## வொ



## ற



## றா



## றெ



## னா



## னை